இந்தியா—நாடும் மக்களும்

# நிகோபார் தீவுகள்

கௌஷல் குமார் மாதுர்
(இந்திய நிர்வாக சர்வீஸ்)

தமிழாக்கம் :
எஸ். அருண்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
புது தில்லி

# முகவுரை

நமது நாட்டின் வெகு சில பகுதிகளே நிகோபார் தீவுகளைப் போல் கவர்ச்சிகரமாயுள்ளன. இத்தீவுகளைப்பற்றித் தெரிந்திருப்பதும் வெகு குறைவு. இத்தீவுகள் அந்தமான் தீவுகளுக்கு அடுத்தாற்போன்று இருந்தாலும், பின்னதைப்போன்று, இங்கே குற்றவாளிகளைக் குடியேற்றவில்லை. இந்தியாவில் உள்ள ஒருவர் இவ்விரு தீவுகளையும் ஒன்றுசேர்த்தே கருதுகின்றார். இத்தீவுகள் குற்றவாளிகளும், நாட்டின் இழிந்த மக்களுமே இருக்கத்தக்க இருளடைந்த பகுதிகள் என்று எண்ணுகின்றார். நிகோபார் தீவுகளில் உள்ள மக்கள் பண்பாடோ, நாகரிகமோ அற்ற காட்டு மிராண்டிகள் என்றே நினைக்கின்றார்.

நிகோபார் தீவுகளைப்பற்றிய இந்த உருவகங்கள் உண்மைக்கு முற்றிலும் புறம்பானவை. உண்மையில் இத்தீவுகள் வாழத் தகுந்த இன்பம் நிறைந்த இடங்கள். எழில் மிகுந்த இயற்கைக் காட்சிகள் இங்கு எண்ணிறைந்திருக்கின்றன. அவர்களுக்கே உரிய கவர்ச்சியான கலாச்சாரப் பெருமையுடன் அமைதியும், பூரிப்பும்கொண்ட மக்கள் இங்கே வாழுகின்றார்கள்.

இத்தீவுகளைப்பற்றிப் பொதுவாக எதுவும் தெரியாது என்பதை ஓரளவு புரிந்துகொள்ள முடிகின்றது. இத்தீவுகள் இந்தியாவிலிருந்து வெகு தூரத்திலிருப்பதுடன், இதனுடன் கொண்டிருக்கும் உறவுகளும் இயற்கையாகவே குறைவாகயிருக்கின்றன. மேலும் இத்தீவுகளைப்பற்றிய, இங்குள்ள மக்களைப்பற்றிய அறியாமையை, தவறான கருத்துக்களைப் போக்கும் வகையில் யாருமே, எதுவுமே சமீப ஆண்டுகளில் எழுதவில்லை. நிகோபார் தீவுகள்பற்றி இன்றைய காலம் வரையிலான வரலாறு எதுவும் இல்லாமை, தீவுகள்பற்றிய பணிகளில் தொடர்புகொண்டிருப்பவர்களுக்கு தடங்கலாகயிருக்கின்றது. அவர்கள், இந்தியாவிலிருந்து மிகவும் மாறுபாடுள்ள இத்தீவுகளின் நிலைமைகளைத் தெரிந்துகொள்ள வெகுவாக முயற்சி செய்யவேண்டியிருக்கின்றது; காலத்தையும் வீணாக்கவேண்டியிருக்கின்றது. அதனால், நிகோபார் தீவுகள்பற்றி இன்றுவரை திரட்டிய தகவல்கள் அனைத்தும்கொண்ட விரிவான வரலாறு தேவையென்பதை

வற்புறுத்தவேண்டிய அவசியமில்லை. அத்தேவையை நிறை வேற்றும் முயற்சியே இந்நூல்.

இத்தீவுகளில் 1964 மே மாதம் முதல், 1966 வரை இரண்டாண்டு காலம் கூட்டு உதவி ஆணையாளராகப் பதவி வகித்த காலத்தில் தீவுகளின் நிலைமையையும், நிகோபார் மக்களின் வாழ்வையும் நேரில் கண்டறிந்த பொருள்களையெல்லாம் அநேகமாகத் திரட்டியே இந்நூலை நானே உருவாக்கியிருக்கின்றேன். 1908ஆம் ஆண்டு வெளியான அந்தமான், நிகோபார் தீவுகளைப் பற்றிய அரசிதழ், திரு. இ. எம். மேன், திரு. ஜி. வொய்ட்ஹெட் ஆகியோரின் சிறந்த நூல்கள் முதலியவைகளாலும் பெரிதும் பயனடைந்திருக்கின்றேன். இத்தீவுகளின் வரலாற்றுப் பின்னணிக்கான பொருளில், பிரிட்டிஷ் காலம் வரையானதை அரசிதழிலிருந்து எடுத்திருக்கின்றேன். மேன் அவர்களும், வொய்ட்ஹெட் அவர்களும் எழுதிய நூல்கள் 50 ஆண்டுகளுக்கு முன் வரையப்பட்டவை. இப்பொழுது காலத்திற்குப் பொருந்தாதவை. தீவுகளில் இன்றுள்ள நிலைமைகளைப் பிரதிபலிப்பதாக இல்லை. அதனால், அப்புத்தகங்களிலிருந்து எதையும் எடுக்காவிட்டாலும், என்னையறியாமலே, அவர்களது கருத்துக்கள் சில வழிகளில் எனது நூலில் இடம்பெற்றிருக்கலாம். இருப்பினும், கடந்த காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த போக்குகளை, இன்னமும் மக்களிடம் மிக முக்கிய இடம்பெற்றிருக்கும் போக்குகளைப் புரிந்துகொள்வதற்கு அவை எனக்கு மதிப்புமிக்கதாயிருக்கின்றன.

இந்நூலில் தெரிவிக்கப்பட்டிருக்கும் கருத்துக்கள் அனைத்தும் எனது சொந்தக் கருத்துக்கள். தனிப்பட்ட முறையில் வெளியிடப்பட்டவை. அந்தமான், நிகோபார் நிர்வாகத்தின், இந்திய அரசினரின் கருத்துக்களைக்கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை.

இந்நூலை உருவாக்க முடிந்தமைக்கு அநேகருக்குக் கடமைப் பட்டிருக்கின்றேன். இந்நூலுக்கான பொருள்களைத் திரட்ட உதவி புரிந்தமைக்குக் குறிப்பாக ரிச்சர்டுசன் பாதிரியார், கார் நிகோபாரின் உதவி முதன்மைத் தலைமகனை திரு. ஒலையன், ககானு கிராமத்துப் பாதிரியார் ரூபஸ் ராம், கின்யூகாப் பள்ளி ஆசிரியர் திரு. அபெட் நெகோ, ககானு கிராமத் தலைமகன் திரு. குசாட், சுக்சுக்கியா கிராமத்து இரண்டாவது தலைமகன் திரு. மார்டின் ஆகியோருக்கு நன்றி தெரிவிக்கவேண்டும். இந்

நூலில் உள்ள புகைப்படங்களுக்காக அரசுதுறைப் புகைப்பட நிபுணர் திரு. பிலிப் (அந்தமான், நிகோபார் நிர்வாக வளர்ச்சித் துறை), மற்றும் வரைபடங்களுக்காக கார் நிகோபாரில் உள்ள கலைத்துறை ஆசிரியர் திரு. நிரேஷ் போடார் ஆகியோருக்கும் நன்றியுள்ளவனுவேன். நிகோபார் தீவுகள்பற்றி என்னை எழுதத் தூண்டி, நூலை எழுதி முடிக்க, விடாத ஊக்கமும் தந்த திரு. எஸ். கே. சர்மா அவர்களுக்கும் கடமைப்பட்டுள்ளேன். இறுதியாக, பழங்குடி மக்கள் குழுவின் மேலாளராக இருந்த திரு. அனில் சந்தா அவர்கள், 1966ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் தீவுக்கு வருகை தந்தபொழுது, இந்நூலைப்பற்றித் தெரிய வந்ததும், இந்திய தேசீயப் புத்தகக் கழகத்தின் மூலம் இந்நூலை வெளியிட உதவியமைக்கும் நான் கடன்பட்டிருக்கின்றேன்.

நிகோபார் தீவுகளுடன் தொடர்புகொண்டவர்களுக்கும், அதில் அக்கறைகொண்டவர்களுக்கும் இந்நூல் பயன்படுமாளுல், இந்தியப் பிரதான பூமியில் உள்ள மக்கள், தங்கள் நாட்டைச் சேர்ந்த நிகோபார் மக்களின் வாழ்வையும், குண இயல்பையும் மேலும் புரிந்துகொள்ள இந்நூல் உதவுமாளுல், இதில் நான் எடுத்துக்கொண்ட முயற்சியும், காலமும் வீணுகவில்லை என்ற திருப்தி எனக்கிருக்கும்.

**கௌஷல் குமார் மாதுர்**

# பொருளடக்கம்

## படங்களின் அட்டவணை

அத்தியாயம் 1

# வரலாற்றுப் பின்னணி

நிகோபார் தீவுகள்—பழங்குடி மக்களின் சமுதாயம் ஒன்று முனைப்புடன் மாறிவரும் பரந்த காட்சியாக இந்தத் தீவுகள் விளங்குகின்றன. இந்தத் தீவுகள் வங்காள விரிகுடாவின் தென் கோடியில், இந்தியப் பெருநிலப் பகுதியிலிருந்து பல நூறு மைல் தூரத்துக்கு அப்பால் கடலால் பிளவுபட்டு நிற்கின்றன. பூகோள ரீதியில் தனித்து எட்டியிருந்த காரணத்தால், கடந்தகால வெளித்தொடர்புகள் வெகு குறைவாகவே இருந்துவந்திருக்கின்றன; மக்களின் வாழ்வு பாதிக்கப்படவேயில்லை. அதனால் நிகோபார் தீவுகளின் மக்கள் பல நூற்றுண்டு காலமாக எந்த விதமான மாற்றத்திற்கும் உட்படவில்லை. எனினும், இந்த நூற்றுண்டு காலத் திருப்பத்தில், பிரிட்டிஷார் இந்தத் தீவுகளை ஆக்கிரமித்த காலந்தொட்டு, மாற்றத்தின் விளைவுகள் தோன்ற ஆரம்பித்துப் பெருநடைபோடுகின்றன. குறிப்பாக விடுதலைக்குப் பின்னர் மக்களின் வாழ்வும், நம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும் விரைவாக மாறி வருகின்றன. உண்மையில் தற்போதைய காலமாற்ற நேரத்தில் அம்மக்களின் செல்வ வளப்பாங்கும் சரி, நம்பிக்கைகளும், போக்கும் நிலைப்படாத இந்த நேரத்தில், அவர்களின் வாழ்வையும், குணநலன்களையும், அத்தீவுகளின் சமூகப் பொருளாதார நிலையையும் குறிப்பாக விவரிப்பது கடினமாயிருக்கின்றது. இந்தச் சூழ்நிலையில், நிகோபார் மக்களின் புதியதொரு மாறுதலான கலாச்சாரத்தை சரியானதொரு கோணத்தில் மதிப்பிட அம்மக்களின் பாரம்பரியமான வாழ்க்கையை எந்தெந்த சக்திகள், செல்வாக்குகள் மாற்றத்திற்கு உள்ளாக்கியிருக்கின்றன; மேலும் சீரான மாற்றத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கின்றன என்பதை அறிய, அத்தீவுகளின் வரலாற்றுப் பின்னணியை சுருக்கிய வடிவில் தெரிந்துகொள்வது அவசியமாகின்றது.

பூகோள ரீதியில் இந்தத் தீவுகள் ஒதுங்கியிருந்தாலும், ஆதி காலந்தொட்டே இத்தீவுகளுடன் வெளி உலகத் தொடர்பு

இருந்து வந்துகொண்டேயிருக்கின்றது. அதற்கு இந்தியாவுக்கும், தென்கிழக்கு ஆசியப் பகுதியில் உள்ள நாடுகளுக்கும் இடையே நடைபெற்று வந்த தொன்மையான வர்த்தகப் போக்குவரத்துப் பாதையில் நிகோபார் தீவுகள் அமைந்திருக்கின்றன என்பதும் ஒரு காரணமாகும். அதல்லாமல் நிகோபார் மக்கள் வெகு காலத்திற்கு முன்பிருந்தே ஓரளவு சீரமைந்த வாழ்க்கைத் தரத்தை மேற்கொண்டிருந்தார்கள். அவர்களிடம் தேங்காயும் பாக்கும் இருந்தன. வெளிநாட்டுப் பொருள்களுடன் அவைகளைப் பரிமாறிக்கொள்ள முடிந்தன. அதனால் அந்த நாள் தொட்டே இத்தீவுகள் மற்றவர்களின் கவனத்தை ஈர்க்கத் தொடங்கி விட்டன என்பது தெரிகின்றது. நிகோபார் தீவுகள் பற்றிய குறிப்புகள் ஜெரினி, டாலமி போன்ற கிரேக்க எழுத்தாளர் களின் நூல்களில் காணப்படுகின்றன என்பதை நூல் வல்லுனர் கள் ஒத்துக்கொண்டிருக்கின்றார்கள். ஏழாவது நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த சீனநாட்டு புத்த சந்நியாசியான டீசிங் என்பவரின் குறிப்புகளில், கி.பி. 851இல் இருந்த அரபு உறவுகளை சுட்டிக்காட்டுகையில், இத்தீவுகள் ‘லங்காபாலூஸ்,’ அதாவது நிர்வாண மக்களின் தீவுகள் என்று காணப்படுகின்றன. மாபெரும் இராமாயணக் காவியத்தில் வரும் வீரக்கடவுளான அனுமாரின் தீவுகள் என்றும், வனவாச காலத்தில் இராமன் இத் தீவுகளுக்குச் சென்றிருக்கின்றார் என்றும் ஒரு சில அறிஞர்கள் கருதுகின்றார்கள்.

எப்படியிருந்தாலும் நிகோபார் தீவுகள்பற்றி முதன் முதலாகத் திட்டமான குறிப்புகள் தஞ்சைக் கல்வெட்டுகளில் காணப் படுகின்றன. கி.பி. 1050இல் சோழ மன்னர்களின் வலிய கடற் படை இத்தீவுகளுடன் தொடர்புகொண்டிருந்ததை இத்தீவுகளை ‘நக்கவரம்,’ அதாவது ‘அம்மணண்டிகளின் நாடு’ என்று கல்வெட்டுகள் குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது.

பழங்காலக் குறிப்புகள் அனைத்திலும், நிகோபார் தீவுகளை ‘அம்மணண்டிகளின் நாடு’ என்று திரும்பத்திரும்பக் கூறப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். இதற்கு நிகோபார் மனிதர்கள் அனைவரும் அந்தக் காலத்தில் சிறியதொரு கோவணங் கட்டிக் கொண்டு, அதுவும் பின்புறம் தளரத் தளர வால்போல் தொங்க விட்டிருந்ததை அத்தீவுகளைக் கடந்து செல்லும் கப்பலிலிருந்த வர்கள் கண்டபொழுது, அம்மக்கள் அம்மணமாகவும், வால்க

ளுடனும் இருப்பதாகத் தென்பட்டிருக்கக்கூடும். அதுவும் ஒரு உண்மையாகயிருக்கலாம்.

'நக்கவரம்' என்ற பெயரையே இடைக்காலத்தைச் சேர்ந்த எழுத்தாளர்கள் எடுத்துக்கொண்டனர். அதுவே பல்வேருகப் பிறழ்ந்து போர்த்துக்கீசிய, டச்சு, டேனிஷ், சுவீடன் நாடுகளின் கடற்படையினரால் வழங்கப் பெற்றுப் பின்னர் நிகோபார் தீவுகள் என்ற தற்போதைய பெயரைப்பெற்றிருக்கின்றது.

பதினும் நூற்ருண்டு காலந்தொட்டே கிருஸ்துவ சமயத்தினரின் கவனத்தை இத்தீவுகள் ஈர்க்கத்தொடங்கிவிட்டன. கத்தோலிக்க சமயக்குழுவினரே இத்தீவுகளுக்கு முதன் முதலாக வந்தவர்களாவார்கள். பதினுருவது, பதினேழாவது நூற்ருண்டுகளில் அவர்களில் அநேகர் இத்தீவுகளில் வாழ்ந்தார்கள் என்ருலும், கிருஸ்துவ சமயத்தைப் பரப்பும் முயற்சிகளில் தோல்வி கண்டார்கள். 1756இல் டேனிஷ் நாட்டினர் இத்தீவுகளின் உடைமைப் பெற்று, குடியேற்றம் செய்து கமோர்டாத் தீவில் தங்கள் தலைமை அலுவலகத்தை அமைத்தனர். டேனிஷ் சமயக் குழுவினரும் கிருஸ்துவ மதமாற்றத்திற்கு முயற்சிகள் மேற்கொண்டனர். அவர்களும் வெற்றிபெற முடியவில்லை. 19ஆவது நூற்ருண்டின் ஆரம்பகாலத்திலும் இதாலிய, பிரெஞ்சுக் கத்தோலிக்க மதக்குழுவினர் கிருஸ்துவ சமயத்தைப் பரப்பும் முயற்சிகளை மேற்கொண்டனர். அவைகளும் வீணுயின. டேனிஷ் நாட்டினரின் குடியேற்ற அமைப்பும் பெருகவில்லை; சமய நடவடிக்கைகளும் தோல்வியடைந்தன. அதனுல் 1848இல் அத் தீவுகளின் மீதிருந்த ஆதிபத்திய உரிமையைக் கைவிட்டு விட்டு, டேனிஷ் நாட்டினர் தங்கள் உடைமைகளை அகற்றிக்கொண்டனர். 1869இல் டேனிஷ் அரசுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தின் விளைவாகப் பிரிட்டிஷார் இத்தீவுகளைக் கைப்பற்றிக் கொண்டனர்.

கிருஸ்து சமயத்தைப் பரப்ப சமயக்குழுவினர் செய்த முயற்சிகள் அனைத்தும் முன்னதாகத் தோல்வியுற்ருலும், இத்தீவுகளின் வாழ்க்கை வளம் அவைகளினுல் ஓரளவு பயனடையவே செய்தது. இன்று அங்குக் காணப்படும் காய்கனி வகைகளும், சில குறிப்பிட்ட பன்றி இனங்களும் அந்த சமயக்குழுவினரால் இடம் பெற்றன என்றே கூறவேண்டும். தங்கள் தோட்டங்களைக் காக்க நிகோபார் மக்கள் மரவேலி அமைப்பதை அவர்கள் டேனிஷ், மொராவியன் சமயக்குழுவினரிடமிருந்தே கற்றுக்கொண்டிருக்க

வேண்டும் என்று தெரிகிறது. அந்த நாட்களில் இத்தீவுகளில் இருந்த வாழ்க்கைபற்றிய மதிப்பு வாய்ந்த குறிப்புகளையும் சில சமயக்குழுவினர் எழுதிவைத்துச் சென்றிருக்கின்றனர்.

பிரிட்டிஷார் முதலில் அந்தமான் தீவுகளைப்போன்றே இங்கும் குற்றவாளிகளைக் குடியமர்த்துவதில் அக்கறை காட்டியிருக்கின்றனர். கமோர்டாத் தீவில் குற்றவாளிகள் குடியமைப்புப் பகுதியொன்றை நிறுவினார்கள். அது அவ்வளவாகப் பலன்பெறவில்லை. 1888இல் அதைக் கைவிட்டுவிட்டனர்.

பிரிட்டிஷார் அந்தமான், நிகோபார் தீவுகளின் மாநிலப் பகுதியில் நிகோபார் தீவுகளை ஓர் அங்கமாக ஆக்கி, அந்தமானில் போர்ட் பிளேர் தலைமை அலுவலரின் ஆட்சிக்கு உட்படுத்தியிருந்தார்கள். நிகோபார் தீவுகளைப் பரவலான நிர்வாகத்திற்கு உட்படுத்துவதில் பிரிட்டிஷார் அக்கறை காட்டவில்லை. கார் நிகோபாரில் ஒரு ஏஜெண்ட் நியமிக்கப்பட்டார். நிகோபார் தீவுகளின் பகுதியில் அதிக மக்கள் தொகைப் பெருக்கம்கொண்டதும், முன்னேற்றம் அடைந்ததுமான தீவு கார் நிகோபார். அத்தீவுகளின் முழுமையான நிர்வாகத்திற்குத் தலைமை அலுவலகமாகவும் அது ஆக்கப்பட்டது. அங்குள்ள மக்களுடன் தொடர்புகொண்டிருக்கவும், சட்டம் ஒழுங்கைப் பராமரிப்பதுமே ஏஜென்டின் முக்கியப் பணியாகயிருந்தது. இந்தியப் பெருநிலப்பகுதியை ஆட்கொண்டிருந்தது போன்று, இந்தத் தீவுகளிலிருந்து பொருளாதார இலாபம் பெறும் நோக்கம் எதையும்கொண்டு பிரிட்டிஷார் இயங்கவில்லை. அதன் காரணமாகவே, மக்கள்மீது புதிய வரிகள் எதுவும் விதிக்கப்படவில்லை. பொதுவாக சுரண்டல் இல்லாமல் தடுக்கப்பட்டார்கள் என்றாலும், மக்களின் வாழ்வில் தலையிடாத போக்கைப் பிரிட்டிஷார் கடைப்பிடித்து வந்தனர். இவ்வகையான எதிர்மறைப் போக்கைக் கடைப்பிடித்ததால் தீவுகளின் முன்னேற்றம் குறித்தோ, மக்களின் பொருளாதார நிலையை முன்னேற்றுவது குறித்தோ அவர்கள் எந்தவிதமான நடவடிக்கைகளையும் எடுக்கவில்லை.

தீவுகள் பிரிட்டிஷார் வசமிருந்ததால், இந்திய மாநிலத்துடன் இருந்த தொடர்புகள் வளர்ந்துகொண்டிருந்தன. இந்திய வர்த்தகர்கள் அநேகர், குறிப்பாக லட்சத் தீவுகளிலிருந்தும், மினிகாய் தீவுகளிலிருந்தும் தேங்காய், பாக்கு வர்த்தகத்தில் ஈடுபட வந்தனர். நிகோபார் தீவுகளில் கடைகளை வைத்தனர்.

வர்த்தகர்கள் பொதுவாக எல்லாவித மளிகைத் தட்டு முட்டு சாமான்களைத் தங்களுடன் கொண்டுவந்தனர். தீவுகளிலிருந்த மக்களும், குறிப்பாக கார் நிகோபார் தீவு மக்கள் இந்திய மக்கள் புழங்கிவந்த பல அன்றாடப் பொருள்களைப் பழக்கப்படுத்திக் கொள்ளத் துவங்கினர். ஆனால் வர்த்தகர்கள், எதையும் நம்பும் எளிய சுபாவம்கொண்ட நிகோபார் மக்களை மிகவும் சுரண்டலானார்கள். மக்களின் நலனில், குறிப்பாக எந்த அக்கறையும் காட்டாத பிரிட்டிஷ் நிர்வாகம் வியாபாரிகளைத் தடுக்க எந்தவிதமான நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ளவில்லை; ஒரு கண்டிப்பான நடுநிலைப் போக்கைக் கடைப்பிடித்தது. வர்த்தகர்களின் வருகையினாலும், அவர்கள் கொண்டுவந்த பொருள்களினாலும் மக்களின் வாழ்க்கை பாதிக்கப்பட்டதே தவிர, அவர்களின் வாழ்க்கைத்தரம் உயரவில்லை. அவர்கள் கொடிய வறுமையிலேயே வாடினார்கள். வர்த்தகர்களிடம் பெரும் கடன் சுமை பட்டிருந்தார்கள்.

இந்தத் தீவுகளில் கிருஸ்துவ சமயம் பரவத்துவங்கியதுதான் பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பில் ஏற்பட்ட மிகவும் குறிப்பிடத்தக்க அம்சம். கார் நிகோபார் தீவில் இங்கிலாந்து மதசபை தோற்றுவிக்கப்பட்டது. அதற்கு பிரிட்டிஷ் நிர்வாகம் ஊக்கமளித்தது. 1895இல் வேதப்பன் சாலமன் என்ற ஆர்வமிக்க இந்தியப் பாதிரியார் ஒருவர் கார் நிகோபாரில் ஏஜென்டாக நியமனம் பெற்றார். அது முதலாகவே கிருஸ்துவ இயக்கத்திற்கு புது வலிமை தோன்றலாயிற்று. செய்ன்ட் தாமஸ் மதாலயம் என்ற கூறப்பட்ட முதல் ஆங்கிலிகன் மதாலயத்தை அவர் நிகோபார் தீவுகளில் தோற்றுவித்தார். 1895இல் நிர்வாகத் தலைமைக் காரியாலயமாக இருந்த கார் நிகோபாரில், மூஸ் என்ற கிராமத்தில் ஆலயம் அமைக்கப்பட்டது. இத்தீவுகளில் கிருஸ்துவ மதம் பரவவேண்டுமென்றால், எதிர்காலத்தில் பணிகளைத் தொடர்ந்து நடத்துவதற்கு அங்குள்ள வாலிபர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார். அதை மனதில் வைத்துக்கொண்டு அவரும் அவரது மனைவியும் கார் நிகோபாரில், மூஸ் கிராமத்தில் முதல் பள்ளிக்கூடத்தைத் திறந்தார்கள். நம்பிக்கை தரக்கூடிய இளம்பிள்ளைகளாகக் கிராமத்து நாட்டாண்மைக்காரர்களின் பிள்ளைகளாகப் பார்த்து பள்ளியில் சேர்த்துக்கொண்டார்கள். அவர்கள்தானே அதிகம் செல்வாக்குக்கொண்டிருக்க முடியும்? இவர்களில் ஒருவர் ஜான்

ரிச்சர்டுசன். அவர் அந்த மக்களின் பெருந் தலைவராகவேண்டி யிருந்தார். அத்தீவுகளின் வரலாற்றில் ஒரு புதிய சகாப்தத் தையே அவர் தோற்றுவித்தார் என்று கூறலாம். அவர், இளம் பிராயம் முதற்கொண்டே தலைமை ஏற்கும் தகுதிகளையும், சிறந்த அறிவு தீட்சண்யத்தையும் பெற்றிருந்தார். ஏஜென்ட் சாலமன் அவரை மேற்படிப்புக்காக, கிருஸ்துவ மத சபையினரின் ஒத்து ழைப்பில் பர்மாவுக்கு அனுப்பிவைத்தார். ஜான் ரிச்சர்டுசன் பர்மாவிலிருந்து திரும்பிவந்ததும் மத சபையின் பணிகளைத் தொடர்ந்து மேற்கொண்டார். மத சபையின் பள்ளியில் ஓர் ஆசிரியராகவும், போதகராகவும் பணி மேற்கொண்டார். அவர் மக்களிடம் அதிக செல்வாக்குப் பெற்றிருந்தமையால், பள்ளி யில் மாணவர்களின் தொகை பெருகிக்கொண்டு வந்தது. அவராலேயே கிருஸ்துவ மதம் பரவத்தொடங்கியது.

கல்வி பரவியது காரணமாகவும், ஒரு சிலர் கிருஸ்துவ மதம் மாறியதாலும், சூனிய வித்தைகள், சூனியவாதிகளிடம் கொண் டிருந்த நம்பிக்கைகள், பேய் பூதங்களை வணங்குவது போன்ற அநேக பழமையான நம்பிக்கைகள் மறையத்துவங்கின. பிரிட்டிஷ் நிர்வாகமும் 'பேய்க் கொலை' போன்ற சில கொடிய பழக்கங்களை ஒடுக்கியது. சமூகத்திற்குக் கேடு செய்பவன் என்று கருதப்படு பவனை, பேய்பிடித்திருக்கின்றது என்று குற்றஞ்சாட்டி கொலை செய்வது பழக்கமாயிருந்து வந்தது.

இந்த மாற்றங்கள் இருந்தும், இரண்டாவது உலகப் போர் துவங்கிய வேளையில், நிகோபார் மக்கள் ஒரு சில கிருஸ்துவர் களைத் தவிர அநேகமாகப் பழங்காலப் பழக்க வழக்கங்களையே கடைப்பிடித்துவந்தனர். பேய், பூதங்களை வணங்கி வருவதைக் கைவிடவில்லை. தீவிரமான மூட நம்பிக்கைகளைப் பின்பற்றி வந்தனர். சூனியவாதிகளைக் கண்டு நடுநடுங்கி வந்தனர்.

இரண்டாவது உலகப் போரும், 1942இலிருந்து 1945 வரை கார் நிகோபாரையும், மற்ற தீவுகளையும் ஜப்பானியர் ஆக்கிர மித்துக்கொண்டிருந்ததும், இத்தீவுகளின் வரலாற்றில் ஒரு பெரும் புரட்சியைத் தோற்றுவித்திருக்கிறது. இதுவரை அயலார் யாரும் இத்தீவுகளுக்கு வந்து மக்களின்மீது வன்மையைப் பயன் படுத்தியதில்லை, அவர்களைக் கொடுமைக்குள்ளாக்கியதுமில்லை. ஆனால் எந்தவிதமான எதிர்ப்புமின்றி இத்தீவுகளை ஆக்கிரமித்துக் கொண்டிருந்த ஜப்பானியர்கள், பிரிட்டிஷ் குடிமக்களின்மீது பகைமை பாராட்டுவதையே குறிப்பாகக்கொண்டு, இம்மக்களை,

அதிலும் கார் நிகோபார் மக்களைக் கொடிய வகையில் வாட்டி வதைத்தனர். தென்னை மரங்களை வெட்டி வீழ்த்தினர். பெரும் பாலான பகுதிகளைத் திருத்தி, நிகோபார் மக்களிடம் கட்டாய வேலை வாங்கி, சாலைகளைச் சாரிசாரியாக அமைத்தனர்; தீவு களின் கரைகளில் பீரங்கிக் குழிகளைத் தோண்டினர்; இரு விமானப்பாதைகளைப் போட்டனர்; ஒரு சிறு தோணித்துறையும் கட்டினார்கள். ஜப்பானியர், தங்கள் ஆக்கிரமிப்பை வலுப்படுத் திக்கொள்ளவும், எதிரிகளின் தாக்குதலுக்கு எதிராகக் காத்துக் கொள்ளவுமே இந்த நிர்மாணவேலைகளில் ஈடுபட்டனர். இதனால் தீவுகளின் அமைப்பு முழுவதுமே ஒரு சில ஆண்டுகளில் மாறுத லடைந்துவிட்டது.

1945இல் ஜப்பானிய ஆக்கிரமிப்பு முடிவடைந்த பின்னர் மீண்டும் இத்தீவுகள் பிரிட்டிஷார் வசமாயின. சிறிது காலத் திற்குப்பின் இத்தீவுகளும், நாட்டின் மற்ற பாகங்களைப்போன்று 1947 ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி முதற்கொண்டு விடுதலை பெற்றன.

விடுதலைக் காலத்தின்பொழுது, நிகோபார் மக்கள், குறிப்பாக கார் நிகோபார் மக்கள் முற்றிலும் மாறிய போக்கில் இருந் தார்கள். காலங்காலமாக சோம்பியிருந்த போக்கு ஜப்பானியர் ஆக்கிரமிப்பு காரணமாக ஆட்டங்கண்டுவிட்டிருந்தது. மாற்றம் தேவை என்பதை அவர்கள் உணர்ந்திருந்தார்கள். அதனால் அவர்கள் புதுமைக் கருத்துக்களையும், புதிய வாழ்வு முறைகளை யும் தெரிந்துகொள்ளும் நிலையில் இருந்தார்கள். மேலும் ஜப்பானிய ஆக்கிரமிப்புக்கால முழுவதிலும், சிறுபான்மையின ரான கிருஸ்துவ சமயத்தினரே மிகவும் அல்லல்பட்டனர். அவர் களின் முன்னேற்றமும், ஆங்கில அறிவும் அவர்களைப் பிரிட்டிஷா ருக்கு நெருங்கியவர்களாக ஜப்பானியர்கள் கருதுவதற்கு இடமா யிருந்தது. இருப்பினும், இருளடைந்த அந்தப் போர் கால முழுவதிலும், ஜான் ரிச்சர்டுசன் தலைமையிலிருந்த கிருஸ்து வர்கள் தலைமைக்குரிய வீரதீரப் பண்புகளுடன் நடந்துகொண்ட னர்; மக்களின் மனத் திட்பத்தைக் காத்து நிற்கக் காரணமா யிருந்தார்கள். அதனால், போருக்குப் பின்னர், கிருஸ்துவர்களை மக்கள் அதிகம் மதிக்கத்தொடங்கினார்கள். பாதிரியார் ரிச்சர்டுசன் மக்களின் பெருந்தலைவராக மதிக்கப்பட்டார். (ஜான் ரிச்சர்டுசன் 1950இல் பாதிரியார் ஆக்கப்பட்டார்.) இரண்டா வது உலகப் போர் முடிந்த சில ஆண்டுகளுக்குள், கார் நிகோபார்

தீவுகளில் இருந்த மக்களில் அநேகமாக எல்லோரும், பேய்களை யும், பிசாசுகளையும், சூனியவாதிகளையும் நம்பிக்கொண்டிருக்கும் பழமையான உயிரற்ற மதக் கொள்கைகளைக் கைவிட்டு, கிருஸ்துவ மதத்தைத் தழுவலாயினர். மற்ற தீவுகளிலும் கிருஸ்துவ மதத்திற்கு மாறியவர்கள் இருந்தார்கள். இருந்தா லும் கார் நிகோபாரில் போன்று மத மாற்றம் அவ்வளவு விரை வாகவும், முழுமையாகவும் இல்லை. இந்த மத மாற்றம் பேய் வணக்கம், பலிகொடுப்பது போன்ற பண்டைய பழக்க வழக்கத் துக்கு முற்றுப்புள்ளி வைத்தது. நூற்றுண்டு பலவாக இருந்த பண்டைய மூட நம்பிக்கைகள் அழிந்து ஒழிந்தன.

நிகோபார் மக்களைக் கடந்த காலத்தில் இரக்கமின்றிக் கொள்ளையடித்து வந்த பழைய வர்த்தகர்கள், அந்தத் தீவுகளை விட்டு ஓடவேண்டியிருந்தது அல்லது ஜப்பானியரின் ஆக்கிரமிப்புக் காலத்தில் கொல்லப்பட்டுவிட்டிருந்தார்கள் என்பதும் மக்களுக்கு ஒரு பேருக இருந்தது. சுதந்திரத்திற்குப் பின்னர், மக்களைச் சுரண்டும் அந்த வர்த்தகர்கள் திரும்பிவரு வதை அரசாங்கம் விரும்பவில்லை. அதனுல் மக்கள் நலனைக் காப்பதற்கு என்று அந்தமான், நிகோபார் தீவுகள் ஆதிவாசிகள் பாதுகாப்புச் சட்டத்தை 1956ஆம் ஆண்டில் அரசாங்கம் நிறைவேற்றியது. அந்தச் சட்டப்படி நிகோபார் தீவு களில் அயலார் நுழையும் உரிமை கட்டுப்படுத்தப்பட்டது. அயலார் யாரும் முதன்மை மேலாளரிடமிருந்து அனுமதி பெருமல் வர்த்தகம், வியாபாரம் செய்வது முடியாது. கூட்டுறவு இயக்கங்களுக்கும் அரசாங்கம் ஊக்கமளித்தது. கார் நிகோ பாரில் எல்லா கிராமங்களிலும், மற்ற தீவுகளில் உள்ள முக்கிய இடங்களிலும் கூட்டுறவுச் சங்கங்களை அரசாங்கம் தோற்று வித்தது. கூட்டுறவுகளின் பெருக்கத்தாலும், பொருளாதாரச் சுரண்டலுக்கு முடிவு ஏற்பட்டதாலும், நிகோபார் மக்கள் புதிய வளம் பெற்றனர். அனுமதி வழங்கும் சட்டத்தின் கீழ் அனுமதி பெற்ற இரு வர்த்தக நிறுவனங்களிடமிருந்து புதிய பொருள்களை வாங்க அவர்களுக்கு வசதி ஏற்பட்டது. இதனுலும் அந்த மக்களின் அன்றுட வாழ்வில் அநேக மாற்றங்கள் தோன்ற லாயின.

மக்களின் நலனுக்காகவும், தீவுகளை அபிவிருத்திசெய்யவும் பல திட்டங்களை அரசாங்கம் மேற்கொண்டது. பல நூற்றுண்டு கால மாக இத்தீவுகள் புறக்கணிக்கப்பட்டிருந்தமையால், தீவுகளின்

அபிவிருத்திக்கு முனைப்பான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஒரு சில ஆண்டுகளில் அநேக முக்கியமான முன்னேற்ற வேலைகள் முடிக்கப்பட்டன. அரசாங்கப் பணிகள் அதிகரித்தது காரண மாகத் தீவுகளில் அரசாங்க அலுவலர்களும், உதவியாளர்களும் அதிகமாயினர். இந்தியாவிலிருந்து அவர்களுக்குப் பணி புரிய வந்த அந்த அலுவலர்களைப் பார்த்து, அத்தீவு மக்கள், அலுவலர் களின் நடையுடை பாவனைகளை, வாழ்க்கை முறையினைப் பின் பற்றலாயினர். இந்தியாவுடன் ஏற்பட்ட இந்த அதிகரித்த தொடர்பு காரணமாகவும் மக்களின் பரம்பரையான வாழ்க்கை முறையில் மாற்றம் ஏற்பட்டது.

ஆக, இத்தீவுகளைப் பிரிட்டிஷார் ஆக்கிரமித்தபொழுது தொடங்கிய மாற்றத்தின் துவக்கம், விடுதலைக்குப் பின்னர் மக்கள் மதம் மாறியதாலும், அபிவிருத்தித் திட்டங்கள் ஆரம் பிக்கப்பட்டதாலும், இந்திய மக்களுடன் தொடர்புகள் அதிகரித்ததாலும், மக்களின் வசதியும், வாழ்வும், வாங்கும் சக்தியும் பெருகியதாலும் புதியதொரு வேகம் பெற்றது. மாற்றத்தின் வேகம் மிகவும் குறிப்பிடத்தக்கதாகயிருந்தது. ஒரு சில ஆண்டுகளில், பல நூற்றுண்டுகளாக மலர்ச்சியுற்ற நிகோபார் கலாச்சாரம் அப்படியே அநேகமாக மாறிவிட்டது. இன்னமும் அந்த மாற்றத்தின் வேகம் தணியவில்லை. மக்களின் வாழ்வின் எல்லா அம்சங்களிலும் அம்மாற்றம் இடம்பெற்று வருகின்றது.

இருப்பினும் தொன்மையான நிகோபார் பண்பாடு இருக்கவே செய்கின்றது; இருந்துகொண்டுதான் இருக்கும். மக்களின் அடிப்படைத் தொழிலும், கிராமப் பொருளாதார இயலும் மாறவில்லை. கூட்டுக் குடும்ப முறையின் அடிப்படையில் அமைந்த சமுதாய அமைப்பின் ஆதாரம் அசைபடாமல் நின்றது. கார் நிகோபார் தவிர மற்ற தீவுகளில் பேய், பிசாசுகளை வணங்கும் மதம் இன்னமும் இருக்கவே செய்கின்றது. கார் நிகோபாரில்கூட பழைய பழக்க வழக்கங்கள் அநேகம் ஒரு சில மாறுதல்களுடன் பின்பற்றப்படுகின்றன. பழமையான முறை யில் விருந்துகளும், விழாக்களும் கொண்டாடப்பட்டு வருகின் றன. தொன்றுதொட்டு இருந்துவரும் நம்பிக்கைகள் மடிவது கடினம். மதம் மாறியபொழுதிலுங்கூட, மக்களின் வாழ்வில் சில பழைய நம்பிக்கைகள் செல்வாக்குடனேயே இருக்கின்றன. மேலும் தீவுகளைச் சூழ்ந்த அமைதியும், அமைதியான சூழ்நிலையும்,

தனித்து நிற்கும் பூகோள நிலையும் தொன்மையானவைகளை, நிலைத்துநிற்க இடமளிக்கின்றன. கடந்த சில ஆண்டுகளில் வெளி உலகத் தொடர்புகள் அதிகரித்திருக்கின்றன என்பது உண்மை தான். இருப்பினும் அவை ஓர் அளவுதான். காரணம், இந்தியா வுடன் கொண்டிருக்கும் போக்குவரத்து வசதிகள் மிகக் குறைவு. அதனால் நிகோபார் மக்களைக் கலாச்சார ரீதியில் தூண்டுதலுக்கு உள்ளாக்கும் வாய்ப்புகளும் அருகிவிட்டன. அந்தமான், நிகோபார் தீவுகள் சட்டத்தின் (ஆதிவாசிகள் பாதுகாப்புச் சட்டம்)படி இத்தீவுகளில் நுழைவது கட்டுப்படுத்தப்பட்டிருந்த தும் முக்கிய காரணமாகும். அலுவல் பார்க்கும் அரசாங்க அலுவலர்கள், அவர்களின் குடும்பங்கள், மற்ற வர்த்தக நிறுவனங்களைச் சேர்ந்த ஊழியர்கள் ஆகியோர் மட்டுமே இத்தீவு களின் பகுதிகளில் அனுமதிக்கப்பட்டதும் நிகோபார் கலாச்சாரத் தின் அடிப்படை அம்சங்கள் காக்கப்படுவதற்குக் காரணமாயிருந் தன. இதல்லாமல் அவர்களின் கலாச்சாரம் காக்கப்படுவதற்கு அரசாங்கம் கடைப்பிடித்த கொள்கையும், அதாவது மக்களின் வாழ்விலும் பழக்க வழக்கங்களிலும் தலையிடாமல், அவைகளை மதித்து, பொருளாதார ரீதியில் முன்னேற அந்த ஆதிவாசி மக்களுக்கு உதவியதும் காரணமாகும். அவர்கள் அயலாரை மணந்துகொள்ள விரும்பாமையும், அவர்கள் தனித்த தொரு கலாச்சார இனமாக நிற்பதற்கு இடமளித்தது. எல்லா வற்றிற்கும் மேலாக, ஆதிவாசிகளின் ஊறிப்போன பழமைப் போக்கு எதிலும், எந்தத் துறையிலும் மாறுதலை ஏற்க மறுத்தது. அதனால் மாறுதலின் வேகம் தடைப்பட்டது. முயற்சிகளின் வேகமும் தணிந்தது.

உண்மையில், இப்பொழுது நிகோபார் தீவுகளில் மாறுதலை விரும்பும் சக்திகளுக்கும், பழமைப் போக்குக்கும் இடையே ஒரு புதுமையான உரசல் இருந்துவருகின்றது. இந்த உண்மையை இடைவிடாது மனதிற்கொண்டால்தான், இத்தீவுகளின் சமூகப் பொருளாதார நிலைமைப்பற்றியும், மக்களின் வாழ்க்கை, குண யியல்பற்றியும் ஒரு தெளிவான காட்சி தென்படும்.




93°
94
ANDAMAN
SEA
Car Nicobar I
9°
Batti Malv I
Tillangchong I
Chaura I
Teressa I
Bompoka I
Camorta I
Trinkat I
BAY
OF
BENGAL
8°
Nancowry I
Katchall
SOMBRERO CHANNEL
Meroe I
Trak I
Treis I
Pulo Milo I
Menchal I
Little Nicobar
Cabra I
Kondul Io
Great Nicobar
7°
7°
MAP
OF
THE NICOBAR ISLANDS
INDIA
0
10
20
30
40
ENGLISH MILES

அத்தியாயம் 2

# புவியியல்

நிகோபார் பகுதித் தீவுகள் 19 தீவுகளைக்கொண்டன. வங்காள குடாக் கடலில் தென் கோடியில் வடக்கு நில நேர்கோட்டில் ஆருவதற்கும், பத்தாவதற்கும் இடையிலும்; கிழக்கு நிரை கோட்டில் 92°40-க்கும் 94°-க்கும் இடையில் இருக்கின்றன. இவை களில் 12 தீவுகளில் மாத்திரம்—கார் நிகோபார் (மக்கட் தொகை 9,913), சோவ்ரா (மக்கள் 1,228), டெரசா (மக்கள் 547), பாம்புகா (மக்கள் 43), கமோர்டா (மக்கள் 798), நான்கோவ்ரி (மக்கள் 538), டிரின்கெட் (மக்கள் 116), கட்சால் (மக்கள் 905), லிட்டில் நிகோபார் (மக்கள் 182), புலோமிலோ (மக்கள் 40), கொண்டுல் (மக்கள் 82), கிரேட் நிகோபார் (மக்கள் 203)—மக்கள் வசிக்கின்றனர். மற்ற ஏழு தீவுகளி லும்—பாட்டி மால்வ், டிலோங் சாங், மெரோ, டிராக், டிரிஸ், மஞ்சால், காப்ரா—மக்கள் வாசமே கிடையாது.

வடகோடித் தீவான கார் நிகோபார் தீவிற்கும், தென்கோடித் தீவின் தென்முனைக்கும் இடையே உள்ள தூரம் 160 மைலாகும்.

நிகோபார் தீவின் மேற்கே கடலுக்கப்பால் இந்தியா இருக்கின் றது. வடக்கே அந்தமான், கிழக்கே மலேசியா, தெற்கே இந்தோனேஷியா இருக்கின்றன. கார் நிகோபாருக்கும் இந்தியா வில் சென்னை, கல்கத்தா நகர்களுக்கும் இடையே உள்ள தூரம் முறையே 650, 850 கடல் மைலாகும். அந்தமான் தீவுகளின் தென்கோடியில் உள்ள லிட்டில் அந்தமானிலிருந்து 60 மைல் தூரத்திலும், அந்தமான், நிகோபார் தீவுகளின் தலைமை அலுவலகமாக தெற்கு அந்தமான் தீவில் இருக்கும் போர்ட் பிளேர் துறைமுகத்திலிருந்து கார் நிகோபார் 150 மைல் தூரத்தி லும் அமைந்திருக்கின்றது. கிரேட் நிகோபார் தீவின் தென்முனை யான 'பிக்மாலியன் பாயின்ட்' என்பதற்கும், இந்தோனேஷியா வின் சுமத்திராத் தீவின் வடக்கு முனையில் உள்ள 'ஆச்சின் ஹெட்' என்பதற்கும் இடையில் உள்ள தூரம் 91 மைலேயாகும்.

அந்தமான், நிகோபார் தீவுகளின் பகுதிகள் இரண்டும் ஒரு காலத்தில் தென்கிழக்கு ஆசிய நிலப்பரப்பை சேர்ந்திருந்ததாகக்

கருதப்பட்டு வருகின்றது. அந்தமான், நிகோபார் தீவுகள் நெடுக மலைத்தொடர் ஒன்று, பர்மாவில் அரகான்ஸில் உள்ள கேப் நிகாரிஸ் முனையிலிருந்து இந்தோனேஷியாவைச் சேர்ந்த சுமத்திராத் தீவில் உள்ள ஆச்சின் ஹெட் வரையும் இருந்துவந்ததாகக் கூறப்படுகின்றது, 15 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் நில இயல் கோளாறுகள் காரணமாக, இத்தீவுகளைச் சுற்றியிருந்த நிலப் பரப்புகள் மூழ்கிவிட்டதென்றும், மலைத்தொடரின் சிகரங்களும், கடலுக்கு மேலேயிருந்த மேட்டுப் பகுதிகளும், இன்று காணப் படும் தீவுகளாக அமைந்துவிட்டன.

நிகோபார் தீவுகள் பூமியின் வலுவற்ற பகுதிகளைக் குறிப்பிடும் வரைகோடுகளின் இடையே அமைந்திருக்கின்றன. அதனால் அங்கு கடும் நிலநடுக்கங்கள் தோன்ற ஏதுவாயிருக்கின்றன.

முருகைப்பார்கள் வளர்ந்ததின் காரணமாகவும் சில தீவுகள் ஏற்பட்டிருக்கின்றன. குறிப்பாகக் கார் நிகோபாரில் கடலுக்கு அருகில் சில அடிகள் தோண்டினால் போதும், முருகைப்பார்கள் கிடைக்கின்றன.

நிகோபார் பகுதியில் மிக முக்கியமான தீவு, வடகோடியில் உள்ள கார் நிகோபார் ஆகும். அங்குதான் மக்கட் தொகை மிகுதியாக உள்ளது. நிகோபார் மக்களில் மூன்றில் இரு பகுதியினர் அங்கு வாழுகின்றார்கள். நிகோபார் குழுவில் அதுவே மிகவும் அபிவிருத்தியடைந்த தீவுமாகும். இத்தீவில் உள்ள மக்களின் போக்குக்கும், அறிவாற்றலுக்கும், நிகோபார் பகுதியில் மற்ற தீவுகளில் உள்ள மக்களுக்கும் இடையே பலத்த வேறுபாடு இருக்கின்றது.

49·59 மைல் பரப்பளவைக்கொண்ட கார் நிகோபார் தட்டையான நிலப்பரப்புடன், ஆஸ்திரேலியாவைப் போன்று சதுர வடிவில் அமைந்திருக்கின்றது. தீவின் நடுவே சிறிது மேடாகி வடமேற்குக் கோடியில் பாசா என்ற இடத்தில் 200 அடி உயரம் செல்கின்றது. கிழக்கிலிருந்து மேற்காகச் சரிந்திருக்கின்றது. தீவில் ஆறு என்று இல்லாவிட்டாலும், தீவின் உள்பாகத்தில் ஓடை ஒன்று தோன்றி, வடமேற்காக ஓடி, பாசா என்ற இடத்தில் கடலில் கலக்கின்றது. தீவின் தென்கரையில், கிமூஸ் என்ற கிராமத்திற்கு அருகில் சிறு குடா ஒன்று, நான்கு மைல் தூரத்திற்கு உள்நோக்கிச் செல்லுகின்றது. மேலே செல்லும்பொழுது அதில் நல்ல நீரும் கிடைக்கின்றது.

தீவுகள் செழிப்பான மண் வளம் கொண்டிருக்கின்றது. தீவுகளின் கரையோரத்தைச் சுற்றிலும் இரண்டு, மூன்று மைல் அகலத்தில் செழிப்பான தென்னந்தோப்புகள் இருக்கின்றன. அதனல் இத்தீவுகள் மிகச் செழிப்பு மிகுந்த வெப்ப மண்டலப் பகுதிபோல் காட்சி தருகின்றன.

கார் நிகோபாரில் 15 கிராமங்கள் இருக்கின்றன. அவைகள்: மூஸ் (மக்கள் 982), கின்மாய் (மக்கள் 424), ஸ்மால் லபாடி (மக்கள் 641), பிக் லபாடி (மக்கள் 679), டபோமிங் (மக்கள் 443), சுக்சுக்கியா (மக்கள் 686), கின்யூகா (மக்கள் 623), டமாலூ (மக்கள் 890), பெர்கா (மக்கள் 998), மலாக்கா (மக்கள் 914), ககானு (மக்கள் 492), கிமூஸ் (மக்கள் 507), அராங் (மக்கள் 576)., டீடாப் (மக்கள் 291), சவாய் (மக்கள் 767). இந்த கிராமங்கள் அனைத்தும் கடற்கரையோரம் அமைந்திருக்கின்றன. தீவைச் சுற்றிலுமான 32 மைல் சாலையொன்று இக்கிராமங்கள் அனைத்தையும் இணைக்கின்றன.

தீவின் தெற்குக் கரையில் இரு சிறு அழகிய, செழிப்பான கிராமங்கள், ககானு, கிமூஸ் என்பவை இருக்கின்றன.

தீவின் மேற்குக் கரையோரத்தில் அராங் என்ற ஒரு கிராமம் மட்டுமே இருக்கின்றது. அரசினரின் தென்னை அபிவிருத்திக் காட்சித் தோப்பு, ஆக்சாங் என்பது அங்கிருக்கின்றது.

தீவின் வடகரையில் சவாய், டீடாப் என்ற இரு கிராமங்களே உள்ளன. டீடாப் என்ற கிராமம் மிகச் சிறியது. ஆனல் அதன் அழகிய கடற்கரை, மிகவும் சிறப்பானது. அங்குத் தூய்மையான வெண் மணற்பரப்பு இருப்பதாலும், கடலும் அங்கு ஓரளவு பாதுகாப்பாக இருப்பதாலும், நல்ல சரிவு ஒன்று அமைந்திருப்பதாலும், அந்தக் கடற்கரை கடலில் குளிப்பவர்களுக்கும், உல்லாச விருந்து நாடிச் செல்பவர்களுக்கும் மிகவும் விருப்பமான இடமாக இருந்துவருகின்றது. தீவிற்கு வருபவர்களும், அந்த இடத்தை மிகவும் விரும்புகின்றனர். தீவிற்கு வருகை தருபவர்களின் வசதிக்காக, சமீபத்தில் பொதுப் பணித் துறையினர் கடற்கரையில் தங்கும் விடுதியொன்றைக் கட்டியுள்ளனர். கடலோரம் அங்கு வளைந்திருப்பதால் டீடாப் கிராமத்தில் கடல், மற்ற இடங்களைக் காட்டிலும் பாதுகாப்பாக இருக்கின்றது. இத்தீவில் அதுவே பாதுகாப்பான முனையாக இருந்துவருகின்றது. அதனல், தீவுகளைச் சுற்றிலும் கடல் கொந்தளிக்கும் காலையில்,

டீடாப் கரையில் கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நிற்கின்றன. கப்பலில் சாமான்களை ஏற்றி இறக்கும் பணியும் இங்கு நடைபெறுகின்றது.

தீவுகளில் உள்ள மற்ற கிராமங்கள் மூஸ், கின்மாய், ஸ்மால் லபாடி, பிக் லபாடி, டபோமிங், சுக்சுக்கியா, கின்யூகா, டமாலு, பெர்கா, மலாக்கா என்ற வரிசையில், தீவின் கடற்கரையோரமாக வடக்கிலிருந்து தெற்குவரை இருக்கின்றன. பிரிட்டிஷ் காலத்தில் நிர்வாகத் தலைமை அலுவலகம் மூஸ் என்ற கிராமத்தில் இருந்துவந்தது. முதல் மதாலயமும், பள்ளிக்கூடமும் இங்கு தான் அமைக்கப்பட்டன. முதன்மை ஊர் தலைவரின் கிராமம் என்பதாலும், தீவு மக்கள் அனைவரிடமும் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த ரிச்சர்டுசன் பாதிரியார் இருந்த கிராமம் என்பதாலும் அது மேலும் முக்கியத்துவம் பெற்றது. அங்கிருந்த அழகான மதாலயமும் சிறப்புடன் விளங்குகிறது. அங்கிருக்கும் எழில் மிகுந்த விளையாட்டு மைதானத்தில் கிராமங்களுக்கு இடையே கால்பந்தாட்டப் பந்தயங்கள் நடைபெற்று வருகின்றன. வருடத்தில் நவம்பர் முதல் ஏப்ரல் மாதம் வரை ஆறு மாதங்கள் இந்த கிராமத்திற்கு எதிரே கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நிற்கின்றன. நிரந்தரமான சரக்கு இறக்கும் துறையொன்றும் இப்பொழுது கட்டப்பட்டு வருகின்றது.

கார் நிகோபார் தீவின் வாழ்வில் பிக் லபாடி என்ற கிராமத்திற்கு ஓர் உன்னத இடம் இருந்துவருகின்றது. ஏனென்றால் அதுவே தாய்மை கிராமமாக, அங்கிருந்தே நிகோபார் மக்கள், தீவின் மற்ற பகுதிகளுக்குப் பரவியதாகக் கருதப்பட்டது. முன்பெல்லாம் ஒரு பரம்பரையான சம்பிரதாயம் இருந்துவந்தது. தீவின் முதன்மை தலைமகன் அந்த கிராமத்தைச் சேர்ந்தவராகவே இருந்துவந்தார். ஆனால் அது கைவிடப்பட்டது. இருப்பினும், இப்பொழுதுகூட தீவுகளில் நடக்கும் மிக முக்கியமான நிகழ்ச்சிகள் அநேகம், குறிப்பாக, வருகைதரும் பிரமுகர்களுக்குத் தரப்படும் வரவேற்புகள், எல்லா கிராமங்களும் கலந்துகொள்ளும் நிகழ்ச்சிகள் இந்தக் கிராமத்திலேயே நடைபெற்று வருகின்றது. சமுதாய அபிவிருத்தித் தொகுதி, தகவல் நிலையம், தச்சு வேலை, கொல்லு வேலை, தையல் வேலை, பிரம்பு, மூங்கில் முடையும் பணி ஆகியவைகளைக் கற்றுத்தரும் உற்பத்திக் கேந்திரம் முதலானவைகளும், நிகோபார் தீவுகளில் உள்ள ஒரே உயர் செகண்டரி பள்ளிக்கூடமும் இந்த கிராமத்தில் இருக்கின்றன.

கார் நிகோபார் வர்த்தக நிலையத்தின் தலைமை அலுவலகம் சுக்சுக்கியா என்ற கிராமத்தில் இருக்கின்றது. அந்த வர்த்தக நிலையம் கார் நிகோபார் தீவில் கொப்பரை, பாக்கு உட்பட எல்லா நுகர் பொருட்களின் வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ளது.

மலாக்கா என்ற கிராமம் முக்கியத்துவம் பெற்றது. அங்கு மே மாதம் முதல் அக்டோபர் வரை, ஆறு மாதங்கள், அதன் கடற்கரையில் கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நிற்கின்றன. கப்பல்களில் சாமான்கள் ஏற்றி இறக்குவதும் நடைபெற்று வருகின்றன. நிரந்தரமான சரக்கு இறக்கும் துறையொன்றும் இங்குக் கட்டப்பட்டுள்ளது. இந்த கிராமத்திற்கு அருகில், வருகைதரும் அரசாங்க அலுவலர்கள் தங்கும் விருந்தினர் மாளிகையொன்று, கடலை நோக்கிய அழகான இரண்டடுக்கு மாடிக் கட்டிடத்தில் அமைந்துள்ளது.

இத்தீவின் தலைமை அலுவலகப் பகுதி மலாக்கா, பெர்கா என்ற கிராமங்களின் சில பகுதிகளைச் சேர்த்து, தீவில் ஒரு மைல் உள்நோக்கி அமைக்கப்பட்டிருக்கின்றது. அநேகமாக எல்லா அரசாங்க அலுவலகங்களும், அலுவலர்களின் இல்லங்களும், மற்றும் சிப்பந்திகளின் குடியிருப்புகளும் இங்கே அமைந்துள்ளன. இது உண்மையில் கார் நிகோபார் தீவின் நிர்வாகத் தலைமை அலுவலகமாக மாத்திரமல்லாமல், நிகோபார் தீவுகள் அனைத்துக்குமே அலுவலகப் பகுதியாக விளங்குகின்றது. நமது நாட்டு தலைநகரை ஒப்புவமையாக வைத்து அதை, நிகோபார் மக்கள் அவர்களுக்குள்ளாகவே 'டில்லி' என்று கூறிக்கொள்கின்றூர்கள். கூட்டு துணை ஆணையர் அலுவலகம், மருத்துவ நிலையம், துணை அரசினர் கருவூலம், துணை அஞ்சல்—தந்தி நிலையம், காவல் நிலையம், சமுதாய நல கேந்திரம், கூட்டுறவு சிற்றுண்டி விடுதி முதலானவைகள் இப்பகுதியில் உள்ள முக்கியமான கட்டிடங்களாகும்.

மலாக்கா, ககாஞு என்ற கிராமங்களுக்கு இடையே, இரு கிராமங்களிலிருந்தும் சேர்க்கப்பட்ட ஒரு பகுதியில் விமான தளமும், இந்திய விமானப்படை நிலையமும் இருக்கின்றன.

இத்தீவில், இந்த கிராமங்கள் அல்லாமல், ஒரு கவர்ச்சியான இடம் சிறு குகையொன்றுகும். அது தலைமை அலுவலகப் பகுதியிலிருந்து, ககாஞு என்ற கிராமத்திற்கு வளைந்து செல்லும் சாலையில் இருக்கின்றது. 120 கஜ நீளமுள்ள அந்தக் குகை சுண்ணும்புக் கற்களால் ஆன கல் முனைகளால் ஆனது. இந்தக் குகைபற்றிய

கதையொன்று உண்டு. கடந்த காலத்தில் மிகக் குள்ளமான மனிதர்கள் இங்கு வசித்துவந்தார்களாம். அவர்களை மற்ற சாதாரணமான மனிதர்கள் சுரண்டியதால், இந்தக் குகைக்குள் புகுந்து பூமியின் பாதாளத்திற்குச் சென்றுவிட்டதாகக் கதை கூறப்படுகின்றது. ஜப்பானியரின் ஆக்கிரமிப்பின்போது, ரிச்சர்டுசன் பாதிரியார், கைதாவதினின்று தப்புவதற்காக, இக் குகையில் ஒளிந்திருந்ததாகச் சொல்லுகின்றார்கள். எனினும், ஜப்பானியர்கள் அவரை இறுதியாகக் கண்டுபிடித்துவிட்டார்கள். பின்னர் ஜப்பானியர்கள் போர்தளவாடங்களையும், மற்ற பொருள்களையும் சேமிக்க இந்தக் குகையைப் பயன்படுத்திக் கொண்டார்கள்.

நிகோபார் பகுதியில் உள்ள மற்ற தீவுகள் கார் நிகோபாரி லிருந்து ஒரு சிறிது மாறுபட்டிருக்கின்றன. சோவ்ராவைத் தவிர மற்றத் தீவுகளில் மக்கட் தொகை குறைவு. மக்கட் தொகை குறைவாக இருப்பதனால், அந்தத் தீவுகளில் (சோவ்ராவைத் தவிர) ஒருசில குடிசைகளே உள்ளன. அதனால் கார் நிகோபாரில் போன்று இங்குச் சமுதாய நடவடிக்கைகள் எதுவும் எடுக்கப்பட வில்லை; முடியாமற் போய்விட்டன. இந்தத் தீவுகளில் உள்ள மக்களை, கார் நிகோபார் மக்களுடன் ஒப்பிடும்பொழுது, மிகவும் பிற்போக்கானவர்கள். சரியான போக்குவரத்து வசதிகள் இல்லாமையும், மக்கள் இங்கும் அங்குமாய் சிதறியிருப்பதாலும், இத்தீவுகளை அபிவிருத்திச் செய்வதும் கடினமாகயிருக்கின்றது. இத்தீவுகளின் (சோவ்ராவைத் தவிர) மக்களுக்கு அதிக நிலம் இருப்பதால், கார் நிகோபார் மக்களைக் காட்டிலும் அவர்கள் செல்வந்தர்களாக உள்ளார்கள். ஆனால், மிகவும் சோம்பேறித் தனமாக இருக்கின்றார்கள். தங்கள் தோப்புகளில் செய்ய வேண்டிய குறைந்தபட்ச வேலைகளைக்கூட செய்வதில்லை. சோவ்ராவைச் சேர்ந்த மக்களும், சில சமயங்களில் கார் நிகோபா ரைச் சேர்ந்தவர்களும், இவர்களுடைய தோப்புகளில் ஊழியம் பார்க்கின்றார்கள். எல்லாப் பகுதிகளிலும் கிருஸ்துவ மதம் பரவில்லை. மக்களில் அநேகர் இன்னமும் பழமையான சூனிய மத நம்பிக்கைகளையே பின்பற்றி வருகின்றனர். சூனியவாதிகள் ஆட்டி வைப்பதற்கு ஏற்ப, எல்லா வகையான பேய் பிசாசுகளைக் கண்டும் எப்போதும் நடுநடுங்கி வாழ்ந்துவருகின்றனர். எதை யாவது நினைத்துக்கொண்டு, கோழிகளையும், பன்றிகளையும் இரத்த பலியிட்டுப் பேய்களை ஓட்டுவதாக எடுத்ததெற்கெல்லாம்

விழாக் கொண்டாடுகின்றார்கள். குரூரமான விழாவாகயிருந்தாலும், ஆடிப்பாடிக் கூத்தடிப்பது கோலாகலமாகயிருக்கும்.

நிகோபார் பகுதியில் உள்ள மற்ற தீவுகளில், கார் நிகோபாருக்கு அருகில் உள்ள பாட்டி மால்வ் என்பது சிறிய தீவு. அங்கு மக்கள் வசிப்பதில்லை. அது மிகச் சிறியதாகயிருப்பதால் 'குவான்நோ' அல்லது 'சிறிய ஒன்று' என்று நிகோபார் மக்கள் அழைக்கின்றனர். கார் நிகோபார் தீவிலுள்ள ககாணு என்ற கிராமத்திற்குத் தெற்கே 18 மைல் தூரத்தில் அது உள்ளது. வானம் தெளிவாக இருக்கும் நாட்களில் அந்தக் கடற்கரையிலிருந்து அத்தீவைக் காணமுடியும். உண்மையில் அத்தீவு கார் நிகோபாருக்கு வெகு அருகில் இருக்கின்றது. இதைப்பற்றி நிகோபார் மக்கள் ஒரு கதை கூறிவருகின்றார்கள். அதாவது, ஒருகாலத்தில் அத்தீவு கார் நிகோபாருடன் சேர்ந்திருந்ததாம். சாகா என்றதொரு சிறிய பறவை இரவெல்லாம் அந்நிலப் பகுதியைக் கொத்திக் கொத்தித் திருடிச் சென்றதாம். இருந்தாலும் அப்பறவை வெகுதூரம் செல்ல முடியவில்லை. அதற்குள் விடிந்துவிட்டது. களவு தெரியக்கூடாது என்பதற்காக, அந்நிலப் பகுதியை அப்படியே கடலில் போட்டுவிட்டது. அதுவே பாட்டி மால்வ் தீவாக மாறிவிட்டதாம். அத்தீவு, கார் நிகோபாரில் உள்ள ககாணு கிராமத்து மக்களைச் சேர்ந்ததாகக் கூறப்படுகின்றது. அவர்கள் அங்குத் தென்னை மரங்களை வளர்த்துள்ளார்கள். கார் நிகோபார் மக்கள், சோவ்ராவுக்கு வருடாந்திரப் பயணங்கள் மேற்கொள்ளும்பொழுது, சில சமயங்களில், கடல் கொந்தளிப்பாக இருக்கும்காலையில், அத்தீவில் தங்கி ஓய்வு எடுத்துக்கொள்ளுகின்றனர். அத்தீவில் புறுக்கள் நிறைந்து இருக்கின்றன. தீவைச் சுற்றிய கடல் நீரிலும் நிறைய மீன்கள் கிடைக்கின்றன. அதனால் கார் நிகோபார் மக்கள் பறவைகள் வேட்டைக்கும், மீன் பிடிப்பதற்கும் அத்தீவிற்குச் செல்லுகின்றார்கள்.

கார் நிகோபாரிலிருந்து 40 மைல் தூரத்தில், பாட்டி மால்வுக்கு அப்பால் சோவ்ரா என்ற சிறிய தீவு இருக்கின்றது. அது ஒரு சுவாரஸ்யம் மிகுந்த தீவு. அது ஒரு குறுகிய, ஆனால் தட்டையான நிலப் பரப்புகொண்ட தீவு. இதன் தென்கோடியில் ஒரு சிறிய குன்று இருக்கிறது. அது பேய்களின் இருப்பிடம் என்று கூறப்படுகின்றது. அங்குப் பேய்கள் வசிப்பதாக மக்கள் கருதுகின்றார்கள். 2·8 சதுர மைல்கொண்ட அத்தீவில் 1,288 பேர் வசிக்கின்றனர்.

அதுவே, நிகோபார் பகுதியில் மிகுந்த மக்கள் தொகைகொண்ட தீவாகும். அதன் கிழக்குக் கடற்கரையில் ஐந்து கிராமங்கள் இருக்கின்றன. கோடை மாதங்களில் அங்குப் போதுமான குடிநீர் கிடைப்பதில்லை. உண்மையில் அங்குப் போதுமான தென்னைமரங்களும் இல்லை; வாழ்வதற்குப் போதுமான பொருளாதார வாய்ப்பு வசதிகளும் இல்லை. இருந்தாலும் சோவ்ராத் தீவு மக்கள் நல்ல கடும் உழைப்பாளிகள், புத்திசாலிகள். ஆதிவாசிகளின் மூட நம்பிக்கைகளை வளர்த்துக் காசாக்கிக்கொள்ளுகின்றார்கள். ஆதி காலந்தொட்டே, தங்களின் தந்திர மந்திர வலிமைகள்பற்றிக் கதை கதையாகப் பேசவைத்தார்கள். சோவ்ரா மக்களின் சீற்றத்துக்கு உள்ளானவர்கள் பட்ட கஷ்டநஷ்டங்கள்பற்றியும் பல கதைகள் இருக்கின்றன. தற்போது நன்கு முன்னேற்ற மடைந்த கார் நிகோபார் மக்கள்கூட, பல பழமையான மூட நம்பிக்கைகளைக் கைவிட்ட அவர்கள், சோவ்ரா மக்களைக் கண்டு மனதாரப் பயப்படுகின்றனர். இப்பொழுது கிருஸ்துவ மதம் பரவியுள்ளதால், தீவில் அநேக மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. ஒரு பள்ளிக்கூடமும், மருத்துவ மனையும் சமீபத்தில் கட்டப்பட்டுள்ளன. இருந்தாலும், அது பழைய பாரம்பரியத்தைக் கட்டிக் காக்கும் கோட்டையாகவே இருந்துவருகின்றது. மக்கள் மிகவும் பின்னடைந்திருக்கின்றார்கள். சூனியவாதிகளின் குரல் ஓங்கியே யிருக்கின்றது.

இத்தீவு மக்கள் நல்ல படகுகளும், மண் பானைகளும் செய்கின்றார்கள். இங்குப் படகு செய்வதற்கான மரமோ, பானைகள் செய்வதற்கான களிமண்ணோ கிடைப்பதில்லை. டெரசா என்ற பக்கத்துத் தீவிலிருந்துதான் கொண்டுவரப்பட வேண்டியிருக்கின்றது. பண்டிகைகள், விழாக்களின்போது ஆசாரமான, தூய உணவு சமைக்க சோவ்ராத் தீவுப் பானைகளையே பயன் படுத்தவேண்டும்; சோவ்ராவிலிருந்து படகு போகவேண்டும் அல்லது படகுகளுக்குச் சோவ்ரா பூசாரிகளின் ஆசி பெற வேண்டும் என்பதை நிகோபார் மக்கள் நம்புகின்றனர். இல்லாவிடில், அந்தப் படகுக்குக் கடலில் ஆபத்து ஏற்படும் என்று நினைக்கின்றனர். இந்தக் காரணங்களால், சோவ்ரா மக்கள், இடைத்தரகர் என்ற முறையில் ஆதாயம் பெருகின்றனர்.

டிசம்பர் மாதம் முதல் ஏப்ரல் மாதம் வரை கடல் அமைதியாக இருக்கும் காலத்தில், மற்ற தீவுகளைச் சேர்ந்த மக்கள், குறிப்பாகக் கார் நிகோபார் மக்கள் இத்தீவிற்குத் தங்கள் படகுகளில்

வந்து அரிசி, துணிமணி, கத்தி, பன்றி முதலான பொருள்களைக் கொடுத்துப் பானைகளையும், படகுகளையும் பரிவர்த்தனையாக வாங்கிச் செல்லுகின்றார்கள். இந்தப் பயணம் வர்த்தக ரீதியில் மாத்திரம் முக்கியமில்லாமல், கார் நிகோபார் ஆண் மகன் ஒவ்வொருவனும், சோவ்ராவில் உள்ள சூனியவாதிகளுக்கு மதிப்பும், மரியாதை செலுத்துவதற்கும் மேற்கொள்ளப்படுகின்றது. சோவ்ராவுக்குப் பயணம் செல்லும் இளம் வாலிபர்களின் முதல் பயணம் கோலாகலமான விழாவாகக் கொண்டாடப்படுகின்றது. அது பின்னர் விவரிக்கப்படும். சோவ்ராத் தீவு மக்களும், தங்கள் பொருள்களைப் பரிவர்த்தனை செய்ய மற்றத் தீவுகளுக்குச் செல்வதும் உண்டு.

மண்பாண்டங்களும், படகுகளும் விற்பதல்லாமல் சோவ்ரா மக்கள் தங்களுக்கு இருந்த சிறிதளவு நிலத்தில், சேனைக்கிழங்கு, காய்கறி, கனிவகைகள் பயிரிடுதலில் முனைந்து ஈடுபட்டு வாழ்க்கைக்கான வருமானம் தேடிக்கொண்டுள்ளார்கள். மற்ற தீவுகளின் (கார் நிகோபார் தவிர) மக்களுக்கு, அதாவது சோம்பல் காரணமாக வேலை எதுவும் செய்யாத மக்களுக்குச் சொந்தமான தோட்டங்களுக்குச் சென்று அவைகளில் வேலை செய்தும் வருவாய் தேடிக்கொண்டுள்ளார்கள். அவர்கள் நல்ல திறமைசாலிகள். கடும் உழைப்பாளிகள். நல்ல கூலிவேலையாட்கள். ஆண்களே மற்ற தீவுகளுக்கு வேலைசெய்யச் செல்லுகின்றார்கள். அதுவும் வீட்டை விட்டு இரண்டு மாதமே தங்கியிருப்பார்கள். வீடுகளை விட்டு வெளியே சென்று கழிக்கும் ஒவ்வொரு நாளையும் ஒரு கழியில் அடையாளம் செய்து குறித்துக் கொண்டு நாட்களை எண்ணிக்கொள்கின்றார்கள். அந்தக் கழியில் 60 அடையாளங்கள் குறிக்கப்பட்டுவிட்டால் (அதாவது, 2 மாதங்கள் முடிந்துவிட்டது என்றால்) அதற்குமேல், எந்த ஆசை காட்டினாலும் வேலை செய்யமாட்டார்கள். அவர்களுடைய தீவிற்கு அவர்களை அனுப்பிவிடவேண்டும். கப்பல் எதுவும் கிடைக்கவில்லையென்றால், ஏதாவது ஒரு படகைத் திருடிக்கொண்டும், எந்தவித ஆபத்தையும், கடல் கொந்தளிப்பையும் பொருட்படுத்தாமல், பரந்த கடல் பயணத்தின் விபத்துகள்பற்றிய எண்ணமேயில்லாமல், தாங்கள் இருக்கும் தொலைதூரத் தீவிலிருந்து சோவ்ராவுக்குப் படகு வலிக்க ஆரம்பித்துவிடுவார்கள். தங்கள் வீடுகளுக்குத் திரும்புவதில் இவ்வளவு ஆர்வம் காண்பிப்பதற்கு, சோவ்ரா மக்கள் தங்கள் தீவை

மிகவும் நேசிப்பதும் ஒரு காரணமாகும். மற்றும் ஒன்று, தங்கள் இல்லங்களைவிட்டு அதிக நாட்கள் வெளியே தங்கியிருக்கும் பொழுது, தங்கள் மனைவியர்களை தீவிலேயே தங்கிவிடும் மாற்றான் கைப்பற்றிக்கொண்டு விடுவானோ என்ற அச்சமும் ஒரு காரண மாகும்.

சோவ்ராவுக்கு அடுத்தாற்போல் டெரசா, பாம்புகா என்ற தீவுகள் இருக்கின்றன. இவை இரண்டில் பின்னது மிகச் சிறியது. அது அநேகமாக ஒரு சிறிய குன்றுபோல் கடலுக்கு வெளியே துருத்திக்கொண்டு நிற்கின்றது. அங்கு ஒரு சில மக்களே வசிக்கின்றனர். அவர்களிடம் தென்னந்தோப்புகள் இருக்கின்றன. சில சமயங்களில் அவர்கள் பக்கத்துத் தீவான டெரசாவுக்கு படகுகளில் சென்று தங்களிடமுள்ள கொப்பரைத் தேங்காய்களைக் கொடுத்துவிட்டு, அதற்குப் பதிலாக சில நுகர் பொருள்களைப் பெற்றுத் திரும்புகின்றார்கள்.

டெரசா நல்ல பெரியதொரு தீவு. வெள்ளரிக்காய் வடிவ மானது. அது 35 சதுர மைல் பரப்புகொண்டது. நடுவே மலைப் பாங்காகவும், வடக்கு நோக்கி எடுப்பான மேட்டுப்பாகமும் கொண்டிருக்கின்றது. அங்கு மண் வளம் சரியில்லை. இருப்பினும் கரையோரம் தென்னந்தோப்புகள் கணிசமாக இருக்கின்றன. எலுமிச்சை மரங்களும், கோழிகளும் நிறைந்து இருக்கின்றன. குறிப்பாக மக்கள் அதிகமில்லை. அவர்கள் மிகுந்த சோம்பலான வர்கள், பின்னடைந்திருக்கின்றார்கள். உண்மையில் அவர்கள் சரியான கனவுலகவாசிகள்! குடம் குடமாக கள் குடிப்பதுடன், பேய் பிசாசுகளுக்கு சடங்குகள், விழாக்கள் எடுப்பது தவிர, மற்றெதிலும் அவர்களுக்கு ஆசையில்லை. இந்த மக்களிடையே ஒரு குறிப்பிடத்தக்க அம்சம், அவர்கள் தலைமுடி. தமிழ்நாட்டு வைதிக மக்கள்போல், தலைமயிரை முடிந்துக் குடுமி வைத்திருக் கின்றார்கள் அநேக ஆண்கள். சோழர் காலத்தில் தமிழ்நாட்டின ருடன் தொடர்புகொண்டிருந்தபொழுது, இம்மாதிரி குடுமி வைக்கும் பழக்கம் இவர்களுக்கு ஏற்பட்டிருக்கக்கூடும் என்று கருதப்படுகின்றது.

மேலும் தெற்கே, கமோர்டா, நான்கோவ்ரி, டிரின்கெட், கட்சால் ஆகிய தீவுகள் ஒன்றுக்கொன்று நெருங்கியிருக்கின்றன. கமோர்டா, நான்கோவ்ரி தீவுகள் இரண்டும் மலைப்பாங்கானது. கரையோரத்தில்தான் தட்டையான பரப்புகொண்டிருக் கின்றன. குன்றின் உச்சிகளில் புல் மைதானம் காணப்படுவ



படம் 3.  கார் நிகோபாரில் ஒரு பாக்கு மரத் தோப்பு

தால், இங்கிலாந்து நாட்டுப்புறத் தோற்றம்போல் தென்படு கின்றன. கார் நிகோபாரிலிருந்து சுமார் 90 மைல் தூரமுள்ள இத்தீவுகளுக்கிடையே, மிக அழகான, அருமை மிகுந்த இயற் கைத் துறைமுகம் ஒன்று இருக்கின்றது. இத்துறைமுகத்திற்கு கிழக்கிலும், மேற்கிலும் இரு நுழைவாயில்கள் அமைந்திருப்பதும் ஒரு சிறப்பாகும். துறைமுகத்தின் ஒரு பக்கத்தில், கமோர்டாத் தீவில், நான்கோவ்ரிப் பகுதித் தீவுகளின் நிர்வாகத் தலைமை அலுவலகம் இருக்கின்றது. அதாவது கார் நிகோபார், பாட்டி மால்வ் தீவுகள் தவிர நிகோபார் பகுதியில் உள்ள எல்லாத் தீவுகளின் தலைமை அலுவலகம் இது. இதே இடத்தில்தான், முன்பு டேனிஷ் மதக்குழுவினர் குடியேற்ற முயற்சி மேற்கொண் டனர். முயற்சி வெற்றிபெறவில்லை. காரணம் சுகாதாரச் சூழ்நிலை சரியில்லை. குறிப்பாக மலேரியாத் தொல்லை அதிகமாக யிருந்தது. இப்பொழுது மலேரியாத் தடுப்பு முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டதால், அந்த இடத்தின் சுகாதார சூழ்நிலை மேம்பட்டுவிட்டது. அங்குப் பல அரசாங்க அலுவலகங்களும், அரசாங்க அலுவலர்களின் குடியிருப்புகளும், மருத்துவ மனை, அரசினர் துணைக் கருவூலம், காவலர் நிலையம் ஆகியவை இருக் கின்றன.

துறைமுகத்தின் மறு பகுதியில், நான்கோவ்ரித் தீவில், நான் கோவ்ரி வர்த்தக நிறுவனத்தின் தலைமை அலுவலகம் இருக் கின்றது. நான்கோவ்ரிப் பகுதித் தீவுகளில் அந்த ஒரு வர்த்தக நிறுவனமே இருக்கின்றது. நான்கோவ்ரி, கமோர்டா தீவுகளின் தலைவரான ராணி லட்சுமி அங்கு வசிக்கின்றார். டெரசா, பாம்புகா தீவுகளின் மக்களிடமும் அவர் நல்ல செல்வாக்குப் பெற்றிருக்கின்றார்.

19 சதுர மைல்கொண்ட, நான்கோவ்ரி என்ற அந்தச் சிறிய தீவில், மற்றெந்த முக்கியமான இடமும் இல்லை. ஆனால் கமோர்டா ஒரு பெரிய தீவு. 58 சதுர மைல்கொண்டது. அது தவிர பில்பிலோ, ககானா, டாரிங் என்ற மூன்று முக்கிய கிராமங்கள் உள்ளன. அங்கெல்லாம் மக்கள் குவிந்திருக்கின் றார்கள். பள்ளிக்கூடங்கள், மருத்துவ மனைகள், வர்த்தக நிறுவனத்தின் கிளைகள் ஆகியவை இருக்கின்றன.

டிரின்கெட் என்பது ஒரு சிறு தட்டையான பரப்புடைய தீவு. நான்கோவ்ரி துறைமுகத்தின் கிழக்கு நுழைவாயிலுக்கு எதிரே உள்ளது. அத்தீவைச் சுற்றிலும், பவழப்பாறைகள் நிறைந்

திருப்பதால், படகுகள் மூலமே அத்தீவிற்குச் செல்லவேண்டும். அத்தீவில் வசிக்கும் சிலர் வர்த்தகத்திற்கும் சரி, மற்ற எதற்கும் சரி, கமோர்டா, நான்கோவ்ரிப் பகுதிகளையே நம்பியிருக்கின்றார்கள்.

கமோர்டா, நான்கோவ்ரிக்கு மேற்கு நோக்கி கட்சால் தீவு இருக்கின்றது. அது நல்ல பெரியதொரு தீவு. 61 சதுரமைல் பரப்புகொண்டது. மையப்பகுதி மலைப்பாங்காகயிருந்தாலும் தட்டையான நிலப்பரப்பு மிகுந்திருக்கின்றது. கார் நிகோபாரைத் தவிர்த்துப் பார்த்தால், நிகோபார் பகுதியிலேயே இது தான் மிகுந்த மேம்பாடடைந்த தீவாகும். நிகோபார் பகுதியில் உள்ள எல்லாத் தீவுகளைக்காட்டிலும், உண்மையில், இங்கு நல்ல மண்வளம் இருக்கின்றது. சிறந்த தென்னந்தோப்புகளும், மற்ற பழவகை மரங்களும் உள்ளன. வருங்காலத்தில் வளர்ச்சி பெறுவதற்கான வாய்ப்புகளும் பெருகியிருக்கின்றன. சமீபத்தில் இந்திய அரசினரும், இத்தீவு குறித்து அக்கறைகாட்டத் துவங்கியுள்ளனர். குறிப்பாக ரப்பர் தோட்டங்கள் அமைக்க யோசனை செய்து வருகின்றனர். தீவின் மேற்குப்புறத்தில் ஒரு சிறிய விரிகுடா; அதன் நெடுக ஒரு கிராமம். அதற்குப் பெயர் வெஸ்ட் பே கட்சால். அது ஓர் அழகான இடம். தீவின் முதன்மைத் தலைவரான ராணி சங்கா அங்கு வசிப்பதாலும், அந்த இடம் முக்கியத்துவமடைந்துள்ளது. அவர் உள்நாட்டு அமைச்சக ஆலோசனைக் குழுவிலும் அங்கம் பெற்றுள்ளார். இத்தீவில் மற்றொரு முக்கிய இடம் கிழக்குக் கரையில் உள்ள கபாங்கா. அங்குதான் ரப்பர் தோட்டம் அமைக்க யோசனை இருக்கின்றது.

புலோமிலோ, லிட்டில் நிகோபார், கொண்டுல், கிரேட் நிகோபார் என்ற நான்கு தீவுகளும், நிகோபார் தீவுகளின் தென் கோடியில் உள்ள தீவுகளாகும். புலோமிலோத் தீவு லிட்டில் நிகோபாருக்கு வடக்கு நோக்கினாற்போல் இருக்கும் சிறிய தீவு. அங்கு ஒரு பள்ளிக்கூடம், மருத்துவ மனை, வர்த்தக நிறுவனக்கிளைக் கடை ஆகியவை இருக்கின்றன. உண்மையில் லிட்டில் நிகோபார் மக்கள், தங்களின் தேங்காய், பாக்கு வர்த்தகப் பரிவர்த்தனைக்கும், மற்ற பொருள்கள் வாங்கவும், இத்தீவையே நம்பியிருக்கின்றனர். புலோமிலோ கடற்கரை மிகவும் அழகானது. அங்கு வருகை தருபவர்களும், அதை மிகவும் விரும்புகின்றார்கள். புலோமிலோவுக்கும், லிட்டில் நிகோபாருக்

கும் இடையே நல்ல பாதுகாக்கப்பட்ட துறைமுகம் ஒன்றும் உள்ளது.

லிட்டில் நிகோபார் ஒரு நல்ல, பெரிய சதுர வடிவமான தீவு. 61 சதுர மைல் பரப்புகொண்டது. ஆனால், மக்கள் தொகை நெருக்கமாக இல்லை. அடர்த்தியான காடுகள் இருக்கின்றன. ஆனால், அதனால் வருமானம் எதுவும் இல்லை. அது வெறும் மலைப்பாங்கானது. கரையோரங்களில் மாத்திரம் தட்டையான நிலப்பகுதி உள்ளது. தற்போது அந்தத் தீவுப் பூரணமாகப் புறக்கணிக்கப்பட்டிருக்கின்றது. இருந்தாலும் அங்கு நல்லதொரு துறைமுகம் இருப்பதால், வருங்காலத்தில் வளர்ச்சிபெறுவதற்கான வாய்ப்பு இருக்கின்றது. ஆனால், அதற்குத் தேவையான மூலதனமும், முயற்சியும் மேற்கொள்ளுவது அவசியம்.

கொண்டுல் என்ற சிறிய தீவு கிரேட் நிகோபாருக்கு வடக்கே இருக்கின்றது. ஒரு வெளிக்காவல் நிலையம், மருந்தகம், பள்ளிக்கூடம் ஆகியவை அத்தீவில் உள்ளன. வர்த்தக நிறுவனத்திற்கு ஒரு கிளையும் இங்கு இருக்கின்றது. அருகில் உள்ள கிரேட் நிகோபார் தீவின் தேவைகளையும் அது கவனித்துக்கொள்ளுகின்றது. கொண்டுல் மக்களும் நல்ல படகுகள் செய்கின்றார்கள். சோவ்ராவில் செய்யப்படும் படகுகளுக்கு அடுத்தபடியாக அவைகள் இருப்பதால், அவைகளுக்கு நல்ல கிராக்கி உள்ளது.

கிரேட் நிகோபார் தென்கோடியில், நிகோபார் தீவுகளில் உள்ள மிகப்பெரிய தீவாகும். நிகோபார் பகுதியில் உள்ள மற்ற தீவுகள் அனைத்தையும் ஒன்றுசேர்த்தால் இருக்கும் பரப்பளவு, சுமார் 400 சதுர மைல் மொத்த பரப்புகொண்டது அது. சரியான வெப்ப மண்டலத் தீவு போன்று, அடர்ந்த வளப்பமான காடாகக் காட்சியளிக்கின்றது. அநேகமாக மனிதன் கைபடவில்லை. அக்காட்டில் மறைந்து கிடக்கும் உள்பகுதியை ஆராய்வது ஓர் அறைகூவலாக இருக்கும் நேரத்தில், வருங்கால வளர்ச்சிக்கும் உரியதாக இருப்பது ஒரு கவர்ச்சியான அம்சமாக இருக்கின்றது.

தீவின் கணிசமான பகுதி மலைப்பாங்காக உள்ளது. குறிப்பாகக் கிழக்குக் கரையோரம் நோக்கி அமைந்துள்ள குன்றுகளின் சிகரங்கள் நல்ல உயரமாக இருக்கின்றன. மிகவும் உயரமானது மவுண்ட் துல்லியர். 2,105 அடி உயரம்கொண்டது.

நிகோபார் பகுதியில் உள்ள தீவுகளில் ஆறுகள் ஓடும் ஒரே தீவு இது. படிப்படியாக வளைந்து செல்லும் இந்த ஆறுகள் எல்லாம்,

கிழக்கிலிருந்து மேற்காக, தீவு நெடுக ஓடுகின்றன. கலாதியா, அலெக்சான்ட்ரா, டாக்மார் போன்ற சில ஆறுகள் முக்கிய மானவை. அவைகளில், சில இடங்களில் 15 அடியிலிருந்து 20 அடி வரை ஆழம் இருக்கின்றது. எல்லா நதிகளும் மிக அழகானவை. இரு மருங்கிலும் புல் தரை அமைந்து, அடுத் தாற்போல் அடர்ந்த காடுகள் காணப்படுவது எழிலூட்டுகின்றது.

நிகோபார் பகுதியில் உள்ள மற்றெந்த தீவைக்காட்டிலும், கிரேட் நிகோபாரில் அதிக மழை பெய்கின்றது. தெளிவான வானத்துடன்கூடிய நாளைக் காண்பது அரிதாக யிருக்கின்றது. கைபடாத நிலத்தில் ஆண்டாண்டு காலமாக, செடி, கொடி, மரங்கள் மக்கி மடிந்த கரிவகைப் பொருள்களின் சேர்க்கையால், மிகுந்த மண்வளம் பெற்றிருப்பதால், எதுவும் செழித்து வளரும் வகையில் வளம்பெற்றிருக்கின்றது. அதனால் அத்தீவு முழுவதும் மிக அடர்த்தியான காடுகள் இருக்கின்றன. இருந்தாலும் வர்த்தக ரீதியில் விற்பதற்கான மர வகைகள் எதுவும் இல்லை. ஆனால், பிரம்பும் மூங்கிலும் ஏராளமாகக் கிடைக்கின்றன.

தீவு முழுவதும் வன விலங்குகளும் நிறைந்து இருப்பதாகத் தெரிகின்றது. நிகோபார் பகுதியில் மற்றெந்தத் தீவைக் காட்டிலும், வகை வகையான மிருகங்கள் இங்கு உள்ளன. மேலும், குறிப்பாகப் பூச்சி புழுக்களும், ஊர்வன வகைகளும் மிகுந்திருப்பதால், உடல்நலக்கேடு பயக்கும் இடமாக இருக் கின்றது. நதிகளில் முதலைகள் உள்ள ஆபத்தும், குரங்குகளின் கூச்சலும், பறவைகளின் ஒலியும் இத்தீவை மேலும் சிறப்புக்குரிய தாக்குகின்றது.

இத்தீவில் மக்கள் வெகு குறைவு. சுமார் 300 பேர்களே வசிக் கின்றார்கள்.

நிகோபார் பகுதித் தீவுகளில், இந்த ஒரு தீவில் மாத்திரமே இரு இன ஆதிவாசிகள்—நிகோபார் மக்கள்—ஷோம்பன் மக்கள்—வசிப்பதும் குறிப்பிடத்தக்க அம்சமாகும். சுமார் 140 பேர் கொண்ட நிகோபார் மக்கள் கரையோரம் வாழுகின்றார்கள். அவர்களுடைய கிராமங்கள் ஒன்று அல்லது இரண்டு குடிசை களாக, மேற்குக் கடற்கரையோரமாகவே நிறைந்து காணப்படு கின்றன. அங்கு நிலப்பரப்புத் தட்டையாகவும் இருக்கின்றன. அதனால் தென்னை வளர்ப்பது சுலபமாகின்றது. முன்பு, கிழக்குக் கடற்கரையிலும் சில கிராமங்கள் இருந்தன. ஆனால், இப்பொழுது எல்லாம் வெறிச்சோடியிருக்கின்றன.

ஷோம்பன் மக்கள் மிகவும் பின்னடைந்தவர்கள். கிரேட் நிகோபாரில் மாத்திரமே காணப்படுகின்றார்கள். அவர்கள் அநேகமாக தீவின் உள்பகுதியில் வசிக்கின்றார்கள். இருப்பினும் ஒரு சிலர் கரையோரப் பகுதியில் காணப்படுகின்றார்கள். அவர்களுடன் போதுமான தொடர்பு இல்லாததால், அவர்கள் எத்தனை பேர்கள் உள்ளார்கள் என்பது தெரியவில்லை. ஆனால், அவர்கள் நோய்நொடிக்கு ஆளாவதாலும், பழங்காலப் பழக்கத்திலேயே இருப்பதாலும் மடிந்து வருகின்றார்கள் என்று தெரிகின்றது. அவர்கள் நல்ல உடற்கட்டு உடையவர்கள். நிகோபார் மக்களை விட சிறிது உயரமானவர்கள். இருந்தாலும் அவர்களைப்போன்ற உடல்நலம் பெறவில்லை. அவர்களும் கருநிறத்தவர்கள். ஆனால், எடுப்பான உறுப்புக்கள், குறிப்பாக நாசியும், தாடையும் கொண்டவர்கள்.

ஷோம்பன் மக்களைப்பற்றி அதிகம் தெரியாது. காடுகளில் கிடைக்கும் கனி வகை, தேன், நதிகளில் அகப்படும் மீன்கள் ஆகியவைகளைக்கொண்டே அவர்கள் வாழவேண்டும். ஒருசிலர் மரவள்ளிக்கிழங்கு, சேனை, வாழை, புகையிலை ஆகியவற்றைப் பயிர் செய்கின்றார்கள் என்றும் தெரிகின்றது. ஆண்கள் கோவணம் கட்டிக்கொள்கின்றார்கள், பெண்கள் மர உரி தரித்துக் கொள்கின்றார்கள். அவர்கள் பன்றி வளர்க்கின்றார்கள். தேன் கூடுகளிலிருந்து அவர்களுக்குத் தேன் திரட்டவும் தெரியும். மரத் தூண்களை நிறுத்தி, அவைகளின்பேரில் மரங்கள், மூங்கில்களைப் பயன்படுத்தி வீடுகளைக் கட்டியிருக்கின்றார்கள். கூரைகளுக்குப் புல் வேய்ந்திருக்கின்றார்கள். இருந்தாலும் அவைகள் ஆட்டங் கொடுக்கின்றன. நிகோபார் மக்களின் வீடுகளைப்போல் சீராக இல்லை. வீடுகளின் தள மட்டம் மிகச் சிறியதாக, நில மட்டத்திலிருந்து 15 அல்லது 20 அடி உயரத்தில் இருப்பதால், அவைகள் வீடுகள்போலன்றி, ஏதோ பரண்கள்போலிருக்கின்றன. ஷோம்பன்களுக்கு நெருப்பைப் பயன்படுத்தத் தெரியும். சில மரங்களின் பட்டைகளை உணவு வைக்கும் பாத்திரங்கள்போல் பயன்படுத்துகின்றனர். ஈட்டிகள், மீன்பிடி கொக்கிகள் அவர்களிடம் இருக்கின்றன. அவைகளை மிகக் குரூரமானப் பழங்கால வழிகளில் செய்கின்றனர். அவர்களுக்கு புகைபிடித்தல் மிகவும் விருப்பம். ஒரு கைப் புகையிலையோ, பீடியோ, சிகரட்டோ ஆகியவைகளைவிட அவர்களை மகிழ்விக்கும் அன்பளிப்பு வேறெதும் கிடையாது.

ஷோம்பன்கள் பகைமை பாராட்டும் பண்புடையவர்கள் என்று ஏனோ தவறான கருத்து நிலவுகின்றது. அவர்கள் வெளியாட்களுடன் தொடர்புகொள்வதைத் தவிர்க்கின்றார்கள். ஆனாலும், அந்தமான் தீவுகளில் உள்ள ஜார்வா மக்கள் போன்று, மறைந்திருந்து வெளியார்களைக் கொல்லும் மூர்க்கத்தனமானவர்கள் அல்ல. உண்மையில் ஷோம்பன்கள் அயலார்களைக் கண்டு அஞ்சுகின்றார்கள். ஒரு சமயம், அயலார் ஒருவர் கிராமத்தில் நுழைந்துவிட்டதைக் கண்டு, கிராம மக்கள் அனைத்தையுமே விட்டுவிட்டு ஓடிவிட்டதுமுண்டு. அவர்கள் இயல்பிலேயே வெட்கப்பட்டு, நழுவுபவர்களாக யிருந்தாலும், மற்ற மக்களுடன் தொடர்புகொள்வதை முழுவதுமாக வெறுப்பவர்களல்ல; வருகின்ற அயலார்கள் நல்லெண்ணத்துடன் வருகின்றார்கள், தங்களுக்குத் துணிமணிகள் தந்து, புகையிலை பெற்றுப்போக விரும்புகின்றார்கள் என்றால் அவர்களுடன் சுலபமாகப் பழகுகின்றார்கள். தீவின் கரையோரப் பகுதிகளில் உள்ள நிகோபார் மக்களுடன் அநேகர் நல்ல தொடர்புகொண்டிருக்கின்றார்கள். சாதாரண வேலைகள் செய்வதில்கூட சோம்பேறித்தனமாக இருக்கும் நிகோபார் மக்களின் தோட்டங்களில், ஷோம்பன் மக்கள் சிலர் கூலிவேலை செய்கின்றனர். காடுகளில் தேன்கூடுகளிலிருந்து திரட்டிய தேனை, நிகோபார் மக்களிடம் கொடுத்துவிட்டு, அதற்குப் பதிலாக துணிமணி வகைகள், இரும்புத் துண்டுகள், புகையிலை முதலானவைகளைப் பரிமாற்றம் செய்துகொள்ளுகின்றார்கள். இந்தப் பொருள்களை நிகோபார் மக்கள், கொண்டுல் என்ற பக்கத்துத் தீவில் உள்ள வர்த்தக நிறுவனக் கிளையிடமிருந்து பெறுகின்றார்கள்.

தீவுக்கு வடக்கே, நுழைய முடியாத உள்பகுதியில் சில மூர்க்கத்தனமான, பகை மனங்கொண்ட ஷோம்பன்கள் இருப்பதாகத் தெரிகிறது. அவர்கள் அயலார்களைத் தாக்குவதுடன் நில்லாது, தீவில் உள்ள மற்ற ஷோம்பன் மக்களிடமும், நிகோபார் மக்களிடமும் எப்பொழுதும் சண்டையிட்டு வருவதாகக் கூறப்படுகின்றது.

ஷோம்பன்களும் நிகோபார் மக்கள்தான். ஆனால், வெளியுலகத் தொடர்பு அறுந்து, பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்த அதே பழையகால வாழ்க்கையில் உழன்று வருவதால் அப்படியிருக்கின்றார்கள் என்று ஒரு சிலர் கருதுகின்றார்கள். இது எவ்வளவு தூரம் உண்மை என்று கூறுவது கடினம். ஏனென்றால்,

பார்ப்பதற்கு ஷோம்பன் மக்கள், நிகோபார் மக்களைக்காட்டிலும் மிகவும் வேறுபட்டிருக்கின்றார்கள். அவர்கள் முற்றிலும் வேறான மொழி பேசுகின்றார்கள். என்றாலும், சுவாரஸ்யமான இந்த ஆதிவாசி மக்களைப்பற்றிய ஆழ்ந்த ஆய்வு தேவைப்படுகின்றது. அவர்களுடன் நெருங்கிய தொடர்புகொள்வதும் மிகவும் அவசியம். அவர்களைக் காப்பதற்கும், அவர்களின் நலன்களைக் கவனிக்கவும் சிறப்பான திட்டங்கள் தீட்டப்படவும்வேண்டும்.

பொதுவாக, கிரேட் நிகோபார் தீவு அனைத்திற்கும் செல்வது கடினம். அதுபற்றித் தெரிவதற்கு அதுவே பெரிய தடங்கலாகயிருக்கின்றது. இருந்தாலும், தீவின் கிழக்குப் பாகத்தில் 'கேம்பல் பே' என்ற நன்கு பாதுகாக்கப்பட்ட விரிகுடா ஒன்று இருக்கின்றது. அங்கு கப்பல் சரக்கு இறக்கி ஏற்றும் துறை ஒன்று கட்டப்பட்டு வருகின்றது. தீவின் எதிர்கால வளர்ச்சிக்கு அதுவே நிச்சயமாக நுழைவாயிலாக இருக்கும். சமீபத்தில் அங்கு ஒரு புறக்காவல் நிலையம், மருந்தகம் ஒன்று அமைக்கப் பட்டுள்ளன. அந்தப் புறக்காவல் நிலையம், நாட்டின் தென் கோடியில் உள்ள புறநிலையம் என்று கூறலாம். போர்முனைத் தந்திரப் பெரும்பகுதியான அங்கு விழிப்புடன் செயலாற்ற வேண்டியதை நோக்கும்போதும், ஷோம்பன் மக்களுடன் நல்ல தொடர்பை ஏற்படுத்திகொள்வதுமான பணிகளை இப்புறக் காவல் நிலையம் நன்கு கவனித்துக்கொள்கின்றன.

'கேம்பல் பே'யில் ஓர் அழகிய கடற்கரை, தெள்ளிய மணற் பரப்பில், அரை மைல் நீளத்தில், 10 அல்லது 20 கெஜ அகலத்தில் இருக்கின்றது. வருங்காலத்தில் பயணிகள் விரும்பும் இடமாக வளர்ச்சிபெறும் வாய்ப்பும் இருக்கின்றது.

இந்தோனேஷியாவுக்கு மிக நெருங்கியும், நாட்டின் தென் கோடியில் போர்முனைத் தந்திரப் பகுதியாகவும் கிரேட் நிகோபார் இருப்பதால், சமீப காலமாக அது அதிக கவனத்திற்கு உள்ளாகி வருகின்றது. தற்போது வெறும் அடர்த்தியான காடுகள் தவிர, வேறெதுவும் இல்லாத பெரும் நிலப்பகுதிகளைப் பயன்படுத்திக்கொள்வதற்கான சாத்தியக்கூறும் உள்ளது. தீவில் உள்ள நிலைமைகள் கடினமாக இருந்தாலும், நிறைய மூலதனமிட்டு, செம்மையாகத் திட்டமிட்டு இயக்கினால், அத்தீவில் போதுமான வளர்ச்சியும், வளமும் வருங்காலத்தில் காண முடியும்.

சமீபத்தில் இந்திய அரசைச் சேர்ந்த பல்வேறு விஞ்ஞானத் துறைப் பிரதிநிதிகள், இத்தீவில் கூட்டாக ஆய்வு நடத்தினுர்கள். அவர்களின் அறிக்கை, தீவின் மர்மங்கள் சிலவற்றை வெளிப் படுத்தும் என்று நம்பப்படுகின்றது. அது எதிர்கால வளர்ச்சிக்குத் திட்டமிடவும் உதவியாகயிருக்கும்.

நிகோபார் பகுதியில் உள்ள மற்ற தீவுகளில் மக்கள் இல்லை. டிலோங் சாங் என்ற நீண்ட, குறுகலான தீவு பாறைகள் மிகுந் தது. வருங்காலத்திலும் அதனுல் பயனில்லை. காப்ரா, மெரோ, டிராக், டிரிஸ், மஞ்சால் ஆகியவை சிறியவை, வரைபடத்தில் சிறு புள்ளிகள் போன்றவை. அவைகளினுல் எந்த உபயோகமு மில்லை.

அத்தியாயம் 3

# இயற்கை அம்சங்கள்

நிகோபார் தீவுகள் பூமத்தியரேகைக்கு அருகில் இருப்பதால் அங்கு வெப்ப மண்டலப் பருவ நிலை காணப்படுகின்றது. அங்கு வருடம் முழுவதும் வெப்பமும், ஈரமும் இருந்துவருகின்றது. இருப்பினும் கடல் சூழ்ந்தும் நல்ல காற்று வீச்சுடன், அடிக்கடி மழையும் பெய்வதால், வெப்பநிலை இந்தியாவின் சில உட்பகுதி இடங்களில் உள்ளதுபோன்று எப்போதும் உயருவதில்லை. வெப்பமான மாதங்கள்: மார்ச், ஏப்ரல். குளிரான மாதங்கள்: டிசம்பர், ஜனவரி. இந்த மாதங்களிலும், மழையையும், மேக மூட்டத்தையும் பொறுத்து வெப்பமான நாட்களும், குளிர்ந்த நாட்களும் இருக்கின்றன. வெப்ப நிலையில், ஒரே நாளில் பலத்த வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஒரு மழை இருந்தால் போதும், வெப்பம் தணிந்து குளிர்ந்துவிடுகின்றது. வெப்பமான மாதங்களில் உயர்ந்த பட்சம் 32°C; குறைந்த பட்சம் 24°C; குளிர்ந்த மாதங்களில் உயர்ந்த பட்சம் 28°C; குறைந்த பட்சம் 22°C ஆக வெப்ப நிலை இருக்கின்றது.

வருடம் முழுவதும் பருவநிலை அநேகமாக ஒரே மாதிரியாக இருந்துவருகின்றது. மாற்றங்களை அப்படி அப்படியே பிரித்துக் கூற முடியாதபடியிருக்கின்றது. பருவக்காற்றை வைத்துக் கொண்டே, வருடத்தின் பருவகாலங்களைப் பிரிக்கவேண்டி யிருக்கின்றது. மே மாதம் முதல் அக்டோபர் வரை தென் மேற்கு பருவக்காற்று வீசுகின்றது. அதுவே நல்ல மழையைக் கொண்டுவருகின்றது. நவம்பர் மாதம் முதல் ஏப்ரல் வரை இத்தீவுகள் வடகிழக்குப் பருவக்காற்றுக்கு உட்படுகின்றது. இந்தப் பருவக்காற்று மழையைக் கொண்டுவந்தாலும், தென் மேற்கு பருவத்தில் இருப்பதுபோல் அவ்வளவு கனத்த மழை இல்லை.

தீவுகளில் ஆண்டுக்கு சராசரி 260 செ.மீ. மழை பொழி கின்றது. கிரேட் நிகோபாரில் சிறிது அதிகமாக மழை பெய்ய லாம். மே மாதம் தென்மேற்குப் பருவம் துவங்குகின்றது.

ஜூலை வரை அது வலுப்பதில்லை. மே, ஜூன் மாதங்களில் மழை சுமாராகத்தான் இருக்கின்றது. கனத்த மழை ஜூலை, ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் பெய்கின்றது. செப்டம்பர் மாதத்திற்குப் பின்னர் பருவமழை குறைந்துவிடுகின்றது. மீண்டும் அக்டோபரில் வீசும் தென்மேற்குப் பருவக்காற்றினாலும், வடகிழக்குப் பருவக்காற்றினாலும் மழை சுமாராக வலுக்கின்றது. வடகிழக்குப் பருவத்தில் நவம்பர், டிசம்பர் மாதங்களில் மழை சுமாராகவும், ஜனவரி, பிப்ரவரி மாதங்களில் சிறிது குறைந்தும் பெய்கின்றது. மார்ச், ஏப்ரல் மாதங்கள் வருடத்திலேயே மிகவும் வறட்சியான மாதங்கள். மழைத் தூறல் எப்போதாவது தான் இருக்கும். உண்மையில் இம்மாதங்களில் தண்ணீர் தட்டுப் பாடு இருக்கின்றது. கிணறுகளில் நீர்மட்டம் வெகுவாகக் குறைந்துவிடுகின்றது. தீவு முழுவதும் அப்போது ஒரே தூசு மயமாக இருக்கும்.

அக்டோபர் மத்தியிலிருந்து, நவம்பர் மத்தி வரையிலும், மீண்டும் ஏப்ரல் கடைசி வாரத்திலிருந்து, மே மாதம் மத்தி வரையிலும் காற்று ஒரே திசையில் வீசாமல், திசை மாறிக் கொண்டிருக்கும். இந்த மாறுபாடு காலத்திலேயே, பருவ மாற்றம் ஏற்படுகின்றது. எந்தப் பருவக்காற்றும் ஆதிக்கம் கொள்ள முடியும் அளவுக்கு வலுப்பதில்லை. அதனால், இந்தக் காலங்களில் சூறாவளி நிலைமை ஏற்படும். காற்று வெகு வேக முடன், திசை தெரியாமல் வீசும். அதனால், கடற் பயணங் களுக்கு மிக ஆபத்தான காலம்.

இத்தீவுகளில் சிறிது நேரமே மழை பெய்வது ஒரு குறிப்பிடத் தக்க அம்சம். ஆனால், தென்மேற்கு பருவத்தில், ஜூலை முதல் செப்டம்பர் வரையுள்ள கனத்த மழைக்காலத்தில் நாட்கணக்கில் வானம் இருண்டு, மேகங்கள் சூழ்ந்து நிற்கையில், மிகவும் கனத்த மழை பொழியும். அப்பொழுது என்னதான் பாதுகாப் பாக ஒருவர் உடைகள் பல அணிந்திருந்தாலும், நனையாமல் காத்துக்கொள்வது கடினம். இருந்தாலும் சில நிமிடங்களில் வானம் பளிச்சென்றாகிவிடும்; ஒளிமயமான சூரியன் வெளித் தோன்றும். வானம் தெளிவாக இருக்கும்பொழுது, வானம் சுடர் மிகுந்த நீல வண்ணமாக இருக்கும். வளி மண்டலம் தெளி வாக இருப்பதால், சூரியக் கதிர் வீச்சும் வெம்மை மிகுந் துள்ளது.

வளி மண்டலத்தில் ஈரமுள்ளதால், இரவில் பனித்திவலை மிகுந்திருக்கும். அதனால் மக்கள் யாரும் இரவில் வெளியே படுப்பதில்லை.

வருடம் முழுவதும் வெம்மையும், ஈரம்மிகுந்தும் இருப்பதால் வலிவு குன்றிய ஒரு தளர்ச்சி மேலிட்டு வருகின்றது. தீவுகளில் காணப்படும் இந்த மாறுபாடான பருவநிலை காரணமாகவே கடுமையாக உழைப்பது முடியாது என்று சொல்வதைவிட உழைப்பது கடினமானது என்று கூறவேண்டும். அதனாலேயே நிகோபார் மக்கள் கடினமாக உழைக்கும் திறனையும் இழந்து விட்டிருக்கின்றார்கள். வாழ்விலும் வேகமோ, சுறுசுறுப்போ இல்லை.

மண் வளம் தீவுக்குத் தீவு மாறுபடுகின்றது. கரையோரங்களில் மணல் மிகுந்த மண்ணும், உட்பகுதிகளில் சில இடங்களில் களிப்பு மிகுந்த மண்ணும் காணப்படுகின்றது. மணற் கலப்பு மண்ணாக இருக்கும் தன்மையால், வீடுகள் இருக்கும் இடங்களிலும், கடற்கரையோரப் பகுதிகளிலும் தண்ணீர் தேங்குவதில்லை. கிராமங்களும் சுத்தமாக, மழைபெய்தபின்னரும் சேறும், சகதியுமின்றிக் காணப்படுகின்றது. உட்பகுதிகளில், களிமண் பிரதேசத்தில் தண்ணீர் வெகுவாகத் தேங்கி நின்று, கொசுக்கள் வளரும் இடமாகிவிடுகின்றது.

அநேகமாக எல்லா இடங்களிலும் மண்ணுடன் மக்கிவிட்ட இலை, தழைச் சத்தும் கலந்து இருப்பதால் வளம் மிகுந்து இருக்கின்றது.

வெப்ப மண்டலப் பருவநிலையும், வளமான மண்ணும் மரம், செடி, கொடி செழித்து வளர உதவுகின்றன. மண் வளத்துக்கு ஏற்பவும், கடலிலிருந்து உள்ள தூரத்துக்கு ஏற்பவும் இடத்துக்கு இடம் தாவர வர்க்கம் மாறுபட்டுள்ளது. தீவின் கரையோரங்களில் தென்னையும், கரையோரக் காடுகளும் காணப்படுகின்றன. சதுப்பு நிலக் காடுகளும் இருக்கின்றன. தீ எரிக்க அவை நன்கு பயன்படும். அதற்கே அதனைப் பயன்படுத்துகின்றார்கள். அது தவிர, வேறெதற்கும் அவர்கள் பயன்படுத்துவதில்லை. தீவுகளின் உட்பகுதிகளில் அடர்த்தியான வெப்ப மண்டலக்காடுகள் உள்ளன. ஆனால் சாதாரணமாக பயன்படக்கூட மரவகைகள் இல்லை. கட்சாலில் மாத்திரம், அநேகமாக கிரேட் நிகோபாரிலும் சில நல்ல மரங்கள், குறிப்பாக 'பதாம்' மரங்கள் கிடைக்கின்றன.

காடுகள் நல்ல கவர்ச்சியானவை. நல்ல செழிப்பான மரங்களும், செடிகளும் இருக்கின்றன. ஆனால் அவை தழைத்து நிற்க ஓயாத போராட்டம் இருந்துவருகின்றது. மரங்கள் 100 அல்லது 125 அடி உயரம் வளருகின்றன. உச்சியில் கொப்பும் கொழுவுமாக இலைகள், வலுத்த சீரான அடிமரமும், கனத்த நங்கூரங்கள் பாய்ச்சியது போன்ற அடிப்பாகமும், 40 அடி சுற்றளவும் இருக்கக் கூடியதுமான மரங்கள் சிலவும் இருக்கின்றன. அடிப் பாகத்தைக் கல்லையோ, ஒரு கட்டையைக் கொண்டோ அடித்தால் ஏற்படும் ஆழ்ந்த உரத்த ஒலி, அந்த அமைதியான காட்டில் எதிரொலிக்கும். மரங்களின் உச்சிகள் பசுமை படர்ந்த விதானம் போல் இருப்பதால், சூரிய ஒளி ஊடுருவிப் பாய்வதில்லை. அதனால் காட்டினுள் இருள் மிகுந்து, காடுகள் மர்மமாக விளங்குகின்றன.



சூரிய வெப்பம் போதாமையாலும், மண்ணும் களிப்பாக இருப்பதால், மழை நீர் சரியாக உலராமல், நிலம் சகதியாகயிருக்கின்றது. அதனால் காட்டினுள் பாதை வகுத்துச் செல்வது கடினமாகின்றது. காட்டின் நிலத்தில் புதர்களும் மண்டிக்கிடக்கின்றன. அழகிய புல், பூண்டு வகைகளும் உள்ளன. பெரிய மரங்களில் மலர்ச் செடிகள் பின்னிக்கிடக்கின்றன.

நிகோபார் மக்களின் கருத்துப்படி தென்னையே மிகச்சிறப்பான மரம். அவர்களின் பொருளாதார அடிப்படையே அதில் அமைந்திருக்கின்றது. அவை, தீவுகளின் கரையோரத்தில் நன்கு செழிப்பாக வளருகின்றன. அங்கு மண் வளம் மணல் மிகுந்தது. கடல்நீர் கசிந்து உப்புநீரும் மரங்களுக்குக் கிடைக்கின்றன.

தென்னைக்கு அடுத்தபடியாக மிக முக்கியமான மரம் பாக்கு. தீவுகளின் உட்பகுதிகளில் பாக்கு மரங்கள் நன்கு வளருகின்றன. அங்கு மண் களிப்பாகவும், ஈரமாகவும் இருக்கின்றது. அம் மரங்களிலிருந்து கிடைக்கும் பாக்கு, அம் மக்களின் மிக முக்கிய மான வருமானமாக யிருந்துவருகின்றது.

நிகோபார் மக்களுக்கு மற்ருெரு முக்கியமான தாவரம் 'பண்டானுஸ்' என்பது. இந்தி மொழியில் 'கேவடி' என்று கூறுவர். இந்த மரம் கரையோரத்தில் அதிகமாக வளருகின்றது. உட்பகுதிகளிலும் கிடைக்கின்றது. இந்த மரம் 15, 20 அடி உயரம் வளருகின்றது. நல்ல கனத்த அடிமரம்கொண்டு, உச்சியில் கிளைகள் பரவி நிற்கும். ஒவ்வொரு கிளையிலும் நீண்ட இலைகள் கொத்துக் கொத்தாக இருக்கும். அந்த இலைகள், மிகப் பெரிதாக நீண்டு புற்களைப்போல் இருக்கும். உருண்டை வடி வான அதன் பழம் 1, 2 அடி சுற்றளவு இருக்கும். சிறு சிறு சுளைக ளாக, விதைகளுடன் காணப்படுகின்றன. பழுத்த பழத்தைச் சாப்பிடுகின்ருர்கள். அதன் இலைகளைக்கொண்டு பாய்கள் பின்னுகின்ருர்கள். உண்ணுவதற்கேற்ற பழங்கள் தராத மற்ருெரு காட்டு வகை 'பண்டானுஸ்' மரங்களில் பூக்கும் பூக்களில் கவர்ச்சியான மணம் இருக்கின்றது. உண்மையில் இந்தியாவில் உள்ள 'கேவ்டா'வைப் போன்றதே அது. ஆனல் மணம் அவ்வளவு இல்லை.

வெகு காலமாக வெளி உலகத் தொடர்புகள் இருந்து வந்த தால், நிகோபார் தீவுகளில் அநேக பழவகைகளும், காய்கறி வகைளும் இடம் பெற்றிருக்கின்றன. முன்பு மதக்குழுவினர் அநேக வகைகளைத் தீவிற்குக் கொண்டுவந்தனர். மற்றவை, சமீபத்தில், கார் நிகோபார் சமுதாய அபிவிருத்தி குழு, விவ சாயத்துறை ஆகியவை எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் காரணமாக அறிமுகப்படுத்தப்பட்டவை. பழவகைகளில் எலு மிச்சை, ஆரஞ்சு, ஷாடோக்ஸ், மா, கொய்யா, சீதா, சபோடா ஆகியவை உட்பகுதிகளில் நன்கு வளருகின்றன. மிகவும் பரவ லாகக் காணப்படுவது பப்பய்யா, வாழை. வாழையில் பலவகை உண்டு. சிவப்பு, மஞ்சள், பச்சை வண்ணங்களில், பல அளவு களில் கிடைக்கின்றன. பப்பய்யாப் பழங்களையும், வாழைப் பழங்களையும் சாப்பிடுகின்ருர்கள். பழுக்காதவைகளை காய்க ளாக சமைத்துச் சாப்பிடுகின்ருர்கள். அடுத்த முக்கியமான பழம் அன்னசி. சிங்கப்பூர், ஹவாய் வகைகள் கிடைக்கின்றன.

பலா, கொட்டைப்பலாப் பழங்களும் மற்ற சிறப்பான பழவகைகள். கொட்டைப்பலா அழகான, படர்ந்த மரங்களில் விளைகின்றன. பசுமையான தோடுடன், வகிடு வகிடாக இருக்கும் தோலியுடன் பார்த்தால் சிறிய பலாமாதிரியே இருக்கும். ஆனால் அது மென்மையாக இருக்கும். உள்ளே விதைகளே இராது. இந்தப் பழத்தையே, தென்கடல்களில் ஆய்வு மேற்கொண்ட மேற்கு ஐரோப்பிய ஆராய்ச்சியாளர்கள் மிகவும் பாராட்டியுள்ளனர். இந்தப் பழத்தைத் தென்கடல் தீவுகளிலிருந்து, மேற்கு இந்தியத் தீவுகளுக்கு கேப்டன் பிலே என்பவர் 'பவுண்டி' என்ற கப்பலில் கொண்டுசென்றதும் இந்தக் கப்பலிலேயே அப்பொழுது ஒரு புகழ்பெற்ற கலகம் நடைபெற்றதும் வரலாற்று நிகழ்ச்சி.

நன்கு வளர்ச்சியடைந்த தீவுகளில், உட்பகுதிகளின் சில இடங்களில் மரவள்ளி, சர்க்கரைவள்ளி, கரும்பு ஆகியவைகளும் தோட்டப்பயிர்களாக விளைவிக்கப்படுகின்றன. சமீபத்தில் முந்திரியும் இடம்பெற்றுள்ளது, செழித்து வளருகின்றது.

காய்கறி வகைகளில், வெப்பமான நிலையில் வளரும் வெண்டை கத்திரி, பாகல், சுரைக்காய், தக்காளியில் சிலவகை, புடலை, பீர்க்கன், அவரை, தட்டை அவரை, மராசா, பொய் என்ற கோஸ்வகை முதலானவை தற்போது விளைவிக்கப்படுகின்றன.

சேனை வகைகளில் பல வளருகின்றன. அவைகள் நிகோபார் மக்களின் உணவில் முக்கிய இடம் பெறுகின்றன. வேர் வகைகளில் 'நியா,' மற்றும் டகான்ஜென், ரமூ, லவங்கம், வாக்வெல் என்பவை. இவைகளில் சிலவற்றை சாப்பிட்டால் அரிப்பதுண்டு. கிழங்கு வகைகளில் டோகினி என்பது அரிப்பு தருவதில்லை. சேனை வகைகள் இந்தியாவில் கிடைக்கும் வகைகளைப் போன்றவை.

காடுகளில் மூங்கிலும், பிரம்பும் கொஞ்சம் கிடைக்கின்றன. வீடுகள் கட்டவும், கூடைகள் முடையவும் மக்கள் அவைகளைப் பயன்படுத்துகின்றனர்கள். தீவுகளின் உட்பகுதிகளில் வெற்றிலைக் கொடிகளும் வளருகின்றன.

வெளியிலிருந்து வந்த சில பயனுள்ள செடிகளும் தீவுகளில் நன்கு வளருகின்றன. சில இடங்களில் வேப்ப மரங்களும் வளர்க்கப்பட்டிருக்கின்றன. அதன் இலைகள் மருந்துக்குப் பயன்படுகின்றன. சவுக்கு மரங்கள் (அநேகமாக டேனிஷ் சமயக்குழுவினர் அறிமுகப்படுத்தியிருக்கவேண்டும்), பைன் மரங்கள்போல்

ஓங்கி உயர்ந்து வளர்ந்திருக்கின்றன. அவைகளை விறகாகவும், கிருஸ்துமஸ் விழாவின்போது கிருஸ்துமஸ் மரமாகவும் பயன் படுத்துகின்றார்கள். இலவம்பஞ்சு மரமும் நிறைந்து காணப்படு கின்றன. மக்களின் படுக்கை, தலையணைகளுக்கு அவைகளினால் பஞ்சு கிடைக்கின்றது.

சில சிறப்பான உள் நாட்டு மரவகைகளும் இருக்கின்றன. 'கின்யாயா' என்ற பெரியதொரு மரம் அகலமான இலைகளுடன் உள்ளது. அவை மீன்களைக் கொல்லப் பயன்படுகின்றது. கட லோரத்தில் விளையும் இந்த மரங்கள் கூர்மை வடிவான, பெரிய விதை தருகின்றன. அவைகள் உடைக்கப்பட்டு, கடல் நீரில் போடப்படுகின்றன. இதனால் மீன்கள் மயக்க நிலையை அடைந்து விடுவதால், மீன்களை மக்கள் பிடிப்பது சுலபமாகிவிடுகின்றது. தீவின் உட்பகுதிகளில் மற்றொரு வகையான 'கின்யாயா' மரம் இருக்கின்றது. இதன் சிறிய உருண்டையான விதைகளும் மீன் களைக் கொல்லப் பயன்படுத்தப்படுகின்றன. உட்பகுதியில், மழைநீர் தேங்கும் குட்டைகளில் மீன்பிடிக்கப் பயனாகின்றன.

படகுகள் செய்ய 'கினியா' என்றொரு மரம் பயன்படுகின்றது. கார் நிகோபாரில் இந்த மரம் கிடைப்பது அரிது. அதனால் காட்டுப்பலா வகையைச் சேர்ந்த 'டகாவோக்கையி' என்ற மரத்தைக்கொண்டு படகுகள் செய்கின்றார்கள். இந்த மரமும் கினியாவும் இலகுவானவை. அதே சமயம் கடல் நீரிலும் கெடுவ தில்லை.

காட்டிலிலுள்ள மரஞ் செடி கொடி வகைகள்பற்றித் தீவு மக்கள் நன்கு அறிந்துவைத்திருக்கின்றார்கள். பல்வேறு வகை யான மரங்களின், செடிகளின் தன்மையறிந்து, அவைகளை நல்ல முறையில் பயன்படுத்துகின்றார்கள். அப்படியே பலவகையான காட்டுப் பழங்களையும், இலை தழைகளையும் திரட்டி, மிகுந்த ஆர்வமுடன் உண்கின்றார்கள். சில மரங்களை வீடு கட்டவும், மருந்து வகைக்காகவும், விறகுக்காகவும் பயன்படுத்து கின்றார்கள்.

காடுகளில் முட்கள் நிறைந்த பனை வகையான குட்டை மரங்கள் காணப்படுகின்றன. அந்த மரங்களின் தண்டில் முட்கள் நிறைந்திருக்கின்றன. அவைகளைத் தேங்காய் துருவ மக்கள் பயன்படுத்துகின்றார்கள்.

அகன்ற இலைகளுடன் கூடிய மற்றொரு சிறப்பான மரம் 'பீப்' என்பது. மா போன்று பூப்பூத்து, முந்திரி போன்ற பழங்கள்

தருகின்றன. எனினும் இந்த இலைகளைத் தொட்டுவிட்டால் அரிப்பு எடுக்கும். அதனால் மிகுந்த எச்சரிக்கையுடன் அவைகளைத் தவிர்த்து விடுகின்றார்கள். மிகவும் தீங்கான மரம் 'பன்ருல்' என்பது. புளி மாதிரி நீண்ட மாநிறமான பழங்கள் கொண்டவை. அந்தப் பழங்களின்மீதுள்ள நுண்ணிய மயிர்கள், உடலில் பட்டவுடன் பெரிதாக அரிக்கும். சில சமயம் அரிப்பு கடுமையாகவும், நீண்ட நேரமும் இருப்பதால், சொறிந்து சொறிந்து உடலில் புண் ஏற்பட்டு விடுகின்றது.

நல்ல செழிப்பான பூக்கள் எதுவும் இல்லை. நிகோபார் மொழியில் பூக்கள் என்ற பதமே இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்தியாவுடன் ஏற்பட்டுள்ள தொடர்பால் 'புல்' என்ற வார்த்தை அந்த மொழியில் இடம்பெற்றுள்ளது. அநேகமாக, இந்தியில் உள்ள 'பூல்' என்ற பதமே மருவி வந்திருக்கும். குறிப்பிடத்தக்க சில காட்டுப் பூக்களில் கின்யாயா (பெரிய மஞ்சள் நிறப் பூக்கள்—'கச்நார்' என்பவைப் போன்றவை), தங்காவா (பெரிய சிவப்பு நிறப் பூக்கள்—அகன்ற இலைகள் உள்ள ஆறு அடி உயரமான செடிகளில் இருக்கும். பாம்புகடிக்கு மருந்தாகப் பயன் படுகின்றது.), டகூரோடோங் (சிறிய வெள்ளை நிறப் பூக்கள், 'பேலா'வைப்போன்றவை. ஆனால் மணமில்லை.), டகோ (மஞ்சள் நிறத்தில், மணி போன்ற உருவத்தில் நடுத்தரமான பூக்கள் ஒல்லியான மரத்தில் வளருகின்றன. இம்மரத்தின் பட்டைகள் கயிருகப் பயன்படுகின்றது. பொருட்களைக் கட்டவும், வீடுகளிலும் படகுகளிலும் இணைப்புகளைக் கட்டவும் பயனுகின்றது.), லானுன்காப் (மிகச் சிறிய ஊதா நிறமான பூக்கள், நிலத்தில் கொடிகளாகப் படர்ந்திருக்கின்றன.), மாகெக் (பெரிய மரங்களில் சிவப்புப் பூக்கள்), அவைகளல்லாமல் ஒரு சிறிய வெண்மையான மலர். ஊதாவும், இளஞ் சிவப்பும் நிறமான, மணி போன்ற உருவமுள்ள இபோமியா, கரையோரத்தில் காணப்படுகின்றது. இப்பூக்களில் மணம் எதுவுமில்லை. இம்மலர்கள் அனைத்தும் பறிக்கப்பட்ட கொஞ்ச நேரத்தில் வாடிவிடுகின்றன.

வெளியிலிருந்து தற்போது அறிமுகப்படுத்தப்பட்டுள்ள வின்காரோசியா, பால்சம் போன்ற சில திடமான பூக்கள் அடர்ந்து வளருகின்றன. ஹிபிஸ்கஸ், கன்ன, சின்னியா, லில்லி, மாரிகோல்ட், கோஸ்மோஸ் ஆகியவை இங்கும் அங்கும் காணப்படுகின்றன. ஆனால் மற்ற தோட்ட மலர்கள் கஷ்டப்பட்டு வளர்க்கப்படவேண்டியிருக்கின்றன.

பெரிய மரங்களில் வளரும் குல்மோஹர், கானீர், ஹார்சிங்கர், க்ஷம்பா (மக்நோலியா) ஆகிய மலர்கள் நன்கு வளருகின்றன. பலவகையான குரோட்டன்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால் சரிவர கவனிக்கப்படாமையால், 10, 20 அடி உயரம் வளர்ந்திருக்கின்றன.

இரண்டாவது உலகப் போரின்போது, தீவுகள் ஜப்பானியர் ஆக்கிரமிப்பில் இருந்தகாலையில் சில தாவர வர்க்கங்கள் இடம் பெற்றிருக்கின்றன. எதிரிகளின் தாக்குதலின்போது தங்களை மறைத்துக்கொள்ள இலை தழை மரஞ் செடி கொடிகள் அவசியம் என்ற கருத்திலும் அவை வளர்க்கப்பட்டிருக்கலாம். அவைகளில் சில நன்கு பரவிப் படர்ந்திருக்கின்றன. அவைகளில் முக்கியமானது 'இபாடோரியம்' என்ற புதர்ச் செடிகள். இப்பொழுது அவை கார் நிகோபார் தீவுகளில் கடற்கரைப் பகுதிகளில் மிகவும் அடர்த்தியாகத் தூர்விட்டு வளர்ந்திருக்கின்றன. அவை நல்ல பசுந்தழை உரம் ஆகும். என்றாலும், தோப்பு துரவுகளையும், கிராமங்களையும் சுத்தமாக வைத்துக்கொள்ள அவை பெரும் இடைஞ்சலாகயிருக்கின்றன.

தீவுகளில் உயிரினம் மிகக் குறைவு. வருடம் முழுவதும் நல்ல குடிநீர் கிடைப்பதில்லை; வறட்சியான மார்ச், ஏப்ரல் மாதங்களில், தேங்கி நிற்கும் மழைநீர்கூட வற்றிவிடுகின்றதும் அதற்கு காரணமாகும். அங்கு இருக்கும் மிருக இனங்கள் காட்டுப் பன்றிகளும், பசுக்களும் என்றே கூறவேண்டும். பசுக்கள் மூர்க்கமாகயிருக்கின்றனவென்றால், அவைகளின் சொந்தக்காரர்கள் அவைகளைக் கவனியாமல் விட்டுவிட்டார்கள். அவை சண்டிகளாகிவிட்டன. தீவுகளின் உட்பகுதிகளில் காட்டுப் பன்றிகள் காணப்படுகின்றன. அவைகளை வேட்டையாடவும் செய்கின்றனர்.

பன்றிகள், பசுக்கள் ஆகியவைகளின் சில இனங்கள் வெளியிலிருந்து கொண்டுவரப்பட்டிருக்கின்றன. அதுபோன்றே பூனைகள், நாய்கள், ஆடுகள், கோழி இனங்கள்.

கறுப்பு முகங்கொண்ட சாம்பல் நிறக் குரங்குகள் (லங்கூர் என்ற பெயர் பெற்றவை) கட்சால், கிரேட் நிகோபார் தீவுகளில் மட்டும் காணப்படுகின்றன. அங்கு அவை தென்னந்தோப்புகள், பழத்தோட்டங்கள் ஆகியவைகளில் பெரும் சேதத்தை விளைவிக்கின்றன.

நிகோபார் தீவுகளில் பறவைகள் அதிகம் இல்லை. பறவைகள் பற்றிய ஒரு கணக்குத் தருவதும் கடினமாகயிருக்கின்றது.

காரணம், இந்தியாவில் கடும் குளிர் இருக்கும் காலத்தில், அதிலிருந்து தப்ப, அநேகம் பறவைகள் நவம்பர் மத்தியிலிருந்து மார்ச் மாதம் வரை தீவுகளுக்கு வருகின்றன. பறவைகளில் வருடம் முழுவதும் தங்கியிருப்பவை பின்வருபவன:

(1) மணிப் புருக்கள், (2) பச்சைப் புருக்கள், (3) மஞ்சள் நிறமான பொன் குருவிகள், (4) பல்வேறு நிறமான மீன் கொத்திப் பறவைகள் (அநேகமாக கறுப்பும், வெள்ளையும் கலந்தவை அல்லது வெளிறிய நீலமும், வெண்மைக் கழுத்தும் கொண்டவை), (5) சாதாரணக் குருவிகள், (6) சலுப்பன்கள், (7) தேன் சிட்டுகள், (8) பீ-ஈடர்ஸ் (bee-eaters), (9) பச்சைக் கிளிகள், (10) சிறிய ஆந்தைகள், (11) சாதாரணப் புருக்கள், (12) தூக்கணாங்குருவிகள், (13) டீல்ஸ் (teals), (14) குளோசி ஸ்டேர்ஸ் (glossy stares), (15) ட்ரோங்கோஸ் (drongos), (16) எக்ரெட்ஸ் (egrets), (17) ஸ்ரைக்ஸ் (shrikes). இந்தப் பறவைகளில் மணிப் புருக்களும், மாடப் புருக்களும் கிராமத்தினர் வேட்டையாடத் தகுந்தவைகளாயிருக்கின்றன. அவர்களும் வேட்டையாடுகின்றனர்கள். சாப்பிடத் தகுந்த குருவிக் கூடுகளைக் கட்டும் குருவிகள் மிக அரிதாகிக்கொண்டு வருகின்றன. இருப்பினும், சில இடங்களில் பார்க்கமுடியும். சாம்பல் நிறக் காட்டுக் கோழிகளையும் சில சமயங்களில் காண முடிகின்றன. ஆனால், அவைகள் விரைவில் ஒளிந்து மறைந்துவிடுவதால், அவைகளைச் சுடுவது கடினம். கிரேட் நிகோபாரில், மிகவும் அரிதான மேகபாட் (magapod) பறவைகளும் காணப்படுகின்றன. சாதாரணமான காகங்கள் அங்குக் காணப்படவேயில்லை.

கடல் பறவைகளில் கறுப்பு மீன்பிடி கழுகுகள், வெள்ளை அடிவயிறுகொண்டவை அதிகமாகத் தென்படுகின்றன. சில சமயங்களில் நாரைகளும் தென்படுகின்றன.

தீவுகளின் உட்பகுதிகளில் உயர்ந்த மரங்களில் வௌவால்கள் நிறைந்து காணப்படுகின்றன. நிகோபார் மக்கள் அவைகளை வேட்டையாடுகின்றனர்கள். அதை மிகவும் சுவைத்துச் சாப்பிடுகிறார்கள்.

ஊர்வன வகையனைத்தும் காணப்படுகின்றன. உட்பகுதிகளில் மலைப்பாம்புகள் இருக்கின்றன. 15 அடி நீளமுள்ளவைகள்கூட சில சமயங்களில் காணப்படுகின்றன. அவைகள் காடுகளிலேயே இருக்கின்றன. எப்பொழுதாவது ஒரு தடவை மக்கள் வசிக்கும் இடங்களுக்கு கோழிக்குஞ்சுகளையும், பன்றிக்குட்டிகளையும் இரை

தேட வருகின்றன. அவைகள் சாதாரணமாக மனிதர்களுக்குத் தீங்கு செய்வதில்லை. ஆனுல், நிகோபார் மக்கள் அவைகளைக் கத்தியால் குத்திக் கொல்லுகின்ருர்கள். மற்றும் பலவகையான பாம்புகளும் காணப்படுகின்றன. ஆனுல், அவை அவ்வளவு விஷமுடையவையல்ல. மிகுந்த விஷமுடையது பூரான்கள். அவைகளில் சிலது ஓர் அடி நீளம்கூட இருக்கும். இருந்தாலும், பூரான்கள் கடிப்பதிஞல் உயிருக்கு ஆபத்தில்லை.

எலிகள் நிறைந்திருக்கின்றன. தென்னந்தோப்புகளுக்கு மிகுந்த சேதத்தை விளைவிக்கின்றன. தவளைகள், தேரைகள் பலவகைப்பட்டவை, எல்லாப் பருமன்களிலும் காணப்படுகின்றன.

ஆங்காங்கு மழைநீர் தேங்கி நிற்பதால், அந்தக் குட்டைகள் எல்லாம் கொசுக்களும், எல்லா புழுபூச்சிகளும் வளரும் இடங்களாகயிருக்கின்றன. கொசுக்களால் ஏற்படும் மலேரியா நோயும், பிலேரியா நோயும் சில தீவுகளில் ஒரு முக்கிய சிக்கலாக இருக்கின்றது. ஈக்களும் இருக்கின்றன. இருந்தாலும், தொல்லையாகப் பெருகவில்லை. தத்துக்கிளிகள், பலவகையான வண்டுகள், தட்டாரப்பூச்சிகள் முதலானவைகளும் காணப்படுகின்றன. பூக்கள் அதிகமில்லாமையால், பட்டுப்பூச்சிகளைக் காண்பது அரிதாகயிருக்கின்றது. காணப்படுபவைகளில் சில மிக அழகாகயிருக்கின்றன.

தேனீக்கள் தென்படுகின்றன. குறிப்பாக, கிரேட் நிகோபாரில் ஷோம்பன் மக்கள் தேன் திரட்டி, அயலார்களுடன் மற்ற பொருள்களுக்காகப் பரிவர்த்தனை செய்துகொள்ளுகின்ருர்கள். ஆனுல், கார் நிகோபாரில் தேனீக்கள் காணப்படுவதில்லை.

தோப்புகளில் சில்வண்டுகள் இருக்கின்றன. பகல் முழுவதும், அதுவும் பொழுது சாயும்பொழுது அவைகளின் உரத்த ரீங்காரம் கேட்கலாம்.

பாச்சைகளும் மிகுதி. அவைகள் கறுப்பானவை. தென்னங்கன்றுகளின் இளம்பச்சைக் குருத்துக்களைத் தின்று நாசப்படுத்தி விடுகின்றன. பச்சைநிறமான பாச்சைப்பல்லியும் காணப்படுகின்றது. மற்றவை கருவண்டுகள், நத்தைகள். கருவண்டுகள், தீவுகள் ஜப்பானியர் வசமிருந்த காலத்தில் மரங்கள் வெட்டப்பட்டு, மண்ணோடு மண்ணுகப் புழுபுழுத்து அழுகிக் கொண்டிருந்த காலத்தில் வளர்ச்சிபெற்றிருக்கின்றன. அவை தென்னைகளைத் தாக்குவதால், தென்னைகள் பலன் தருவது

குறைந்துவிடுகின்றன. கரையோரங்களில் நிலம் மணற்பாங்காக யிருப்பது, கருவண்டுகளை ஓரளவு கட்டுப்படுத்தியிருக்கின்றது என்றாலும், விவசாயத் துறையினரும் பூச்சிகொல்லி மருந்துகளை அடித்துக்கொண்டு வந்தாலும் தென்னை விளைச்சலுக்கு அவை களினால் கணிசமான சேதம் இருந்துவரவே செய்கின்றது. மிகப் பெரிய ஆப்பிரிக்க இன நத்தைகள், ஜப்பானியர்களிடம் தீவு இருந்தபொழுது வெளியிலிருந்து கொண்டுவரப்பட்ட சில செடி வகைகளுடன் தீவுகளுக்கு வந்துவிட்டன. அவைகள் இப்பொழுது பலுகிப் பெருகிவிட்டன. அதனால் பெருந் தொல்லைகள்; சேனைக் கிழங்குகளையும், வாழைகளையும் பெருமளவில் தின்றுவிடுகின்றன. அவைகள் விரைவில் பெருகிவிடுவதால், அவைகளைக் கட்டுப் படுத்துவது கடினமாகயிருக்கின்றது. பன்றிகள் சிலவற்றைத் தின்றுவிடுகின்றன. இருந்தாலும் அவைகள் குறிப்பாக உட்பகுதி களில் நிறைந்திருப்பதால், பெரும் பிரச்சினையாகயிருந்து வரு கின்றன. அவைகளைக் கொல்லுவதற்கு இருக்கும் ஒரு வழி, அவைகளின்மீது வெந்நீரைக் கொட்டவேண்டும் அல்லது உப்பைப் போடவேண்டும். ஆனால், கடின வேலை செய்வதையே விரும்பாத நிகோபார் மக்கள், இதை ஒழுங்காகச் செய்வதில்லை. இதற்காக விவசாயத் துறையினர் ஹவாய் தீவிலிருந்து நத்தை களையே சாப்பிட்டுவிடும் ஒருவகை நத்தைகளைக் கொண்டுவரத் திட்டமிட்டிருக்கின்றார்கள். தீவுகளில் காணப்படும் ஆப்பிரிக்க இன நத்தைகளை அவை சாப்பிட்டுவிடும் என்று கருதப்படு கின்றது.

தீவுகளில் கடல் இன வாழ்வும் வெகுவாக இருக்கின்றது. தீவு களில் பல இடங்களில் கடலினுள்ளே சென்றிருக்கும் பவழப் பாறைகள் கடலின் அடிமட்டத்தில் வெகு அழகான அமைப்புக ளுடன் காணப்படுகின்றன. பல்வேறு வண்ணங்களில், அளவு களில், அமைப்புகளில் கடற்கிளிஞ்சல்கள் காணப்படுகின்றன. அவைகளில் சங்கு வகைகள், அரச கிளிஞ்சல், அரசி கிளிஞ்சல், 'டர்போ,' 'நாட்டிலஸ்,' 'ட்ரோச்சஸ்' முதலானவைகளை வருகை தரும் பிரமுகர்கள், அலங்கரிப்புப் பொருள்களாக மிகவும் வேண்டிப் பெறுகின்றனர்.

தீவுகளைச் சுற்றிய நீரில் மீன்கள் நிறைந்து நிற்கின்றன. குறிப்பாக கமோர்டாத் தீவில் பாட்டி மால்வ், பில்பிலாவ் அருகி லும், கட்சால், லிட்டில் நிகோபார், கிரேட் நிகோபார் தீவுகளி லும் அவை மிக அதிகம். இங்கெல்லாம், சில சமயம் கரை

யோரம், மீன் குஞ்சுகள் கூட்டங்கூட்டமாக இருப்பதால் கடல் நீரே கறுப்பாகக் காணப்படும். கிரேட் நிகோபார் அருகே, நீரோட்ட வேகம் மிகுதியாகயிருப்பதால், மீன்களுக்குத் தேவை யான நல்ல இரை கிடைக்கின்றது. அதனால் நல்ல மீன்பிடி இடங்கள் பல அங்கே இருக்கின்றன. சிறப்பான மீன் இனங்கள்: சார்டைன், மாக்ரெல், வெள்ளிக்கெண்டை, டியூனு, முல்லட், ரே, ஆங்கோரிஸ், சில்வர் பெல்லீஸ், டாட்டம் பெர்ச்சஸ். இங்கு பாம்பெரட்ஸ், லோப்ஸ்டர், அக்டோபஸ் இனங்களும் காணப்படுகின்றன. சில சமயங்களில் பறக்கும் மீன்களும், பலவகையான நீர் பாம்புகளும் தென்படுகின்றன. சுறா மீன்கள் இருக்கின்றன. ஆனால் கரையோரம் வருவதில்லை. சுறாமீன் கடி என்பதும் அரிது.

கிரேட் நிகோபார் நதிகளில் முதலைகள் நிறைந்திருக்கின்றன. கார் நிகோபாரிலும், கிமூஸ் கடற்கழியில், எப்போதாவது ஒரு முதலை தென்படும்.

ஆமைகளும் காணப்படுகின்றன. ஆனால் அதிகமில்லை. தீவு களின் கரையோரங்களில் ஆழமான மணற் பரப்பு இல்லாததால், அவைகள் முட்டையிட முடிவதில்லை. அது ஒரு காரணமாக யிருக்கலாம். ஆமைகளைச் சாப்பிட்டுவிட்டு, அவைகளின் ஓடு களை சிறு மோதிரங்கள், மற்ற அலங்காரக் கைவினைப் பொருட்கள் செய்யவும் பயன்படுத்திக்கொள்கின்றார்கள்.

நண்டுகளும் நிறைய இருக்கின்றன. கடற்கரையோரங்களி லும், சாலையோரங்களிலும், அதன் ஓடுகள் சுமார் 2½ அங்குல அளவில் காணப்படுகின்றன. அவை இரவு நேரங்களில் வெளியே வருகின்றன. அவைகளுக்கு கார் நிகோபாரில் உள்ள ககானு கிராமம் பெயர்பெற்றது. இந்த கிராமத்துக்கு அருகில் ஜூன் மாதத்தில், முழு நிலாக் காலத்தில் நண்டுகள் ஆயிரக்கணக்கில் தங்கள் வளைகளிலிருந்து வெளிவந்து கடலை நோக்கிச் செல்வதை இரண்டு, மூன்று நாட்கள் காணலாம். அவைகளை நிகோபார் மக்கள் கைகளாலேயோ அல்லது இடுக்கிக்கொண்டோ பிடிக்கின் றார்கள். அவைகள் அவர்களுக்கு மிகச் சுவையான பண்டம்.

அத்தியாயம் 4

# கிராமங்கள்

நிகோபார் தீவுகளில் கடற்கரையோரமாகவே கிராமங்கள் அமைந்திருக்கின்றன. காரணம், கடல் மூலமாகவே எல்லாப் போக்குவரத்தும் நடைபெறவேண்டியிருக்கின்றது. மற்றுமொரு காரணம், மக்களின் அன்றாட வாழ்வில் மீன்பிடிப்பது எப்போதும் ஒரு முக்கியமான இனமாக இருந்துவருகின்றது. ஆனால் கார் நிகோபாரிலும், சோவ்ராவிலும் முக்கியமான கிராமம் கடற்கரையோரத்தில் இல்லை; 200,300 கஜம் உள்ளே தள்ளி, தென்னை மரங்கள் வரிசையாக அமைந்த பாதுகாப்பில், கிராமங்களில் வாழும் மக்கள் நேரடியான பலத்த கடற்காற்றிலிருந்து தப்பித்துக்கொள்ளும் வண்ணம் அமைந்திருக்கின்றது. கார் நிகோபாரில், கடற்கரை மணலிலேயே ஒரு சில சமுதாயக் கட்டிடங்கள் இருக்கின்றன. இந்தக் கட்டிடங்களில் 'எல் பானம்' என்ற 'தூய சமுதாய இல்லம்' இருக்கின்றது. இது பொதுவாக நன்கு கட்டப்பட்ட கட்டிடம். கிராமம் முழுவதுமே அதைப் பேணிக்காக்கின்றது. அது விருந்தினர் மாளிகையாகவும், படகுப் போட்டிகள், கிராம விருந்துகள், விழாக்காலங்கள் ஆகிய சமயங்களுக்கான இடமாகவும் பயன்படுத்தப்பட்டு வருகின்றது.

இந்தத் 'தூய' சமுதாய இல்லத்திற்கு சிறிது தூரத்திற்கு அப்பால், கரைமேலேயே இரு 'தூய்மையற்ற' சமுதாய இல்லங்கள் இருக்கின்றன. குறிப்பாக 'பிறப்பு இல்லம்,' 'இறப்பு இல்லம்' என்று அவை கூறப்படுகின்றன. பிறப்பும், இறப்பும் தூய்மையற்றவை என்று நிகோபார் மக்கள் கருதுகின்றார்கள். அவை கிராமத்துக்கு வெளியேதான், மக்கள் சாதாரணமாக வசிக்கும் வீடுகளுக்கு அப்பால்தான் இடம்பெறவேண்டும் என்று அவர்கள் நினைக்கின்றார்கள். எல்லோருக்கும் பொதுவான இந்தப் பிறப்பு இல்லமும், இறப்பு இல்லமும் கிராமத்தால் பேணிப் பாதுகாக்கப்படுகின்றன. அவை 'தூய்மையற்றவை' என்று கருதப்படுவதால், அவர்கள் அவைபற்றி அதிக அக்கறை காட்டுவதில்லை. அவை சாதாரணமாக சிதலமான கட்டிடங்களில் இருக்கின்றன.



படம் 6. கார் நிகோபார் தீவில் ஒரு கிராமப் பாதை

படம் 7. கார் நிகோபார் தீவைச் சுற்றிச் செல்லும் சாலையில் ஒரு கிராமம்

கார் நிகோபாரில், கிராமக் கல்லறை, கடற்கரையோரத்தில் இறப்பு இல்லத்துக்கு அருகாமையில் நல்ல வேலி அமைப்புக்குள் இருக்கின்றது.

பிறப்பு இல்லத்துக்குப் பின்புறம், 100 கஜம் உள்ளே தள்ளி, சில குடிசைகள், கிராமத்திலுள்ள வெவ்வேறு குடும்பத்துக்குச் சொந்தமாக இருக்கின்றன. அவையும் பிரதான கிராமத்தி லிருந்து வெகுதூரம் தள்ளியே இருக்கின்றன. இவைகள் எல்லாம் பிள்ளைப்பேறு குடிசைகள். இந்தக் குடிசைக்குத் தாயும், சேயும் மற்றும் குடும்பத்துக்கு நெருங்கிய உறவினரும், குழந்தை பிறந்த ஒரு வாரத்திற்குப் பின்னர் 'பிறப்பு' இல்லத்திலிருந்து இடம் பெயருகிறார்கள். தங்களுடைய சொந்த வீட்டுக்குத் திரும்பும் வரை அல்லது சுமார் ஒரு வருடம்வரை அங்கேயே தங்கு கின்றார்கள்.

கார் நிகோபாரில் பிரதான கிராமம் கடற்கரையிலிருந்து 300 கஜ தூரத்தில் இருக்கின்றது. கிராமத்தின் நடுவே பரந்த திறந்தவெளியில் கடற்கரையிலிருந்து கொண்டுவரப்பட்ட மண்ணைப் பரப்பி, இறுகத் தட்டி, கெட்டியான தரையாக்கி விடுகின்றார்கள். நிகோபார் தீவுகளில் உள்ள எல்லா கிராமங் களிலும், கிராமத்தின் திறந்தவெளி மிக முக்கியமானது. அங்கேதான் கிராமக் கூட்டங்கள், விளையாட்டுகள், பந்தயங்கள், நடனம் மற்றும் கிராம விருந்துகள், விழாக்கள் முதலான நடவடிக்கைகள் இடம்பெறுகின்றன.

கிராமத்தில் பல்வேறு பகுதிகள் உள்ளன. ஒவ்வொரு பகுதி யிலும் சிறு கும்பலாகக் குடிசைகள். கிராமத்தின் பெரும்பாலான பகுதிகள் ஒன்றுக்கு ஒன்று நெருங்கியிருந்தாலும், மரங்கள், புல்தரை அல்லது திறந்தவெளி இடைப்பட்டே நிற்கின்றது. சில கும்பலான குடிசைகள் பிரதான கிராமத்திற்கு வெகுதூரம் தள்ளி, தீவுகளின் உட்பகுதிகளில் இருக்கின்றன.

கிராமத்தின் இந்தச் சிறு பகுதிகளில் உள்ள குடிசைகளை 'டியூஹட்' என்று அழைக்கின்றார்கள். அவைகள் இங்கும் அங்கும் அமைந்திருப்பதற்குக் காரணம், முன்பு தோட்டங் களும், தோப்புகளும் அமைக்கக் காடுகளைத் திருத்தியபொழுது, அவர்கள் தோட்டப் பகுதிக்கு அருகிலேயே குடிசைகள் கட்டிக் கொண்டார்கள். கிராமத்தில் மக்களும், வாழ்வும் பெருகியதும், மக்கள் கிராமத்தின் பிரதான இடத்திலேயே நெருங்கி வாழ ஆரம்பித்தார்கள். 'டியூஹட்'கள்கூட மிக நெருங்கியிருக்

கின்றன. இருப்பினும், சில 'டியூஹட்'கள் உட்பகுதியிலேயே நிலைத்துவிட்டன. அவை இப்பொழுது தூரம், தொலைவில் உள்ள தோப்புகளைப் பார்த்துக்கொள்ளுவோருக்கு உதவுகின்றன.

கிராமத்தில் உள்ள பகுதிகள் பெரும்பாலும், குடும்பங்களின் தலைவர்களைப் பொறுத்தே இருக்கின்றன. ஒரு குடும்பத்தின் தலைவரும், அவரது நெருங்கிய உறவினர்களும் ஒரு 'டியூஹட்' அல்லது கிராமப் பகுதியைக் கட்டுப்படுத்தி வைத்திருக்கின்றார்கள்.

கிராமத்துப் புறவெளிக்கு அப்பால், உட்பகுதிகளில் அடர்த்தியான காடுகள் உள்ளன. இந்த உட்பகுதிகளும் வீணாக்கப்படவில்லை. சில இடங்களில், மண் வளம் சரியாக யிருந்தால் தென்னை, பாக்கு, சேனை, வாழை, பழ வகைகள், காய்கறிகள் பயிரிடுகின்றார்கள். மற்ற இடங்களில் புல் வளர்க்கின்றார்கள். அது கூரை வேய்வதற்குப் பயன்படுகின்றது. மற்றும் அநேக இடங்களில் காடுகள் அப்படியே யிருக்கின்றன. மக்கள் வீடுகள் கட்டுவதற்கும், விறகுக்கும் அங்கிருந்து மரம், மூங்கில், பிரம்பு முதலானவை கிடைக்கின்றன. உண்மையில், நிகோபார் மக்களுக்குத் தீவுகளின் உட்பகுதிகள்கூட மிக முக்கியமானதாகும். கார் நிகோபார், சோவ்ரா போன்ற மக்கள் நிறைந்த தீவுகளில், காடுகளில் ஒவ்வொரு சிறிய பகுதியையும் எல்லை வகுத்து, வெவ்வேறு கிராமங்களுக்கு என்று மக்கள் பிரித்துக்கொண்டிருக்கின்றார்கள்.

நிகோபார் தீவுகளில் கிராமங்கள் பொதுவாக வெகு அழகாக இருக்கும். குறிப்பாக கார் நிகோபாரிலும், சோவ்ராவிலும் கிராமங்கள், மற்ற தீவுகளில் உள்ளவைகளைக்காட்டிலும் தூய்மையாக யிருக்கின்றன. அங்கு வீடுகளும் நன்றாகக் கட்டப்பட்டுள்ளன. எழிலாகவும் இருக்கின்றன. நிகோபார் தீவுகளில் ஒரு கிராமத்தை எடுத்துக்கொண்டால் ஒரு பக்கம் அலைபாயும் கடல், அடிவானம் வரை பரந்து நிற்கும். கடலின் நிறம் பொதுவாகக் கரையோரம் வெளிறிய நீலமாக, ஆனால் இயற்கையின் மாறுதலுக்கு ஏற்ப, கடல் அடிமட்டத்தின் தன்மைப்படி நீல வண்ணத்தில் பல வேறுபாடுகளுடன் பச்சை கலந்து கரையிலிருந்து 200 கஜ தூரத்திற்குத் தென்படுகின்றது. கடல் அமைதியாக, அலைகள் மோதாமலிருந்தால் தண்ணீர் மிகத் தெளிவுடன் தென்படும். அப்போது கடல் மட்டத்தில் பரந்து பரவிக்கிடக்கும் பவழப் பாறைகளின் பல அமைப்புகளையும், வண்ணங்களையும்

காணலாம். 200 கஜ தூரத்திற்கு அப்பால் அழகிய நீல வண்ணத்தில் ஆழ்ந்த கடலும், அங்கே மோதும் அலைகள் பால்போல் பொங்கி வெண்மையாகக் காட்சி தருவதும் மிக அழகாக யிருக்கும்.

அநேக கிராமங்களில் கடற்கரையோரம் மிகவும் சரிவாக இருக்கும். அதனால் கரைமீது ஓங்கிப்பாயும் பெரிய அலைகள் பால்போல் நுரைநுரைத்து, கரை வரையும் வழிந்து ஓடும். கடற்கரையிலே பளபளக்கும் தூய வெண்மணல் பரப்பு, அங்கும் இங்கும் பல வண்ணங்களில் கிளிஞ்சல்கள், சிப்பிகள் கதிரவன் ஒளிபட்டுப் பிரகாசிக்கும்.

கடற்கரையின் மறுபக்கத்தில், உள்புறமாக சில குட்டையான செடிகளும், மிகப் பெரிய 'கின்யாயா' மரங்களும் உள்ளன. அம்மரங்களின் அகன்ற ஆழ்ந்த பச்சை நிறமான இலைகள் கடற்கரைக்கு நல்ல நிழலைத் தருகின்றன. அங்கு காட்டு 'பண்டானுஸ்' மரங்கள் சிலவும், நீண்ட புற்களைப்போன்ற தழைகளுடன் காணப்படுவது, தீவுகளின் புறத்திணைக் காட்சிக்கு எடுப்பாக அமைந்திருக்கின்றது. அதற்கு அடுத்தாற்போன்றே, சில இடங்களில் கடற்கரை மணல் வரைக்குமே அதனைத் தொட்டாற்போல் வரிசை வரிசையாகத் தென்னை மரங்கள் நெடிது ஓங்கி உயர்ந்து, உச்சிகளில் பசுமையான தென்னங்கீற்றுகளுடன் அடர்ந்து நிற்பது அழகான காட்சியாகும்.

பிரதான கிராமத்திற்கும், கடற்கரைக்கும் இடையே நிற்பது இந்தத் தென்னந்தோப்புகள். கிராமத்தில் பல வகையான வீடுகள்: குவிந்த வடிவில், நீண்ட சதுரத்தில் சரிவான கூரைகளுடன் வீடுகள்; கால்களை நிறுத்தி, அவைகளின்மேல் நன்கு கட்டுப்பட்டு, ஓடுகள் வேயப்பட்ட வீடுகள்; மேலும் நன்கு உறுதியாகக் கட்டப்பட்ட ஓரிரு வீடுகள். ஆக அனைத்தும் நடுவே உள்ள திறந்தவெளியைச் சுற்றி ஒன்றுக்கு ஒன்று நன்கு மாறுபட்டு இருக்கின்றன. கிராமத்தைச் சுற்றிலும், சில இடங்களில் வீடுகளின் பக்கங்களிலும் தென்னை மரங்கள் இருக்கின்றன. உண்மையில் கிராமமே தென்னை மரங்களுக்கிடையே அடைந்து கிடப்பதுபோன்றிருக்கும். கார் நிகோபார் கிராமங்களில் அழகாகப் படர்ந்தக் காட்டுப் பலா மரங்களும் இங்கும் அங்கும் காணப்படுகின்றன. அதன் அழகிய, மடங்கினாற்போன்று கூர்ந்து நிற்கும் பசுமையான இலைகள் காஷ்மீரில் காணப்படும் புகழ் பெற்ற 'கூஷுனர்' இலைகளைப்போன்று தோற்றமளிக்கின்றன.

தென்னைகளும், காட்டுப் பலா மரங்களும் கிராமத்திற்கு நல்ல நிழல் தருகின்றன. அதனுல் குளுமையானதொரு தோற்றம் கிடைக்கின்றது. நிலாக்கால இரவுகளில் கிராமத்தில் ஒளியும், நிழலும் இடைக்கலந்து காணப்படுவதால், கிராமமே புத்துணர்வுத் தோற்றமாகக் காட்சி தருகின்றது.

## போக்குவரத்து

நிகோபார் தீவுகளில் முக்கியமான போக்குவரத்து அனைத்தும் கடல் வழியே நடந்துவருகின்றது. கார் நிகோபாரைத் தவிர எந்தத் தீவிலும் சாலைகள் அபிவிருத்தியடையவில்லை. தீவின் ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கம் போவதற்குக்கூட, சாதாரண மாகப் போக்குவரத்துக்கு எடுத்துக்கொள்ளும் நேரத்தைவிட, பல மடங்கு நேரம் கடலிலே படகுகள் செலுத்திக் கடக்கவேண்டி யிருக்கின்றது. நிகோபார் மக்கள் நல்ல கடல் மாலுமிகள். கடலுடன் அவர்கள் வாழ்வு மிக நெருங்கியிருப்பதால், அதன் சீற்றத்திற்கெல்லாம் அவர்கள் பயப்படுவதில்லை. ஒருவரோ அல்லது இருவரோ தனியே ஒரு படகை எடுத்துக்கொண்டு, கரையிலிருந்து ஆறு, ஏழு மைலுக்கு அப்பால் ஆழ்கடலில், இரவெல்லாம் மீன் பிடிப்பதைப் பார்ப்பது சாதாரணமானது. கடலில் எந்த இக்கட்டான நிலையையும் சமாளிப்பதில் அவர் களுக்கு உள்ள உள்ளார்ந்த கவனமும், சரியான மதிப்பீடும், அவர்கள் படகுகளைக் கையாளும் திறமையும்கொண்டிருப்பதால் இங்கு உயிருக்கு சேதம் ஏற்படும் விபத்துக்களைக் காண்பது அரிது.

நல்ல பருவத்தில், நவம்பர் மாதம் முதல் ஏப்ரல் வரை, கடல் அமைதியாக யிருக்கும்பொழுது, மக்கள் மற்ற தீவுகளுக்கும் படகுகளில் செல்லுகின்றுர்கள். அவர்கள் படகு பொதுவாக ஒரு நல்ல பாதுகாப்பான கலம்.

நிகோபார் மக்கள் கடலின் போக்கு இயல்களை நன்கு தெரிந்து வைத்துக்கொண்டிருக்கின்றுர்கள். கடல் எழுச்சி, இயல்பு, நீர் வேகத்தின் போக்கு ஆகியவைகளைத் தவறில்லாமல் முன் கூட்டியே தெரிவிக்கிறுர்கள். அலைகளை எண்ணும் குறிப்பிடத் தக்க முறை ஒன்று அவர்களுக்குத் தெரியும். கரையை இடை விடாது மோதும் அலைகள் எப்பொழுது ஓய்ந்து அமைதியாகும், எப்பொழுது படகை விடுவது பாதுகாப்பானது, எப்பொழுது கரைக்கு அலைகளுடன் சேர்ந்து வரமுடியும் என்பதையெல்லாம் அவர்கள் சரியாகக் கூறுவார்கள். உண்மையில் அலைகள்பற்றிய

வியக்கத்தக்க அறிவு அவர்களுக்கு இல்லாவிட்டால், கடலில் போவதும் கடினம், கரைசேருவதும் கடினம். ஏனென்றால், கடலில் போகும்பொழுதும், கரைசேருகையிலும் தவறான அலைகளாக யிருந்துவிட்டால், படகுகள் அலைக்கழிக்கப்படும்; அவைகளில் இருப்பவர்களை நீரில்தான் காணமுடியும்.

அரசாங்கத்தினுடையதும், தனிப்பட்டோருடையதுமான கப்பல்கள் நிகோபார் தீவுகளுக்கு உள்ளாகவே போய்க்கொண்டிருக்கின்றன. தெற்கு அந்தமானில் உள்ள யூனியன் பிரதேசத் தலைநகரான போர்ட் பிளேருக்கும் செல்கின்றன.

இந்தியாவுக்குச் செல்ல சென்னை, கல்கத்தாவிலிருந்து கார் நிகோபார் வழியாக போர்ட் பிளேருக்கு வரும் அரசாங்கக் கப்பல்களே இருக்கின்றன. தற்போது அந்தக் கப்பல்கள், சராசரியாக, மாதம் ஒருமுறை கார் நிகோபாருக்கு வருகின்றன.

நிகோபார் தீவுகளில் நங்கூரம் பாய்ச்சுவதற்கான இடங்களோ அல்லது துறைமுகக் காரியங்களுக்குப் பயன்படும் பாதுகாப்பான இடங்களோ, வெகுசிலவே இருக்கின்றன. பெரிய கப்பல்கள் தங்கி பக்கத்தில் சரக்குகளை ஏற்றி இறக்கும் பெரிய துறைகளும் இல்லை. அதனால் கப்பல்கள் கரையிலிருந்து வெகுதூரத்திலேயே நங்கூரம் பாய்ச்சி நின்றுவிடுகின்றன. அங்குக் கப்பலிலிருந்து மோட்டார் படகுக்குப் பயணிகள் மாறுகின்றனர். சாமான்களும் மாற்றப்படுகின்றன. மோட்டார் படகு கரையிலிருந்து 100 கஜ தூரத்தில் நின்றுவிடுகிறது. அங்கிருந்து சிறிய படகுகளுக்கு மற்றொரு மாற்றம் செய்யப்பட்டு, அந்தப் படகுகள் கரைவந்து சேருகின்றன. மோட்டார் படகுகள் இல்லாத இடங்களில், கப்பலிலிருந்து கரைவரைக்குமுள்ள தூரம் முழுவதையும் சாதாரண படகுகளே கடக்கின்றன. இந்தச் சூழ்நிலையில், சரக்குகளை ஏற்றி இறக்கும் பணி கடினமானது; இன்னல் மிகுந்தது. ஆனால், நிகோபார் மக்கள் இந்தப் பணிகளில் எவரையும் மிஞ்சிவிடுகின்றார்கள்.

மலாக்காவிலும், கார் நிகோபாரில் மூஸ் என்ற இடத்திலும், கமோர்டாவில் தலைநகர்ப் பகுதியிலும், இப்பொழுது நிலையான சரக்கு ஏற்றி இறக்கும் துறைகள் கட்டப்பட்டு வருகின்றன. கட்சால் தீவில் கபாங்காவிலும், கிரேட் நிகோபாரில் 'கேம்பல் பே'யிலும் படகுத் துறைகள் கட்டப்பட்டு வருகின்றன. இத்துறைகளால் சரக்குகளை ஏற்றி இறக்கும் வசதிகள் அதிகரிக்கும். நான்கோவ்ரித் தீவில் 'சாம்பனி'ல் நல்ல துறை

யொன்று மரத்தால் கட்டப்பட்டவை இருக்கின்றது. அங்குச் சிறிய கப்பல்கள் செல்லமுடியும்.

கார் நிகோபாருக்கும், கல்கத்தாவில் உள்ள பராக்பூருக்கும் இடையே, இந்திய விமானப் படையின் விமானம் ஒன்று வாரந் தோறும் வந்து சென்றுகொண்டிருக்கின்றது. அது தீவுக்கு வரவேண்டிய முக்கியமான அஞ்சல்களைக் கொண்டுவருகின்றது. ஆனால், சாதாரணமாக பொதுமக்களான பயணிகளை ஏற்றுவ தில்லை. இந்தியாவிலிருந்து வரவிரும்பும் பயணிகள் போர்ட் பிளேருக்கும், கல்கத்தாவுக்கும் இடையே நடைபெறும் இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷனின் வாராந்திரப் பயணத்தில் வரலாம். ஆனால், அது அக்டோபர் மாதம் முதல் ஏப்ரல் வரையிலான நல்ல பருவத்திலேயே இயங்கிவருகின்றது.

கார் நிகோபாரில், தீவுகளுக்குள்ளான போக்குவரத்துக்குப் புதிய சாலைகள் கட்டப்பட்டுள்ளன. தீவுகளைச் சுற்றிலும் 32 மைல் நீளத்திற்கு, நல்ல கெட்டியான சாலையொன்று கடற் கரையோரமாகவே, தீவுகளில் எல்லா கிராமங்களையும் இணைத்துக்கொண்டு செல்லுகின்றது. சாலையின் அகலம் 16 அடி; நல்ல நிலைமையில் இருக்கின்றது. தலைநகர்ப் பகுதியுடன், ககானு கிராமத்தை இணைக்கும் கெட்டியான சாலையொன்றும் அமைக்கப் பட்டு வருகின்றது. கெட்டியான சாலைகளிலிருந்து பிரிந்து செல்லும் கிளைகளான மண் சாலைகளும், காட்டுப் பாதைகளும் உட்பகுதிகளுக்குக் குறிப்பாக மக்களின் தோட்டங்கள், தோப்பு களுக்கு இட்டுச்செல்லுகின்றன.

கார் நிகோபாரில் இப்பொழுது அரசினர் பஸ் போக்குவரத்து இருக்கின்றது. அது தலைநகர்ப் பகுதியுடன், அராங், சவாய், டெக்டாப் ஆகிய கிராமங்களைத் தவிர மற்றெல்லா கிராமங் களையும் இணைத்தாற்போல் செல்லுகின்றது. தீவுகள் வளர்ச்சி யடைந்துள்ளதால், இப்பொழுது, அரசினரின் எல்லாத் துறை யினரையும் சேர்ந்த வாகனங்களும், வர்த்தக நிறுவன வாகனங் களும் சாலைகளில் செல்வதைக் காணமுடிகின்றது. நிகோபார் மக்களுக்கும் போக்குவரத்தைப் பொறுத்த நல்லதொரு உணர்வு, குறிப்பிடத்தக்க வகையில் இருக்கின்றது. மோட்டார் வண்டியின் ஓசை கேட்டதும், அவர்கள் சாலையை விட்டு விலகிச் செல்லு கின்றார்கள். இருப்பினும், வீட்டு வளர்ப்பு மிருகங்கள், குறிப் பாகப் பன்றிகள் என்றால், தீவில் உள்ள மோட்டார்காரர்கள் அனைவரும் அச்சப்படுகின்றார்கள். அவை கடைசி நேரத்தில்,

எந்தவிதமான சந்தடியுமின்றி, வாகனங்களின் முன்வந்து விழுந்து விடும். அதனுல் பன்றிகளால் ஏற்படும் விபத்துக்கள் மிகவும் சாதாரணமானவை. முன்பெல்லாம் மக்கள் அத்தகைய விபத்துக்களை மிகத் தீயதாக நினைத்தார்கள். கொல்லப்படும் ஒவ்வொரு பன்றிக்கும் ஒரு மூட்டை அரிசி கேட்டார்கள். ஆனுல், இப்பொழுது இத்தகைய விபத்துக்களில் வாகனமோட்டிகளே தவறு புரிவதில்லை என்பதை உணர்ந்துகொண்டார்கள். இருந் தாலும், விபத்துக்கள் நேரிடும்பொழுதெல்லாம், வாகனமோட்டி அதுபற்றி கிராமத் தலைவரிடம் கூறி விடைபெறவேண்டும் என்று எதிர்பார்க்கின்ருர்கள்.

கெட்டியான சாலைகள் போடப்பட்டபின்னர், இப்பொழுது, கார் நிகோபாரில் சைகிள்கள் வெகுவாக அதிகரித்துவிட்டன. பெண்களும் ஆண்களும் நல்ல நிபுணர்களாக யிருக்கின்ருர்கள். இங்கு ஒரு ரசமான அம்சம், சமீப காலம் வரை சைகிளில் பிரேக் இருப்பதை மக்கள் விரும்பவில்லை. உள்ளூர் கடைகளில் சைகிள்களை வாங்கிய உடனேயே பிரேக்குகளை எடுத்து விடுவார்கள்.

கார் நிகோபாரில் மாட்டு வண்டிகளையும், கை வண்டிகளையும், கடா ஆடுகள் இழுக்கும் வண்டிகளையும் காணலாம். இந்தியாவில் உள்ள மாதிரியே இருக்கின்றன. அங்கேயே செய்யப்படுகின்றன. அச்சும், சக்கரமும் வெளியிலிருந்து கொண்டுவரப்பட்டவை. தேங்காய்கள், மற்றும் தோப்புகளில் விளையும் பொருள்களை ஏற்றிச்செல்லவே இந்த வண்டிகள் பயன்படுகின்றன. இருந் தாலும் அவை நேர்த்தியாகச் செய்யப்பட்டவையல்ல. அதிக சுமை ஏற்றப்படுவதால் அவை சமனே இழந்துவிடுகின்றன. சாலையோரங்களில் குடைசாய்ந்த வண்டிகளைக் காண்பது சகஜம்.

கார் நிகோபார் அல்லாமல், கட்சால் தீவில் இப்பொழுது சாலை அமைக்கப்பட்டு வருகின்றது. கிழக்குக் கரையில் உள்ள கபாங்காவிலிருந்து, மேற்குக் கரையில் உள்ள வெஸ்ட் பே கட்சால் வரைக்கும் 16 மைல் நீள சாலை அமைக்கப்பட்டு வருகின்றது. சாலை முடிக்கப்பட்டால், தீவுக்குள்ளான போக்கு வரத்துப் பிரச்சினை தீர்ந்துவிடும்; வளர்ச்சித் திட்டங்களுக்கும் ஊக்கமளிப்பதாக யிருக்கும்.

நிகோபார் பகுதியில் எல்லாத் தீவுகளிலும், நிகோபார் மக்கள் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப்போக அதிகமாக நடக்கவே செய்கிருர்கள். ஆனுல், தனிமையாக நடக்க விரும்புவ

தில்லை. கூட்டமாகச் சேர்ந்தே நடக்கின்றார்கள். மெதுவாக ஆடி அசைந்து நகர்ந்தாலும், மிகுந்த தூரத்தைக் கடந்துவிடுகின்றார்கள். பெரிய சுமையும் சுமந்து செல்லுகின்றார்கள். மூங்கில் கழியின் இரு முனைகளிலும் சுமைகளைக் கட்டி, அதைத் தோளில் வைத்து சுமந்து செல்லுகின்றார்கள்.

## குடிநீர் வசதிகள்

நிகோபார் பகுதியில் சோவ்ராவைத் தவிர மக்கள் வசிக்கும் மற்றெல்லாத் தீவுகளிலும் போதுமான குடிநீர் கிடைக்கின்றது. சாதாரணமாக கிணறுகளிலிருந்தே குடிநீர் கிடைக்கின்றது. ஆனால், கிரேட் நிகோபாரில் நல்ல நீரோடைகள் உள்ளன. மற்ற தீவுகளில் கமோர்டாவில் உள்ள ராம்ஜா, நான்கோவ்ரியில் உள்ள டபோங் போன்ற ஓரிரு இடங்களில் ஊற்றுகளும் இருக்கின்றன. கடற்கரையருகே, தரைமட்டத்திற்குக் கீழே 8–10 அடிக்குள் சில சமயம் நல்ல நீர் கிடைக்கின்றது. ஆனால், உட்பகுதிகளில், போதுமான தண்ணீர் கிடைப்பதற்குத் தரை மட்டத்திலிருந்து 30–40 அடிகூடத் தோண்டவேண்டியிருக்கின்றது.

எங்கு நல்ல நீர் கிடைக்கும் என்பதைப்பற்றிய சிறப்பான அறிவு நிகோபார் மக்களுக்கு இருக்கின்றது. அவர்கள் எப்போதும் கிணறுகள் கட்டச் சரியான இடங்களையே தேர்ந்தெடுக்கின்றார்கள்.

முக்கியமாக மூன்று வகையான கிணறுகள் இருக்கின்றன. முதலாவது, புராதன கிணறுகள் போன்றவை. அவைகள் வெறும் ஆழமாகத் தோண்டப்பட்ட குழிகள். தண்ணீர் சேகரிக்கப் போதுமான அளவுகொண்டவை. அதன் பக்கங்கள் ஏறுமாறாகவும், கரடுமுரடாகவும் இருக்கும். கிணற்றின் மேலே ஒன்றன் மேல் ஒன்றாக 3 அடிக் கட்டைகளை அடுக்கித் தண்ணீர் இறைப்பதற்கு வசதியாகவும், விபத்துக்களைத் தடுக்கவும் வைத்திருக்கின்றார்கள்.

இரண்டாவது வகைப்பட்டவை, தூக்கியெறியப்பட்ட டிரம்களை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கிச் சுவர்போல் அமைத்துவிடுகின்றார்கள். மேலாகயிருக்கும் டிரம், தரைமட்டத்திற்கு மேல் 2–3 அடி நீட்டிக்கொண்டு பாதுகாப்பாக அமைந்திருக்கும்.

மூன்றாவது, நல்ல வகையில் சிமென்ட்டால் கட்டப்பட்டுக் காரை பூசப்பட்டதும், செம்மையாக்கப்பட்டதும் ஆகும். அவை

களுக்கு கெட்டியான சிமெண்டால் கட்டப்பட்ட சுவர்களும், சுற்றுச் சுவர்கள் 3—4 அடி உயரத்திலும், 1—2 அடி அகலத்திலும் இருக்கின்றன. அந்தக் கிணறுகளைப் பொதுவாகக் கார் நிகோபாரில், நிகோபார் மக்களே சிமெண்டைக்கொண்டு, சமுதாய நலத் தொகுதியினர் தரும் தொழில் நுட்ப ஆலோசனை யுடன் கட்டுகின்றார்கள். மற்ற தீவுகளில் பொதுப்பணித் துறை யினர், பிற்பட்ட வகுப்பினருக்கு குடிநீர் வசதிகள் தரும் திட்டத் தின் கீழ் நல்ல கிணறுகளைக் கட்டித் தருகின்றார்கள்.



தண்ணீர் இறைப்பதற்கு ஏற்றத் தைப் பயன்படுத்துகின்றார்கள். வலுவான மரம் ஒன்றை நிலத்தில் செங்குத்தாக நட்டு, அதன் குறுக் கேயும் நீட்டமான மரத்தை நடு மையத்தில் கட்டி விடுகின்றார்கள். அந்தக் குறுக்கு மரத்தின் ஒருமுனை யில் நல்ல பளு சேர்க்கப்படுகின் றது. மறுமுனையில் சங்கிலியையோ, கயிறையோ இணைத்து அதன் நுனியில் பக்கெட்டைக் கட்டிக் கிணற்றுக்குள் விடுகின்றார்கள். குறுக்கு மரத்தின் முன் பாகத்தை அழுத்திப் பக்கெட்டைக் கிணற் றில் தண்ணீருக்குள் மூழ்கச் செய்து, தண்ணீர் நிரம்பியவுடன், குறுக்கு மரத்தின் முன் பாகத்தைத் தளரவிட்டவுடன் மறுமுனையில் உள்ள பளு காரணமாக தண்ணீர் நிரம்பிய பக்கெட் கிணற்றின் மேலே வந்து, குறுக்கு மரமும் பழைய நிலைக்கு வந்து விடுகின் றது. இவ்வாறு ஏற்றம் வைத்து தண்ணீர் எடுக்கின்றார்கள்.

நிகோபார் மக்கள் சுத்தமான குடிநீருக்காக மிகுந்த அக்கறை காட்டுகின்றார்கள். குடிப்பதற்கும், குளிப்பதற்கும், மற்றும் அலம்பும் காரியங்களுக்கும் வெவ்வேறு கிணறுகள் இருக்கின்றன. குடிநீர் கிணறுகளைத் தென்னங்கீற்றுக்களால் மூடிவைத்து, வீட்டு

விலங்குகள் எதுவும் அசுத்தப்படுத்தாமல் பாதுகாக்கின்றார்கள். சில முதியவர்கள் சுத்தமான நீர் வேண்டுமென்பதற்காகத் தங்களுக்கே சொந்தமான சில குறிப்பிட்ட கிணறுகளிலிருந்தே நீர் அருந்துகின்றார்கள். அதில் அவர்கள் அவ்வளவு கருத்தாக யிருக்கின்றார்கள். மற்ற எவரையும் அந்த நீரைத்தொட அனுமதிப்பதில்லை. மேலும், அந்தக் கிராமத்தில் ஏதாவது சாவு விழுந்துவிட்டால், சில சமயம், முதியவர்கள், தங்கள் கிணறுகளைப் பதினைந்து நாட்களுக்கு மூடி வைத்து விடுகின்றார்கள். இறந்த சடலத்தினுல், காற்று மூலம் தூய்மை கெட்டுவிடுமோ என்று அவ்வாறு செய்கின்றார்கள். இவ்வாறு குறிப்பாகச் சுத்தமாகவும், மற்றவர்கள் தொடாமலும் வைக்கப்பட்டிருக்கும் கிணறுகளை 'இந்துக்களின் கிணறுகள்' என்று அழைக்கின்றார்கள். புறத்தூய்மையில் இந்துக்கள் மிகவும் கண்ணுங்கருத்துமாக ஆசாரமுடன் இருப்பதை ஒப்பிடும் வகையில் இவ்வாறு கூறுகின்றார்கள் என்று தெரிகின்றது.

நிகோபார் தீவுகளில் பொதுவாகத் தண்ணீர் நல்ல ருசியுடன் இருந்தாலும், குறிப்பாக உட்பகுதிகளில் கிணற்று நீர் நடுத்தரமாகவே (hard) யிருக்கின்றது.

சோவ்ராவில், தண்ணீர் பிரச்சினையில், திருப்திகரமான தீர்வு எதுவும் இன்னமும் கிடைக்கவில்லை. தீவும் மிகச் சிறியது. வறட்சியான மாதங்களில் டிசம்பர் முதல் ஏப்ரல் வரை கிணறுகளில் போதுமான நல்ல நீர் கிடைப்பதில்லை. கரிப்பான நீர் சுரக்கின்றது. ஆண்டு ஆண்டுகாலமாக இருந்துவரும் இந்தப் பிரச்சினையை மக்களே, சிறிது கரிப்பான நீரையும் கொஞ்சம் பயன்படுத்தி, பக்கத்தில் உள்ள டெரசாத் தீவிலிருந்து நல்ல நீரையும் கொண்டு வந்து பழக்கப்படுத்திக்கொண்டிருக்கின்றார்கள். தண்ணீர் கொண்டுவரத் தேங்காய் மூடிகளால் ஆன சாதனம் ஒன்றைப் பயன்படுத்துகின்றார்கள்.

தீவின் குடிநீர் பிரச்சினையைச் சமாளிக்க, சில ஆண்டுகளுக்கு முன்னர், பொதுப்பணித் துறையினர், மழை நீரைத் தேக்கி வைத்து, வறட்சியான காலத்தில் மக்களுக்குக் கிடைக்க, ஒரு நீர்தேக்கத்தைக் கட்டினார்கள். ஆனால், நீர்தேக்கம் சிமென்டால் கட்டப்பட்டதால், சூனியவாதிகளும், மற்றும் மூட நம்பிக் கைக்கொண்டவர்களும், மக்களுக்கு அதனுல் பெருந்தீங்கு விளையும் என்று கடுமையாக எதிர்த்தார்கள். அவர்கள் அஞ்சியதற்கு ஏற்ப, துரதிர்ஷ்டவசமாக, நீர்தேக்கம் முடிக்கப்பட்ட

பின்னர், வேறு ஏதோ காரணமாக சில நோய்கள் பரவிக் கோழி களையும், பன்றிகளையும் பற்றிக்கொண்டன. அதனால் ஒரு சில அழியவும் செய்தன. சூனியவாதிகள் இதைப் பெரிதுபடுத்தி விட்டார்கள். ஓர் இரவு அவர்களும், மற்றும் அவர்களுக்கு உட் பட்ட சிலரும் நீர்தேக்கத் தொட்டியைத் தூள்தூளாக்கிவிட்டார் கள். கட்டிடப் பொருள்களைக் கடலிலும் தூக்கி யெறிந்து விட்டார்கள். உண்மையில், தீங்கு விளைத்த நீர்தேக்கக் கட்டிடப் பொருள்களைக் கடலில்போட்டதால், தீவைச் சுற்றியுள்ள கடலும் கொந்தளிக்கத் தொடங்கிவிட்டதாக சூனியவாதிகள் கூறிக் கொண்டார்கள்.

அதற்குப் பின்னர் சோவ்ராவில், மீண்டும் மழை நீரைத் தேக்கி வைக்க, நீர்தேக்கம் ஒன்று கட்டுவதில் உள்ள நன்மைகளை அர சாங்க அதிகாரிகள் பலமுறை மக்களுக்கு எடுத்துக்கூறி முயற்சித் தார்கள். ஆனால், மக்களின் தப்பெண்ணமும், சூனியவாதி களின் செல்வாக்கும் இந்தப் பணிக்குப் பெருந்தடையாக இருப் பதுபோல், தீவில் குடிநீர் தட்டுப்பாடும், முன்புபோன்றே கடுமை யாக யிருந்துவருகின்றது.

அத்தியாயம் 5

# மக்கள்

கிரேட் நிகோபார் தீவைச் சேர்ந்த சில ஷோம்பன் மக்களைத் தவிர, நிகோபார் பகுதியில் பல்வேறு தீவுகளில் வசிக்கும் அனைவரும் ஒரே தாய்மை இனத்தைச் சார்ந்தவர்கள். தோற்றத்திலும், பேச்சிலும், பழக்கவழக்கத்திலும் சிறு வேறுபாடுகள் இருப்பதற்கு, இட மாறுபாடுதான் காரணமே தவிர, இன மாறுபாடு அல்ல.

இத்தீவுகளிலேயே நிகோபார் மக்கள் இருந்தார்களா அல்லது வெளியிலிருந்து வந்தார்களா என்பது விவாதத்திற்கு உரிய பொருள். உறுதியான முடிவுக்கு வர அறுதியிட்டுக்கூறும் குறிப்பு எதுவும் இல்லை. நிகோபார் மக்களே, அவர்கள் பூர்வீகம் பற்றிச் சில கதைகள் கூறுகிறார்கள். அதில் ஒரு கதை: வெளியிடத்து இளவரசி ஒருத்தி, மணம் ஆகாமலே மகப்பேறு பெற்று விட்டாள். அரசன் அவளை நாடு கடத்தி ஒரு படகில் வைத்து அனுப்பிவிடுகின்றான். படகு, அதன் போக்கில் ஓடி, கார் நிகோபாரில், கிழக்குக் கரையோரத்தில், தற்போது பிக் லபாடி என்ற கிராமம் இருக்கும் இடத்தில் ஒதுங்கியது. அங்கே இளவரசி ஒரு மகனைப் பெற்றெடுக்கின்றாள். சில ஆண்டுகளுக்குப் பின் அவனையே கூடுகின்றாள். அவள் தன்னுடைய மகனை, தீவிலே வெவ்வேறு இடங்களுக்குச் செல்லச் செய்வாள். அவள் அழகிய பெண்ணுருக்கொண்டு, அங்கங்கே சந்தித்து வந்தாள். இவ்வாறு தாயும், மகனும் சேர்ந்து உண்டான சந்ததிகளிலிருந்தே நிகோபார் மக்கள் தோன்றினார்கள் என்பது ஒரு கதை.

இந்தக் கதையில் என்ன உண்மை அடங்கியிருக்கின்றது என்று கூறுவது கடினம். ஆனால், பூர்வீகத்தில் மக்கள் ஓரிடத்திலிருந்து தான், அதாவது இப்பொழுது பிக் லபாடி கிராமம் இருக்கும் இடத்திலேயே மக்கள் காணப்பட்டார்கள் என்பது உறுதியாகத் தெரிகின்றது. மக்கள் தொகை பெருகவும், அவர்கள் தீவில் உள்ள மற்ற இடங்களுக்கு, மேலும் நிலம் தேடவும், வாழ வழி காணவும் பரவத் தொடங்கினார்கள். இவ்வாறே தீவில் வேறு

பல கிராமங்கள் தோன்றியிருக்கின்றன. அதே சமயத்தில் கார் நிகோபார் மக்கள் இன்னமும் பிக் லபாடி கிராமத்தையே தாய்மைக் கிராமமாகக் கருதுகின்றார்கள். வெளியிலிருந்து வரும் முக்கிய பிரமுகர்களுக்கு தீவு மக்கள் அனைவரும் சேர்ந்து தரும் வரவேற்பு நிகழ்ச்சிகள் அனைத்தும், அந்தக் கிராமத்திலேயே நடைபெறுகின்றன. சில ஆண்டுகளுக்கு முன்புவரை, தீவுகளில் உள்ள பல்வேறு கிராமங்களைச் சேர்ந்த மக்கள் இறந்தவர்களை, பிக் லபாடி கிராமத்திலேயே புதைத்து வந்தார்கள். தீவுகளின் முதன்மைத் தலைமகன் எப்பொழுதும் இந்த கிராமத்தைச் சேர்ந்தவனாகவே இருந்தான். ஆனால் இந்த சம்பிரதாயங்கள் எல்லாம் இப்பொழுது கைவிடப்பட்டன.

கார் நிகோபார் மக்கள் மாத்திரமல்லாமல், நிகோபார் தீவுகள் அனைத்தையும் சார்ந்த மக்கள், ஏதாவது ஒரு தீவில் ஓர் இடத்தில் பூர்வீகத்தில் வாழ்ந்திருக்கவேண்டும்; பின்னர் வெவ்வேறு தீவுகளுக்குச் சென்றிருக்கவேண்டும் என்ற சாத்யக்கூறும் இருக்கின்றது. என்றாலும் பல்வேறு தீவுகளைச் சார்ந்த மக்கள் எவரும், ஏதாவது ஒரு தீவைத் தாய்மைத் தீவு என்று கூறுவதில்லை. மேலும் தெளிவான தடயம் எதுவும் இல்லை. அதனால் இதைப்பற்றி அறுதியாக எதுவும் சொல்ல முடியாது.



மேலும், என்றோ கடந்தகாலத்தில், நிகோபார் மக்கள் வெளியிலிருந்து வந்திருக்க முடியும் என்ற சாத்யக்கூறுகளை நிராகரிக்க முடியாவிட்டாலும், பல நூற்றாண்டுகளாக மற்ற வெளி கலாச்சாரச் செல்வாக்குகளுக்கும் அப்பாற்பட்டே ஒதுங்கியிருந்துவிட்டார்கள். இப்பொழுது அவர்கள் முற்றிலும் தனித்ததொரு பண்பாட்டுக்கு உரியவர்களாகிவிட்டார்கள். அவர்கள்

வாழ்க்கை முறை, மொழி, சமுதாயப் பொருளாதார அமைப்புகள் ஆகியவை, மற்ற மக்களைக்காட்டிலும் முற்றிலும் வேறுபட்டிருக்கின்றன.

மக்கள் பொதுவாக மங்கோலிய இனத் தோற்றங்கொண்டவர்களாக யிருந்தாலும், மங்கோலியர்களைவிடத் தோற்றத்தில் தேக நலம் மிக்கவர்களாகவும், நிறத்தில் சிறிது கருமையாகவும் இருக்கின்றார்கள். அவர்களுக்கு நல்ல சதைப் பற்றுள்ள உடல், ஒல்லியான ஒருவரைக் காண்பது அரிது. அவர்களுக்கு எடுப்பான முகவாய்கட்டைகள்; ஆனால் மங்கோலியருக்கு இருப்பதுபோல் அதிகமாக வெளித்தெரிவதில்லை. மூக்கு சிறியதாகத் தட்டையாகயிருந்தாலும் எடுப்பாகயிருக்கின்றது. உண்மையில் நன்கு அமைந்த சில முகங்களில் எடுப்பான மூக்கும், செதுக்கிவைத்தாற்போன்ற உறுப்புகளும் காணலாம். மங்கோலிய மக்களுக்கு இருப்பதுபோல் முடி அவ்வளவு நேராக இல்லை. சிலருக்கு அலை அலையாகவும் முடி சுருண்டுள்ளது. அவர்கள் கருமையான மாநிறத்திலிருந்து நல்ல வெளிறிய நிறம்வரை வேறுபட்டு இருக்கின்றார்கள். ஒவ்வொரு தீவிலும் பலதரப்பட்ட நிறமுள்ளவர்கள் இருந்தாலும், கார் நிகோபார் மக்கள் பொதுவாக மற்ற தீவுகளின் மக்களைக்காட்டிலும் கருமையான நிறம் கொண்டவர்கள். பொதுவாகத் தெற்குப் பகுதித் தீவுகளை—புலோமிலோ—லிட்டில் நிகோபார்—கொண்டுல்—கிரேட் நிகோபார்—சேர்ந்தவர்கள் அழகான வெண்ணிறமானவர்கள்.

நிகோபார் மக்கள் அதிக நெட்டையுமில்லை, அதிகக் குட்டையுமில்லை. அவர்களின் சராசரி உயரம் 5 அடி முதல் 5 அடி 5 அங்குலம் வரை இருக்கின்றது. அவர்கள் அடிக்கடி எண்ணெய் தேய்த்துக்கொள்வதால், அவர்கள் உடல் தொட்டால் மளமளப்பாகயிருக்கின்றது. அவர்கள் அதிகமாக வெற்றிலை போடுவதாலும், சிறு வயது முதற்கொண்டே வாயை மூடிவைக்கும் பழக்கத்தை அவர்கள் தாயார்கள் கற்பிக்கத் தவறியதாலும் வாயகன்று இருக்கின்றனர். அவர்களின் நடையிலும் ஓர் அழகில்லை. உறுப்புக்கள் கழன்றுவிட்டதுபோல் தளர்வுற்ற நடை. இதற்கு மரம் ஏறுவது காரணமாகயிருக்கலாம். இதில் அநேகமாக எல்லோரும் சிறுவயது முதலாகவே ஈடுபடுகின்றார்கள். அதனால் கவட்டிக் கால்களாகிவிடுகின்றன. அவர்கள் சிற்றடி வைத்தே நடக்கின்றார்கள். உடலுக்கு நேர் மறுகோணத்தில் மாறுகால் போட்டு நடக்கின்றார்கள். நடை வேகமும்

குறைவு. எனினும் இப்பொழுது நடைப்பழக்கம் மாற்றம் பெற்று முன்னேறிவருகின்றது. குறிப்பாகப் பள்ளிகளில் கற்று வரும் இளைஞர்கள் வெகு வேகமாகவும் மிடுக்காகவும் நடக்கின்றூர்கள்.

நன்கு வடிவமைந்த முன் நெற்றியைக்கொண்ட நிகோபார் மக்களின் கண்கள் பெரிதாகவுள்ளன. பற்கள் பொதுவாகப் பழுதடைந்துள்ளன. காரணம், அதிகமாகப் புகைபிடித்தல், வெற்றிலை பாக்கு மெல்லுதல், கள் குடித்தல் ஆகியவைகளால் ஏற்பட்டதாகும்.

இளைஞர்கள் பொதுவாகப் பார்ப்பதற்கு அழகாகயிருக்கின்றூர்கள். நிகோபார் குழந்தைகளை அப்படியே தூக்கிக் கொஞ்சி மகிழலாம். தெளிவான ஆவல் நிறைந்த இன்முகங்கள், ஏது மறியாத பார்வை, கவலையற்ற, ஆனுல் அமைதி நிரம்பிய தோற்றம். மக்கள் 35 வயது வரை அதே அழகான தோற்றத்தைக் கொண்டிருக்கின்றூர்கள். முழுமையுமாகப் பார்த்தால் பெண்களைவிட ஆண்கள் அழகாகக் காணப்படுகின்றூர்கள். இளைஞர்கள் நல்ல உருண்டுதிரண்ட உடல் வளம்கொண்டிருக்கின்றூர்கள். அவர்களின் கவலையற்ற தோற்றமும், புன்முறுவல் பூத்த முகங்களும், அவர்களுக்கு ஒருவிதமான எழில் ஊட்டுகின்றன. செதுக்கிவைத்தாற்போன்ற மூக்கும், விழியும் கொண்ட ஒரு சில இளைஞர்கள், எடுப்பான தோற்றத்துடன் மிக அழகாக இருக்கின்றூர்கள். இளம் பெண்களும் நல்ல உருவமைப்புக்கொண்டிருக்கின்றூர்கள். பொதுவாக ஒல்லியாகவும், ஒயிலாகவும் இருக்கின்றூர்கள். அவர்களில் அழகிகளைக் காணுவது சாதாரணம் என்றுலும், அநேகர் கடினமான வெளி அலுவல்களில் ஈடுபடுவதால் ஆண்மை மிகுந்த தோற்றம் கொண்டிருக்கின்றூர்கள். அது அவர்களின் நல்ல தோற்றத்தைக் கெடுத்துவிடுகின்றது. அநேகமான பெண்களுக்கு எடுப்பான மார்பு இருப்பதில்லை. இருப்பினும் நிக்கோபார் மக்களிடையே, அது அழகுக்கான அறிகுறியும் அல்ல.

மிக அதிகமாக வெற்றிலை போடுவதாலும், கள் குடிப்பதாலும், 35 வயதுக்கு அப்புறமே, மக்கள் நல்லதொரு தோற்றத்தை இழந்து விடுகின்றூர்கள். உறுப்புக்கள் முரடு தட்டிப் போய்விடுகின்றன. வெளி வேலைகளிலே ஈடுபடும் வாழ்வை அவர்கள் கொண்டிருப்பதால், கிழவர்கள் ஓய்ந்துபோன தோற்றம் கொண்டிருக்கின்றூர்கள். அவர்கள் உண்ணும்

உணவில் மாச்சத்து மிகுந்துள்ளதால், அவர்கள் எல்லோரும் கொழுத்துத் தடித்த மனிதர்களாகக் காணப்படுகின்றார்கள்.

அம்மக்கள் நீண்டகாலம் வாழுகின்றார்கள். 70 வயதும் 80 வயதும் ஆனவர்கள் அநேகம் பேர்களைக் கிராமங்களில் காணமுடியும். நிகோபார் மக்களில் ஒரு குறிப்பிடத்தக்க அம்சம், அவர்கள் முதுமையானவர்களாகத் தென்படுவதில்லை; அவர்களின் சரியான வயதைக் கூறுவது கடினம்.

ஆண்களில் தாடி வளர்த்துவதும் வெகு குறைவு. இதனாலும் அநேகர் இளமையாகத் தென்படுகின்றார்கள். கருமையான முடி கொண்டவர்கள். நரைப்பதும் வெகு அரிது.

வயதானவர்களுக்குத் தங்கள் வயதே தெரியாது. 50 வயது மனிதன் தன்னை 25 வயது இளைஞன் என்று சொல்லிக்கொள் வான். ஆனால் இளைஞர்களுக்குத் தங்கள் வயது தெரியும். ஏனென்றால் அவர்களில் அநேகர் கிருஸ்துவ மதத்திற்கு மாறி விட்டனர். தேவாலயக் குறிப்புகளில் அவர்கள் இடம் பெற்றிருக்கின்றனர்.

நிகோபார் மக்களுக்கு மோப்ப சக்தி அதிகம். உண்மையில், கடந்த காலத்தில், பல்வேறு இடங்களில் இருந்துவரும் மக்களை, அவர்களின் வாடையைக்கொண்டே கண்டுபிடித்துவிடுவதாகக் கூறிக்கொள்வார்கள் (சோவ்ரா மக்களின் வாடை சகிக்க முடியாதது என்று கருதப்படுகிறது). அவர்களின் கண் பார்வை யும் பொதுவாக நன்றாயிருக்கின்றது. கிழவர்கள்கூடக் கண்ணாடி இல்லாமல், எல்லாப் பணிகளையும் செய்து வருகின்றார்கள். ஆனால் அவர்களின் சுவைத்திறன் அவ்வளவு குறிப்பிடத்தக்க தல்ல. எப்போதும் வெற்றிலை மென்றுகொண்டு இருப்பதால், வாயும், நாக்கும் உணர்வு குன்றி, சுவைத்திறன் மங்கிவிடுவது காரணமாக இருக்கலாம். இவ்வாறு சுவைத்திறன் குன்றியிருப்ப தால், நிகோபார் மக்கள், உண்ணத்தக்க எதையும் சாப்பிடு கின்றார்கள். அளவுதான் பெரிதாக வேண்டும், உணவின் தரத்தை அவர்கள் கருதுவதில்லை.

## மக்கள் தொகைக் கணிப்பு

நிகோபார் தீவுகளில் மக்கள் தொகை வெகு வேகமாகப் பெருகி வருகின்றது. 1961இல், தீவுகளின் மக்கள் தொகைக் கணிப்பு 14,563. 1951இல், 12,009 பேர்களே இருந்தனர். 21 சதவிகிதம் வளர்ச்சியடைந்துள்ளது. வளர்ச்சி விகிதம்

ஆண்டு ஒன்றுக்கு 2·1 சதவிகிதமாக இருக்கின்றது. 1966இல், தீவுகளின் மொத்த மக்கள் தொகை 16,000 ஆகும் என்று அப்பொழுது எதிர்பார்க்கப்பட்டது. நூற்றுண்டின் திருப்பத் திற்குப் பின்னரே, ஒரே சீராக, நிகோபார் மக்களின் எண்ணிக்கை அதிகரித்து வந்திருக்கின்றது. இது குறிப்பிடத் தக்கதாகும். ஏனென்றுல், பொதுவாகப் பழங்குடி மக்கள் வெளி உலக நாகரிகத் தொடர்புகொள்ளும்போது, அவர்களின் எண்ணிக்கை குறைந்துவிடுவது வழக்கம். ஆனுல் நிகோபார் மக்களைப் பொறுத்தவரையில், குறைவதற்குப் பதிலாக மக்கள் தொகை கூடியிருப்பது உண்மையாகும். அவர்கள் சீராக வாழ்க்கையை அமைத்துக்கொண்டிருப்பதும், திடமுடன் இருப்ப தும் அதற்குக் காரணம் என்று சொல்லலாம். தொடர்பற்ற இடங்களில் அவர்கள் வசிப்பதால், அவர்களின் வெளி உலக உறவுகள் குறைந்திருக்கின்றன. உணவுக்கு வெளி உலகை நம்ப வேண்டிய அவசியமில்லாமல், தீவுகளிலேயே உண்பதற்குப் போதுமான பண்டங்கள் கிடைப்பதாலும், வெளி உலக செல்வாக்கினுல் அவர்கள் பாதிக்கப்படவில்லை. அதே சமயத்தில் திருமணங்களைப் பொறுத்த வரையில் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்கின்றுர்கள். அயலார்களை மணம்புரிவதை விரும்புவதில்லை, அதனுலும் தனித்துநிற்கும் கலாச்சார இனமாகயிருக்கின்றனர்; இவ்வாறு அந்தமான் தீவுகளில் உள்ள ஒரு சில இனமக்கள், தனித்துநிற்காமல், அயலார்களையும் மணந்துகொண்டதால், பூர்வீக இனங்கள் அங்குள்ள மக்களின் கலப்பு இனத்தில் மறைந்துவிட்டன.

சுதந்திரம் அடைந்த பின்னர், வளம் பெருகியதாலும், வைத்திய வசதிகள், மக்கள் நலத் திட்டங்கள் பலவற்றுலும், மக்களின் இறப்பு விகிதம் வெகுவாகக் குறைந்துவிட்டது. அதே சமயத்தில் பிறப்பு விகிதம் முன்போலவே உயர்ந்து நிற்கின்றது.

துரதிர்ஷ்டவசமாக இப்பொழுதுகூடக் குடும்பக் கட்டுப்பாடு முறைக்கு நிகோபார் மக்களிடம் எந்தவிதமான ஆதரவும் இல்லை. அவர்களின் மக்கள் தொகை பயப்படும் அளவுக்கு அதிகரித்து வருகின்றது. இத்தீவுகளில் விவசாயத்திற்குத் தகுதி யான நிலம் ஓர் அளவே இருப்பதால், மக்களின் பெருக்கத்தால் ஏற்பட்ட நெருக்கம், இப்பொழுது கார் நிகோபாரிலும், சோவ்ராவிலும் ஒரளவு உணரப்படுகின்றது. தற்பொழுது அந்தப் பிரச்சினை அவ்வளவு கடுமையானதாகயில்லை. பெருகிவரும்

மக்களைக் காப்பாற்றப் போதுமான நிலமும், வளமும் இருக்கின்றன. ஆனாலும் இப்பொழுதிருந்தே மக்கள் தொகையின் வளர்ச்சியை கட்டுப்படுத்தத் திட்டமிடாவிட்டால், இப்பொழுது போன்றே மக்கள் தொகையும் வளர்ந்துகொண்டு போகுமானால், வருங்காலத்தில் மக்கள் தொகையினால் கடுமையான பிரச்சினை தோன்றக்கூடும்.

## மொழி

நிகோபார் தீவு மக்கள் நிகோபாரீஸ் என்ற தனித்ததொரு மொழியைப் பேசுகின்றனர். நிகோபார் மொழிக்கு மற்ற மொழிகளுடன் உள்ள தொடர்புகளை சில அறிஞர்கள் சுட்டிக்காட்டுகின்றார்கள். குறிப்பாக இந்தியாவில் உள்ள ஆதி குடிகளான காசிகள், முண்டாக்கள் பேசும் மொழிகளுடன் சில அம்சங்கள் பொருந்தியுள்ளதாகக் கூறுகின்றார்கள். இது குறித்து முடிவாக எதுவும் கூறமுடியாவிட்டாலும், நிகோபார் மொழி மற்றெந்த மொழிகளுடனும் தொடர்பற்ற, தனித்ததொரு மொழி என்று உறுதியாகக் கூறமுடியும். உண்மையில் இம்மொழி மற்ற வெளித் தொடர்புகளின் உதவியற்று வளர்ச்சி பெற்றுள்ளது. இம்மொழி போதுமான, பரவலான சொற்றொடர்களைக்கொண்டு, மக்கள் தங்கள் வாழ்க்கையில் எந்தக் கருத்துக்களையும், எந்தப் பொருளையும் விவரிக்கத்தக்க வகையில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

நிகோபார் மொழியில் ஆறு வகையான பேச்சு வகைகள் இருக்கின்றன. அவைகள் ஒன்றுக்கொன்று தொடர்புடையன என்றாலும், சில சிறப்பான வேறுபாடுகள் இருக்கின்றன. இந்தப் பேச்சு வகையில், கார் நிகோபார் மக்கள் பேசும் மொழியே, மிக முன்னேற்றமடைந்ததும், முக்கியமானது என்றும் சந்தேகமறச் சொல்லலாம். உண்மையில் நிகோபார் மொழி என்று நாம் சொல்லும்பொழுது, அது கார் நிகோபார் மக்கள் பேசும் மொழியே யாகும்.

கடந்த பல நூற்றுண்டுகாலமாக, கார் நிகோபார் மொழிக்கோ அல்லது மற்ற பேச்சு வகையான அம்மொழிகளுக்கோ வரிவடிவம் எதுவும் இருக்கவில்லை. ஆனால், நிகோபார் தீவுகளில் ஏஜென்டாகவும், சமயத்தொண்டராகவும் வாழ்ந்து வந்த மிஸ்டர் ஜார்ஜ் வைட்ஹெட் என்பவர், ரிச்சர்டுசன் பாதிரியார் உதவிகொண்டு 1912இல் ஒரு வரிவடிவம் கண்டார். அது

அடிப்படையில் ரோமன் எழுத்து வடிவமாகும். ஆனாலும் கார் நிகோபார் மொழியில் உள்ள புதுமையான சில ஒலிகளை அப்படியே குறிப்பிட சில கூட்டு மெய்யெழுத்துக்களையும், அதிகப்படியான உயிரெழுத்துக்களையும் அவர் உண்டாக்கினார். இம்மொழியில் இப்பொழுது கீழ்க்கண்ட நெடுங்கணக்கு இருக்கின்றது.

**உயிரெழுத்துக்கள்**

a, ā; e, ē, ė, ê; i, ī; o, ō; ō; ō̆, ö; öö, u, u̇, eu, ēu, eui, eūi.

**மெய்யெழுத்துக்கள்**

ç ch, f, h, j, k, l, m, n, n, ng, ny, p, r, ṙ, s, t, v, y.

நிகோபார் மொழியில் உயிரெழுத்துக்கள் மிகவும் பரவலாகவும், மெய்யெழுத்துக்கள் எண்ணிக்கையில் குறைந்தும் காணப்படுவதை இதிலிருந்து தெரியமுடியும். இம்மொழியில் இரண்டு r கள் இருப்பினும், b, d, g அல்லது z என்ற எழுத்துக்கள் இல்லை. நிகோபார் மொழியில் உள்ள ஒலிகள், குறிப்பாக ng, ny, eu, eui என்பவை உச்சரிப்பதற்கு கடினமானவை. அயலார்கள் அவைகளைச் சரியாக உச்சரிப்பதில் அல்லல்படுகின்றனர். எனினும் இம்மொழியில் அநேக ஒலிச்சொற்கள், குறிப்பாக ng, ny என்ற மெய்யெழுத்துக்களுடன் துவங்குவது வஞ்சப்புகழ்ச்சி யென்றே கூறவேண்டும்.

இம்மொழிக்கு ஒருவகையான இலக்கணம் இருக்கின்றது. ஆனால் ஒழுங்குபடுத்தப்படவில்லை. உறுதியான அடிப்படையைக் கொண்டிருக்கவில்லை. அதனால் அம்மொழியைப் படிக்க விரும்பும் ஒருவர், அம்மொழியின் அடிப்படையைக் கற்று மொழியை விரைவில் தெரிந்துகொள்ள முடிவதில்லை.

ஒரு பொருள் பிறசொற்கள் பல இருக்கின்றன. ஆனால் வெவ்வேறு இடங்களில் பயன்படுத்துகையில் ஒன்று மாத்திரமே சரியானதாகயிருக்கும். உதாரணமாக, நிகோபார் மொழியில் 'நீ' என்பதற்கு மே, மேன், ஓம் என்ற வார்த்தைகள் உள்ளன. வெவ்வேறு வாக்கியங்களில் பயன்படுத்தப்படும்பொழுது இதில் ஒரு சொல்தான் சரியானதாகக் கருதப்படும். அதற்கான காரணங்களும் தெளிவாக இல்லை.

வினைச்சொல்லுக்கு மாறுபாடான காலங்கள் உண்டு. வழக்கமாக இறந்தகாலத்தைக் குறிப்பிடும்போது துவக்கத்தில் 'Ngaich' என்ற சொற்றொடரைச் சேர்க்கவேண்டும். அதற்குத்

தனிப்பட்ட அர்த்தம் 'முடிவு' என்றாகும். எதிர்காலத்தைக் குறிப்பிடும்போது வாசகத்தின் முடிவில் 'Min' என்ற சொற்றொடரைச் சேர்க்கவேண்டும். இங்கும் சில விதிவிலக்குகள் உண்டு. சில சமயங்களில் 'Ngaich', 'Min' என்ற சொற்றொடர்களைச் சேர்க்காமலே இறந்தகாலம், எதிர்காலங்களைக் குறிப்பிடுகிறார்கள். நிகழ்காலத்தையும், தொடர்காலத்தையும் பாகுபடுத்தும் சொற்றொடர்களும் இல்லை. அதுபோன்றே இறந்தகால எச்சவினைக்கும் சொற்கள் இல்லை.

வினாச்சொற்களும் இருக்கின்றன. எப்படி, என்ன, எங்கே, யார், எவ்வளவு, ஏன் முதலான வார்த்தைகளுக்கு நேரிடையான பதங்கள் நிகோபார் மொழியில் இருக்கின்றன. இருந்தாலும் குறிப்பிட்ட விதிமுறை என்று இல்லை. 'என்ன' என்பதற்கு நிகோபார் மொழியில் 'அஸ்ஸா'. 'உனக்கு என்னவேண்டும்?' 'நீ என்ன செய்கிறாய்?' என்ற இரு வாக்கியங்களும் 'அஸ்ஸா ஆப் லோன் மே', 'அஸ்ஸா ஆப் லேன் மே' என்று 'அஸ்ஸா' பயன்படுகின்றன. ஆனால் ஒருவரின் பெயரைக் கேட்கும்போது 'உன் பெயர் என்ன?' என்ற வாசகம் நிகோபார் மொழியில், 'அச்சிப் ஆப் மைன் எனி மே' என்றாகின்றது. இங்கு 'யார்' என்று பொருள்படும் 'அச்சிப்' என்ற வார்த்தையை 'என்ன' என்ற 'அஸ்ஸா' பதத்திற்குப் பதிலாகப் பயன்படுத்துகின்றார்கள்.

ஒரு குறிப்பிட்ட பொருளை விளக்கப் பல சொற்றொடர்களைப் பயன்படுத்துகின்றார்கள். 'இங்கே வா' என்பதற்கு, 'தா இஹி', 'ஐ மானு' என்று சொல்லுகின்றார்கள். அதே சமயத்தில் பல பொருள்களுக்குத் தனித்த பதங்களே இல்லை. ஒரே பதமே அல்லது சொற்றொடரே பயன்படுத்தப்படுகின்றது. உதாரணமாக, 'பணம்' என்றால், நிலம், கிராமம், தீவு, நாடு; 'மாக்' என்ற சொல், தண்ணீர், கிணறு, ஓடை; 'க்ஷான்' என்ற பதம், புல், மரம், கட்டை, தடி ஆகியவற்றைக் குறிக்கும்.

அசைச்சொற்கள் ஏராளமாகயிருக்கின்றன. ஆனால் அவைகளைப் பொருள்படுத்திக் கூறுவது கடினமாகும்.

மனிதர்களையும், மிருகங்களையும் குறிப்பிடுகையில் பால் வேறுபடுத்த சில சொற்கள் இருக்கின்றன. பொதுவாக மக்களில் ஆண்களை 'கிகோன்யோ' என்றும், பெண்களை 'கிகானு' என்றும் குறிப்பிடுகின்றார்கள். மிருகங்களில் 'கோன்' என்பது ஆண்களையும், 'கான்' என்பது பெண்களையும் குறிக்கும். இருப்பினும் பெயர்ச்சுட்டுக்கள், அதாவது அவன், அவள், அவனுடைய,

அவளுடைய என்ற சொற்களில் வேறுபாடு இல்லை. அவன், அவள் இரண்டும் 'அன்.' 'அவனுடைய,' 'அவளுடைய' என்பதற்கு வெறும் 'ஓ'.

வினைச்சொல் பெயர்ச்சுட்டுடன் மாறுபடுகின்றது. அது போன்றே வினைச்சொற்றொடருடன் மாற்றம் பெறுகின்றது.

மக்களின் வாழ்க்கை சம்பந்தப்பட்ட விஷயங்களைக் குறிப்பிட இம்மொழியில் சொற்கள் செறிந்திருக்கின்றன. உதாரணமாக, தென்னை வளர்ச்சியின் பல்வேறு கட்டங்கள், அதன் நிலைமை ஆகியவைகளைக் குறிப்பிட ஏழு வகையான சொற்கள் உள்ளன. மறுபுறத்தில், அவர்கள் எளியதான வாழ்வை மேற்கொண்டிருப்பதால் பொருளாதாரப் பதங்கள், ஒழுக்க முறைக் கருத்துக்கள் முதலான அகவியற் பொருள்களைத் தெரிவிக்கக் குறைந்தளவு வார்த்தைகளே இம்மொழியில் இருக்கின்றன.

இம்மொழி வினைச்சொற்களை மூலமாகக்கொண்டு பெயர்ச் சொற்களை உருவாக்கும் வன்மை மிகுந்து விளங்குகின்றது. படி என்ற பொருள்கொண்ட 'ஹகோப்' என்ற பதத்திலிருந்து 'மஹாகோபதி'—ஆசிரியர், 'மஹாகோபதின்'—மாணவன் என்ற சொற்கள் அமைந்திருக்கின்றன.

அதுபோன்றே, எழுது என்ற பொருள்கொண்ட 'குயிச்' என்ற சொல்லிலிருந்து 'கா-னுயிச்'—பேனு அல்லது பென்சில், 'கி னுயிச்ன்ஜே'—எழுத்து உருவாகியுள்ளன.

வாசகங்கள் சில சமயம் மிக எளிமையாகயிருக்கும். மற்ற மொழிகளில் 8 அல்லது 10 சொற்களைக்கொண்டு சொல்லப்படும் பொருளை, நிகோபார் மொழியில் 2 அல்லது 3 சொற்களைக் கொண்டு சொல்லிவிடலாம். மற்ற மொழிகளில் ஒன்று அல்லது இரண்டு சொற்களைக்கொண்ட எளிய வாக்கியங்கள் பொதுவாக விதிவிலக்காகயிருக்கலாம். அவை சரியில்லாமலும், சரியான சொற்றொடரல்லாமலும் இருக்கலாம். ஆனல் இம்மொழியில் அது சாதாரணமானது. அதை விரிவுபடுத்திக்கூற முழு வாசகமும் கிடையாது.

வாக்கியங்களின் அமைப்பும் ஆங்கிலத்திலிருந்தும், இந்தியிலிருந்தும் மாறுபடுகின்றது. வழக்கமாக வினைச்சொல் முதலிலும், இறுதியில் பெயர்ச் சுட்டும்வரும். 'நான் மருத்துவ மனைக்குப் போகின்றேன்' என்பது நிகோபார் மொழியில் 'ச்சூ அஸ்பு-ச்சின்' எனப்படுகின்றது. அதாவது 'போகின்றேன்—மருத்துவ மனை—நான்.' 'போகின்றேன்' என்ற பொருள்தரும் 'ச்சூ' என்ற

வினைச்சொல் முதலில் இடம்பெறுகின்றது. வாக்கியங்கள் அமைப்பின், இந்தப் பொதுவிதிக்கு சில விலக்குகளும் இருக்கின்றன. உதாரணமாக, 'தொப்பி பையினுள் இருக்கின்றது' என்ற வாசகம் நிகோபார் மொழியில் 'எல் இன்யுல் அன் ங்காம் சாபியோவ்' எனப்படும். அப்படியே மொழிபெயர்த்தால், 'பையினுள் இருக்கின்றது தொப்பி' என்றாகின்றது. இந்த வாக்கியத்தில் வினைச்சொல்லான 'இருக்கின்றது' என்பது முதலில் வரவில்லை. மாறாக பெயர்முன் இடைச்சொல்லான 'உள்' எனப்படும் 'இல்' என்ற சொல் வாக்கியத்தின் முதலில் இடம்பெறுகின்றது.

நிகோபார் மொழிப்பேச்சு தெளிவில்லாமல், சில சமயம் புரிந்து கொள்ள முடியாததாக இருக்கின்றது. ஒலியழுத்தம், தொனி, சொல்லழுத்தம் ஆகியவை அந்தந்த இடங்களில் இருக்க வேண்டியது மிக அவசியம். அநேகமான நீண்ட உரைகள் இசை வாசிப்பதுபோன்ற ஒரே தொனியில் இருந்தாலும், சீரான இடைவெளிகளில் அழுத்தம் தொனிக்கவே செய்யும். பேசும்பொழுது சைகைகளும் இடம்பெறுகின்றன. சில சமயங்களில் பேச்சுக்களை விட சைகைகளே மிகுதியாகயிருக்கும். உதாரணமாக, 'ஆம்' என்று நிகோபார் மொழியில் 'ஹோான்' என்று சொல்லும்போது தலையை மேலும் கீழுமாக ஆட்டுகின்றனர். 'இல்லை' எனும்போது 'ஹா ஹா' என்று சொல்லி தலையை இப்படியும் அப்படியும் ஆட்டுகின்றனர்.

இந்தியாவுடன் தொடர்பு அதிகரித்த பின்னர் நிகோபார் மொழி வெகுவேகமாக முன்னேறிவருகின்றது. மக்களின் வாழ்க்கை முறையும், அவர்களின் பொருளாதாரமும் சிக்கலாகி வரும் இந்த நிலையில், அவைகளைக் குறிக்கப் புதிய சொற்கள் உருவாக்கப்பட்டுவருகின்றன. மற்ற மொழிகளிலிருந்து அநேக சொற்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இந்த முறையில் இந்தியிலிருந்து நிறையச் சொற்கள் இடம்பெற்றுள்ளன. அதற்கு அடுத்தாற் போன்று ஆங்கில சொற்கள் வழங்கப்பெறுகின்றன. மற்ற மொழிகளிலிருந்து பெயர்ப்புகள் காரணமாகவும் மொழி வளம் பெற்றிருக்கின்றது. இதுவரை மொழிபெயர்ப்புகள் அனைத்தும் மதம் காரணமாகவே நேர்ந்திருக்கின்றன. பழைய விவிலிய நூலின் 12 பகுதிகள் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. மேலும் 28 பகுதிகள் மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன. ரிச்சர்டுசன் பாதிரியார் மொழிபெயர்த்துவருகின்றார். புது விவிலிய நூலின்

29 பகுதிகளின் மொழிபெயர்ப்பு 1930ஆம் ஆண்டிலேயே முடிக்கப் பட்டுப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. துதிப்பாடல்களைக் கொண்ட இறைவணக்கப் புத்தகம் ஒன்று நிகோபார் மொழியில் பெயர்க்கப்பட்டு வெகுகாலமாக இருந்துவருகின்றது. கல்வி பரவப் பரவக் கல்விகற்ற நிகோபார் மக்கள் மற்ற மொழிகளில் உள்ள சிறப்பான நூல்களை மொழிபெயர்ப்பார்கள்; அதனால் நிகோபார் மொழி வளம்பெறும் என்று எதிர்பார்க்கப்படு கின்றது.

நிகோபார் பகுதியில் வழங்கும் மற்ற பேச்சு வகைகளை கார் நிகோபார் மக்கள் தெரிந்திருந்தாலும், கார் நிகோபார் மொழியே தீவுகளின் பெரும்பாலான பகுதியின் பொது மொழியாகக் கொள்ளப்படுகின்றது. நான்கோவ்ரி, கட்சால், கமோர்டா, டெரசா, சோவ்ரா ஆகிய தீவுகளின் மக்களுக்கு கார் நிகோபார் மொழி தெரியும். கார் நிகோபாரிலிருந்து வரும் மக்களுடன் அந்த மொழியிலேயே பேசுகின்றனர். தெற்குப் பகுதித் தீவுகளின்—புலோமிலோ, லிட்டில் நிகோபார், கொண்டுல், கிரேட் நிகோபார்—மக்களுக்கு மாத்திரமே கார் நிகோபார் மொழி தெரியாது. அவர்களுக்கு கார் நிகோபா ருடன் அதிகத் தொடர்பு கிடையாது. அதனால், எப்பொழுதா வது, கார் நிகோபார் மக்கள் இந்த நான்கு தீவுகளைச் சேர்ந்த மக்களுடன் தொடர்புகொள்ளும்பொழுது பேசிக்கொள்ள மிகவும் கஷ்டப்படுகின்றார்கள். அப்போது இரு சாராரும், தங்களுக்குத் தெரிந்த அரைகுறையான இந்தி மொழியில் தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளுகின்றார்கள்.

நிகோபார் மக்கள் வெகு விரைவில் மற்ற மொழிகளைக் கற்றுக் கொள்ளுகின்றார்கள். நிகோபார் தீவுகளில் அநேக ஆண்டு கால மாக இருந்துவரும் இந்தியை இப்பொழுது குறிப்பாக ஆண்கள் புரிந்துகொள்ளுகின்றார்கள். வெளியாருடன் பேசும்போது, வழக்கமாக இந்தியே பயன்படுகின்றது. தீவுகளில் உள்ள முக்கி யப் பிரமுகர்கள் அனைவருக்கும் இந்தி ஓரளவு தெரியும். ஆனால் அவ்வளவாகப் பேசத் தெரியாது. சில பள்ளிச் சிறுவர்களுக்கு இந்தி நன்கு தெரியும். அவர்கள், இந்தியாவில் இந்தி பேசும் மக்கள் அன்றாட வாழ்வில் பயன்படுத்தாத, புத்தகத்தில் காணப் படும் சொற்களைப் பேசுகின்றார்கள்.

கல்வி நலம்பெற்ற ஒரு சிலருக்கே ஆங்கிலம் தெரியும். அவர் களுக்கு வெகு நன்றாகப் பேசத்தெரியும். முன்பெல்லாம் இந்தியா

வில், ஒரு சிறிது கல்வி கற்றவர்கள் இடையிடையே தங்கள் பேச்சுக்களில் ஆங்கில வார்த்தைகளைக் கலந்து பேசிப் பெருமைப் பட்டுக்கொண்டதுபோல், இங்கும் சிறிது கல்வி கற்றவர்கள், தங்கள் கல்வியறிவைப் பெரிதாகக் காட்ட ஒரிரு ஆங்கில வார்த்தைகளைப் பயன்படுத்துவது வழக்கமாக இருந்துவருகின்றது. அதே சமயத்தில் அவர்கள் பேசும் ஒரிரு ஆங்கில வார்த்தைகளும் சரியானதாகயில்லை. நண்பகல் வெயில் நேரத்தில் 'குட் நைட்' என்று இரவு வணக்கச்சொல் சொல்லுவது சாதாரணமாகக் காணப்படும்.

இந்தியையும், ஆங்கிலத்தையும் கற்ற மக்கள் அம்மொழிகளின் சொற்களை நன்கு உச்சரிக்கின்ருர்கள். இருந்தாலும் ஒலி பரவலாக இருக்கின்றது. 'ஷ்' என்று உச்சரிப்பது கடினமாக இருக்கின்றது.

நிகோபார் மக்களுக்கு மற்ற மொழிகளைக் கற்பது சுலபமாக இருந்தாலும், அவர்களின் சொந்த மொழியை மிகப் பெருமையுடன் கருதுகின்ருர்கள். வெளியார்கள், நிகோபார் மொழியில் பேசுவதைக் கண்டால் மிகுந்த மகிழ்ச்சியடைகின்ருர்கள். அயலார்கள், அவர்களின் கடினமான மொழியைக் கற்றுத்தேற முடியாவிட்டாலும், சில முக்கியமான சொற்களையும், வாக்கியங்களையும் தெரிந்துகொண்டு பேசினுல், அது அவர்களின் நெஞ்சைத் தொடுகின்றது. அவர்கள் நெருங்கி வருகின்ருர்கள். உண்மையில் இத்தீவில் பணிபுரிய விரும்பும் எவரும், எல்லாவற்றிற்கும் மேலாக மக்களின் நம்பிக்கையைப் பெறவிரும்பும் எவரும் நிகோபார் மக்களின் மொழியைக் கற்றுக்கொள்வது நலம் என்றே யோசனை கூறப்படுகின்றது.

அத்தியாயம் 6

# சமூகம்

## பொது இயல்பும், கூட்டுக் குடும்பமும்

சிறப்பான ஒற்றுமை உணர்வு, சகோதரத்துவம், ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் என்ற எண்ணம், அதாவது தனிப்பட்டவர்களின் கருத்துக்களும், நலன்களும் சமுதாயச் சிறப்புக்கு உட்பட்டவை என்ற கருத்து ஆகிய இயல்புகளைக்கொண்டது நிகோபாார் மக்கள் சமுதாயம். சமூகத் தலைமை மரபு, சமத்துவ உரிமை என்ற இரு மாறுபட்ட அம்சங்களைத் தெளிவாகக் கொண்டது அது. கிராமத் தலைமகன், குடும்பத் தலைவன், மற்றும் முதியவர்களின் ஆணைக்குக் கட்டுப்பட்டு மக்கள் பணி புரிகின்றனர்கள். கிராமத்தைப் பொறுத்த முக்கியமான செயல்கள் அனைத்தையும் இந்த ஒரு சிலரே முடிவு செய்கின்றனர்கள். அதே சமயத்தில் கிராமத்தில் உள்ள எல்லோருடைய உரிமையும் பாதுகாக்கப்படுகின்றது. மற்றவர்களின் உரிமைகளுக்குப் பாதகமாக யாரும் விசேஷ சலுகைகள் கொண்டாடுவது என்ற கேள்விக்கு இடமில்லை. உண்மையில் நிகோபார் மக்களின் சமூகம் முழுமையும் ஒரு பெரிய குடும்பம் போன்றது. ஒரு குறிப்பிட்ட குடும்பத்தில் அதில் உள்ளவர்கள் அனைவரும் எவ்வாறு ஒருவர்மீது ஒருவர் பற்றும், பாசமும்கொண்டிருக்கின்றனர்களோ, அதுபோன்றே தனிப்பட்ட ஒவ்வொருவரும் மற்றவர்மீது ஒத்த உணர்வுகொண்டு ஒற்றுமைப்பட்டிருக்கின்றனர்.

மக்கள் அனைவரும் சமூக அளவில் தங்குதடையின்றி கலந்து பழகுகின்றனர்கள். இந்தியாவில் சில இடங்களில் காணப்படும் சமூகக் கட்டுப்பாடு இங்குக் காணப்படவில்லை. நிகோபார் மக்களின் வாழ்வு முறைக்கு அது விரோதமானது.

நிகோபார் மக்களிடையே ஒரு கூட்டுக் குடும்ப முறை முனைப்பாக இருந்துவருகின்றது. சமூக வாழ்வு அனைத்திலும் ஒரு குடும்பமே ஓர் அங்கம். நிகோபார் மக்களின் குடும்ப அமைப்பு இந்திய சமூகங்களில் இருப்பதைக்காட்டிலும் மிகவும் மாறுபட்டது. மனைவி, மக்கள், சகோதரர்கள், சகோதரிகள்

ஆகியோர்களுடன் இடையுறவினர், ஒன்றுவிட்ட உறவினர் முதலான அநேக தூரத்து உறவினர்கள்கூட குடும்பத்தில் அங்கம் பெற்றுள்ளனர். சில சமயங்களில் ஒரு குடும்பத்தில் நூறுபேர்கள் கூட இருப்பார்கள்.

கூட்டுக் குடும்பத்தைக் குடும்பத் தலைவர் கட்டுப்படுத்தி நடத்தி வருகின்றார். குடும்பத்தின் மற்ற உறுப்பினர்கள் அவர் ஆணைப் படி நடந்துகொள்கிறார்கள். வழக்கமாகக் குடும்பத் தலைவர், முன்பு தலைவராகயிருந்தவரின் மகனாகவே இருப்பார். இருந்தா லும் அதுவே கட்டாயம் என்பதுமில்லை. வயது, தலைமைக்கான தகுதி, அறிவுத் திறன், எல்லாவற்றிற்கும் மேலாகக் கட்டுப் படுத்தித் தலைமை வகித்து நடத்தும் திறமை ஆகியவற்றைக் கொண்டே குடும்பத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகின்றார். அவர் சாகும் தறுவாயில் இருக்கும்பொழுது, இத்தகுதிகளைக்கொண்ட ஒருவரைத் தேர்ந்தெடுத்து, அவரைத் தனக்கு வாரிசாக நியமிக் கின்றார். குடும்பத்தைச் சார்ந்த மற்ற உறுப்பினர்கள் அவரையோ, அவளையோ எந்தவித எதிர்ப்புமின்றி தங்கள் குடும்பத் தலைவராக ஏற்றுக்கொள்கின்றார்கள். பின்னர் நடை முறையில் புதிய குடும்பத் தலைவர் திறமைக் குறைவாகவோ, நடத்தைகெட்டோ நடந்துகொண்டதாக இருந்தால், சில காலத் துக்கு அப்புறம் குடும்ப உறுப்பினர்கள், கிராமத்தின் மற்ற முதிய வர்களின் உதவிகொண்டு அவர்களிலேயே ஒருவரை குடும்பத் தலைவராகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகின்றார்கள்.

குடும்ப உறுப்பினர்கள் அனைவரின் நலனுக்கும், பாதுகாப்புக் கும் குடும்பத் தலைவரே பொறுப்பானவர். எவ்வாறு உணவு சேக ரிப்பது, தினசரிக் கடமைகளை எவ்வாறு நிறைவேற்றுவது, பணி களை எப்படிப் பகுத்துத்தருவது ஆகியவைகளைத் தீர்மானிப்பது குடும்பத் தலைவரின் பணியாகும். குடும்பத்து உறுப்பினர்களின் விளைச்சல், வருமானம் அனைத்தும் முதலில் குடும்பத் தலைவரிடம் கொண்டுவரப்படுகின்றது. உறுப்பினர்களின் தேவைகளுக்குத் தகுந்த முறையில், அவைகளைத் தலைவர் பிரித்துக் கொடுத்துவிடு கின்றார். குடும்பம் மிகவும் பெரியதாகப் போய்விட்டால், குடும்பத்தில் உள்ள ஒவ்வொரு உறுப்பினரின் நலனையும் அன்றா டத் தேவைகளையும் கவனித்துக்கொள்வது என்பது முடியாத காரியம் என்பது தெளிவு. அப்பொழுது அவர் சில உதவித் தலைவர்களை நியமிக்கின்றார். அன்றாட வாழ்வின் பல அம்சங்களை

இந்த உதவித் தலைவர்கள் கவனித்துக்கொள்வார்கள்; குடும்பத் தலைவர் எல்லாவற்றையும் மேற்பார்த்து நிர்வகித்து வருவார்.

ஏற்கெனவே குறிப்பிட்டபடி குடும்பத் தலைவரும், உதவிக் குடும்பத் தலைவரும் குடும்பத்தின் மற்ற உறுப்பினர்களுடன் 'டூஹட்' என்ற பல வீடுகளைக்கொண்ட பகுதியில் வாழ்ந்து வருகின்றனர். இந்தப் பகுதியில் சமைப்பது என்பது வழக்கமாகப் பொதுவானது. குடும்பத்தைச் சேர்ந்த எல்லா உறுப்பினர்களும் நாலைந்து வீடுகளில் தங்கியிருந்தாலும், எல்லோருக்குமாக ஒரே ஒரு சமையலறை இருப்பது சாதாரணமானது.

சமூகத்தில் ஒழுக்கமும், இணக்கமும் பேணுவது கூட்டுக் குடும்பத்தின் பொறுப்பாக இருந்துவருகின்றது. ஒவ்வொருவருடைய தேவையைப் பார்த்துக்கொள்ளவும் உதவுகின்றது. உடல் ஊனமுற்றவர்கள், ஏலாநிலையிலுள்ளவர்களையும் பேணிக் காக்கின்றது. சூழ்நிலை எவ்வாறு இருந்தபோதிலும், அவனின் அன்றாடத் தேவைகளைக் கூட்டுக் குடும்பம் கவனித்துக்கொள்ளும் என்ற உறுதியான நம்பிக்கை ஒவ்வொரு நிகோபார்வாசியிடமும் இருக்கின்றது. அதற்கு மறுபக்கத்தில் கூட்டுக் குடும்ப முறை, தனிப்பட்டவரின் ஊக்கத்திற்குத் தடங்கலாயிருக்கின்றது என்பதும் சந்தேகமில்லை. தானே முன்னேறவேண்டும், தன்னை உயர்த்திக்கொள்ளவேண்டும் என்ற ஆர்வம் குறைந்து, பின்னுக்குத் தள்ளப்படுகின்றது. அதனுல் வருங்கால வாழ்வுக்கும் முன்னேற்றத்துக்கும் கூறப்படும் புதிய கருத்துக்களைச் சாதாரணமான நிகோபார்வாசி அவ்வளவாக ஏற்பதில்லை.

பெண்களுக்கு ஆண்களைப்போலவே சம உரிமையும், அந்தஸ்தும் இருக்கின்றன. அவர்கள் தடங்கலின்றி எங்கும் செல்கின்றுர்கள். எந்தக் கட்டுப்பாடும் அவர்களுக்கு இல்லை. கிராமத்து முக்கிய விவகாரங்களில் நிர்வகிப்பதிலோ அல்லது செயல்படுவதிலோ ஒரு முனைப்பான பங்கு ஏற்பதில்லை. அதனுல் ஒரு சிலரே குடும்பத் தலைவராகின்றனர். பொதுவாக அவர்கள் கிராமத் தலைவரின் அல்லது குடும்பத் தலைவரின் பொறுப்பை ஏற்பதிலிருந்து விலகி நிற்கின்றுர்கள். ஆனுல் சில சமயங்களில் மற்ற ஆண்களைவிட நல்ல நிர்வாகத் திறனும், நல்ல தலைமைத் தகுதியும் ஒரு பெண் கொண்டிருந்தால், அவரைக் குடும்பத் தலைவராகத் தேர்ந்தெடுத்து அவருக்கு உரிய மரியாதையைச் செலுத்துகின்றனர்.

குடும்பத்தில் முதியவர்களுக்கும், மூத்தவர்களுக்கும் எப்போதும் உரிய மரியாதை தரப்படுகின்றது. அவர்களின் ஆணையை இளையவர்கள் ஏற்று நடப்பது பழக்கமாகிவிட்டது. ஒழுக்கத்தை நிலைநாட்டுவதற்காக முதியவர்கள் இளையவர்களிடம் மரியாதை வேண்டி நிற்கவேண்டிய அவசியமேற்படுவதில்லை.

குழந்தைகளை மக்கள் விரும்புகின்றார்கள். முன்பெல்லாம் குழந்தைகளைத் தத்தெடுப்பது வழக்கமாகயிருந்தது. சில சமயங்களில் தத்தெடுப்பதற்காக, மற்ற தீவுகளுக்குச் சென்று குழந்தைகளை எடுத்து வந்துகொண்டிருந்தனர். இப்பொழுது இந்த வழக்கம் கைவிடப்பட்டுவிட்டது. பெற்றோர்களும் இல்லாத, மற்ற நெருங்கிய உறவினர்களும் இல்லாத குழந்தை இருந்தால், கூட்டுக் குடும்பமோ அல்லது சமூகத்தில் உள்ள மற்றவர்களோ அதை மகிழ்ச்சியுடன் பேணிக் காக்கின்றனர். அதன் தேவைகள் கவனிக்கப்படுகின்றன.

## கிராமத் தலைமகன்

கிராமத்தில் உள்ள பல்வேறு குடும்பங்களின் தலைவர்கள் ஒன்று சேர்ந்து, அவர்களிலேயே ஒருவரை கிராமத் தலைமகனைத் தேர்ந்தெடுக்கின்றார்கள். அநேகமாக முன்பு தலைமகனாக இருந்தவரின் மகனே தேர்ந்தெடுக்கப்படுகின்றார். ஆனால் கட்டாயமான விதிமுறை எதுவும் இல்லை. குடும்பத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதுபோல், கிராமத் தலைமகனைத் தேர்வு செய்யும் அடிப்படையும் இருக்கின்றது. தனிப்பட்ட ஒருவரின் தகுதி, சிறந்த அறிவுத் திறன், தலைமைதாங்கும் தகுதி, ஆணைத் திறன், கட்டுப்படுத்தும் சக்தி, மற்றவர்களின் நம்பிக்கையைப் பெறும் திறமை ஆகியவைகளே தேர்வுக்குரிய சிறப்பு அம்சங்களாகும்.

கிராமத் தலைமகன் வல்லமை மிகுந்தவர். கிராமத்து விவகாரங்கள் அனைத்தையும் அவரே கையாளுகிறார். பல்வேறு குடும்பத் தலைவர்களுக்கு அவர் உத்தரவிடுகின்றார். அவைகளின்படி குடும்பத் தலைவர்கள், தங்கள் குடும்பங்களின் உறுப்பினர்களைக் கொண்டு, கிராமத் தலைமகன் இட்ட பணிகளை நிறைவேற்றுகின்றனர்.

தீவில் உள்ள மற்ற கிராமங்களின் தலைமகன்களுடன் தொடர்பு கொண்டிருக்கவேண்டியதும் கிராமத் தலைமகனுடைய கடமையாகும். கிராமத்தைப் பாதிக்கும் விவகாரங்களையும், கிராமத்தின் தேவைகளையும், இன்னல்களையும் அரசாங்க அதிகாரிகளிடம்

எடுத்துக்கூறிப் பரிகாரம் தேடவேண்டியதும் அவருடைய கடமையாகும். அதே சமயத்தில் ஏதாவது பணி கிராமத்தில் நடைபெற வேண்டுமென்ருல் அரசாங்க அதிகாரிகளும் சரி, மற்ற எவராயிருந்தாலும் சரி, அவர்கள் முதலில் கிராமத்துத் தலை மகனையே அணுகவேண்டும். கிராமத்தில் உள்ள மற்றவர்களை அணுகினுல் அது பலனளிக்காது. கிராமத்துத் தலைமகனைத் தவிர்த்து மற்றவர்கள்மூலம் அயலார்கள் ஆணையிட்டால் எப் போதும் அவர்கள் ஏற்கமாட்டார்கள். உண்மையில் நிகோபார் கிராம சமுதாயத்தின் விளுேதமான அமைப்பில், கிராமத் தலை மகன் எல்லா நிர்வாக, செயலாக்க நடவடிக்கைகளிலும் மைய மாகத் திகழ்கின்ருர். அதனுல் கிராமத் தலைமகனைப் பொறுத்தே கிராமத்தின் முன்னேற்றமும், வளர்ச்சியும் அமைந்திருக்கின்றது. அவர் புதுமைக் கருத்துக்களை விரைவில் ஏற்பவராகவும், முன்னேற்றவாதியாகவும் இருந்தால், கிராமம் எல்லாப் பக்கங் களிலும் விரைவில் வளர்ச்சி பெறுகின்றது. ஆனுல் முன்னேற்ற ஆர்வம் குன்றியவராக, மிதமான போக்குடையவராகயிருந் தால், கிராமம் அனைத்துமே பின்தங்கிவிடுகின்றது.

கிராமத் தலைமகன்களுக்குப் பரவலான அதிகாரங்கள் இருந்தா லும், எல்லாக் கடமைகளையும், ஒரு பொறுப்புணர்ச்சியுடனேயே நிறைவேற்றுகின்றனர். அவர்கள் தங்கள் அதிகாரங்களைத் தவருகப் பயன்படுத்துவதில்லை. பொதுவாக கிராமம் அனைத்தின் நன்மைக்கே தங்களை மனப்பூர்வமாக ஈடுபடுத்திக்கொண்டுள்ள னர். பணம்படைத்த ஒருவர்தான் கிராமத்துத் தலைமகனுக இருக்கவேண்டும் என்பதும் அவசியமில்லை. உண்மையில் அவர்கள், கிராமங்களிலுள்ள மற்றவர்களைக்காட்டிலும் ஏழை களாகவும் இருக்கின்றனர்.

கிராமத் தலைமகனுக்குச் சிறப்பான சலுகைகள் எதுவுமில்லை. அதுபோன்றே தன்னுடைய சொந்த விஷயங்களில் அவருக்கு மேலான உரிமைகளும் கிடையாது. உணவு, உடை, குடிவகை ஆகியவற்றைப்பொருத்தும், குடும்பத்தில் உள்ள மற்ற உறுப் பினர்களைப்போன்றே அவர் நடத்தப்படுகின்ருர். சலுகைகள் எதுவும் தரப்படுவதில்லை. கிராமத்து மக்கள் அனைவரும் அவ ருக்குக் கீழ்ப்படிதலும், அவருக்குக் கிடைக்கும் மரியாதையுமே, அவர் மேற்கொள்ளும் அதிகப்படியான பொறுப்புக்களுக்கு ஈடாகயிருக்கின்றன. சமுதாய அந்தஸ்தில் உயர்வுபெற்றவ ராகின்ருர்.

ஆகையினால் கிராமத்துத் தலைமகனும், குடும்பத்துத் தலைவர்களும் நிலப்பிரபுக்கள்போல் நடக்கும் நிலப்பிரபுத்துவ முறையை நிகோபார் மக்கள் கொண்டிருக்கிறார்கள் என்று கூறுவதும் முற்றிலும் தவறாகும். கிராமத் தலைமகனை ஒரு நிலப்பிரபுவுடன் ஒப்பிட்டுப் பேச முடியாது. ஏனென்றால் எந்தவகையிலும், யாரையும் அவர் சுரண்டுவதில்லை. நிலப்பிரபுத்துவ முறைகளில் காணப்படும் முக்கிய அம்சங்களான வகுப்பு வேறுபாடோ, வகுப்புப் போராட்டமோ நிகோபார் மக்கள் சமூகத்தில் கிடையாது. மற்றும் கிராமத்தினரின்பால் கிராமத் தலைமகன் காட்டும் பரிவும், போக்கும் ஒரு குடும்பத் தலைவன், குடும்பத்தின் மற்ற உறுப்பினர்களிடம் காண்பிப்பதுபோல் இருக்கின்றதே தவிர, ஒரு நிலப்பிரபு தனது அடிமைகளை நடத்துவது போலில்லை.

குடும்பத் தலைவர்களைப்போன்றே, கிராமத் தலைமகன் ஆயுட்காலம்வரை பதவி வகிக்கின்றார். இருப்பினும் அவர் அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தினால், சொந்த நலனைப் பேணினால், படுமோசமான நடத்தைக்கு உள்ளான குற்றம்செய்தவராகயிருந்தால், கிராம மக்களுக்கு அவரை அகற்றும் உரிமை இருக்கின்றது. இத்தகைய நிலைகளில், கிராமத்தில் உள்ள குடும்பங்களின் தலைவர்கள் அனைவரும், கிராமத்து முதியவர்கள் சிலரும் தீவில் உள்ள மற்ற கிராமங்களின் தலைமகன்களும் பதவியில் இருக்கும் தலைமகனை நீக்கவும், அவருடைய இடத்திற்கு மற்றொருவரைத் தேர்ந்தெடுக்கவும் ஒன்றுசேருகின்றார்கள். இருப்பினும் இவ்வாறு தலைமகனை நீக்குவது வெகு அரிது. உண்மையில் தீவுகளில் உள்ள அநேக கிராமங்களில், மக்களுக்கு நினைவு தெரிந்த வரையில் அத்தகைய நிலை எழுந்தது கிடையாது.

தலைமகன் அல்லாமல், ஒவ்வொரு கிராமத்திலும் இரு உதவித் தலைமகன்கள்—2ஆவது தலைமகன், 3ஆவது தலைமகன் என்றிருக்கின்றார்கள். கிராமத் தலைமகன்போலவே அவர்களும் தேர்ந்தெடுக்கப்படுகின்றார்கள். அவர்கள் கிராமத் தலைமகனின் எல்லாப் பணிகளிலும் உதவிபுரிகின்றனர். அவர் இல்லாத சமயத்தில் பொறுப்பேற்கின்றனர்.

கிராமத் தலைமகனையும், அவருடைய உதவியாளர்களையும் மக்கள் 'கேப்டன்' என்றழைக்கின்றார்கள். கடந்த காலத்தில் பொருள்கள் பரிமாற்றத்திற்கும், வேறு நாடுகளுக்குச் செல்லும் வழியிலும் நிகோபார் தீவுகளுக்குக் கப்பல்கள் வரும். அவைகள்

மூலமே மக்கள் வெளியுலகத் தொடர்புகொண்டிருந்தனர். கப்பல் 'கேப்டன்'களின் செல்வாக்கும், அதிகாரமும் இம்மக்களை வெகுவாகக் கவர்ந்திருக்கவேண்டும். இதுவே 'கேப்டன்' என்று தங்கள் தலைவர்களை அழைப்பதற்குக் காரணமாயிருக்கவேண்டும். மற்றும் தங்கள் அந்தஸ்தையும், செல்வாக்கையும் வலியுறுத்த கிராமத் தலைமகன்களே அப்பதத்தைப் பயன்படுத்தத் துவங்கி விட்டனர். 'கேப்டன்' என்ற பதமும் அவர்களுக்கு மிகவும் பொறுத்தமானது. கப்பலின் 'கேப்டனை'ப் போன்றே கிராமத் தலைமகன் கிராமத்தின் தலைவிதியை நிர்ணயிக்கின்றார். வளமும், வளர்ச்சியும் நோக்கி அவர் செலுத்தவும் முடியும் அல்லது மூழ்கடிக்கவும் முடியும்.

## நில முறை—சொந்தம், மரபுரிமை

நிகோபார் மக்களின் நில முறை மக்கள் தொகையின் வரலாற்று வளர்ச்சியுடனும் தீவில் மக்கள் பரவியதுடனும் இணைந்ததாகும். முன்பு சொன்னதுபோல், நிகோபார் மக்கள், முதலில், தீவுகளில் ஓரிடத்தில் இருந்திருக்கவேண்டும். அங்கிருந்து மக்கள் தொகை பெருகப் பெருக அவர்கள் மற்ற தீவுகளுக்குப் பரவியிருக்க வேண்டும். அந்த சமயம் நிலம் நிறைய இருந்தது. ஒரு சிலரே பயன்படுத்துவதற்கு இருந்தனர். அப்பொழுது காடுகளைக் கழனிகளாக்கிய குடும்பங்கள், அந்த நிலங்களுக்கு உரியவர்களாகக் கருதப்பட்டனர். இம்மாதிரியாக நிலங்கள் அனைத்தும் குடும்பங்களுக்குள் பிரிக்கப்பட்டன. குடும்பங்களின் தலைவர்கள் நிலங்களின் முதல் சொந்தக்காரர்களானார்கள். அவர்கள் வாழ்வுக்குப் பின்னர், குடும்பங்களின் வழிவழியான வாரிசுகள் ஏற்பட்டன. ஒவ்வொரு உரிமையாளருக்கும் இருந்த நிலத்தின் எல்லைகள், உரிமைகள் அனைத்தும் வாரிசுகளின் உரிமைகளும் வழிவழியாக நிகோபார் மக்கள் அனைவராலும் ஏற்கப்பட்டு விட்டன.

இருப்பினும் மக்கள் தொகை பெருகப் பெருக நிலத்திற்கான கோரிக்கை அதிகரித்தது. முதல் சொந்தக்காரர்களும், அவர்களுடைய வாரிசுகளும் தென்னை பயிரிடுவதற்காகத் தங்கள் நிலங்களின் சில பகுதிகளை மற்றவர்களுக்குத் தந்தனர். உண்மையில் பயன்படுத்தப்படாத நிலம் யாரிடமாவது இருந்தால், மற்றவர்கள் அந்த கிராமத்தைச் சேர்ந்திருந்தாலும் சரி, தூரத்து கிராமத்தவராக இருந்தாலும் சரி, அவரை அணுகி நிலத்தைப்

பயன்படுத்திக்கொள்ளக் கேட்கலாம். அவ்வாறு கேட்பவர்களுக்கு, அவர் சமீப காலத்தில் நிலத்தைப் பயன்படுத்திக் கொள்ளும் எண்ணம் இல்லாதிருந்தால், நிலத்தின் பகுதிகளை அநேகமாகக் கொடுக்கவும் செய்கின்றார்கள். அவ்வாறு நிலம் கொடுக்கப்பட்டுவிட்டால், நிலம் சொந்தக்காரரின் பெயரிலேயே இருந்துவந்தாலும், நடைமுறையில் நிலம் பெற்றவர் தென்னையோ, மற்ற பயிரோ பயிரிட்டுப் பயன்படுத்தி அனுபவித்து வருகின்றார். நிலத்தைப் பயன்படுத்தி வருபவர் நிலத்தின் சொந்தக்காரருக்கு, நிலத்தின் விளைச்சலின் ஒரு பகுதியோ அல்லது ஏதோ கொடுக்கவேண்டுமென்ற கடமையில்லை. உண்மையில் ஒவ்வொருவனும் தனது பணியின் பலனை அனுபவிக்க வேண்டும் என்ற உன்னதக் குறிக்கோள், நிகோபார் நில முறையின் அடிப்படையைக் கொண்டதாகும். சில காலத்திற்குப் பின்னர் நிலத்தின் சொந்தக்காரர் தனது நிலத்தை மீண்டும் எடுத்துக்கொள்ள விரும்பினால், அந்த நிலத்தில் மற்றவர் பயிரிட்ட மரங்கள் இருக்கும்வரை அவ்வாறு செய்யமுடியாது.

நிலத்தின் சொந்தக்காரருக்கு, நிலத்தைப் பயன்படுத்துபவர் செய்யவேண்டிய ஒரே கடமை, சொந்தக்காரர் படகுப் போட்டி ஏற்பாடு செய்து, அதற்கு அவருடைய நண்பர்களை அழைத்தால், பயன்படுத்துபவரின் குடும்பத்தினர் சமையல் செய்து, சொந்தக்காரரின் விருந்தினர்களுக்குப் பரிமாறவேண்டும். அதுபோன்றே, நிலத்தின் சொந்தக்காரர் இறந்தபொழுது விருந்து நடந்தால், அங்கு வரும் சொந்தக்காரரின் விருந்தினர்களுக்காக, உணவு வழங்கவேண்டும். இதுவெல்லாம் மிகச் சிறிய கடமைகள். அதுவும் எப்பொழுதாவது ஒருமுறை நேரும். அதுவும் நிலத்தைப் பயன்படுத்துவதற்குப் பிரதியாகச் சொந்தக்காரர்களுக்குத் தரவேண்டும் என்ற நிலையில் கொடுப்பதில்லை. ஏதோ மரியாதைக்காக, நிலச் சொந்தக்காரர்கள் முக்கியமான அலுவல்களில் ஈடுபட்டிருக்கும்போது, தங்களாலியன்றதைச் செய்வதை ஒக்கும்.

நிலத்தைப் பெற்றவர் இறந்துவிட்டபொழுது, அவருக்குக் குழந்தைகள் அல்லது வாரிசுகள் இருந்தால் நிலம் அதன் சொந்தக்காரரிடம் சென்றுவிடுவதில்லை. குழந்தை இல்லாமல் அவர் இறந்துவிட்டால், எந்தக் காரியத்துக்காக நிலம் பெறப்பட்டதோ அது முடிந்துவிட்டால், மரங்கள் எதுவும் இல்லையென்றால் நிலம் சொந்தக்காரருக்கு மீட்கப்படுகின்றது. மீட்கப்

படுவதற்கு, தீவில் உள்ள கிராமங்களின் தலைமகன்கள், கிராம முதியவர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து முடிவு செய்ய வேண்டும்.

காட்டுப்பகுதி, மற்றும் உட்பகுதிகளில் உள்ள குளங்குட்டைகள், கடற்கரை, அலைகள் மோதும் கடற்தளங்கள் ஆகியவையும் பல்வேறு குடும்பங்களிடையே பிரிக்கப்பட்டுள்ளன. அதனால் நிகோபார் மக்கள் தங்களுக்குச் சொந்தமாகாத காட்டுப் பொருள்களைப் பெறவோ அல்லது மீன் பிடிப்பதற்கோ, அந்த நிலங்களின் சொந்தக்காரர்களை அனுமதி கோரவேண்டியிருக்கின்றது.

அரசாங்க நில அளவீடு எதுவும் இல்லாத நிலையில், கிராம எல்லைகள் அல்லது தனிப்பட்ட நில வரையறை எதுவும் எந்த வரைபடத்திலும், எந்தப் பத்திரத்திலும் இல்லை. சில இடங்களில் மரப்பலகைகள் வைக்கப்பட்டும், குறிப்பிட்ட மரங்களை நட்டும், மூங்கிற் புதர்களை வளர்த்தும் எல்லைகள் குறிப்பிடப் பட்டுள்ளன. மற்றபடி மக்களுக்கு, எல்லைகள் எல்லாம் தெளிவாகத் தெரியும். அதனால் தகராறுகள் கிளம்புவதும் வெகு அரிது.

குடும்பத்தில் உள்ள அனைவருக்கும், நிலத்திலும், குடும்பச் சொத்திலும் அனுபவிக்கும் சம உரிமை இருந்தாலும், குடும்பத்தின் தலைவரின் பெயரில் மாத்திரமே சொத்துக்கள் இருக்கின்றன. மற்றவர்களுக்கு சொந்தம் கொண்டாடும் உரிமை இல்லை. குடும்பத்தின் மற்ற உறுப்பினர்களுக்கு, காப்பாற்றப் படவேண்டிய உரிமையே இருக்கின்றது. குடும்பத் தலைவரின் கடமை, மற்ற உறுப்பினர்களை நன்கு பேணி, அவர்களின் தேவைகளைக் கவனித்துக் காப்பதாகும். குடும்பத் தலைவர் இறந்தவுடன், சொத்துக்களின் உரிமை குடும்பத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுபவருக்கு மாறுகின்றது. அவர் சொத்துக்களின் உரிமையாளராகிவிடுகின்றார்.

குடும்பத்தின் உறுப்பினர்களுக்கு குடும்பச் சொத்தில் சொந்தம் கொண்டாட முடியாவிட்டாலும், அவர்களின் அனுபவ உரிமை உண்மையானதும் நன்கு வரையறுக்கப்பட்டுமுள்ளது. அவர்களுக்கு பிரிவினை கோரும் உரிமைகூட இருக்கின்றது. ஆனால் அவ்வாறு கோருவது வெகு அரிது. குடும்பம் கட்டுக்கடங்காமல் பெரிதாகிவிட்ட நிலையில் சில உறுப்பினர்கள் குடும்பச் சொத்தின் முழுப் பலன் தங்களுக்குக் கிட்டவில்லை என்று கருதினால், அவர்

களின் கோரிக்கையின்பேரில் குடும்பச் சொத்தில் பாகப் பிரிவினை செய்யப்படுகின்றது. இது தீவில் உள்ள கிராமத் தலைமகன்கள், குறிப்பிட்ட கிராமத்தைச் சேர்ந்த முதியவர்கள் முன்னிலையில் நடைபெறுகின்றது. புதிய எல்லைகள் குறிக்கப்பட்டு, அவை எல்லோருக்கும் அறிவிக்கப்படுகின்றன. சொத்துக்கள் பிரிவினை, புதிதாக ஏற்படும் குடும்பங்களில் உள்ள உறுப்பினர்களின் எண்ணிக்கையைப் பொறுத்தது. ஒரு பெரிய குடும்பம் பிளவு பட்டுப் பல புதிய குடும்பங்கள் தோன்றுகின்றன. புதிய குடும் பங்கள் தங்கள் தலைவர்களைத் தேர்ந்தெடுத்து, சொத்துக்கள் பிரிவினைக்கு ஏற்ற முறையில் சொத்துக்களை அந்தத் தலைவர் களுக்கு உரிமையாக்குகின்றன.

ஆண், பெண் ஆக இரு வாரிசுகளுக்குமே குடும்பச் சொத்துக் களில் வாரிசு உரிமையும், அனுபவிக்கும் உரிமையும் இருக் கின்றன. குடும்பத்தின் தலைவராக ஒரு பெண் தேர்ந்தெடுக்கப் பட்டால், அவர் குடும்ப நிலத்திற்கும், சொத்திற்கும் உரியவ ராகின்றார்.

சீர்வரிசை முறை எதுவும் இல்லை. கார் நிகோபாரிலும், மற்றும் அநேக இடங்களிலும், திருமண காலத்தில் இரு சாராருமே எதுவும் மற்றவருக்குத் தரவேண்டியதில்லை. அப்பொழுது முடிவு செய்யப்படவேண்டிய ஓர் அம்சம், இருவரில் எவர், அவருடைய குடும்பத்தை விட்டு மற்றவர் குடும்பத்தில் வாழச்செல்வது என்பதுதான். இது அப்பொழுது இருக்கும் குடும்பத்தில் உள்ள உறுப்பினர்களின் எண்ணிக்கையைப் பொறுத்தது. எவருடைய குடும்பத்தில் அதிக உறுப்பினர்கள் இருக்கின்றார்களோ, அவர் அந்தக் குடும்பத்தை விட்டு, மண மானவரின் குடும்பத்துக்குச் சென்று வாழுகின்றார். அதனால் சிறிய குடும்பங்களுக்கு, அதிகப்படியான ஓர் ஆள் பணிபுரியக் கிடைக்கின்றது. பெரிய குடும்பங்களில் ஒரு பொறுப்புக் குறை கின்றது. ஒரு பையனோ, பெண்ணோ அவரது குடும்பத்தை விட்டு மற்ற குடும்பத்திற்குச் சென்றால், புதிய குடும்பத்தின் தலைவர் அவரை, மற்ற உறுப்பினர்களைப்போலவே பரிவுடனும், பாசத்துடனும் காத்து நிற்கவேண்டும். அது அவருடைய பொறுப்பாகும். ஒருவர் குடும்பத்தை விட்டு விலகிச்செல்லும் பொழுது, அவருக்கு அந்தக் குடும்பச்சொத்தில் உள்ள உரிமையும் முடிவடைகின்றது. ஒரு குடும்பத்திலிருந்து, மற்ற குடும்பத் திற்கு சொத்துக்களைத் திருமண சமயத்தில் மாற்றிக்கொள்வது

என்பதும் இல்லை. ஒரு குடும்பத்தில் பையனோ, பெண்ணோ சொத்தை அனுபவிக்கும் உரிமையை இழக்கும்போது, அவர் மற்ற குடும்பத்தில் சேருகையில் அதே இழந்த உரிமையைப் பெற்றுக்கொள்ளுகின்றார்.

சோவ்ராவில் மாத்திரமே, திருமணத்தின்போது மணமகனின் தகப்பனார் பெண்ணின் தகப்பனாருக்கு அல்லது குடும்பத்தின் தலைவருக்குப் பன்றிகள், சேனைக்கிழங்குகள், தேங்காய்கள், துணி மணிகள் முதலானவைகளை அன்பளிப்பாகத் தரவேண்டும்.

நிகோபார் மக்களின் புதுமையான நில முறையும் சொத்துரிமையும், ஒருவரின் உரிமையை மற்றவர் அப்படியே மதித்து நடக்கின்ற ஒரு சமூகத்தில் தான் சாத்தியமாக இருக்க முடியும். ஒரு கிராமத்தைச் சேர்ந்த சிலர், நிலச் சொந்தக்காரரிடம் அனுமதிபெற்று, 10 அல்லது 15 மைல் தூரத்தில் உள்ள கிராமப் பகுதிகளில் தென்னை பயிரிட்டு வளர்த்தாலும், அங்கு அக்கம் பக்கத்தில் தேங்காய்கள் திருட்டுப்போய்விடுமோ என்று அஞ்ச வேண்டியதில்லை. உண்மையில் இது மிகவும் குறிப்பிடத்தக்க தாகும். காய்கள் மரத்திலிருந்து கீழே நிலத்தில் விழுந்து கிடந்தாலும், தோப்புக்கு அருகில் வாழும் யாரும் அவைகளைத் தொடுவதில்லை. தோப்புக்கு உரியவர்கள், பயிரிட அல்லது விளைச்சலை சேகரிக்கத்தான் தோப்புக்குப் போகிறார்களே தவிர, தோப்பை மற்றவர்களிடமிருந்து காக்க அல்லது காவல் செய்ய, அங்குப் போகவேண்டுவதில்லை.

இருப்பினும் நிகோபார் மக்கள் தங்கள் இல்லங்களிலிருந்தும், தோட்டங்களுக்கு அப்பாலும் செல்லும்பொழுது, உடனடியான தாகத்தையும், பசியையும் தீர்த்துக்கொள்ள மற்றவர்களின் தோப்புக்களிலிருந்து இளநீரும், பழங்களும் பறித்துக்கொள்ள லாம். இதற்கு அவர்கள் முன்னதாக அனுமதி பெறவேண்டும் என்ற அவசியமில்லை. இருந்தாலும் பழங்களைப் பறிப்பவர்கள், அவர்களுக்கு சந்தர்ப்பம் கிடைத்தவுடன் தோட்டத்தின் சொந்தக்காரர்களுக்குத் தெரிவித்துவிடவேண்டும். சில சமயங்களில், பழங்களைப் பறிப்பவர்கள், தாங்கள் யார், எவ்வளவு பழங்கள் பறிக்கப்பட்டன என்பதை ஒரு காகிதத்தில் எழுதிவைத்து விடுகின்றார்கள். வழிப் பயணங்களின்போது குடிப்பதற்கும், உண்ணுவதற்கும் தேவையான இளநீர் காய்களை மற்றவர்களின் தோப்புக்களிலிருந்து பறித்துக்கொண்டு செல்லலாம். இருந்தாலும் கொப்பரைத் தேங்காய்களைப் பறிக்கக்கூடாது அல்லது

பின்னர் பயன்படுத்திக்கொள்ளலாம் என்று தேங்காய்களையோ, பழங்களையோ பறித்துக்கொண்டுத் தங்கள் இல்லங்களுக்கு எடுத்துச் செல்லக்கூடாது. உடனடித் தேவைக்கு மற்றவர் தோட்டங்களிலிருந்து தேங்காய்களைப் பறித்துக்கொள்ளலாம் என்பது தீவில் உள்ள எல்லா மக்களுக்கும் வசதியானதோர் ஏற்பாடாகும். அவர்களின் அன்றாட அலுவல்களின்போது, குறிப்பாக வேட்டையாடச் செல்லும்பொழுது, அவர்கள் தங்கள் இல்லங்களை விட்டு வெகுதூரம் செல்லவேண்டியிருக்கின்றது. அப்பொழுது அவர்கள் குடிப்பதற்கும் உண்ணுவதற்கும் தங்கள் இல்லத்திலிருந்தே எல்லாவற்றையும் எடுத்துச் செல்லவேண்டிய அவசியம் இதனால் எழுவதில்லை.

இந்த உரிமை முழுமையானதுமல்ல. சில தோட்டங்களின் சொந்தக்காரர்கள் 'டகோயா' என்று ஒரு குறியிட்டுவிடுகின்றார்கள். இதன்படி உடனடியான பசி, தாகத்தைத் தீர்த்துக் கொள்ளக்கூட எவரும் மற்றவர்கள் தோட்டங்களில் 'டகோயா'க் குறியிட்ட பகுதியிலிருந்து தேங்காய்களோ, பழங்களோ பறிக்கக் கூடாது. நிலத்தில் இரு குச்சிகளை நட்டு அதன் குறுக்கேயும் ஒரு கம்பை வைத்துவிடுவது, அவ்வாறு குறியிடுவதற்கு அர்த்தம். எந்தக் காரியத்திற்காக, இவ்வாறு 'டகோயா'க் குறியிடப்பட்டிருக்கின்றது என்பதை சில மாறுதல்களுடன் குறிப்பிடுகின்றார்கள். ஒருவர் இறந்துவிட்டால், குடும்பச் சொத்தின் ஒரு பகுதியில் தென்னை ஓலையைத் தொங்கவிட்டு, அதைத் துணிகளைக்கொண்டு சுற்றிவிடுகிறார்கள். அதன் கருத்துப்படி, இறந்தவரின் ஆவி அனுபவிக்க அந்தப் பகுதி ஒரு வருடத்திற்கு ஒதுக்கப்பட்டிருக்கின்றது. இறந்தவரின் ஆண்டு நிறைவு விருந்து நடந்து, இறந்தவரின் அஸ்தி மீண்டும் புதைக்கப்பட்ட பின்னரே 'டகோயா'க் குறி நீக்கப்படுகின்றது. இப்பொழுது பழமைக் கருத்துக்கள் அநேகமாகக் கைவிடப்பட்டன. ஆனாலும் இறந்தவரைப் புதைக்கக் கணிசமாகச் செலவு செய்யப்பட்டிருக்கின்றது. குறிப்பாக சவப்பெட்டித் துணிக்குச் செலவு அதிகம் (அதனாலேயே 'டகோயா'க் குறியில் துணிகள் சுற்றப்படுகின்றன). அதை மீட்கவே கொப்பரைக்குக் காய்கள் விடப்பட்டிருக்கின்றன என்று அர்த்தமாம். சில சமயங்களில் தேங்காய் மட்டைகளை 'டகோயா'க் குறிகளின்மேல் வைக்கின்றார்கள். அதற்கு, தோப்பின் சொந்தக்காரர் பன்றிகளுக்குத் தேங்காய் உணவாகத் தரவிரும்புகின்றார் என்று அர்த்தம். சில சமயங்களில் 'டகோயா'க்

குறிகளின்மேல் சிறிய தேங்காய்களை வைப்பதுண்டு. அதன்படி சிறிய தேங்காய்களைப் பறிக்கக்கூடாது; அவைகளை நல்ல முறையில் தோப்பின் சொந்தக்காரர் வளர்க்க விரும்புகின்ருர் என்று அர்த்தம். தோப்பின் உரிமையாளருக்குப் பணம் தேவையாகயிருக்கின்றது; அதற்காகத் தேங்காய்களை முற்றவைத்துக் கொப்பரையாக விற்க விரும்புகின்ருர் என்று 'டகோயா'க் குறியிடுவது வெகு அரிது.

'டகோயா'க் குறி எப்போதும் மதிக்கப்படுகின்றது. நிகோபார் மக்கள் எவரும் தடை செய்யப்பட்ட இடங்களிலிருந்து தேங்காய்களைப் பறிக்க நினைப்பதில்லை. இதற்குக் காரணம், மற்றவர்களின் உரிமைகளை மதித்து நடக்கும் உணர்வேயாகும். அதே சமயத்தில் 'டகோயா'க் குறியை மீறி நடந்தால் கடும் தண்டனை என்பதும் காரணமாகும். தடை செய்யப்பட்ட இடத்திலிருந்து பழங்களை ஒருவர் பறித்தார் என்பது நிரூபிக்கப்பட்டால், அவர் அதற்கு ஈடாக உரிமையாளருக்கு மூன்று பன்றிகளைத் தந்துவிடவேண்டும். உண்மையில் 'டகோயா'க் குறியின் மேல் பன்றிகளின் மூன்று தாடைகள் வைக்கப்பட்டிருக்கும். அந்தக் குறியை மீறுபவர்களுக்குக் கிடைக்கும் தண்டனை அது என்பதை நினைவுபடுத்துவதாக இருக்கின்றது. அதற்கும் மேலாகத் தடை செய்யப்பட்ட இடங்களிலிருந்து பழங்களைப் பறித்து உண்டால், அதனுல் உயிருக்கே ஆபத்து நேரிடும் என்று மக்களிடையே ஒரு நம்பிக்கையையும் நிலவவிட்டிருக்கிருர்கள். அதனுலும் யாரும் தடைசெய்யப்பட்ட இடங்களிலிருந்து பழங்களைப் பறிப்பதில்லை. உடலுக்கும், உயிருக்கும் பயந்து, நிகோபார் மக்கள் 'டகோயாக்'குறி வைக்கப்பட்ட இடத்திற்கே செல்வதில்லை.

நிகோபார் மக்களின் சமூகப் பொறுப்புணர்ச்சியின்படி, தோப்புக்களின் உரிமையாளர்கள் 'டகோயா' அடையாளங்களைக் கண்டபடி வைப்பதில்லை. தோப்பின் விளைச்சலைப் பாதுகாக்க வேண்டுமென்ற அவசியமான சூழ்நிலையிலேயே 'டகோயா'க் குறிகளை வைக்கின்றனர்.

நிகோபார் மக்களின் புதுமையான நிலமுறைபற்றியும், சொத்துரிமைபற்றியும் எந்த இடத்திலும் விவரமாகக் குறிக்கப்படவில்லையென்ருலும், நிகோபார் மக்கள் அனைவரும் அதனை அறிவர். அவர்களின் சமுதாயம் நெருங்கிப் பிணைந்திருப்பதால், எல்லா மக்களுக்கும், மற்றவர்களுக்கும் எது யாருக்குச் சொந்தம்,

தனிப்பட்டவர்களின் நிலங்களின் எல்லைகள் என்ன என்பது தெரியும். அதனால் நிலம்பற்றியும், சொத்துரிமைபற்றியும் தகராறு கிளம்புவது வெகு அரிது.

நிர்வாகமும் மக்களின் மரபு வழக்கமான உரிமைகளை மதித்து நடக்கின்றது. நிகோபார் தீவுகளில் நில வரி அளவையோ, திட்டமோ இல்லை. அதற்குக் காரணம், இத்தீவுகளில் ஒழுங்கமைந்த உழவு முறையில்லை; அதனால் நில வரி அளவைத் திட்டத்திற்கு அடிப்படையான நில வரி வசூலிக்கப்படுவதில்லை. இத்தீவுகளில் நடைமுறையில் எந்த நிலத் தகராறும் எழுவதில்லை. அதனாலும் மக்களின் நில உடைமைகளின் எல்லைகள், மக்கள் உரிமைகள்பற்றிய விளக்கமான குறிப்பேடுகளை வைக்கவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. நில உடைமைக்கு ஆதரவாக எந்தக் குறிப்பேடும் இல்லாவிட்டாலும், நிகோபார் மக்களிடையே, தகராறுக்கிடமில்லாத நில உரிமையை நிர்வாகம் ஏற்றுக் கொள்ளுகின்றது. அபிவிருத்திப் பணிகளுக்கு நிலம் தேவைப் பட்டால், நிலத்தின் உரிமையாளரை, கிராமத்தின் தலைமகன் மூலம் அணுகுகிறார்கள். நிலத்தின் உடைமையாளரும், கிராமத் தலைமகனும், அந்தப் பயனுள்ள பணிக்கு அந்த நிலம் தேவைப் படுகின்றது என்று முழுமையுமாக நம்பினால், அந்த நிலத்தை குறிப்பிட்ட அந்தப் பணிக்காக, அரசாங்க இலாகாவிடம் ஒப் படைக்கின்றார்கள். அப்பொழுதும் அந்த நிலம், நிலத்தின் சொந்தக்காரரின் பெயரிலேயே இருக்கும். அதாவது அவரிட மிருந்து நிலத்தைத் தோட்டமாக்கப் பெறுபவர் பூரணமாக அனுபவிக்க உரிமை பெற்றதுபோலவே, இங்கும் கருதப்படுகின் றது. நடைமுறையில் அரசாங்க அலுவல்களை அங்கு மேற்கொள் வதற்குக் குந்தகமாக அது அமையவில்லை. உடைமையாளர் நிர்வாகத்திற்கு அந்த நிலத்தைக் கொடுத்த பின்னர், அதைத் திரும்பக் கேட்பதில்லை. இருப்பினும் பிறிதொரு காலத்தில், அந்த நிலத்தை வேறொரு பணிக்குப் பயன்படுத்துவதாக யிருந்தால், அதற்கு முறையான அனுமதியை நிலத்தின் உடைமையாளரிடம் கேட்கவேண்டும் என அவர் எதிர்பார்ப்பதாக யிருக்கலாம்.

அரசாங்கப் பணிகளுக்கு நிலங்களை எடுப்பதில் சிறிது சிக்கல் இருந்தாலும், நடைமுறையில் நன்கு அமைந்துவிடுகின்றது. ஒரு வருக்கொருவர் ஒத்துழைக்கும் உணர்வுடன், உண்மையான உற்சாகத்தையும், மக்களின் நல்லெண்ணத்தையும் அரசாங்கப் பணிகளுக்கு இதனால் பெறமுடிவதால், அரசாங்கமும் இதை

ஏற்று நடக்கின்றது. நில ஆர்ஜித சட்டப்படி நடவடிக்கை என் பதின்பேரில் நீண்ட நாட்கள் தாவாவில் ஈடுபட்டு, வீண் கசப்பை யும், பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்டமும் ஏற்படுத்துவதைவிட இது மிகவும் மேலானது.

## கிராமக் குழு, தீவுக் குழு

தங்கள் விவகாரங்களை நிர்வகிக்கக் கிராமக் குழு, தீவுக் குழு ஆகியவைகளின் மூலம் மக்கள் தங்கள் ஒருமித்த கருத்தைத் தெரிவிக்கின்றார்கள். பரம்பரையாக யிருந்துவரும் இந்தக் குழுக் கள், வெகு காலந்தொட்டு இருந்து வருகின்றன. நாடு முழுவதும் ஜனநாயக முறை பரவலாகத் தோன்றியும், இக் குழுக்கள் நன்கு இயங்கிவருவதால், இந்தியாவில் உள்ளதுபோல் நிகோபார் தீவு களில் பஞ்சாயத்து முறையைக் கொண்டுவரவில்லை.

கார் நிகோபாரில் கிராமக் குழுவும், தீவுக் குழுவும் வெகு முனைப்புடன், முக்கியமானவைகளாக இயங்கி வருகின்றன. இவை சோவ்ராவில் ஓரளவுக்குத்தான் இயங்குகின்றன. மற்ற தீவுகளில் மக்கள் இங்கும் அங்கும் வசிப்பதால், அவர்கள் அதிக வேலை செய்வதற்கும் பிரியப்படாததால், இந்தக் குழுக்களின் அதிகார வரம்பும், ஆக்கப்பணிகளுக்கான வாய்ப்புகளும் ஓரளவே யிருக்கின்றன.

கிராமத் தலைமகன், இரண்டாவது, மூன்றாவது உதவியாளர் கள், மற்ற குடும்பங்களின் தலைவர்களைக்கொண்டது கிராமக் குழு. கிராமத்தின் முக்கிய விவகாரங்கள் அனைத்தையும் பார்த்துக் கொள்ளவேண்டியது கிராமக் குழுவின் பொறுப்பு. கிராமக் குழுவில் உள்ள மற்ற குடும்பத் தலைவர்களைக் கலக்காமல், கிராமத் தைப் பொறுத்து, எந்த முக்கியமான தீர்மானத்தையும் கிராமத் தலைமகன் பொதுவாக எடுப்பதில்லை. விவகாரம் மிக முக்கிய மானதாகயிருந்தால், குடும்பத் தலைவர்கள் தங்கள் குடும்பங் களின் மற்ற உறுப்பினர்களுடன் கலந்தாலோசித்த பின்னர் குழு விற்குத் தங்கள் கருத்துக்களைக் கூறுகின்றார்கள். உண்மையில் மரபுப்படியான சமுதாய அமைப்பு இருக்கும் அதே நேரத்தில், நிகோபார் மக்களிடம் ஜனநாயக உணர்வும் இருப்பது குறிப் பிடத்தக்கது. அதிகாரத்தில் இருப்பவர்கள் தங்கள் கருத்தை மற்ற வர்கள்மீது திணிப்பதும் இல்லை. குழுவில் சுதந்திரமுடன் விவாதம் நடத்தி, கருத்துக்களைப் பரிமாறிக்கொள்கின்றார்கள். நிகோபார்

மக்களின் உள்ளார்ந்த குண இயல்பு சமரச உணர்வு. அதனுல் இறுதி முடிவுகள் அனைத்தும் ஒருமனதாக யிருக்கின்றன.

கிராமக் குழு, ஒரு குறிப்பிட்ட அலுவல் இருக்கும்பொழுது மாத்திரமே கூடுகின்றது. குழுக் கூட்டங்கள் கூடுவதற்குமுன் மணி அடிக்கப்படுகின்றது. அந்த மணி ஜப்பானியர்களால் காட்டுப் பகுதிகளில் விட்டுச்செல்லப்பட்ட துண்டு சாமான்களைக் கொண்டு செய்யப்பட்டதாகும். கிராமக் குழுக் கூடும் இடம் பொதுவாக கிராமத் தலைமகன் இல்லமாக இருக்கும். சில சமயம் சமுதாயக்கூடங்களில் கூடும். தகராறுகள் எழும் சமயங்களில் குற்றஞ்சாட்டுபவரின் இல்லத்தில் அல்லது தீமைக்குள்ளானவரின் இல்லத்தில் நடைபெறும்.

தீவில் உள்ள கிராமங்களைச் சேர்ந்த தலைமகன்கள், இரண்டாவது, மூன்ருவது உதவியாளர்கள் ஆகியோர்களைக் கொண்டது தீவுக் குழு. அவர்களுக்குள்ளேயே ஒருவரைத் தீவிற்கு முதன்மையான தலைமகனுகத் தேர்ந்தெடுக்கின்ருர்கள். அவர் ஆயுட்காலம் வரை பதவியிலிருக்கின்ருர். அவர் தீவிலேயே மிக முக்கியமான பிரமுகர். தீவில் உள்ள மக்கள் யாவரும் அவருக்குக் கீழ்ப்பணிந்து நடக்கின்ருர்கள். கிராமத் தலைமகன்களும் அவருடைய உத்தரவைப் பின்பற்றுகின்ருர்கள். இருப்பினும், மிக முக்கியமான விவகாரங்களில் முதன்மைத் தலைமகன், தீவுக் குழுவில் விவகாரத்தை விவாதித்து, மற்ற தலைமகன்கள் அங்கீகரிக்கும் நடவடிக்கையையே தொடருகின்ருர்.

கார் நிகோபாரில், முந்திய அத்தியாயங்களில் குறிப்பிட்டபடி, தீவின் முதன்மைத் தலைமகன் பிக் லபாடி என்ற கிராமத்தைச் சார்ந்தவராகவே இருந்துவந்த காலமுண்டு. அதுவே தாய்மை கிராமம், அங்கிருந்தே தீவின் மற்ற இடங்களுக்கு மக்கள் பரவினுர்கள் என்று கருதப்பட்டது. இப்பொழுது இந்தப் பாரம்பரியம் கைவிடப்பட்டது. மிகத் திறமையும், மக்கள் அனைவரின் நம்பிக்கையும் பெற்றவரே தலைமகனுகத் தேர்ந்தெடுக்கப்படுகின்ருர். மேலும், நிர்வாக வேலைகளும், வளர்ச்சிப் பணிகளும் அதிகரித்துள்ளதால், முதன்மைத் தலைமகனின் பொறுப்புக்களும் பெருகிவிட்டதால், துணை முதன்மைத் தலைமகன் ஒருவரும் தேர்ந்தெடுக்கப்படுகின்ருர். அவரும், முதன்மைத் தலைமகன் அனுபவிக்கும் எல்லா சலுகைகளையும் அந்தஸ்தையும் அனுபவிக்கின்ருர். பொறுப்புக்களிலும் பங்கு ஏற்கின்ருர். எனினும், தீவுக் குழுக்கூட்டம் பிக் லபாடி கிராமத்திலேயே கூடுகின்றது.



படம் 8.
நான்கோவ்ரித் தீவைச் சேர்ந்த பெண்கள்

படம் 9. நான்கோவ்ரித் தீவைச் சேர்ந்த இரு இளம் ஜோடிகள், அவர்களின் பாரம்பரிய உடைகளில் காணப்படுகிறார்கள்





படம் 10.
பாரம்பரிய உடையில் ஒரு நான்கோவ்ரி இளைஞன்



படம் 11.
தென்னை மரம் ஏறுதல்

இதற்காக, கிராமங்களின் தலைமகன்கள் அனைவரும் சேர்ந்து நல்ல கூடம் ஒன்றையும் கட்டியிருக்கின்றூர்கள்.

தீவு சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களிலும், கிராமங்கள் அனைத்தின் பொதுநலனிலும் தீவுக் குழு அக்கறை எடுத்துக் கொள்வதுடன், ஒரு குறிப்பிட்ட கிராமத்தின் மிக முக்கியமான விஷயங்களிலும் முடிவு எடுக்கின்றது. இவைகளைக் கிராமக் குழு தீர்மானிப்பதில்லை.

கிராமக் குழுவும், தீவுக் குழுவும் நிர்வாக அலுவல்கள் அனைத்திலும், வளர்ச்சிப் பணிகளிலும் முக்கியப் பங்காற்றுகின்றன.

இக் குழுக்களின் மிக முக்கியமான பணிகளில் ஒன்று, நீதி வழங்குவதும், தகராறுகளில் தீர்ப்புக்கூறுவதும் ஆகும். களவு, கூடா ஒழுக்கம், முறைகேடான பால் உறவுகள், வசவு, தாக்குதல், அடிதடி, எல்லைத் தகராறுகள் ஆகியவைகளில் இக் குழுக்கள் தீர்ப்புக் கூறுகின்றன. சிறிய விவகாரங்களை மட்டுமே கிராமக் குழுக்கள் கவனிக்கின்றன. மிக முக்கியமான விவகாரங்கள், குற்றச்செயல்கள் ஆகியவைகள் தீவுக் குழுவின் தீர்ப்புக்கு அனுப்பப்படுகின்றன.

முன்பெல்லாம், இக்குழுக்களின் மிக முக்கியமான பணி, 'சூனியக் கொலைகளில்' தீர்ப்புக்கூறுவதாக இருந்தது. தீயவர்களும், கொடிய குற்றங்கள் புரிந்தவர்களும், செப்பிடு வித்தைகள் மூலம் மற்றவர்களைக் கொன்றூர்கள் என்ற சந்தேகத்திற்கு இடமானவர்களும், நோய்களைப் பரப்புபவர்களும் பேய் பிடிக்கப் பட்டவர்களாகக் கருதப்பட்டார்கள். குழுவும் அந்த முடிவை ஏற்றுக்கொண்டால், அவர்களை சாகடிக்க உத்தரவிடப்பட்டது. சமுதாயத்தைப் பொறுத்து, ஒரு பெரிய கடமையைச் செய்வதாகவும், சமூகத்திலிருந்தே ஒரு பெரும் தீமையை ஒழிப்பதாகவும் கருதி இக்குழுக்கள் 'சூனியக் கொலை'களில் தீர்ப்பளித்து வந்தன. அம்மரண தண்டனையை நிறைவேற்ற சில இளைஞர்களையும் குழுக்கள் தேர்ந்தெடுத்தன. குற்றவாளியை அவர் அறியாமலேயே கூட்டிச்சென்று, அவரின் ஒவ்வொரு உறுப்பாக வெட்டி, உடலைக் கடலில் தூக்கியெறிந்து மிகவும் குரூரமாகக் குற்றவாளியை இளைஞர்கள் கொன்றூர்கள். கொலையை நிறைவேற்றும் இந்த இளைஞர்களைத் தண்டித்துப் பிரிட்டிஷார் இந்தக் கொடிய வழக்கத்தை நிறுத்திவிட்டார்கள். எனினும், தாங்கள் செய்வது ஒரு குற்றமான செய்கை என்பதை அவர்களுக்கு உணர்விக்க முடியவில்லை. சமூகத்தை ஒரு பெரும் தீமையி

லிருந்தும், ஆபத்திலிருந்தும் காப்பாற்றும் ஓர் உன்னதமான சேவை செய்துவந்ததாகவே அந்த இளைஞர்கள் கருதிவந்தார்கள்.

அறிவும் வளர, பேய் பிசாசு வணக்கமும் கைவிடப்பட, மக்கள் 'சூனியக் கொலை'யின் முட்டாள்தனத்தை உணர்ந்துகொண்டனர். உண்மையில் இப்பழக்கம் கார் நிகோபாரில் முழுமையுமாகக் கைவிடப்பட்டது. கடந்த 40 ஆண்டுகளில் அங்கு 'சூனியக் கொலை' எதுவும் நடைபெறவில்லை. 1922இல் பெர்கா கிராமத்தில் தொத்துநோய் பரவியபொழுது, அந்த நோய் பரவ ஒருவர் காரணம் என்று சந்தேகிக்கப்பட்டுக் கொலைசெய்யப் பட்டதே கடைசி 'சூனியக் கொலை'யாகும். இக்கொலைக்குக் காரணமான அனைவரையும், அச்சமயத்தில் தாசில்தாராகப் பணிபுரிந்த ரிச்சர்டுசன் பாதிரியார் மிகத் தைரியமுடன் கைது செய்தார். அவர்களைத் தண்டித்து போர்ட் பிளேருக்கு அனுப்பி சிறையிலிட்டார். பின்னர் அவர்களை விடுதலைசெய்தார்.

மற்றத் தீவுகளில், குறிப்பாக மிகவும் பின்தங்கிய சோவ்ராவில், இப்பொழுதுகூட பத்துப் பதினைந்து ஆண்டுகளில், எப்பொழுதாவது ஒரு 'சூனியக் கொலை' நடைபெறுகின்றது. அக்குற்றவாளிகள் பொதுவாக சூனியக்காரர்களாகவே இருக்கின்றனர். நீண்டகாலமாகவே அவர்கள் சூனியம் பலிக்காமல்போயிருக்கும் அல்லது தவருன நடத்தை, குற்றம்புரிந்தவர்களாயிருப்பார்கள் அல்லது சூனியம்மூலம் மற்றவர்களைக் கொன்று சந்தேகத்திற்கு உள்ளானவர்களாக இருப்பார்கள்.

முன்காலத்தில், குழுக்கள் விதிக்கும் தண்டனை மரணமாகவேயிருக்கும். ஆனுல், 200 ஆண்டுகளுக்கு முன்பு, கார் நிகோபாரில் டாபோய்மிங் என்ற கிராமத்தில் இருந்த ஓர் அறிவாளி, சிறிய குற்றங்களுக்கெல்லாம் கடுமையான மரணதண்டனை விதித்தால், நிகோபார் மக்களே இருக்கமாட்டார்கள் என்று கூறி மக்களுக்கு அறிவுறுத்தினுர். அதற்குப் பின்னரே, 'சூனியக் கொலை' தவிர, மற்றவைகளுக்கு மரணதண்டனை விதிக்கப்படுவது நிறுத்தப் பட்டது. 'சூனியக் கொலை' கார் நிகோபாரில் கைவிடப்பட்டதாலும், மற்றத் தீவுகளிலும் வெகு அரிதாக இருப்பதாலும், குழுக்கள் மரணதண்டனை கொடுப்பது என்ற பிரச்சினையே எழுவதில்லை. இப்பொழுது சாதாரணமாகத் தண்டனை என்ருல் அதிக பட்சம் மூன்று பன்றிகள் தரவேண்டும் என்று அபராதம் விதிப்பதுடன் நிற்கின்றது. குற்றம் புரிந்தவர் தீங்கிழைக்கப்பட்டவருக்குப் பன்றிகள் தரவேண்டும். குற்றம்புரிந்தவரால் பன்றிகள்

தர இயலாவிட்டால், சில ஆண்டுகளுக்கு முன்பு வரை, சில தென்னை மரங்களை எடுத்துக்கொள்வது என்றிருந்தது. ஆனால், இதனால் குற்றம்புரிந்தவர் பாதிக்கப்படுவதுடன், அவருடைய குடும்பமும் பெரிதும் பாதிக்கப்படுவதால், இம்முறையும் கைவிடப் பட்டது. இப்பொழுது அபராதமான பன்றிகளைத் தரமுடியா விட்டால், சில காலத்திற்குப் பின்னர் அபராதம் ரத்தாகின்றது அல்லது தீங்கிழைக்கப்பட்டவருக்காகக் குற்றம்புரிந்தவர் ஏதாவது ஊழியம்செய்யவேண்டும்.

குழுக்கள் விதிக்கும் மற்றொரு தண்டனை, பிரம்பால் அடித்தல்— குறிப்பாகக் குற்றவாளிகள் இளைஞர்களாக இருந்தால், குற்ற வாளியின் தகப்பனாரோ அல்லது குடும்பத் தலைவரோ அடிக் கின்றார்கள். இதுவும் நிகோபார் மக்களின் சமுதாயப் பொறுப் புணர்ச்சிக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். அவர்கள் இரத்த உறவோ, இரக்க உணர்வோ அன்றித் தண்டனையைத் தீவிரமாக நிறைவேற்றுகின்றார்கள். முன்பெல்லாம் பொது இடத்தில், மற்றவர்களுக்கெல்லாம் ஒரு படிப்பினையாக யிருக்கவேண்டும் என்று கருதிப் பிரம்படி கொடுக்கப்பட்டது. ஆனால், இப்பொழுது அது கைவிடப்பட்டது. இந்தியாவிலிருந்து வருபவர்கள் முன்னால், தங்கள் உற்றார் உறவினரையே அடிப்பதற்கு வெட்கப்பட்டே இது நிறுத்தப்பட்டிருக்கக்கூடும்.

குற்றச் செயல்களில் குழுக்கள் விதிக்கும் தண்டனைகளையும், அவைகள் இடும் மற்ற உத்தரவுகளையும் மீறுவது என்பதே கிடையாது. அவைகள் யாவும் நிறைவேற்றப்படவே செய் கின்றன. எனினும், குழுக்களின் உத்தரவுகளுக்கு கீழ்ப்படிதல் இல்லை எனும் பட்சத்தில், உத்தரவை அமுல்நடத்த வற்புறுத்தல் எதுவும் இராது என்பது மாத்திரம் உறுதி. சம்பந்தப்பட்ட நபரை, தீவுகள் அனைத்திலும் உள்ள மக்கள் சாதிவிட்டு விலக்கி விடுகின்றார்கள். நெருங்கிய நிகோபார் சமுதாயத்தில், சாதி விட்டு விலக்கப்பட்டால், அந்த நபர் பொருளாதார ரீதியில் முடக்கப்பட்டு, மனத்தாங்கலும் அதிகரித்து அவரே விரைவில் திருந்திவிடக்கூடும். அவரும், தான் மீண்டும் சமுதாயத்தில் இடம்பெறுவதற்காகக் குழுக்கள் இட்ட தண்டனையை ஏற்றுக் கொள்ள முன்வருவார் என்பதும் திண்ணம்.

இரு குழுக்களும் தங்கள் கடமைகளைப் பொறுப்புடன் ஆற்றி வருகின்றன. நீதி தவறுவது என்பதே பொதுவாகக் கிடையாது.

ஆக, நிர்வாகமும், அதிகாரிகளும் இக்குழுக்களின் முடிவுகளுக்கு உரிய மதிப்பும் மரியாதையும் தரவே செய்கின்றனர்.

நாட்டில் சட்டங்களைப் பராமரிக்க அரசாங்கம் நிறுவியுள்ள நீதிமன்றங்களுக்கும், இக்குழுக்களின் பணிக்கும் இடையே எந்த விதமான தகராறும் எழுவதில்லை. குழுக்கள் சிறிய குற்றங்களையே கவனித்துக்கொள்ளுகின்றன. கொடிய குற்றங்கள்—மிக அரிதாகயிருந்தாலும்—கார் நிகோபாரில் உள்ள துணை மாவட்டக் குற்ற நடுவர் மன்றத்திற்கோ அல்லது நான்கோவ்ரியில் உள்ள துணைக் குற்ற நடுவர் மன்றத்திற்கோ கொண்டு செல்லப்படுகின்றன. ஒரு குற்றச் செயல் குறித்துப் போலீசார் நடவடிக்கை மேற்கொண்டாலோ அல்லது நீதிமன்றத்தில் புகார் தாக்கல் செய்யப்பட்டாலோ, குழுக்கள் அவ்விஷயங்களில் தலையிடாமல் ஒதுங்கிவிடுகின்றன.

நிகோபாரைச் சேர்ந்தவரல்லாதவர் ஒரு குற்றச் செயலிலோ, மற்ற விவகாரங்களிலோ உட்பட்டவராகயிருந்தால், குழுக்கள் அவைகளைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்வதில்லை. அந்த விஷயம் துணைக் குற்ற நடுவருக்கு அல்லது போலீசுக்கு சட்டப்படி நடவடிக்கை எடுக்கத் தெரிவிக்கப்படுகின்றது. ஆனால், சிறிய விஷயமாகயிருந்தால், அந்த இடத்திலேயே கிராமத் தலைமகன் முடிவு எடுக்கின்றார். அதில் சம்பந்தப்பட்ட நிகோபாரல்லாதவரிடம் சமரசம் பேசப்படுகின்றது. ஆனால், அத்தகைய சமரசங்கள் துணை உதவி மேலாளர் அங்கீகாரத்திற்குச் செல்லுகின்றன.

நிர்வாகக் காரியங்களிலும், நடவடிக்கை எடுக்க வேண்டியவர் அரசாங்க அதிகாரியாக இருந்தால், தீவுக் குழுத் தங்கள் முதன்மைத் தலைமகன், மற்றும் சில தலைமகன்கள் மூலம் தங்கள் கருத்துக்களையும், விருப்பங்களையும் கூறி, மேல் நடவடிக்கை எடுக்கச் செய்கின்றது. பொதுவாகக் குழுவின் சிபாரிசுகள் மிகவும் நியாயமானதும், சரியானதுவுமாகயிருக்கும். துணை உதவி மேலாளர் அவைகள்மீது தானே நடவடிக்கை எடுக்கின்றார் அல்லது மற்ற அரசாங்க அதிகாரிகளைக்கொண்டு நிறைவேற்றுகின்றார். சில காரணங்களுக்காக, எப்பொழுதாவது ஒருமுறை குழுக்களின் யோசனைகள் ஏற்கப்படாவிட்டால், அதன் காரணங்களைத் துணை உதவி மேலாளர் முதன்மைத் தலைமகனிடமும், மற்றவர்களிடமும் விளக்கிக் கூறுகின்றார். அவர்களும் நியாயமுடன் எடுத்துக்கொள்கின்றனர். அதற்காக வருத்தப்படுவதில்லை, மேலும் வற்புறுத்துவதுமில்லை. அத்துடன் குழுக்களின்

சிபாரிசுகளை ஏற்க முடியாமற்போனதற்கான காரணங்களை மற்ற தலைமகன்களுக்கும், மற்றவர்களுக்கும் விளக்கவும் செய்கின்றனர்.

உண்மையில் கார் நிகோபாரில் உள்ள கிராமக் குழுக்களும், தீவுக் குழுவும் பரவலாக இயங்குகின்ற முன்மாதிரியான ஜனநாயக நிறுவனங்கள் என்றே கூறவேண்டும். இந்தியக் கிராமங்களில் அநேக பஞ்சாயத்துகளுக்குச் சாபக்கேடாக உள்ள பூசல்களோ, பிளவுகளோ இல்லாத வகையில் இருக்கின்றன. அதே சமயத்தில் பொறுப்புடன், திறமையாகப் பணியாற்றி, நெருங்கி நின்று, அவைகளின் பணிகளைக் கவனிக்கும் வாய்ப்புகளைப் பெற்றவர்களின் பாராட்டுதல்களுக்கும் உரியவைகளாகயிருக்கின்றன.

அத்தியாயம் 7

# மக்களின் தொழில்கள்

'நிகோபார் தீவுகளில்' என்ற தலைப்பில் மிஸ்டர் ஜார்ஜ் வைட்ஹெட் எழுதியுள்ள புத்தகத்தில் அவர் கூறுகின்றார்: 'ஒரு கருத்தில் பார்த்தால், நிகோபார் மக்கள் தங்கள் குறிக்கோளை அடைந்துவிட்டார்கள் என்றே கூறவேண்டும்—அவர்கள் தங்கள் உடல் நலத்தை நல்ல முறையில் வைத்துக்கொள்ளத் தேவையான அளவே வேலை செய்கின்றார்கள். அதற்குமேல் கிடையாது.' இது நிகோபார் மக்களின் மெதுவான வாழ்க்கை முறைபற்றி சிறிது மிகைப்படக் கூறுவதாகயிருக்கலாம். இக் கருத்து கார் நிகோபார், சோவ்ராத் தீவுகளின் மக்களுக்குப் பொருந்தாது. அவர்கள் அன்றாடம் நன்கு வேலை செய்கின்றார்கள். சில சமயம் மிகக் கடினமாகவும் பணிபுரிகின்றார்கள். இருப்பினும், இந்தியாவில் மக்கள் தங்கள் பிழைப்புக்காக உழைப்பதைவிடச் சாதாரணமாக ஒரு நிகோபார்வாசி மிகக் குறைந்த அளவே உழைக்கின்றார் என்பதில் சந்தேகமேயில்லை.

நிகோபார் மக்களின் மெதுவான வாழ்வு முறைக்குப் பல்வேறு அம்சங்கள் காரணமாகயிருக்கின்றன. முதலாவதாக, மூன்றாவது அத்தியாயத்தில் கூறியபடி, வெப்ப மண்டலத்தின் தட்பவெப்ப நிலை சக்தியைக் குறைத்து கடின வேலை செய்வதைக் கடினமாக்கி விடுகின்றது. நிகோபார் மக்களின் ஆதாரத் தேவைகளும் வெகு குறைவு. இயற்கை வளம் மிகுந்திருக்கின்றது. சிறிதளவு முயற்சி எடுத்தால் எதுவும் வளர்ந்துவிடுகின்றது; அவர்களின் எளிய தேவைகளுக்குப் போதுமானது கிடைத்துவிடுகின்றது. மேலும், கூட்டுக் குடும்ப முறை காரணமாகத் தனிப்பட்டவரின் ஊக்க முயற்சிக்கு இடமில்லை. குறைந்தபட்சத் தேவைக்குமேல் முயற்சி செய்யவும் தூண்டுதல் இருப்பதில்லை. இறுதியாகப் பிழைப்புக் காக உழைப்பது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியமாக விளையாட்டையும், ஆடல், பாடலையும், விருந்துகளையும், விழாக் களையும் கருதுகின்றார்கள். அவர்களின் பெரும்பான்மையான

நேரம் வேடிக்கை விநோதங்களில் ஈடுபடுவதிலேயே கழிந்து விடுகின்றது.

நிகோபார் மக்களின் முக்கியமான தொழில்கள்: தென்னை, பாக்கு, கிழங்கு, காய்கறிகள், பழவகை மரங்கள் பயிரிட்டுத் தோட்டங்களாக்குதல், கொப்பரை எடுத்தல், தேங்காய் எண்ணெய் ஆட்டுதல் ,கால்நடைகளைப் பேணுதல், மீன் பிடித்தல் ஆகும். இதல்லாமல், வீட்டு வேலைகளான தண்ணீர் இழுத்தல், விறகு சேகரித்தல், வீடுகளுக்குத் தேவையான தேங்காய்கள், பழங்கள் முதலான விளைச்சலைக் கொண்டுவருதல், கள் இறக்குதல் முதலானவைகளையும் பார்த்துக்கொள்ளுகின்றார்கள். அவசிய மேற்படுங்காலையில் வீடுகளைக் கட்டுதல், அவைகளைப் பழுது பார்த்தல், கிணறுகள் தோண்டுதல், அவைகளைச் சுத்தப் படுத்தல், பாய்கள், கூடைகள் முடைவதுபோன்ற கைவினைப் பொருள்கள் செய்கின்றார்கள்.

நிகோபார் மக்களின் தொழில்களும், அவர்கள் எல்லோரும் மேற்கொள்ளும் தொழில் இயல்புகளும் ஒரே மாதிரியாகவே இருக்கின்றன. வெவ்வேறு தொழிலாளிகள், அதாவது தையற் காரர்கள், முடிவெட்டுபவர்கள், தச்சர்கள், கொத்தர்கள், கொல்லர்கள் என்று இல்லை. எல்லோருக்கும் தொழில் திறன் உண்டு, குறிப்பாகத் தச்சுவேலை தெரியும். அரசாங்கத் துறைகளில் ஆசிரியர்களாக, மருத்துவத் துறை உதவியாளர்களாக, கிராமத் துறை ஊழியர்களாக, கால்நடை வைத்திய உதவியாளராக, வண்டியோட்டுபவர்களாக, ஏவலாளராக, கடிதங்கள் கொண்டு செல்வோராக, மதாலயப் பணிகளில் ஈடுபட்ட பாதிரிகளாக, வர்த்தக நிறுவனங்களில் பணிபுரியும் விற்பனையாளராக, எழுத் தராக உள்ளோர்களே வேறு ஊழியம் செய்பவர்களாக இருக்கின்றார்கள். அவர்களும் வீடு திரும்பியவுடன், கிராமத்தில் தங்களுக்குள்ள அன்றாட வேலைகளைக் கவனித்துச் செய்துதான் ஆகவேண்டும். சில சமயங்களில் பயிர் காலங்களில், அதாவது மே மாதவாக்கில் பயிர் வேலைகளுக்காக, கிராமத்தில் உள்ள அனைவரும் ஒன்றாகத் திரளவேண்டிய நேரத்தில், வெளி ஊர்களில் வேலை செய்பவர்கள்கூட, கிராமத்தில் இருக்கும் வேலைகளுக்காக, அவர்கள் விடுமுறை எடுத்துக்கொண்டு வரவேண்டும்.

பெண்களும், ஆண்களைப்போலவே தோட்டங்கள், தோப்புக் களைப் பேணுதல், விறகு சேகரித்தல், தண்ணீர் இழுத்தல் போன்ற வெளி வேலைகளிலும் ஈடுபடுகின்றார்கள். எனினும்,

அவர்கள் ஆண்கள் ஈடுபடக்கூடிய கடின வேலைகளான வீடு கட்டுதல், கிணறு தோண்டுதல், பெரிய சுமைகளைச் சுமத்தல், ஆழ்கடலில் மீன் பிடித்தல் ஆகியவைகளைச் செய்வதில்லை. அவர்கள் வீட்டு வேலைகளை அதிகமாகச் செய்கிறார்கள். சமைத்தல், துணிகள் துவைத்தல், வீடுகளைத் துப்புரவாக்குதல், குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளல் போன்ற வேலைகளைச் செய்கின்றார்கள். உண்மையில் நிகோபார் பெண்கள், ஆண்களை விட அதிக வேலை செய்கின்றார்கள்.

### விவசாயப் பழக்கவழக்கங்கள்

நிகோபார் மக்களின் விவசாயத் தொழில் முறை வெகு சாதாரணமானது. வெப்பமண்டல தட்பவெப்ப நிலைமையையும், நல்ல மண் வளத்தையும் நன்கு பயன்படுத்திக்கொண்டு செழிப்பான விளைச்சலை அடைகின்றார்கள். விதை விதைத்தவுடன், அதிக கவனிப்பில்லாமல், தானே முளைத்து வளரும் செடிகள் அல்லது மரங்களையே அவர்கள் பயிர்செய்து வளர்க்கின்றார்கள்.

ஓர் அர்த்தத்தில் பார்த்தால், அவர்களின் விவசாய வளமை முறை நன்கு அமைந்துள்ளது என்று கூறலாம். அவர்கள் மண்ணின் அமைப்பை மாற்றுவதில்லை. வெப்பமண்டலத் தன்மை ஓங்கியுள்ளதால், அங்கு அதிகம் தோண்டவோ, பள்ளங்கள் வெட்டவோ செய்தால், மேல் மண் பெருமழையில் கரைந்து மண் அரிப்பு ஏற்பட்டுவிடக்கூடும்.

நிகோபார் மக்கள் பயிரிட விரும்பினால், தகுந்த நிலத்தைத் தேர்ந்தெடுக்கின்றார்கள். அது அரை ஏக்கராகவும் இருக்கலாம், அநேக ஏக்கர்களாகவும் இருக்கலாம். நிலம் அவர்களுக்குச் சொந்தமாகயில்லாவிட்டால், நிலத்தின் சொந்தக்காரரிடம், அதைப் பயன்படுத்த அனுமதி கேட்கின்றார்கள். பின்னர் குடும்பத்தில் உள்ள திடமானவர்கள் ஒன்றுசேர்ந்து, பூண்டு புதர்களை வெட்டி வீழ்த்தி அகற்றுகின்றார்கள். சிறிய மரங்களும் வெட்டி வீழ்த்தப்படுகின்றன. ஆனால் பெரிய மரங்களை அப்படியே விட்டு விடுகின்றார்கள்.

பின்னர் வேலி அமைப்பு. வேலி இல்லாவிட்டால் பன்றிகள் புகுந்து இளம்பயிர்களை அழித்துவிடுகின்றன. சில சமயங்களில் காடுகளைத் திருத்திக் கழனிகளாக்கும் பணிகளில், கிராமம் முழுவதுமே ஈடுபட்டிருக்கும் நேரத்தில், பன்றிகளையெல்லாம் காட்டுக்குள் துரத்திப் பார்த்துக்கொள்ளும்படி சிலரை ஏவி

விடுகின்றூர்கள். வேலிகளை அமைத்து விதைகள் நடும் வரை, அவைகள் புகுந்து நாசம் விளைவிக்காதபடி, அவ்வாறு செய்கின்றூர்கள்.

முப்பது அல்லது நாற்பது வருடங்களுக்குமுன் பயிர்செய்யப்பட்ட தென்னை மரங்கள் ஈன்றுமலிருந்தால், அந்த நிலத்தில் இருக்கும் மரங்கள் வெட்டப்படுகின்றன. அங்குத் தென்னை மரங்கள் இல்லாமல் வேறு மரங்கள் இருந்தால், அம்மரங்களை வெட்டி அவைகளை வேலி அமைக்கப் பயன்படுத்திக்கொள்ளுகின்றூர்கள். கிளைகளை 8 அடி நீளத்திற்கு வெட்டி, அவைகளைப் பிளந்துப் புதிய தோட்டத்திற்கு வேலி அமைக்கின்றூர்கள். வேண்டிய



கட்டைகளை மாத்திரம் எடுத்துக்கொண்டு மற்றவைகளை எரித்துச் சாம்பலாக்கிவிடுகிறூர்கள். அந்தச் சாம்பலும் நல்ல உரமாகி விடுகின்றது. 10 அல்லது 12 அங்குல இடைவெளி விட்டு இரண்டு கம்புகளை நிலத்தில் 2 அடி ஆழத்தில் நடுகின்றூர்கள். இவ்வாறு 6 அடிக்கு இரண்டு கம்புகளாக இடமும், வலமும் மாறி மாறி நடுகின்றூர்கள். பின்னர் ஜோடி ஜோடியான கம்புகளுக்கு இடையே, பிளந்த கட்டைகளை அல்லது தென்னை மரச் செதுப்புக்களை இடமும், வலமும் மாறி மாறி வைக்கின்றூர்கள். 4 அடி உயரத்திற்கு (பன்றிகளும், ஆடுகளும் தாண்ட முடியாத உயரம்) வேலி வந்துவிட்டால், இடைக்கட்டைகளைப் பிரம்பு அல்லது நார்கொண்டு இறுகக் கட்டிவிடுகின்றூர்கள். இவ்வாறே அந் நிலத்தின் எல்லை முழுவதும் வேலி அமைக்கப்படுகின்றது. வாயில் கதவு எதுவும் அமைப்பதில்லை. தோட்டத்திற்குள் போய் வரும் போது, கதவை மூட மறந்துவிடுவார்களோ என்ற ஐயம் போலும்! தோட்டத்திற்குள் நுழைவதற்கு வசதியாக ஒரு மூலையில், மேலே இருக்கும் இடைக்கட்டைகளை நீக்கிவிடும் முறையில் வைத்திருக்கிறூர்கள். அந்தக் கட்டைகளை நீக்கிவிட்டு, ஒருவர் தோட்டத்துக்குள் நுழைந்து திரும்பலாம்.

போதுமான வேலையாட்கள் கிடைக்காதபொழுது, நிலத்தைக் கொஞ்ச நாட்களுக்குப் பயன்படுத்தவேண்டியிருந்தால், அதாவது

விரைவில் பலன் தரும் பயிர்களைச் சாகுபடி செய்ய விரும்பினால், தற்காலிகமாக வேலி போடுகின்றார்கள். மரக் குச்சிகளை நெருக்கமாக நிலத்தில் ஊன்றி வேலி அமைக்கின்றார்கள்.

மழை ஆரம்பமாகும் காலத்தில், அதாவது மே மாத மத்தியில் உழவர்கள் (சில சமயம் அவர்களுடைய நண்பர்களும் உதவி செய்ய) விதை விதைக்கின்றார்கள். தென்னை, வெற்றிலை, சேனைக்கிழங்கு ஆகியவைகளை வெவ்வேறு விதமாகப் பயிரிடுகின்றார்கள். தென்னை, சேனைக்கிழங்கு, வாழை ஆகியவைகளை ஒரே தோப்பிலேயே சேர்த்துப் பயிரிடுவதும் சாதாரணமானது. கன்றுகளை நடுவதற்கு முன்னர் அரை அடி ஆழத்திற்கு மண் வெட்டியாலோ அல்லது மூங்கிற்கழிகளாலோ தோண்டுகின்றார்கள்.

நிலங்களை மாற்றி மாற்றி சாகுபடி செய்கின்றார்கள். சேனை, வாழை, பப்பய்யா விரைவில் பலன் தந்துவிடுகின்றன. அந்த நிலத்திலேயே, அவைகளையே இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்குத் திரும்பத் திரும்ப சாகுபடி செய்கின்றார்கள். பின்னர் அந்தப் பகுதியைத் தரிசாகப் போட்டுவிட்டு, மற்ற பகுதியில் அவைகளைப் பயிர் செய்கின்றார்கள். சில ஆண்டுகளுக்கு தரிசாக விடுவதால், அப்பகுதியில் தாவரக் கலப்பு உரமும், மண்ணும் சேர்ந்து மண்வளம் மிகுந்த பின்னர் சாகுபடி செய்யத் தகுந்ததாகிவிடுகின்றது.

ஒரு தரம் கன்றுகளை நட்டவுடன், அவர்கள் அப்புறம் கவனம் செலுத்துவதில்லை. வருடம் முழுவதும் பன்றிகளின் தொல்லையைத் தடுக்க வேலியும் பலமாக இருக்கின்றது. சேனையும், மற்றும் சில காய்கறி வகைகளும் ஒரு வருடத்தில் பலன் தருகின்றன. ஆனால் அங்குத் தென்னை இருந்தால், வேலியைப் பழுது பார்த்து, தென்னங் கன்றுகள் நன்கு வளர்ந்து, பன்றிகளுக்கும், ஆடுகளுக்கும் எட்டாத உயரம் வளரும் வரை, வேலியை இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் வரை சீர்ப்படுத்திக்கொண்டிருக்கின்றார்கள். சாதாரணமாக உரமிடுவது கிடையாது. ரசாயன உரம் என்பதே இல்லை. தண்ணீர் பாய்ச்சுவதும் கிடையாது. எப்பொழுதாவது ஒரு முறை களை எடுக்கப்படுகின்றது. இதைத் தவிர அவர்கள் தங்கள் சாகுபடிபற்றி எந்த கவனமும் செலுத்துவது இல்லை.

நிகோபார் மக்கள் பெரும்பாலும் நம்பியிருப்பது தென்னை மரங்கள். தென்னை மரம் அந்தத் தீவுக்கு எப்படி வந்தது?

வெளியிலிருந்தா அல்லது அங்கேயே விளைந்ததா என்பது தெரியாது. அத்தீவுகளில் ஆண்டாண்டு காலமாக இருந்து வந்தது என்பது மாத்திரம் உறுதி. தென்னை மரத்தின் பூர்வீகம்பற்றிய குறிப்பு ஒன்று நிகோபார் தீவுகளில் வழங்கும் நாடோடிக் கதைகளில் காணப்படுகின்றது: ஒரு காலத்தில் ஒரு மனிதன் மந்திர தந்திர வித்தைகள் செய்துவந்தான். அவன் முழங்கை வழியே தண்ணீர் வரச்செய்து காட்டுவான். அவன் பயங்கரமானவன், அவனைப் பேய் பிடித்திருக்கின்றது என்று கருதினார்கள். அதனால் அவன் தலையை வெட்டிக் காட்டில் எறிந்துவிட்டார்கள். சில காலத்திற்குப் பின்னர் அவனுடைய மண்டையோட்டிலிருந்து ஒரு மரம் தோன்றியது. அம்மரத்தின் பழங்கள், மனிதனின் தலையளவு பெரிதாக இருந்தன. அப்பழங்களில் நிறைய நீர் இருந்தது. அப்பொழுது அத்தீவில் தண்ணீர் தட்டுப்பாடு ஏற்பட்டது. இருந்தாலும் அந்த மரத்தின் (தென்னை மரத்தின்) பழங்களில் உள்ள தண்ணீரைக் குடிக்க விரும்பவில்லை. ஆனால் ஒரு நாள் ஒரு நோயாளி மனிதன் சாகும்தறுவாயில் இருந்தான். கொடிய தண்ணீர்தாகம் அவனுக்கு. அந்தத் தென்னையின் நீர் சிறிது கொடுக்கப்பட்டது. அவன் உடல் நலம் தேறினான். அது முதலாக நோயாளிகள் தென்னையின் இளநீர் குடிக்க ஆரம்பித்தார்கள். பின்னர் காலாகாலத்தில் எல்லோரும் தென்னையின் நீரை அருந்தத் துவங்கினார்கள்.

மக்கள் நிறைந்த கார் நிகோபார், சோவ்ரா போன்ற தீவுகளில் கடற்கரையோரமாக இரண்டு அல்லது மூன்று மைல் பரப்பில் தென்னை மரங்கள் அடர்த்தியாக வளருகின்றன. இப்பொழுது கடற்கரையோரமாகத் தென்னை மரங்கள் நிறைந்துவிட்டதால், உட்பகுதிகளில், நல்ல வடிகால் உள்ள இடங்களில் தென்னை பயிரிடத் துவங்கியிருக்கின்றார்கள்.

நிகோபார் மக்கள் தென்னை பயிரிட விரும்பினால், வித்துக்காக நல்ல பெரிய அளவு தேங்காய்கள் தரும் மரங்களைத் தேர்ந்தெடுத்து ஒதுக்கிவிடுகின்றார்கள். மழை கால ஆரம்பத்தில் நடவு வேலைகளைத் துவங்குகின்றார்கள். நிலத்தைத் தயார் செய்து குருத்துவிடும் காய்களைப் பக்கவாட்டில் வைத்துப் பாதியை மண்ணால் மூடுகின்றார்கள். முளைத்து வரும் குருத்து மேல் நோக்கியிருக்க வேண்டுமென்பதில் மிகுந்த அக்கறை காட்டுகின்றார்கள். அப்பொழுது அது நெடிது உயரப் பருத்து வளருகின்றது. சில சமயங்களில் மரங்கள் மிகவும் பருத்து வளர்ந்து,

தனிப்பட்ட மரங்களின் வளர்ச்சியைக் குறைக்கின்றன. ஒரே சமயத்தில் நூற்றுக்கணக்கான கன்றுகள் நடப்படுகின்றன. சரிவர கவனிக்காததினுல் சில மரங்கள் பட்டுவிடுகின்றன. இருந்தாலும் அநேக மரங்கள் நல்ல மண் வளத்தினுலும், சாதகமான தட்பவெட்ப நிலையினுலும் செழித்து வளருகின்றன.

நிகோபார் தீவுகளில் தென்னைகள் எல்லாம் அடிப்படையில் ஒரே வகையானவை. சிறு வேறுபாடுகள் இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஏழு வேறு வகையான தென்னைகள் உள்ளதாக சிலர் பிரித்துக் கூறுகின்றனர். சில குட்டையான மரங்கள் 10 அல்லது 15 அடி உயரமே வளரக்கூடியவை இருக்கின்றன. ஆனுல் அநேக மரங்கள் 50 அல்லது 60 அடி உயரம் வானுயர வளர்ந்து நிற்கின்றன. காய்களின் நிறமும் பச்சை, மஞ்சள், சிவப்பு, பழுப்பு என்றும் மாறுபடுகின்றன. தேங்காய் உருவம் மிக நீண்டதாயும் இருக்கின்றன. அவைகளை 'ஹுக்கா' செய்வதற்காக இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்து வந்தார்கள். அளவும் வேறுபட்டிருக்கின்றன. சில காய்கள் மிகப் பெரியதாகவும், சில சமயங்களில் மிகச் சிறியதாகவும் கிடைக்கின்றன.

இத் தென்னைகளில் கிடைக்கும் எல்லாக் காய்களுமே குடிப்பதற்கும் தின்பதற்கும் கொப்பரைக்கும் ஏற்றதாகயிருக்கின்றன. எனினும், சில மரங்களின் காய்களை இளநீருக்காகவே விட்டுவிடுகின்றனர். ஏனென்முல், அந்தக் காய்களின் நீர் மற்றவைகளைவிட நல்ல இனிப்பாக இருக்கின்றது.

20 ஆண்டுகளுக்கு முன்னர், இத்தீவுகளுக்குக் கொண்டுவரப்பட்ட 'அலங்காரத் தென்னை' (King Coconut) எனப்படும் வேறுபட்ட வகையில் ஒரு சில மரங்களே இருக்கின்றன. இம் மரங்கள் 15 அல்லது 20 அடி உயரத்திற்குமேல் வளருவதில்லை. இதன் காய்கள் மஞ்சள் நிறமாகயிருக்கின்றன. அதன் விளைச்சலும் குறைவு; அதிக ஆண்டுகளும் இருப்பதில்லை. அதனுல் அவைகளைத் தோப்புக்களில் வளர்ப்பதில்லை. ஆனுல் பார்ப்பதற்கு அழகாகயிருப்பதால், சிலர் தங்கள் வீட்டருகே ஓரிரு மரங்களை வளர்க்கின்முர்கள்.

தென்னை மரங்கள் இங்கு நல்ல விளைச்சலைத் தருகின்றன. சாதாரண நிகோபார் மரங்கள், நட்டு ஏழு ஆண்டுகளுக்குப் பின்னர் பலனுக்கு வருகின்றன. அவை நீண்டகாலம் வளர்ந்து ஒவ்வொரு குலையும் 7 முதல் 14 காய்களைத் தள்ளுகின்றன. 8 முதல் 10 மாதங்களுக்குள் காய்கள் பலனுக்கு வருகின்றன.

அம்மரங்களின் சராசரி வயது 80 அல்லது 90 ஆண்டுகள். ஒவ்வொரு மரமும் ஆண்டு ஒன்றுக்கு இரண்டு தடவை சராசரி ஒவ்வொரு தரமும் 50 காய்களைத் தருகின்றன. காய்களைப் பிடுங்கக் குறிப்பிட்ட காலம் எதுவும் இல்லை. வருடம் முழுவதும் முற்றிய காய்கள் கிடைத்துக்கொண்டே இருக்கும்.

முதலில் குறிப்பிட்டதுபோல், தென்னையின் விளைச்சல் எலிகளாலும், வண்டுகள் போன்ற பூச்சிகளாலும் பாதிக்கப்படுகின்றன. வண்டுகளை விழுங்கும் நல்லதொரு பணியைப் பன்றிகள் செய்து வந்தாலும், சுமார் 10 சதவிகிதமான காய்கள் பூச்சிகளால் நாசமாகிவிடுகின்றன.

நிகோபாரர் மக்கள் எல்லா மரங்களிலிருந்தும் முற்றிய காய்களை ஒழுங்காகப் பறிப்பதில்லை. ஒரு குடும்பத்திற்குச் சேர்ந்த தோப்புக்கள் தீவின் பல இடங்களிலும் பரவியிருப்பதால் குடும்பத்தின் உறுப்பினர்கள் எல்லா மரங்களையும் அன்ருடம் போய் பார்த்து முற்றிய காய்களைப் பறிக்க முடியாமையே உண்மையாக இருக்கலாம். அதனுல் முற்றிய காய்கள் கீழே விழுந்து குவிந்துவிடுவதுண்டு. மற்றவர்கள் அவைகளைத் தொடுவதில்லை. இரைத் தேடிச் செல்லும் பன்றிகள் அவற்றை நாசப் படுத்தாவிட்டால், சில நாட்களுக்குப் பின்னர், குடும்பத்தின் சொந்தக்காரர்கள் அவற்றைச் சேகரித்துச் செல்லுகின்றனர். அந்தக் காய்கள் கொப்பரைக்கும் அல்லது பன்றிகளுக்குத் தீனியாகவும் ஆகின்றன. அவர்களின் உணவுக்கும், குடிப்பதற்கும் வேண்டுமானுல், அப்போதைக்கப்போது மரத்திலிருந்து காய்களைப் பிடுங்கிக்கொள்ளுகின்ருர்கள்.

நிகோபாரர் மக்களில் ஆண்களும், பெண்களும் தென்னை மரங்கள்மீது சுலபமாக ஏறுகின்ருர்கள். பெண்கள் வெகு அரிதாக ஏறுகின்ருர்கள். பனை ஓலைகளைக் கயிறுபோல் பின்னி வளையம் மாதிரி செய்து, கால்களில் மாட்டிக்கொண்டு ஏறுகின்ருர்கள். காய்களை அறுக்கக் கையில் ஒரு சிறு அரிவாளையும் கொண்டுசெல்கின்ருர்கள். அரிவாளைச் சில சமயம் வாயில் கவ்விக்கொள்ளுகின்ருர்கள் அல்லது கைகளில் வைத்துக்கொண்டு ஏறுகின்ருர்கள்.

கள்ளுக்கான மரங்களில் ஏறுவதில் சிறிது வேறுபாடு இருக்கின்றது. கயிறுபோன்ற வளையங்களைக் கால்களில் மாட்டிக்கொள்வதில்லை. மரத்திலேயே கால்கள் வைப்பதற்கு வசதியாகத் தவணைகள் வெட்டிக்கொள்ளுகின்ருர்கள். வெட்டுவதால் மரம்

பாதிக்கப்பட்டாலும், ஏறுவது சுலபமாக இருக்கின்றது. ஒரு கையில் கள் பானையுடன் மிக நம்பிக்கையுடன் இறங்குவதற்கு வெகு எளிதாகயிருக்கின்றது.

நிகோபார் மக்களின் முக்கிய ஆதாரமே தென்னை. மரத்தின் ஒவ்வொரு பகுதியும் பயனுகின்றது. அடிமரம் வீட்டுக் கால் களாகவும், வீடுகள் கட்டுவதற்கும்; வேலி அமைப்பதற்கு மரத் தின் துண்டுகளும் பயன்படுகின்றன. தென்னை ஓலைகளைக் கொண்டு குடிசைகளுக்கு வேயக் கீற்றுகளும், பாய்களும் பின்னப் படுகின்றன. இரவில் எரி பந்தங்களாகவும், படகுகளுக்குப் பாய்மரங்களாகவும் உபயோகமாகின்றன. காய்ந்த ஓலையைக் கொண்டு கரையின்மேல் இருக்கும் படகுகளை மூடிவைக்கின்றார் கள். தென்னையின் இளங் குருத்துக்களை விழாக்காலங்களில் பயன்படுத்துகின்றனர். பசுமையான இளங் குருத்து என்றால் நிகோபார் மக்களின் குதூகலமான கொண்டாட்டத்தின் அடை யாளமாகயிருக்கும். பாளையிலிருந்து பாய்மரம், பொம்மைப் படகுகள் செய்யப்படுகின்றன. தேங்காய் மூடிகளைத் தண்ணீர் எடுக்கவும், கள் குடிக்கும் கலயமாகவும் பயன்படுத்துகின்றார்கள். எரிக்கவும் பயனுகின்றன. மட்டைகளும் எரிபொருளாகின்றன. சில சமயங்களிலேயே பூமியில் புதைத்து உரமாக்குகின்றார்கள். தேங்காய் மக்களுக்கு உணவாகவும், நீர் குடிப்பதற்கும் ஆகின் றன. அவர்களுடைய வீட்டு விலங்குகளான பன்றி, கோழி முதலானவைகளுக்கும் முக்கிய உணவாகத் தேங்காய் இருக்கின் றது. கொப்பரைக் காய்களிலிருந்து எண்ணெய் எடுத்து சமைக்க வும், உடலைத் தேய்த்துக்கொள்ளவும், விளக்கு எரிக்கவும், மருந்துகளுக்கும் பயன்படுத்துகின்றார்கள். எல்லாவற்றிற்கும் மேலாகக் கொப்பரையே, நிகோபார் மக்களின் முக்கிய வர்த்த கப் பொருளாக இருக்கின்றது. அவர்களின் அன்றாடத் தேவை களை வாங்குவதற்கு கைமேல் பணம் தரும் பொருளாகவும் முக்கியமாக விளங்குகின்றது. நிகோபார் மக்கள் தென்னையைத் தாயாகக் கருதுகின்றார்கள். அதன் மேன்மைபற்றியும், சிறப்பு பற்றியும் அழகான பாடல்கள் பல இருக்கின்றன.

தென்னைக்கு அடுத்தபடியாக, மக்களின் பொருளாதார ரீதியில் பார்த்தால் பாக்கு மரம் இடம்பெறுகின்றது. அதிலிருந்தே பாக்கு கிடைக்கின்றது. அது ஓர் அழகான மரம். 20 அடி உயரம் வளருகின்றது. பளபளக்கும் பச்சை நிறமான ஓலை களுடன் மெல்லியதாக, ஆனல் கம்பீரமுடன் நிற்பது,

தென்னையைவிட அழகாகயிருக்கும் இம்மரங்கள், உட்பகுதிகளில் ஈரம் மிகுந்த களிப்பு நிலங்களில் நன்கு வளருகின்றன. பாக்குக் கன்றுகளை (தனியே உற்பத்தி செய்கின்றார்கள்) ஒரு சரிவுக்குக் கீழ் (தேங்கி நிற்கும் தண்ணீர் கிடைக்கும் என்பதற்காக) நடுகின்றார்கள். நிலத்தில் விழும் விதைகள் மழை நீரில் அடித்துச் செல்லப்பட்டு, செழிப்பான மண் கண்டத்தில் ஒதுங்குமிடங்களில், முளைத்து மரங்களாக இயற்கையாகவே நன்கு வளருகின்றன.

பாக்குக் கன்றுகள் நடப்பட்டு ஆறு அல்லது ஏழு ஆண்டுகளுக்குப் பின்னர் பலனுக்கு வருகின்றன. வருடத்திற்கு ஒரு முறையே பலன் தருகின்றன. காய்களை ஜனவரி முதல் ஜூலை மாதம்வரை பறிக்கின்றார்கள். அதன் காய்கள் முட்டை வடிவத்தில் ஒன்று முதல் இரண்டு அங்குல நீளத்தில் குலைகுலையாகக் காய்க்கும். காய்கள் முற்றிவிட்டதென்றால், அவைகளின் பச்சையான தோல் மஞ்சளாக மாறிவிடும். அப்பொழுது காய்களைப் பறித்து வீடுகளுக்கு எடுத்துச் செல்லுகின்றார்கள். அவைகளை இரண்டாகப் பிளக்கின்றார்கள். பிளந்த காய்களை வெயிலில் காயவைத்து, அவைகள் நன்றாகக் காய்ந்தவுடன் பாக்குக் கொட்டைகளைத் தோண்டியெடுத்து மேலும் உலரவைக்கின்றார்கள். பாக்குக் கொட்டைகள் நன்கு உலரவேண்டியது மிக அவசியம். இல்லாவிட்டால், ஒரு சிறிய துண்டைச் சாப்பிட்டாலும் மயக்கம் வந்துவிடும். உலர்ந்த பாக்குக் கொட்டைகளை கிராமத்தில் உள்ள ஆதாரக் கூட்டுறவுச் சங்கத்திற்கு எடுத்துச் செல்லுகின்றார்கள். அங்கு அரசாங்கம் நிர்ணயித்திருக்கும் குறைந்தபட்ச விலையான கிலோ ரூ. 2·20 என்று விற்கப்படுகின்றது.

தேங்காயைவிடப் பாக்குக்கு அதிக விலை கிடைக்கின்றது. ஆனால் விளைச்சல் அவ்வளவு இல்லை. மேலும், தென்னையைக் காட்டிலும் பாக்கு மரங்கள் அதிக காலம் இருப்பதில்லை. அதன் சராசரி வயது 40 அல்லது 50 ஆண்டுகள். பாக்குக் கொட்டைகளை உலர்த்துவதற்கு முன்னர் இரண்டாகப் பிளந்துவிடுவதால், முழுமையான கொட்டைகளே தீவுகளில் கிடைப்பதில்லை. பாதியாகப் பிளக்கப்பட்ட பாக்குகளுக்கு முழுப் பாக்குகளுக்கு கிடைக்கும் விலை கிடைப்பதில்லை. ஆனால் முழுக் கொட்டையாக எடுப்பதென்றால் பாடு அதிகம். அதனால் மக்கள் பாதியையே விரும்புகின்றனர்.

நிகோபார் மக்களுக்கு ரொக்கமாகப் பணம் கிடைக்க வகை செய்யும் தேங்காயும், பாக்கும் அல்லாமல், அவர்கள் அன்றாட உணவுக்காக பழவகைகளையும், காய்கறிகளையும் பயிர் செய்கின்றார்கள். காய்கறிப் பழத் தோட்டங்கள் உட்பகுதிகளில் களிப்பான பூமிகளில், அழுகிய தாவர உரச்சத்து நிறைந்த இடங்களில் இருக்கின்றன.

சேனைக்கிழங்கை சிறு துண்டுகளாக வெட்டி, பூமியில் மண் கொத்திகளைக்கொண்டோ, மூங்கிற் கழிகளைக்கொண்டோ, ஆறு அங்குலம் தோண்டி நடுகின்றார்கள். இந்த நடவில் குடும்பம் அனைத்துமே ஈடுபடுகின்றது. பின்னர் அவை தானாகவே வளர்ந்து விடுகின்றன. அதன் பரந்த பெரிய இலைகள் பயிரிட்ட தோட்டத்தையே மறைத்துவிடுகின்றன. ஏழு, எட்டு மாதங்களில் கிழங்கு திரண்டுவிடுகின்றது. மே மாதத்தில் விதைக்கப்பட்ட கிழங்கு டிசம்பர் மாதத்தில் பலன் தருகின்றது. திரண்ட கிழங்குகளைத் தோண்டியெடுப்பதிலும் குடும்பம் அனைத்தும் ஈடுபடுகின்றது. அவைகளை வீடுகளுக்கு எடுத்துச்சென்று மாடிப்பரண்களில் சேமித்துவைக்கின்றார்கள். அவை மாதக்கணக்கில் நன்றாகயிருக்கின்றன. அவைகளில் சில சாப்பிடும்பொழுது வாய் அரித்தாலும், மக்கள் அவைகளை விரும்பிச் சாப்பிடுகின்றார்கள்.

வாழையும், பப்பய்யாவும் ஒரே மாதிரியாகவே நடப்படுகின்றன. அவை ஒரு வருடத்தில் பலன் தருகின்றன. பழுக்காத முன்னர், அவைகளைக் காய்கறிப் பொருளாகவும் பயன்படுத்துகின்றனர். தங்கள் தோட்டங்களில் வேலிகளை அமைத்த பின்னர், மற்ற பழவகைகளையும், காய்கறி வகைகளையும் அதே முறையில் வளர்க்கின்றார்கள். வேலிகள் ஒரு வருடத்திற்குமேல் இருப்பதில்லை. மரங்கள் இயற்கையாகவே வளர்கின்றன. பல மரங்கள் பலன் தரும் சமயங்களில், வேலிகளும் இல்லாமல், அவைகள் பயிரிட்ட தோப்புகள்போலவே தெரிவதில்லை. களைகளும் ஏறி, சுற்றிலும் புதரும், புல்லுமாக இருக்கும் காட்சியில் அப்பழ மரங்கள் காட்டு மரங்களாக வளர்ந்துவிட்டதுபோல் தென்படுகின்றன.

சமீபத்தில் விவசாயத் துறையின் முயற்சியின்பேரில், மூன்றாவது அத்தியாயத்தில் கூறப்பட்ட புதுவகை காய்கறிச் செடிகளும், பழ வகைகளும் இடம்பெற்றுள்ளன. கார் நிகோபாரில் தலைமை அலுவலகப் பகுதியில் 15 ஏகர் நிலத்தில் ஒரு பழத்தோட்டம் அமைக்கப்பட்டுள்ளது. அங்குக் காய்கறிச் செடிகளும், பழ

வகைச் செடிகளும், மரங்களும், மற்றப் பயிர்களும் பரிசோதனை முறையில் வளர்க்கப்பட்டு வருகின்றன. எனினும், காய்கறிகளை யும், பழ வகைகளையும் வளர்க்க அரசாங்கம் தரும் வசதிகளையும், வாய்ப்புகளையும் நிகோபார் மக்கள் முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. அதனால் அவர்கள் மற்ற காய்கறிகளையும், பழங்களையும் விரும்பவில்லை என்று அர்த்தமில்லை. அவர்களின் பரம்பரைப் பயிர்களான தென்னை, வாழை, பப்பய்யா, சேனைக் கிழங்கு ஆகியவைகளை கவனிப்பது போலவே புதுவகைக் காய் கறிப் பழச்செடிகளையும் கவனிக்க விரும்புகின்றார்கள். புதிய வகைகளுக்குக் கவனிப்பு மிகுதியும் தேவை. நிகோபாரில் பரம்பரையாக வளரும் பயிர் வகைகளைப்போல் இயல்பாக வளர்ந்து புதிதாக வருடாவருடம் விதைக்கப்படும் புதிய வகை காய்கறிச் செடிகளும், பழவகை நாத்துக்களும் வாடி வதங்கி விடுகின்றன. அதனால் எப்பொழுதாவது ஒரு முறையே இந்தக் காய்கறிகள் அவர்களுக்குக் கிடைக்கின்றன. விற்பனை செய்யக் கூடிய அளவில் எதுவும் கிடைப்பதில்லை.

கூலங்கள் எதுவும் பயிர்செய்யப்படுவதில்லை. கார் நிகோபாரில் உள்ள பழத்தோட்டத்தில் பரிசோதனை முறையில் நெல் விளை விக்கப்பட்டது. முடிவுகள் மிக நன்றாக இருந்தன. எனினும் ஓரிரு நிகோபார்வாசிகள் தங்கள் நிலங்களில் சிறிது பயிரிட்டுப் பார்த்தபொழுது விளைச்சல் மிக மோசமாக இருந்தது. கட்சால் தீவில், தீவின் பழங்குடிகளின் தலைவியாக உள்ள ராணி சங்கா கணிசமாக நெல் விளைவிக்கின்றார். இந்தியாவில் இருந்துவந்த கூலியாட்கள், அந்த நிலத்தில் வேலை செய்கிறார்கள். அதனா லேயே அங்கு நல்ல விளைச்சல். நிகோபார் மக்களுக்கு நெல் பயிரிடத் தெரியவில்லை என்றே கூறவேண்டும். நெல் பயிரிட, கவனிப்பு மிகுதியும் வேண்டும். விளைச்சலை எடுக்கும்வரை, அக்கறையுடன் பாடுபட்டுக்கொண்டே இருக்கவேண்டும். பரம் பரையாக சாதாரண உழவு முறைகளை மாத்திரமே தெரிந்த நிகோபார் மக்கள், விரைவில் என்றாவது நெல் சாகுபடியில் ஈடுபடுவார்களா என்பது சந்தேகமே!

கூலங்களில் என்றால், இத்தீவுகளில் மிகச் சுலபமாக விளை விக்கக்கூடியவைகளில், மிக முக்கியமானது மக்காச்சோளம். அதற்கு மண்வளமும், தட்பவெப்ப நிலையும் மிக நன்றாக அமைந் துள்ளது. அதற்கு தனித்த கவனிப்பும் அவசியமில்லை. வருடத் தில் இரண்டு அல்லது மூன்று முறை மக்காச்சோளம் அறுவடை

செய்யலாம். எப்பொழுதாவது ஒரு முறை மக்காச்சோளத்தை, நிகோபார்வாசிகள் பயிரிடும்பொழுது, அவை வெகு நன்ருக வளருகின்றன. மக்காச்சோள ருசியையும் அம்மக்கள் விரும்பு கின்ருர்கள். பன்றிகளுக்கும் அவை மிக நல்ல உணவாக அமை கின்றது. அரசாங்கம் மக்காச்சோளம் பயிரிட ஊக்கம் அளித் தாலும், அவர்கள் போதுமான அளவு விளைவிக்க முன்வர வில்லை. அதற்கான முயற்சி செய்ய அவர்கள் விரும்புவதில்லை.

## கொப்பரை எடுத்தல்

கொப்பரை எடுப்பதில் இரு வழிகள் உள்ளன. நல்ல முற்றிய தேங்காயை, மட்டைகளை நீக்கி, காயை உடைத்து, பருப்புடன் இரு பகுதிகளையும் ஒரு பாயில் பரப்பி வெயிலில் உலர்த்த வேண்டும். தேங்காய்ப் பருப்புகள் நன்ருகக் காய்ந்துவிட்டால், ஓட்டிலிருந்து அதைக் கத்தியால் நீக்கி, மேலும் அதை 7 முதல் 10 நாட்களுக்கு வெயிலில் உலர்த்திஞல், கொப்பரை ஆகிவிடு கின்றது. இந்தக் கொப்பரை வெளிறிய மஞ்சள் நிறமாக இருக்கும். இதிலிருந்து கிடைக்கும் எண்ணெய் தரமானதாக வும் இருக்கின்றது. இதற்கு இந்தியாவிலும் கூடுதலான விலை கிடைக்கின்றது. இருந்தாலும், இந்த முறையில் கொப்பரையை எடுப்பது கடினமாகயிருக்கின்றது. தொடர்ந்தாற்போல் வெயில் அடிக்கவேண்டியிருக்கின்றது. மார்ச், ஏப்ரல் மாதங்களில், சில சமயம் அக்டோபரிலிருந்து பிப்ரவரி மாதம் வரையே தொடர்ந்து வெயில் அடிக்கின்றது. அதஞலேயே மிக அதிகமாகக் கொப்பரை தயாரிக்க முடிவதில்லை.

தேங்காய்ப் பருப்புகளை தீயில் வாட்டியே பெருமளவில் கொப்பரை தயாரிக்கின்ருர்கள். இதற்காக, மரத்தின் கால்களை நட்டு, ஐந்தடி உயரத்தில் ஒரு மேடை தயாரிக்கின்ருர்கள். மேடைமீது மூங்கில்களையும். குச்சிகளையும், தென்னை மட்டை களையும் பரப்புகின்ருர்கள். அதன்மீது பருப்புகளுடன் கூடிய தேங்காய் மூடிகளை அடுக்கடுக்காக 5 அல்லது 6 வரிசை வைக் கின்ருர்கள். அடியில் இருக்கும் மூடிகள் கீழ்நோக்கியிருக்கும், அதற்குமேல் இருப்பவை மேல் நோக்கியிருக்கும். இப்படியே மாறி மாறி வரிசை வரிசையாக அடுக்கப்படும். மேடைக்கு அடியில் தீயை மெதுவாக எரியவிடுகின்ருர்கள். 24 மணி நேரம் எரிகின்றது. அந்தச் சூடு ஏறுவதால் தேங்காய் மூடியிலிருந்து பருப்புக் கழன்றுவிடுகின்றது, கொப்பரையாகிவிடுகின்றது.

தீயை எரிக்கும்பொழுது, தீப்பிழம்புகள் உயரச் செல்லாமல் பார்த்துக்கொள்ளவேண்டியிருக்கின்றது. தீ அதிகமாகிவிட்டால் மேடையே கருகிவிடும் அல்லது அதிகச் சூட்டால் கொப்பரைத் தேங்காய் கெட்டுவிடும். இம்முறையில் கொப்பரை எடுப்பதற்கு 10 நாட்கள் ஆகின்றன.

சில சமயங்களில் தற்காலிகமான கொப்பரை அடுப்புகளும் தயாரிக்கப்படுகின்றன. இரும்புத் தகடுகளை அல்லது தகரங்களை வைத்து ஒரு மேடை அமைக்கப்படுகின்றது. (போர்காலத்தில் ஜப்பானியர்கள் காடுகளில் விட்டுச் சென்ற பொருள்களைப் பிரித்துத் தகரங்களையும், தகடுகளையும் சேர்க்கின்றார்கள்.) மேடைமீது தென்னங் கீற்றுகளைக்கொண்டு கூரை வேய்கின்றார்கள். பக்கவாட்டிலும் கீற்றுகளை மேடையிலிருந்து, கூரை வரை வைத்துத் தடுப்புக் கட்டிவிடுகின்றார்கள். இத்தடுப்பு காரணமாக, மழையிலிருந்தும், காற்றிலிருந்தும் கொப்பரை காக்கப்படுகின்றது. சில சமயம் நிலத்திலிருந்தே தடுப்புத் தகரங்களை வைக்கின்றார்கள். அதனால், எல்லாப் பக்கங்களிலிருந்தும் ஒரே சீரான சூடு தேங்காய் மூடிகளை எட்டுகின்றது.

இவ்வகையில் தயார் செய்யப்படும் கொப்பரை புகை ஏறுவதினால் கறுத்துவிடுகின்றது. அதில் எண்ணெயும் குறைந்துவிடுகின்றது. எண்ணெயும் கருமையாக இருப்பதால், இந்தியாவில் அதற்கு அதிக விலை கிடைப்பதில்லை. இந்த வகையில் எல்லாக் காலங்களிலும், மழை காலத்திலும்கூட கொப்பரை தயாரிக்க முடிகின்றது. கொப்பரையைக் கறுத்துவிடாமல் தடுக்கவும், தரத்தை உயர்த்தவும், சிறப்பான அடுப்புக்களை அரசாங்கத்தினர் அறிமுகப்படுத்தியுள்ளனர். கார் நிகோபாரில் மூஸ், பெர்கா என்ற கிராமங்களில் இரு அடுப்புக்களைக் கட்டி, அரசாங்கத்தினர் அதன் நன்மைகளை மக்களுக்கு விளக்கிக் காட்டி வருகின்றனர். அம்முயற்சி மக்களிடையே வெற்றி பெறுமானால், மக்கள் அத்தகைய அடுப்புக்களைத் தாங்களாகவே கட்டிக்கொள்ள முன்வருவார்கள், அதனால் தரமான எண்ணெய் எடுக்கமுடியும், தீவின் பொருளாதார மேன்மைக்கு அது பெருமளவு உதவும் என்று எதிர்பார்க்கப்படுகின்றது.

நிகோபார் தீவுகளில் எவ்வழியில் கொப்பரை தயார் செய்தாலும், அது சாப்பிடுவதற்குத் தகுதியாக இல்லை. சமைக்கும் எண்ணெயாக மாத்திரமே பயன்படுகின்றது. இந்தியாவில் இந்தக் கொப்பரையிலிருந்து முக்கியமாக சோப் முதலான

வாசனைப் பொருள் செய்வதற்குத் தேவையான எண்ணெய் எடுக்கவே பயன்படுத்துகின்றார்கள். அதனால் இங்கு தயாராகும் கொப்பரை அனைத்தும் இந்தியாவுக்கு அனுப்பப்படுகின்றது. கொப்பரைகளை வண்டிகளில் ஏற்றிக் கிராமத்தில் உள்ள ஆதாரக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு எடுத்துச் செல்லுகின்றார்கள். அங்கு அரசாங்கம் நிர்ணயித்த குறைந்தபட்ச வாங்கும் விலையில் கிலோ 75 பைசாவாக விற்கப்படுகின்றது. பின்னர் கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள் வர்த்தகக் கம்பெனிகளுக்கு கொப்பரைகளை விற்கின்றன. அவைகளைக் கல்கத்தாவில் சந்தைகளில் விற்கக் கப்பல்களில் ஏற்றி அனுப்புகின்றன.

## எண்ணெய் எடுத்தல்

தேங்காய் எண்ணெய் எடுப்பதில் இரு வழிகள் இருக்கின்றன. முதல் முறைப்படி, 'கினியோல்' என்ற மரத்தின் முள் நிறைந்த தண்டுகளைக்கொண்டு தேங்காய் சுரண்டப்படுகின்றது. சுரண்டிய தேங்காயைப் பாதி நீர் நிறைந்த பாத்திரத்தில் போட்டு, வெயிலில் காயவைக்கின்றார்கள். சில நாட்களுக்குப் பின்னர், எண்ணெய் வெளியேறி, தண்ணீரின்மேல் மிதக்கின்றது. அதைத் தெளியவைத்து தென்னையின் பாளைகளைக்கொண்டு வடிகட்டி எண்ணெய் எடுக்கின்றார்கள். இவ்வழியில் மிகச் சுத்தமான, நல்ல தரமான எண்ணெய் எடுக்கப்படுகின்றது. ஆனாலும் எண்ணெய் மிக அதிகமாகக் கிடைப்பதில்லை. நேரமும் அதிகமாகின்றது. மருந்து வகைகளுக்கும், மற்றும் அயலார்கள் வேண்டுமென்று கேட்கும்பொழுது இம்முறையில் எண்ணெய் எடுக்கப்படுகின்றது. அன்றாட சமையலுக்கும், வீட்டு விளக்குக்கும், உடம்புக்கும், தலைக்குத் தேய்த்துக்கொள்ளவும் சிறிது தரக் குறைவான எண்ணெய் 2ஆவது முறையில் தயாரிக்கப்படுகின்றது. இம்முறையிலும் தேங்காய் சுரண்டப்படுகின்றது, ஆனால் அவை மெதுவாகயிருக்கவேண்டும் என்பதற்குச் சிறிது சூடாக்கப்படுகின்றது. நீண்ட, வலுவான மரச்சட்டம் ஒன்றை ஒரு மரத்தின் அடிபாகத்தில் துளை செய்து பொறுத்துகின்றார்கள். மரச்சட்டத்தின் மறுபாகத்தில் தட்டையான பரப்புள்ள பலகை ஒன்று இருக்கும். அந்தச் சட்டத்தின் கீழ் வட்டமான மரக் கட்டை, அதன் ஓரத்தைச் சுற்றிலும் சிறு பள்ளமும், வடிகாலுடனும் கூடியது வைக்கப்படுகின்றது. சுரண்டி, சூடாக்கப்பட்ட தேங்காய்ப் பூவை இக்கட்டையின்மேல் வைத்து மரப்

படம் 12. பேய் பிசாசுகள் அணுகாமலிருக்க, தங்களைக் காத்துக்கொள்வதற்காக வீடுகளில் வைக்கப்பட்டிருக்கும் பொம்மைகள். கார் நிகோபார் தவிர, மற்ற தீவுகளில் உள்ள வீடுகளில் இப்பொம்மைகள் காணப்படுகின்றன



படம் 13. நிகோபார் மக்கள் தயாரித்த கூடைகள், பண்டானுஸ் இலைகளால் பின்னப்பட்ட பாய்கள்



படம் 14. வட்ட வடிவமான நிகோபார் வீட்டின் மேற்கூரையின்
அழகிய உள்தோற்றம்

பலகையை அழுத்துகின்றார்கள். மிகுந்த அழுத்தம் தருவதற்காக இரண்டு, மூன்று பேர்கள் அந்தச் சட்டத்தின்மீது உட்கார்ந்துகொள்ளுகின்றனர். அழுத்தம் காரணமாக தேங்காயிலிருந்து எண்ணெய் வடிகின்றது. வெளி ஓரத்திலிருக்கும் பள்ளத்தில் இறங்கி, வழியும் எண்ணெயைப் பாத்திரத்தில் பிடித்துக்கொள்ளுகின்றார்கள். வடிகாலில் தென்னையின் பாளையைப் பொறுத்தி, எண்ணெயை வடிகட்டி சுத்தமாக எடுக்கின்றார்கள். இவ்வாறு எண்ணெய் எடுப்பதற்கு 15 முதல் 30 நிமிடமே ஆகின்றது. பொதுவாகப் பெண்களே எண்ணெய் எடுக்கின்றார்கள். இரண்டு, மூன்று பெண்கள் மரச்சட்டத்தின் மீது உட்கார்ந்துகொண்டு அரட்டையடிக்கும் அதே வேளையில் எண்ணெய் வழிந்து, பாத்திரங்களில் ஒழுகிக்கொண்டிருக்கும் காட்சிகளைச் சாதாரணமாகக் காணலாம்.

### கால்நடைகள்

மக்கள் வைத்துக்கொண்டிருக்கும் வீட்டு விலங்குகளில் மிகச் சிறப்பானவை பன்றிகள். இத்தீவுகளில் காணப்படும் பன்றிகள், பல கலப்புகளைக்கொண்ட ஓர் இனமாக இருக்கின்றன. அவை பழுப்பு நிறத்தில், உடல் முழுவதும் மயிர் கொண்டதாக உள்ளன. நன்கு வளர்ந்துள்ள ஒரு பன்றி, 2 அடி உயரமும் 120 பவுண்டு எடையும் கொண்டதாயிருக்கின்றது.

ஒவ்வொரு குடும்பத்திலும் நிறைய பன்றிகள் இருக்கின்றன. சுமாராக மக்களைப்போல் ஒன்றரை மடங்கு அதிகமாகப் பன்றிகள் உள்ளதாகக் கூறப்படுகின்றது. சில சமயம், ஒவ்வொரு பன்றியையும், கவனித்துக்கொள்ள முடியாத அளவுக்கு, சில குடும்பங்களில் பன்றிகள் மிகுந்திருக்கின்றன. அதனால் அவைகளின் உடலில் குறியிட்டு, அவைகளைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ளக் காட்டுப் பகுதிகளுக்கு அனுப்பிவிடுகின்றனர். சில இடங்களில், குடும்பத்தில் உள்ள சிலர் காட்டுப் பகுதிகளிலேயே வாழ்ந்துகொண்டு பன்றிகளையும், தோட்டங்களையும் கவனித்துக் கொள்ளுகின்றார்கள்.

காட்டுப் பகுதிகளில் விடப்படும் பன்றிகள் முரட்டுத்தனமாகப் போய்விடுகின்றன. எப்பொழுதாவது ஒரு முறை சொந்தக்காரர்களாலும், மற்றவர்களாலும் வேட்டையாடப்படுகின்றன. மேலும் பெரிய விருந்துகளின்போது, காட்டுப் பகுதிகளிலிருந்து அவைகளைப் பிடித்து கிராமத்துக்குக் கொண்டுவருகின்றார்கள்;

அவைகளைப் பன்றிச் சண்டைகளில் கலந்துகொள்ளச் செய்கின்ருர்கள் அல்லது இறைச்சிக்காகக் கொல்லுகின்ருர்கள்.

தொழுவம் எதுவும் பன்றிகளுக்குக் கட்டப்படுவதில்லை. பகலெல்லாம் கிராமங்களிலும், தோப்புக்களிலும் சுற்றி வருகின்றன. இரவு நேரங்களில் வீடுகளின் தரைக்கிடைகளில் விழுந்து கிடக்கின்றன. கிராமத்திலிருக்கும் பன்றிகளுக்கு சுரண்டப்பட்ட தேங்காய்களை உணவாக, ஒழுங்காகக் கொடுக்கின்றனர். அன்ருடம் ஒரு பன்றி 4 முதல் 6 தேங்காய்கள் தின்கின்றன. குறிப்பிட்ட இடங்களிலேயே அவைகளுக்குத் தீனி தரப்படுகின்றன. கிராமத்தில் இருந்தாலும், வீடுகளுக்கு வெகு தூரத்திலேயே அந்த இடங்கள் உள்ளன. மரப்பலகைகளால் மூன்றடி உயரத்தில் மேடை கட்டி பெரிய கிளிஞ்சல் அல்லது மரக்கட்டைகளைத் தொட்டிகளாகப் பயன்படுத்துகின்ருர்கள். பன்றிகளுக்குச் சொந்தக்காரர், ஒவ்வொரு நாளும், மாலைநேரம் நாவிஞல் ஒரு விதமான ஓசை எழுப்பிப் பன்றிகளைத் தீனிக்குக் கூப்பிடுகின்ருர். அந்த ஓசை, ஒரு முறைதான் என்ருலும், வெளியார்கள் கேட்கும் பொழுது, சூனியவாதிகளின் அந்த நாட்களையே நினைவுக்குக் கொண்டுவருகின்றது. உண்மையில் அவர்கள் தங்கள் மிருகங்களை அழைக்க எழுப்பும் ஓசையை ஆசைக் கூவல் என்றே சொல்ல வேண்டும். அந்த ஓசையைக் கேட்டவுடன், குறிப்பிட்ட இடங்களுக்கு அவை ஓடிவருகின்றன.

அவர்கள் பன்றிகளை மிகுந்த ஆசையாகவே வளர்க்கின்ருர்கள். அவர்கள் அவைகளிடம் காட்டும் பரிவு சாதாரணமானதல்ல. ஒரு சிறிய பன்றிக்குட்டி வழக்கமாக சரியாக வளராவிட்டால், தாய்ப்பாலிருக்கும் பெண், பன்றிக்குட்டிக்கு தன் மார்பைக் கொடுத்துப் பாலூட்டி வளர்க்கின்ருள். ஆனல் இப்பொழுது, மக்கள் நாகரிகமடைந்து வருவதால், இப்பழக்கம் வெட்க கரமாக இருப்பதால், இதைக் கைவிட்டு வருகின்றனர்.

ஓர் இடத்திலிருந்து மற்ரொரு இடத்திற்கு ஒரு பன்றியைத் தூக்கிச் செல்லவேண்டுமாஞல், இரண்டு வலுவான கழிகளில் அதன் நான்கு கால்களையும் உறுதியாகக் கட்டி அதன் முகம் மேல்நோக்கியிருக்க, தென்னை ஓலைகளில் அதன் முதுகு சாய்ந்திருக்க ஐந்தாறு பேர்கள் தூக்கிச் செல்லுகின்ருர்கள். முதலில் இதைப் பார்க்கும்பொழுது, இதை இவ்வாறு தூக்கிச் செல்லுகின்ருர்களே என்று பரிதாபமே ஏற்படுகின்றது. அநேகமாக அதற்கு மிகவும் வசதியாகவேயிருக்கும். மேலும் இதைத்தவிர

இந்த முரட்டுப் பிராணியை வேறுவிதமாகவும் எடுத்துச் செல்ல முடியாது.

ஆண் பன்றிகளைக் கொழுக்கவைக்க மிகக் குரூரமானமுறையில் விதையடிக்கின்றார்கள்.

பன்றிகள் வெகு வேகமாகப் பெருகுகின்றன. ஒவ்வொரு ஆண்டும் ஒரு பெண் பன்றி சுமார் 10 குட்டிகளை ஈனுகின்றன. ஒரு மாதத்திற்குப் பின்னர் அவைகளை ஒன்றன்பின் ஒன்றாகச் சாப்பிட்டுவிடுகின்றனர். 2 அல்லது 3 குட்டிகளே மிஞ்சுகின்றன. அவைகளை நன்கு முழு அளவுக்கு வளரவிடுகின்றனர். எல்லாப் பன்றிக்குட்டிகளையும் வளரவிட்டால், மனிதர்கள் சாப்பிடுவதற்குத் தேங்காய்களே இருக்காது. அதனாலேயே அவ்வாறு செய்கின்றனர்.

உண்மையில் நிகோபார் மக்கள் பன்றிகளை வளர்க்கும் முறையே நிறைவானதாகயில்லை. அது முழு வளர்ச்சியடையு முன்னரே சாப்பிட்டுவிடுகின்றார்கள் அல்லது அது நன்கு வளர்ந்து மேலும் அதன் எடை கூடாது என்று தெரிந்தும், அதை மேலும் பல ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு பெரிய விருந்து வரும்வரை விட்டு வைக்கின்றார்கள். அதாவது, விருந்துகள், விழாக்களின்போது பன்றிகளைக் கொன்று விருந்தாடுவது வழக்கம். அதனால் எடை கூடியபின்னரும் ஒரு விருந்தோ, விழாவோ, படகுப்போட்டியோ வரும்வரை பன்றிகளுக்கு வருடக்கணக்கில் அளிக்கப்படும் தீனி வீணாகவே போய்விடுகின்றது.

மேலும் பொருளாதார ரீதியில் பார்த்தால், ஒரு பெரும் செலவு இனமாகப் பன்றிகள் இருக்கின்றன. ஒவ்வொரு நாளும் ஒரு பன்றிக்கு 4 முதல் 6 தேங்காய்கள் தீனியாவதால், அத் தீவுகளில் விளையும் தேங்காய்களில் மூன்றில் ஒரு பாகம் அவைகளுக்குத் தீனியாகிவிடுகின்றன. இந்த அளவுத் தேங்காய்கள் கொப்பரை செய்வதற்குக் கிடைத்தால், அவைகளை விற்பதின் மூலம் கிடைக்கும் வருமானம் இரட்டிப்பாகிவிடும். இதில் வேடிக்கையான அம்சம் என்னவென்றால், மக்கள் சிறிதளவு முயற்சி எடுத்துக்கொண்டால், இத்தீவுகளில் போதுமான அளவு மக்காச்சோளம் விளைவிக்கமுடியும். அதே சமயம் மக்காச்சோளம் பன்றிகளுக்கு மிக நல்ல தீனியாகவும் இருக்கும்; பன்றிகளுக்குத் தேங்காய்களைத் தீனியாகத் தரவேண்டிய அவசியமுமிராது. அரசாங்கமும் மக்காச்சோளம் பயிரிட எல்லாவித ஊக்கமும் தந்தபோதிலும், மக்கள் அதில் அதிக நாட்டங்கொள்ள

வில்லே. காரணம், பாடு அதிகம்; வேலி போடவேண்டும். அதனுல் தற்பொழுது அக்கறைகாட்டுவதில்லே. உண்மையில், அது ஒரு பழிகார வட்டம். பன்றிகளுக்காக மக்காச்சோளம் பயிரிடுவது அவசியம். ஆனுல் பன்றிகளின் தொல்லேயைத் தடுக்காமல், அதாவது, வேலி போடாமல் மக்காச்சோளம் பயிரிட முடியாது. புதிய வழிகளில் வருமானத்தை அதிகரிக்க வேண்டும் என்று நிணைப்பதற்கு அவர்கள் முன்னேறவேண்டும். பொருளாதாரத் தேவையும் அவர்களே உந்தவேண்டும். அப் பொழுதே அந்தப் பழிகார வட்டம் உடைபடும். மக்காச்சோள விளேச்சலுக்குப் பாடுபட முனேவார்கள். பன்றி வளர்ப்புக்கும், பன்றி இறைச்சித் தொழிலுக்கும் நிகோபார் தீவுகளில் தற்போது நிறைய வாய்ப்புகள் இருந்தாலும், அவர்கள் பன்றி களுக்கு வேறு தீனி தருவதற்கான முயற்சியில் ஈடுபடாதவரை யிலும், பன்றிகள் நல்ல வளர்ச்சிபெற்றதும் கொல்லாத (முன் னும் பாராமலும், பின்னும் பாராமலும்) வரையிலும் எம் முயற்சியும் வீணுகவே போய்விடும்.

மன நிறைவு இயல்புகொண்ட நிகோபார் மக்களுடன் ஒப் பிட்டுப் பார்க்கும்பொழுது, அவர்களுடைய பன்றிகள் எப்பொழுதும் நிறைவுகொண்டதாகவே தெரியவில்லே. நல்ல செழுமையான தீனியாகத் தேங்காய்கள் கிடைத்தாலும், அவைகள் மேலும் உணவு தேடி அலேந்து எல்லாப் பயிர்களேயும் நாசம் செய்துவிடுகின்றன. தோப்புகளிலும், துரவுகளிலும் புகுந்து சேதப்படுத்தாதிருக்க வலுவான மரங்களேக்கொண்ட வேலிகள் அமைக்கப்படவேண்டியிருக்கின்றன. உண்மையில், இத்தீவுகளில் விவசாய விளேச்சலுக்குப் பெருமளவு தீங்கு ஏற்படு வது பன்றிகளால்தான். அவைகள் எல்லாவகை உணவுகளேயும் தின்கின்றன. ஏதாவது ஒரு கோழி நொண்டினுலோ அல்லது வேகமாக ஓடமுடியாவிட்டாலோ அதைப் பிடித்து விழுங்கிவிடு கின்றன. கிராமத்துக்கு அப்பால், காட்டுப் புதர்களில் கோழி கள் இடும் முட்டைகள் பன்றிகளுக்கு இரையாகிவிடுகின்றன. மக்களுக்கு அம் முட்டைகள் கிடைப்பதில்லே. எனினும், பன்றிகள் நல்ல தோட்டி வேலே செய்கின்றன. மேலும் அவைகள் நத்தைகளேத் தின்று, அந்த இனம் பெருகாமல் பார்த் துக் கொள்ளுகின்றன.

மக்கள் வாழ்விலும் பன்றிகள் ஓர் உன்னதமான இடத்தைப் பெற்றிருக்கின்றன. அதற்கான விளக்கம் தருவது கடினம்

என்றாலும், மக்கள் பன்றி இறைச்சியை மிகவும் விரும்புகின்றார்கள். மேலும் மற்ற மிருகங்கள் எதுவும் தீவுகளில் இல்லாமையால், அவைகளின்மீது அதிக அன்பு செலுத்துகின்றார்கள் என்றே சொல்லலாம். ஒரு பன்றிக்கு சிறிது காயம்பட்டுவிட்டால்கூட, அதற்கு அவர்கள் அதிக பரிவுகாட்டுகின்றார்கள். அந்த அளவுக்கு அவர்கள் பன்றிகளை நேசிக்கின்றார்கள். பன்றிகளின்பால் அவர்கள் காட்டும் பரிவு காரணமாகவே, பன்றிகளை அநேகமாக வலியில்லாமல் கொல்ல ஒரு வழி கண்டுபிடித்திருக்கின்றார்கள். கூர்மையான கத்திகளை இருதயத்தில் செலுத்தி அவைகளைக் கொல்லுகின்றார்கள்.

விழாக் காலங்களில் பன்றி இறைச்சி சாப்பிடுவது என்பது கட்டாயமாக இருக்கின்றது. விருந்தினர்களுக்குப் பன்றிகளை அன்பளிப்பாகவும் தருகின்றார்கள். விருந்தின்போது கொல்லப்படும் பன்றிகளின் தாடைகளை மிகப் பெருமையுடன் தங்கள் வீட்டுச் சுவர்களில் விருந்தில் கழிந்த இன்பமான நேரத்தை நினைவூட்டுவதாக மாட்டி வைக்கின்றார்கள். உண்மையில், நிகோபார் மக்களுக்கு, பன்றிகளே செல்வ நிலையைக் குறிப்பதாக இருக்கின்றன. அதிகப் பன்றிகளை வைத்திருக்கும் மனிதனைக் கண்டு மற்றவர்கள் எல்லோரும் பொறாமைப்படுகின்றார்கள். தகராறுகள் தீர்க்கப்படும்பொழுதும், சிறு குற்றங்களில் தீர்ப்பளிக்கப்படும்பொழுதும் கிராமக் குழுக்களும், தீவுக் குழுவும் அபராதமாகப் பன்றிகளைத் தரவேண்டுமென முடிவு செய்கின்றன. பன்றிகளைப் பாராட்டும் பாடல்கள் ஏராளமாக இருக்கின்றன. இன்னமும் அவைகள்பற்றிப் புதுப்புதுப் பாடல்களும் புனையப்பட்டு வருகின்றன.

ஆடுகளை முக்கியமாக இறைச்சிக்கே வைத்திருக்கின்றார்கள். இருந்தாலும், இப்பொழுதெல்லாம் தங்கள் தேநீர்ப் பானத்திற்காக, அவைகளிடம் பால் கறக்கத் துவங்கியிருக்கின்றார்கள். ஆடுகளைக் கவனிக்கவேண்டும் என்பதில்லை. அவைகள் இங்கும் அங்கும் இலை, தழைகளைச் சாப்பிட்டுக்கொண்டே வளர்ந்துவிடுகின்றன. அதனால் அவை பெருகிவருகின்றன. அவைகளைப் பார்த்துக்கொள்ள சிறு பெண்களையும், பையன்களையும் பணித்திருக்கின்றார்கள். அவைகளின் பெருக்கம், மக்களின் இறைச்சிக் கோரிக்கைக்கு ஏற்றவகையில் அமையவில்லை. இப்பொழுதுகூட ஆட்டிறைச்சி கிடைப்பது அரிதாகவே இருக்கின்றது.

கோழிகளும் வைத்திருக்கின்ருர்கள். அநேகமான கோழிகள் உள்நாட்டு வகையானவை. அளவில் சிறியவை. குட்டையான கால்கள் கொண்டவை. ஆனுல், மிகவும் திடமானவை. நிறைய முட்டைகள் இடுகின்றன. 'ரோட் ஐலண்டு ரெட்', 'வொய்ட் லெக்ஹார்ன்' போன்ற சிறப்பு இனக் கோழிகளைக் கடந்த காலத்தில், 'பின்தங்கிய வகுப்பினர் நலனை'ப்பேணும் துறையினர் சில குடும்பங்களுக்குத் தந்தனர். ஆனுல், அவைகள் நன்கு வளரவில்லை. இந்த இனங்களைச் சேர்ந்த ஒரு சில கோழி களையே இப்பொழுது காணமுடிகின்றது.

நிகோபார் மக்கள் கோழிகளை மிகவும் பழமையான காலப் படி வளர்க்கின்ருர்கள். ஒவ்வொரு நாளும் ஓரிரு முறை கோழி களுக்குத் தேங்காய்த் துண்டுகள் தருவதைத் தவிர, அவர்கள் வேறெந்த கவனமும் செலுத்துவதில்லை. அவைகள் தங்குவதற் கான கூடுகளோ, அமைப்புகளோ கிடையாது. அவைகள் தாஞகவே அங்கும் இங்கும் திரிந்துகொண்டிருக்கின்றன. அதனுல் அவைகள் புழு, பூச்சிகளைக் கொத்தித் தின்று, தங்கள் உணவின் குறைகளை நிறைவு செய்துகொள்ளுகின்றன. இரவு நேரங்களில் மரங்களில் ஏறிப் படுத்துக்கொள்ளுகின்றன. அதனுல் இயற்கையின் இன்னல்களுக்கு உள்ளாகின்றன. சரியான தீனியும், கவனிப்பும் இல்லாமையால் கால்நடைத் துறையினர் கவனித்தும் பலவித நோய்நொடிகளுக்கு அவை ஆட்படுகின்றன. கோழிகளை வைத்துக்கொள்ள மக்கள் எதுவும் அக்கறைகாட்டுவதில்லை. அதனுல் கோழி வளர்ப்புத் திட்டங்கள் முன்னேற்றமடைய முடியாமல்போயின.

கோழிகள் காடுகளில் முட்டைகளையிட்டுவிடுகின்றன. அவை பொதுவாக மக்களுக்குக் கிடைப்பதில்லை; பன்றிகளே தின்றுவிடு கின்றன. ஒரு நிகோபார்வாசி கோழி சாப்பிட விரும்பினுல், அது இரவில் படுக்கவரும் மரத்திற்குச் சென்று பிடிக்கவேண்டும். பகல் நேரத்தில் கோழிக்கறிக்கு அவசரப்பட்டால் அதைத் துரத்தி, அம்பு எய்தே பிடிக்கவேண்டியிருக்கின்றது. அது விரை வில் தப்பி ஓடக்கூடியதாகையால், அநேகமாக அந்தப் போட்டி யில் கோழியே வெற்றிபெறுகின்றது. அவர் கோழி இறைச்சி சாப்பிடுவதைப் பிறிதொரு நாளுக்கு ஒத்திப்போடவேண்டியிருக் கின்றது.

சில பசுக்களும் இருக்கின்றன. கடந்த காலத்தில் சமயக் குழுவினரும், மற்ற வர்த்தகர்களும் விட்டுச் சென்ற பரம்பரையி

லிருந்து வந்தவை அவை. அநேக பசுக்கள் நல்ல இனத்தைச் சேர்ந்தவை. ஆனல் மக்கள் அவைகளேக் கவனித்துப் பார்ப்ப தில்லே. அவைகள் வெறும் வளர்ப்பு மிருகங்களாகவே இருக் கின்றன. பால் கறப்பதில்லே. அவைகள் சுற்றித் திரிகின்றன. சரியான தீனியும் தரப்படுவதில்லே, பாலும் ஒழுங்காகக் கறப்ப தில்லே என்பதால் பால்மடி வற்றிவிடுகின்றது. அவைகளே வீட்டு விலங்குகளாக வைத்துக்கொண்டு, தினமும் ஒழுங்காகப் பால் கறக்கவேண்டும் என்று எடுத்துக்கொண்ட முயற்சிகள் அனைத்தும் வெற்றிபெறவில்லே. அம்முயற்சிகளில் மக்கள் ஈடுபடவே விரும்புவதில்லே. சரியான தீவனப்பயிர் விளேச்சலில்லாமையால் பால் பண்ணே அபிவிருத்தியும் செய்யமுடியவில்லே. இப்பொழுது அரசாங்கம் தீவனப்பயிர்களே விளேவிக்க முயற்சிகள் மேற்கொண் டுள்ளது. அது வெற்றிபெற்றபின்னரே கால்நடைகளே வளர்ப் பது என்பது இடம்பெற முடியும்.

நாய்களும், பூனேகளும் வளர்ப்புப் பிராணிகளாக இருக்கின் றன. மாலுமிகள் முன்பு பூனேகளே இத்தீவுகளுக்குக் கொண்டு வந்திருக்கவேண்டும். எலிகளேக் கட்டுப்படுத்த உதவுகின்றன.

நாய்கள் வெகுகாலமாகவே நிகோபார் தீவுகளில் இருந்துவந் துள்ளன என்று தெரிகின்றது. அவை இந்தியாவில் உள்ள நாட்டு நாய் இனத்தைச் சேர்ந்தவையாக இருக்கின்றன. அவை களுக்கு ஒரு சிறப்பு இருக்கின்றது. ஏனெனில், நிகோபார் மக்க ளின் முன்னேர்கள் நாயிலிருந்து தோன்றியதாக ஒரு கதை வழங்கப்படுகின்றது. ஒரு காலத்தில் பெருவெள்ளம், உலகத்தின் மேற்பரப்பு முழுவதுமே தண்ணீரில் அழுந்திவிட்டது. ஆனல், ஒரே ஒரு மனிதன் மாத்திரம் பெரியதொரு மரத்தின் உச்சிக்குச் சென்று தன்னேக் காப்பாற்றிக்கொண்டான். தண்ணீர் வற்றி விட்டபொழுது தன்னேத் தவிர உயிர்ப் பிராணி எதுவும் தப்ப வில்லே என்று அவனுக்குத் தென்பட்டது. ஆனல் ஒரே ஒரு பெண் நாய் மாத்திரம், முள்ளான மரமொன்றில் சிக்கிக்கொண் டிருப்பதைக் கண்டான். முள் மரத்தை வெட்டி, அதைக் காப்பாற்றினன் மனிதன். வேறு துணே எதுவும் இல்லாமையால் அந்தப் பெண் நாயுடன் உறவுகொண்டான். அந்த உறவில் பிறந்தவனே முதல் நிகோபார்வாசி. நாய் வழியில் பிறந்தவர் கள் என்பதை வலியுறுத்தவே, முன்பெல்லாம் நிகோபார் மக்கள் கோவணம் கட்டியிருந்தபோதிலும், பின்னுக்கு நாயின் வால் போல் கோவணத்தின் ஒரு நுனியைத் தொங்கவிட்டிருந்தார்கள்

போலும்! அவர்கள் அணிந்துவந்த தொப்பிகளிலும் நாயின் காதுகள்போல், இரு முனைகளை அமைத்திருந்தார்கள்! இதல்லாமல் தங்கள் முன்னோர்களுக்கு அவர்கள் எந்தவித சிறப்பும் காட்டுவதில்லை. நிகோபார் நாய்கள் எலும்புந்தோலுமாகப் பார்ப்பதற்கே பரிதாபகரமாயிருக்கும். அவைகளுக்கும் தேங்காய் தீனியாகத் தரப்படுகின்றது. பன்றிகளுக்குத் தேங்காய் நல்ல சத்தான தீனியாகயிருந்தாலும், நாய்களுக்கு அவை நல்ல உணவாகயில்லை. நிகோபார் மக்கள் எப்பொழுதாவதுதான் இறைச்சி சாப்பிடுகின்றார்கள். அதனால் நாய்களுக்கு வேண்டிய எலும்புத் துண்டுகளும், இறைச்சியும் கிடைப்பது அரிது. தட்ப வெப்ப நிலையும் பிராணிகளை ஓரளவு பாதிக்கின்றது. எஜமானர்களைப்போலவே நாய்களும் ஆடி அசைந்து மெதுவாக நடை போடுகின்றன. பன்றிகளையோ, பசுக்களையோ துரத்திக் கொண்டு ஓடும் நாய்களைக் காண்பது என்பது முடியாது. அது மற்ற நாய்களைக் காணும்போதுதான், கோபத்தில் உறுமும் போதும் சரி, பாசத்துடன் கொஞ்சும்போதும் சரி, அதன் வேகத்தையும், தாபத்தையும் காண முடிகின்றது.

வேட்டைக்குப் பயன்படுத்த சில நாய்களை வைத்திருக்கின்றார்கள். அவைகளிடமே நாய்களுக்கான குணங்கள் படிந்திருக்கின்றன. அவைகளுக்கு முடிந்தவரை இறைச்சி தந்து, சங்கிலிகளில் பிணைத்து வைத்திருக்கின்றார்கள். அதனால் அவை மூர்க்கமாகயிருக்கின்றன. அவர்கள் உட்பகுதிக் காடுகளில் பன்றிகளை வேட்டையாடச் செல்லும்பொழுது, அவைகளைக் கூட்டிச் செல்லுகின்றார்கள்.

## மீன் பிடித்தல்

நிகோபார் மக்கள் மீன்களை மிகவும் விரும்புகின்றார்கள். அவர்களுக்கு எப்பொழுது முடிந்தாலும் அவர்கள் மீன் பிடிக்கக் கடலுக்குச் செல்லுகின்றார்கள். கடல் அமைதியாகயிருக்கும் ஜனவரி முதல் ஏப்ரல் மாதங்களில், கரையிலிருந்து பல மைல் தூரத்தில் உள்ள ஆழ்கடலில் மீன் பிடிக்க, தங்கள் படகுகளில் ஆண்கள் செல்வதைச் சாதாரணமாகக் காணலாம். அவர்கள் தொடர்ந்தாற்போல் இரண்டு மூன்று நாட்கள் வீட்டைவிட்டுச் சென்றுவிடுகின்றார்கள். அதல்லாமலும், மீன் பிடிப்பதற்காக நிகோபார் மக்கள் இரவெல்லாம் விழித்திருக்கவும் செய்கின்றார்கள்.

ஒவ்வொரு குடும்பத்திற்கும் உள்ளூரிலேயே செய்யப்பட்ட மீன்பிடி படகுகள் இருக்கின்றன. கடலில் மீன் பிடிக்கவேண்டியிருந்தால், படகு வெளியே எடுக்கப்படுகின்றது. தற்காலிகமான நங்கூரம் ஒன்று: கனமான பளுவை ஒரு கயிற்றில் கட்டி, கடலில் சிறிது தூரம் சென்றதும் கடலில் தொங்கவிடுகின்றார்கள். இது படகு நிலையாகயிருக்க உதவுகின்றது. மீன் பிடிப்பது எளிதாகின்றது.

பழைய கால வழக்கப்படித் தூண்டில்முள் போட்டே மீன் பிடிப்பது சாதாரணமாயிருக்கின்றது. இதற்காக 600 அடி ஆழம்வரை செல்லக்கூடிய பிளாஸ்டிக் கயிறுகளை மிதக்கும் மரக் கட்டைகளில் சுற்றிக்கொண்டு பயன்படுத்துகின்றார்கள். அதன் மறு முனையில் சுழலும் மூட்டு ஒன்றைக் கட்டி, அத்துடன் முள் கொக்கியை எஃகு கம்பிகொண்டு இணைக்கின்றார்கள். படகில் நாலைந்து பேர்களாகச் சேர்ந்துகொண்டு, கரையிலிருந்து 2 முதல் 4 மைல்வரை மீன் பிடிப்பவர்கள் செல்லுகின்றார்கள். தூண்டில்முள்ளில் புழு பூச்சிகளை, சிறு மீன்களை சிக்கவைத்துத் தூண்டிலைக் கடலுள் எறிகின்றார்கள். தூண்டிலில் மீன் சிக்கியவுடன், அதைப் படகுக்கு இழுத்து, படகில் போட்டுவிடுகின்றார்கள். படகிலேயே அது துடிதுடித்துச் சாகின்றது.

சில சமயம் கரையிலிருந்தே தூண்டில் போடுகின்றார்கள். அப்பொழுது சன்னமான கயிறுகளில், சிறிய தூண்டில்முள்களைக் கட்டிவிடுகின்றார்கள். கரைகளில் உட்கார்ந்து மீன் பிடிக்கச் சரியான இடங்கள் இல்லாமையால், கரையிலிருந்து தூண்டில் போடுவதை மக்கள் அதிகமாக விரும்புவதில்லை. ஆனால், கார் நிகோபாரில் இப்பொழுது மலாக்காவில் ஒரு நல்ல சரக்கு இறக்கும் துறை கட்டப்பட்டிருக்கின்றது. அது கடலுக்குள் 100 கஜ தூரம்வரை செல்லுவதால், அங்கு உட்கார வசதியாகயிருப்பதாலும், அநேகர் அங்கு இரவு முழுவதும் மீன் பிடித்துக் கொண்டிருப்பதைக் காணலாம்.

கடல் பொங்கியெழுங் காலங்களில், மற்றொரு வகையான தூண்டில் போட்டு அவர்கள் மீன் பிடிக்கின்றார்கள். 4 முதல் 8 அடி நீளமுள்ள பிளாஸ்டிக் கயிறுகளை மிதக்கும் மரக்கட்டைகளில் சுற்றி தூண்டில்களை கரையோரமாக எறிந்துவிடுகின்றார்கள். மீன்கள் தூண்டில்களைக் கவ்வியதும் மிதக்கும் மரக் கட்டைகள் மேலும் கீழும் ஆடுகின்றன. அதைக் கண்டதும் மீன்

பிடிப்பவர்கள் ஓடிச் சென்று, தூண்டிலை இழுத்து மீனைப் பிடித்துக் கொள்ளுகின்றார்கள்.

எப்பொழுதாவது வலை வீசியும் மீன் பிடிக்கின்றார்கள். கூம்பிய வடிவத்தில் பருத்தி நூல் அல்லது நைலான் நூலால் பின்னப் பட்ட வலை 7 அடி நீளமிருக்கும். அதன் உச்சியில் சுருக்கி இழுக் கக் கயிறு இருக்கின்றது. தொங்கும் அடிப்பாகத்தில் ஈயக் குண்டுகளைக் கட்டியிருக்கின்றார்கள். ஆழமற்ற நீர்நிலைகளில் மீன் பிடிக்க அந்த வலையைப் பயன்படுத்துகின்றார்கள். மீன் பிடிப்பவர்கள் தண்ணீரைப் பார்த்துக்கொண்டேயிருக்கின் றார்கள். மீன்கள் நெருங்கி வந்துவிட்டன என்று தெரிந்ததும் வலையை ஒரு சுழற்றுச் சுற்றித் தண்ணீரில் வீசுகின்றார்கள். சுற்றி யுள்ள வலைக்குள் மீன்கள் பிடிபட்டதும். மேல் கயிற்றை இழுத்து வலையை சுருக்கிக் கரைக்கு அப்புறப்படுத்துகின்றார்கள்.

ஆழமற்ற இடங்களில் மீன் பிடிக்க மற்றொருவிதமான வலையை யும் பயன்படுத்துகின்றார்கள். 40 முதல் 60 அடிவரை நீளமும், 3 முதல் 4 அடிவரை அகலமும்கொண்ட இந்த வலையை ஆறேழு பேர்கள் பிடித்துக்கொண்டு, வலையைக் கடலில் பரப்புகின் றார்கள். வலையைச் சுற்றியுள்ள அடிக்கயிற்றில் இரும்புத் துண்டுகளைப் பளுவாகவும், மேல் கயிற்றில் மிதவைகளையும் தொங்கவிட்டிருக்கின்றார்கள். வலையை வீசும்போது, ஒருவர் ஒரே இடத்தில் நின்றுகொண்டு வலையின் ஓர் ஓரத்தைப் பிடித்து கொள்ளுகின்றார். மற்றவர், வலையை அரைவட்டத்தில் பரப்பி அதைத் தொங்கவிடுகின்றார். வலையின் ஓரங்களை ஓரிருவர் பிடித்துக்கொள்ள, மற்றவர்கள் நடுவில் நின்றுகொண்டு வலையைத் தொய்யவிடாமல் பிடித்துக்கொள்ளுகின்றார்கள். ஓரங்களைப் பிடித்துக்கொண்டிருப்பவர்கள் நெருங்கிவர வலை நெருங்குகின்றது. உச்சியில் உள்ள மேல்கயிறும், அடிப்பாகத்தில் உள்ள கயிறும் இறுக்கப்படுகின்றன. அதனால் வலையால் ஒரு சுற்று வளையம் ஏற்படுகின்றது. இதற்கிடையே, இரண்டு மூன்று பேர்கள் மீன்களை வலைக்குள் துரத்துகின்றார்கள். இறுதியில் வலை எல்லாப்பக்கமும் இறுக்கப்பட்டு, கரைக்குக் கொண்டுவரப் படுகின்றது. நிகோபார் மக்கள் கையாளும் வகைகளில், இம் முறையில் அதிக மீன்கள் கிடைத்தாலும், இத்தகைய வலைகள் ஒருசிலவே இருக்கின்றன.

மீன்களைப் பிடிக்கப் பொறிகள் செய்யும் கலையையும் நிகோபார் மக்கள் கற்றுக்கொண்டிருக்கின்றார்கள். மூங்கில் துண்டுகளைப்

பிளந்தும், தென்னை ஓலைகளைக்கொண்டும் கூடைபோன்று கூம்பிய வடிவத்தில் இப்பொறிகளைச் செய்கின்றார்கள். கடல் ஓய்ந்திருக்கும் பொழுதுதான் இப்பொறிகளைப் பயன்படுத்து கின்றார்கள். தண்ணீர் பின்னுக்கு வாங்கி, கடல்படுகை தெரியும்பொழுது அநேகக் குழிகளிலும், பவழப் பாறைகளிலும் தண்ணீரும், மீன்களும் தேங்கிவிடுகின்றன. இருந்தாலும் அம் மீன்கள் மெதுவாகக் கடலுக்கு இழுத்துச்செல்லப்படும். கடல் படுகையில் அலை எழும் பகுதியில் கற்களையும், மண்ணையும், தென்னை ஓலைகளையும் குவித்து ஒரு சுவர் போன்று செய்து, அந்த சுவரில் பொறிகளைக் கட்டித் தொங்கவிட்டு விடுகின்றார்கள். தண்ணீரும், மீன்களும் கடலுக்கு இழுத்துச்செல்லப்படும் காலை யில், கரையை ஒதுங்கியிருக்கும் பொறிகளில் மீன்கள் சிக்கிக் கொள்ளுகின்றன. அலைக்காலம் ஓய்ந்தவுடன், பொறிகளை அப்புறப்படுத்தி மீன்களை எடுக்கின்றார்கள்.

கரை அருகில் நின்றுகொண்டு சில சமயம் வில் அம்புகளை எய்து மீன்களைக் கொல்லுகின்றார்கள். இதனால் மீன்கள் அதிகம் கிடைப்பதில்லை. எனவே அம்முறையைக் கைவிட்டுவிட்டனர்.

ஈட்டி எறிந்து மீன் பிடிக்கும் புதுமையான வகையொன்றையும் அவர்கள் கையாளுகின்றார்கள். மூங்கில் கோல் அல்லது மரக் கோலின் ஒரு முனையில் இரும்பினாலான கூர் முனையொன்றை இணைத்துள்ளார்கள். 8 அல்லது 10 அடி நீளமுள்ள அந்தக் கோலின் மறுமுனையில் வட்டமான ரப்பர் துண்டு சேர்க்கப்பட் டிருக்கின்றது. கடல் எழுச்சிக் காலத்தில், மீன் பிடிப்பவர்கள் கண்களைப் பாதுகாத்துக்கொள்ளக் கண்ணாடிகள் உள்ள முக மூடிகள் அணிந்துகொண்டு, கடலில் மூழ்குகின்றார்கள். கையை ரப்பர் வட்டத்துக்குள் விட்டு ஈட்டிக் கோலைப் பிடித்துக்கொள்ளு கின்றார்கள். கடலை நோக்கி மூழ்கி நிற்கும் மீன் பிடிப்பவர், கரையை நோக்கி அலை நீருடன் வரும் உறுமீனுக்காகக் காத்திருக் கின்றார். சரியான மீன் தென்பட்டதும், ரப்பரை இழுத்துக் கவண் எறிவதுபோல் ஈட்டியை மீனைக் குறிபார்த்து எறிகின்றார். அது மீனைத் தைக்கின்றது. இத்தகைய மீன் பிடிப்பு முறைக்கு நல்ல திறமைவேண்டும். குறி சரியாக இருக்கவேண்டும். ஈட்டி எறிபவர் ஒரு கையால் எறியும் திறமைகொண்டிருக்கவேண்டும். இந்த முறையை மக்கள் ஜப்பானியரிடமிருந்து கற்றுக்கொண் டிருக்கவேண்டும் என்று தெரிகின்றது. இம்முறையில் நிகோபார் தீவு முழுவதிலும் மீன் பிடிக்கின்றார்கள்.

கடல் எழுச்சி தணிந்த காலங்களில், தண்ணீர் பின்னுக்குச் சென்றுவிடுவதால், கரையோரங்களில் முழங்கால் அளவு நீரே இருக்கின்றது. அப்பொழுது பள்ளங்களில் தேங்கிநிற்கும் சிறு மீன்களைக் கூர்மையான கத்திகளைக்கொண்டு கொல்லுகின் றார்கள். பெண்கள் பவழப் பாறைகளில் ஒட்டியிருக்கும் கிளிஞ் சல்களைச் சேகரிக்கின்றார்கள். அங்கேயே கிளிஞ்சல்களை உடைத்து அதிலிருக்கும் சதைத் துண்டுகளை வீட்டுக்கு எடுத்துச் சென்று சாப்பிடுகின்றார்கள்.

எப்பொழுதாவது ஒருமுறை முள் ஈட்டிகொண்டு மீன் பிடிக் கின்றார்கள். கொக்கிகள் போன்ற வளைந்த கூர்களுடன்—ஐந்து கவர் முள்கள்—8 அடி நீளமுள்ள ஈட்டியை ஒரு கயிற்றில் கட்டிக் கடலில் எறிகின்றார்கள். கயிற்றைக் கையில் பிடித்துக்கொள்ளு கின்றனர். ஈட்டியில் மீன் பிடிபட்டதும், மேலே கொண்டுவரப் படுகின்றது. இதனுலும் அதிக மீன்கள் கிடைப்பதில்லை. இம் முறையும் கைவிடப்பட்டுவிட்டது.

இரவு நேரங்களில் தீப்பந்தங்களுடன் மீன் பிடிப்பது வெகு பகட்டான காட்சியாகயிருக்கும். நீண்ட, காய்ந்த தென்னை ஓலைகளைக்கொண்டு பந்தங்கள் செய்யப்படுவதால், அவை அதிக நேரம் எரிகின்றது. கடல் எழுச்சி தணிந்த காலத்தில், கடல் படுகை நன்கு தெரியும்பொழுது, பவழப் பாறைகளிலும், பள்ளங் களிலும் சிறு மீன்கள் தேங்கி நிற்கும்பொழுதும், இம்முறையில் மீன்கள் பிடிக்கப்படுகின்றன. இதில் குடும்பமே கலந்துகொள்ளு கின்றது. பெண்களும், குழந்தைகளும் சிறப்பான பங்கு எடுத்துக் கொள்ளுகின்றனர். குடும்பத் தலைவர் ஒரு கையில் தீப்பந்தத்தை யும், மறு கையில் ஈட்டியையோ அல்லது கூர்மையான கத்தி யையோ எடுத்துக்கொள்ளுகின்றார். அவர் தண்ணீரில், இடமாக வலமாக மாறி மாறி மீன்களைத் தேடி நகருகின்றார். வெளிச்சத் தால் ஈர்க்கப்பட்ட மீன்கள், அவரை நெருங்கி வரும்பொழுது, அவைகளை ஈட்டியால் குத்தி வெளியே எடுக்கின்றார். அவருக்குப் பின்னேயே வந்துகொண்டிருக்கும் பெண், தீப்பந்தங்கள் அணை யும் தறுவாயில் மற்றொன்றை (எரியும் பந்தங்களை) மாற்றிக் கொடுத்துக்கொண்டேயிருக்கின்றார். பின்னுக்கு வரும் குழந்தை களிடம் உள்ள கூடைகளில், கொல்லப்பட்ட மீன்கள் போடப் படுகின்றன. குறிப்பாக அமாவாசை தினங்களில், இரவு முழுவதும் இத்தகைய முறையில் மீன் பிடிப்பார்கள். அது ஒரு வண்ணக் காட்சியாகயிருக்கும். அலைகடல் ஓரத்தில், அதற்

கடுத்த கரையருகில் செம்மை நிறத் தீச்சுடர்கள் ஒளிவீச, மக்கள் சிறு சிறு கும்பலாக, இருளோடு இருளாக நிழல் வடிவில் நிற்க, தூரத்தே கருமையான ஆழ்கடல் தெரிய, அந்தக் காட்சி முழுமையுமே மினுக்கிக்கொண்டிருக்கப் பார்ப்பது கண்கொள்ளாக் காட்சியாகயிருக்கும்.

எம்முறையில் மீன் பிடித்தாலும், சில சமயங்களில் 'கின்யாயா' என்ற விதையைப் பொடி செய்து நீரில் தூவி மீன்களை மயக்கமுற செய்கிறார்கள். மயங்கிய மீன்கள் சுலபமாக அவர்கள் வீசும் வலைகளில், பொறிகளில் சிக்கிக்கொள்ளுகின்றன.

நிகோபார் மக்களின் மீன் பிடிக்கும் முறைகள் அனைத்தும் பூர்வீக காலத்தைச் சேர்ந்தவை, முரட்டுத்தனமானவை. அதனால் மீன்களும் அதிகம் கிடைப்பதில்லை. குறிப்பாகக் கார் நிகோபாரில் உள்ள மக்களுக்கு, அவர்கள் உண்பதற்குப் போதுமான மீன்கள்கூடக் கிடைப்பதில்லை. ஒருவர் பிடிக்கும் மீன்கள், அவருடைய குடும்பத்திற்கு ஓரிரு நாட்களுக்குமேல் போதுமானதாகயிருந்தால், அவைகளை விற்பதற்குப் பதிலாக, நெருப்புக்குப் பக்கத்தில் மெதுவான சூட்டில் வைத்து உலர்த்தி இரண்டு, மூன்று வாரங்களுக்கு வைத்துக்கொள்ளுகின்றார்கள். நல்ல மீன்கள் கிடைக்காத காலத்தில் சாப்பிடுவதற்காக, இவ்வாறு உலர்த்திய மீன்களை சேகரித்து வைத்துக்கொள்ளுகின்றார்கள்.

நிகோபார் தீவுகளில் நல்ல மீன்கள் கிடைக்கும் என்று இந்தியாவிலிருந்து வருபவர்கள் அநேகர் நினைக்கின்றனர். ஆனால் இங்கே மீன்கள் கிடைக்காமல் ஏமாற்றமடைகின்றார்கள். நிறையப் பணம் தந்தாலும், நிகோபார் மக்கள் தாங்கள் பிடித்த மீன்களைத் தர விரும்புவதில்லை.

நிகோபார் மக்கள் மீன்களைப் பெரிதும் விரும்புவதும், அவர்கள் டின்களில் அடைக்கப்பட்ட மீன்களை வர்த்தகக் கம்பெனிகளிலிருந்து வாங்குவதும், அத்தீவுகளில் மீன்களுக்கே தட்டுப்பாடு வந்துவிட்டதோ என்று நினைக்கத் தோன்றுவது வேடிக்கையாகயிருக்கின்றது.

நிகோபார் மக்களுக்கே போதுமான மீன்கள் கிடைக்காமலிருப்பது துரதிர்ஷ்டவசமானது. ஏனென்றால், அங்கு நீரில் மீன்கள் நிறைந்துகிடக்கின்றன. நல்ல மீன் பிடிப்பு முறைகளில் ஏராளமான மீன்களைப் பிடிக்கலாம். உண்மையில் டிசம்பர் முதல் ஏப்ரல் மாதம் வரையான நல்ல பருவகாலத்தில் மீன்கள் ஏராளமாகயிருப்பதால், அயலார்கள் அங்கு மீன் பிடிக்க வருகின்

ளூர்கள். மீன்பிடி படகுகள் கரையருகே வருகின்றன. அந்தப் படகுகளில் பிடிபட்ட மீன்கள் நிறைந்துகாணப்படுகின்றன. அதனால் மீன் பிடிக்கும் முறை சிறப்பானதாகயிருந்தால், நிகோபார் மக்களுக்கு மீன் பஞ்சமே வராது என்பதை அது உறுதி செய்கின்றது. அரசாங்கமும், அவர்களுக்கு சிறப்பான முறையில் மீன் பிடிக்கவும், ஆழ்கடலில் மீன்பிடி படகுகளைச் செலுத்தவும் கற்றுத்தர முன்வந்திருக்கின்றது. ஆகையால் ஒரு சில ஆண்டுகளில், நிகோபார் மக்களுக்கேப் போதுமான மீன்கள் கிடைப்பதுடன், இந்தியாவில் உள்ள பசித்த மக்களுக்கு அனுப்பவும் ஏராளமான மீன்கள் கிடைக்கும் என்று நம்பப்படுகின்றது.

அத்தியாயம் 8

# பொருளாதாரம்

நிகோபார் தீவுகளின் பொருளாதாரம் விவசாய அடிப்படையைக்கொண்டது. அவர்கள் தோட்டங்கள், தோப்புக்கள், காடுகளின் விளைச்சலையும், கால்நடைகளையும், மீன் பிடித்தலையும் நம்பி வாழுகின்றார்கள். தொழில்கள் எதுவும் இல்லை. மக்கள் செய்யும் சில கைவினைப் பொருள்களையும், குடிசைத் தொழிலாகக் கருதிவிடமுடியாது.

அதனால் மக்களின் வருமானத்தைப்பற்றி எதுவும் கூறுவது மிகவும் கடினம். ஏனென்றால், மக்கள் அவர்களுக்கு வேண்டிய பொருள்கள் அனைத்தையும் தங்கள் தோட்டங்களிலேயே விளைவித்துக்கொள்கின்றார்கள் அல்லது காடுகளிலிருந்து பெற்றுக் கொள்ளுகின்றார்கள். பண விகிதத்தில் இப்பொருள்களுக்குச் சரியான மதிப்பீடு செய்யமுடியாது. அன்றாடத் தேவைக்காக வெளியிலிருந்து வாங்கும் பொருள்களுக்கு, அரசாங்கம் நிர்ணயித்துள்ள விலைகளுக்குக் கொப்பரைகளையும், பாக்கையும் ஆதாரக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு விற்று, அதில் கிடைக்கும் பணத்தைக்கொண்டு வேண்டிய நுகர்ப் பொருள்களை வாங்கிக் கொள்ளுகின்றனர். எனினும், ரொக்கமாக ஒரு குடும்பம் பெறும் பணத்தைக்கொண்டு மொத்த வருமானத்தைக் கணிப்பது சரியாகாது. ஏனென்றால், மற்ற தங்கள் பொருள்களைச் சொந்தமான உபயோகத்திற்கு எடுத்துக்கொள்ளும்போது, மிகுதியான வருமானத்தின் பயனை அவர்கள் அடைகின்றார்கள். அதனால், நிகோபார் மக்களின் வருமானத்தைக் கணிக்கச் சரியானமுறை எதுவும் இல்லாத நிலையில், அவர்களின் அன்றாட வாழ்வில் பயன்படுத்தும் எல்லாப் பொருள்களின் மதிப்பையும் சேர்த்துக்கொண்டால்தான் சரியாகக் கணிக்கமுடியும்.

ஓரளவு அவர்களின் வருமானத்தைப்பற்றித் தெரிந்துகொள்ள, அவர்கள் தங்களுடைய உணவுக்கும், குடிக்கும், பன்றி போன்ற கால்நடைகளின் தீனிக்கும் தேங்காய்களை எடுக்காமல், விளைச்சல் அனைத்தையும் கொப்பரைகளாக்கி விற்றால், எவ்வளவு கிடைக்கும்

என்று பார்க்கவேண்டும். அவர்கள் விளைவிக்கும் தேங்காய்களில் மூன்றில் ஒரு பகுதி அவர்களின் சொந்த உபயோகத்திற்கும், இரண்டாவது பகுதி பன்றிகளின் தீனிக்கும், மீதி கொப்பரை தயார்செய்யவும் ஆகின்றன. கொப்பரை தயாரிக்கக் கிடைக்கும் எண்ணிக்கை தீவுக்குத் தீவு, கிராமத்துக்குக் கிராமம், வருடத்திற்கு வருடம் மாறுபடுகின்றது. எனினும், கிடைக்கும் தேங்காய்கள் அனைத்தையும் கொப்பரை தயாரிக்கப் பயன் படுத்தினால், கொப்பரை விற்பனை, இப்பொழுதிருப்பதைவிட மும்மடங்கு அதிகமாகும். இந்த அடிப்படையில் பார்த்தால், கார் நிகோபாரில், சராசரியாக தேங்காய், பாக்கு விற்பனை மூலம் ஆண்டு வருமானம் ரூ. 300ஆக இருக்கும். இத்துடன் மேலும் ரூ. 300ஐ, ஒருவர் சாப்பிடத் தோட்டங்களிலிருந்து கிடைக்கும் சேனைக்கிழங்கு, வாழை, பப்பய்யா, பண்டானுஸ் முதலான பழவகைகள், காய்கறிகள், கடலில் பிடிபடும் மீன்கள், பன்றிகள், கால்நடைகள் ஆகியவைகளையும், குடும்பம் வசிப்பதற் காகக் கட்டப்படும் வீட்டுச் சாமான்களின் மதிப்பு ஆகியவை களுக்காகச் சேர்த்துக்கொள்ளவேண்டும். இந்த மதிப்பு எண்ணை இறுதியானதாகச் சொல்லமுடியாவிட்டாலும், இந்தியாவில் உள்ள நிலைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, கார் நிகோபாரில், ஒருவரின் வருட வருமானம் ரூ. 600 என்று கூறலாம். நிகோபார் பகுதியில் உள்ள மற்ற தீவுகளில் ஒருவரின் சராசரி வருட வருமானம் ஓரளவு வேறுபட்டேயிருக்கும். சோவ்ரா மக்களுக்கு நிலம் குறைவு. நிலத்துடன் மக்கள் விகிதத்தைச் சேர்த்துப் பார்த்தால், கார் நிகோபாரைவிட அதிகமாக யிருக்கின்றது. அவர்களிடம் கொப்பரை தயாரிக்க உபரியாகத் தேங்காய்கள் இல்லை. முன்பு சொன்னதுபோல், அவர்கள் மற்ற தீவுகளுக்குக் கூலிகளாகச்சென்று ஒருசில காலம் வேலைசெய்து பிழைக்கின்றனர்கள். படகுகளும், பானைகளும் செய்து விற்று வாழுகின்றனர்கள். அவர்களைப் பொறுத்து, அவர் களின் சராசரி வருமானம் ரூ. 400ஆக இருக்கலாம். நிகோபார் பகுதியில் மற்ற தீவுகளை எடுத்துக்கொண்டால், மக்கள் தொகை குறைவு, நிலம் மிகுதி. அதனால் கார் நிகோபார் மக்களைக் காட்டிலும் செழிப்புடன் இருக்கின்றனர்கள். அவர்களில் ஒருவரின் சராசரி வருட வருமானம் ரூ. 750ஆக இருக்கக்கூடும்.

மக்களின் செலவும், வருமானத்திற்குச் சமமாக இருக்கும் என்று சொல்லலாம். இப்பொழுது தரப்பட்டுள்ள வருமானப்

புள்ளி விவரத்தில், மக்கள் உபயோகிக்கும் பொருள்களின் மதிப்பும் சேர்ந்துள்ளது. மேலும் மக்கள் கொப்பரையையும் பாக்கையும் விற்று வரும் பணத்தை அரிசி, டின்களில் அடைக்கப் பட்ட உணவுப்பொருள்கள், தேயிலை, சர்க்கரை, சிகரெட்டுகள், கத்திகள், பீங்கான் பாத்திரங்கள், மற்ற பாத்திர பண்டங்கள், செருப்புகள், வாசனைப் பொருள்கள் முதலானவற்றை வாங்கு வதில் செலவு செய்கின்றார்கள். உண்மையில், என்னென்ன நுகர்ப் பொருள்கள் தேவை என்று முன்னதாகவே நினைத்து, அவைகளை வாங்குவதற்கு உண்டான பணத்தின் அளவுக்கு கொப்பரைகளையும், பாக்குகளையும் தயார்செய்கின்றார்கள்.

நிகோபார் மக்களுக்கு சேமிக்கும் பழக்கமே கிடையாது. மிகவும் வசதிபடைத்தவர்களிடம்கூட ரொக்கப் பணம் என்பது இராது. அதே சமயத்தில் அவர்கள் கடன்வாங்க விரும்புவது மில்லை (முன்பு வர்த்தகர்களின் சுரண்டலால், என்றென்றும் பெரும் கடன் சுமையால் அழுந்தியிருந்த நினைவு காரணமாகவும் இருக்கலாம்). கிராமங்களில் கடன்பளு என்பதே இல்லை.

நிகோபார் மக்களின் ஒரே சேமிப்பு, அவர்கள் கூட்டுறவுச் சங்கங் களுக்குக் கொப்பரைகளும், பாக்கும் விற்கும்போது சிக்கன சேமிப்பு என்ற முறையில் சிறு தொகையொன்றைக் கட்டாய மாக, அவர்களுக்குத் தரவேண்டிய பணத்திலிருந்து, கழித்து வைத்துக்கொள்ளப்படுவதும், கூட்டுறவுச் சங்கங்களுக்கும், வர்த்தக நிறுவனங்களுக்கும் கிடைக்கும் இலாபத் தொகையி லிருந்து ஒதுக்கப்படும் சேம நிதி, நல ஒதுக்கீடு நிதி, வளர்ச்சி நிதி ஆகியவைகளிடமிருந்து அவர்களுக்குக் கிடைக்கும் பங்குத் தொகையும் ஆகும். இந்தத் தொகை வெகு குறைவு. அதனால் மீண்டும் வர்த்தக நிறுவனங்களிலேயே சேமிப்புப் பணமாகப் போடப்படுகின்றது. எனினும், பல ஆண்டுகாலமாக இருப்பதால் சேம நிதி, நல ஒதுக்கீடு நிதி, வளர்ச்சி நிதி ஆகியவைகள் ஒருசில இலட்சங்களாகப் பெருகியுள்ளன. மக்களும் எப்பொழுதாவது ஒருமுறையே, முக்கியமான விசேடங்களின்போது அந்த நிதிகளி லிருந்து பணம் எடுக்கின்றார்கள். அதுவும் அந்தப் பணம் சமுதாயம் முழுமைக்கும் நன்மை பயப்பதாக இருக்கவேண்டும்; அதேசமயத்தில் கிராமத் தலைமகன்களின் கூட்டத்தில் முடிவு செய்தபின்னரே பணம் எடுக்கப்படுகின்றது.

இங்கு குறிப்பிடத்தக்கதும் ஒன்றுளது. 1964—65ஆம் ஆண்டில் நிகோபார் தீவுகளில் ஒருவரின் வருட வருமானம் ரூ. 421ஆக

இருந்தது. இப்பொழுது மிகவும் உயர்ந்திருக்கின்றது. உண்மையில் சாதாரணமாக ஒரு நிகோபார்வாசி, இந்தியாவில் அவரைப் போல் உள்ள ஒருவரைவிட மிக நன்ருக யிருக்கின்ருர். அவருக்கு வயிறு நிறையச் சாப்பிட உணவு கிடைக்கின்றது; நல்லதொரு வீட்டில் குடியிருக்கின்ருர். அவருடைய அன்ருட எளிய வாழ்க்கைக்கும், வேடிக்கை, விளையாட்டுகளுக்கும் தேவையான பொருள்களை அவரால் வாங்க முடிகின்றது. பட்டினியையோ, கொடிய வறுமையையோ அல்லது அவைகளைத் தொடர்ந்த தீமைகளையோ, நிகோபார் தீவுகளில் அவர்கள் அறியார்கள்.

மற்ற சமூகங்களைப்போலவே, நிகோபார் தீவுகளில் உள்ள சிலர் மற்றவர்களைக்காட்டிலும் வளம் மிகுந்தவர்களாயிருந்தாலும், ஏழைக்கும், பணக்காரனுக்கும் இடையே அதிக வேறுபாடு இல்லை. மக்கள் அனைவருக்கும் உணவும், உடையும் ஒரே மாதிரியாகவே இருக்கின்றன. சமூக வாழ்விலும் ஏழை, பணக்காரன் என்ற ஏற்றத்தாழ்வு இல்லை. கிராம விழாக்கள் அனைத்திலும், எல்லா மக்களும் சமமாகவே கூடிக்களிக்கின்றனர். ஒருவன் பணக்காரன் என்ருல், அவனுக்கு ஏராளமான தென்னந் தோப்புகள், பழத்தோட்டங்கள், நிறையப் பன்றிகள், சில நல்ல வீடுகள், போட்டியிடப் படகுகள் இருக்கின்றன என்று அர்த்தம். முன்பு குறிப்பிட்டதுபோல், பணக்கார அந்தஸ்து என்ருல், அவனுக்குப் பன்றிகள் நிறைய இருந்தால்போதும், அவன் பணக்காரனுகக் கருதப்படுவான். இருந்தாலும் நல்ல வீடுகள், ஏராளமான பன்றிகளுக்குச் சொந்தம், படகுகள் இருக்கின்றன என்பதனுல் எல்லாம் சமூக அந்தஸ்து உயர்ந்துவிடுவதில்லை. அத்தகைய பணக்காரர்கள் எவருக்கும், ஏழைகளைக்காட்டிலும் தனிப்பட்ட சலுகைகளோ, மற்ற நலன்களோ இருப்பதில்லை.

மேலும், ஏழைகள் மிக விரைவில் பணக்காரர்கள் ஆகவும் வாய்ப்புகள் எப்போதும் இருக்கின்றன. பிறக்கும்போது, வாழ்க்கைப் பயணம் தொடங்கும் முன்னர் இருக்கும் ஏற்றத்தாழ்வுகள் மிக முக்கியமானதல்ல. ஒருவர் புதிய தோட்டங்கள் அமைக்க நிலம் சுலபமாகக் கிடைக்கின்றது. தனிப்பட்ட ஒருவரும், அவருடைய குடும்பமும் கடினமாக உழைத்து, தாங்கள் அமைக்கும் தோப்புக்களில் நல்ல விளைச்சல் கண்டு, சிறந்த கொப்பரைகள் தயார்செய்து, செலவையும் புத்திசாலித்தனமாக ஒழுங்குபடுத்திஞல், சுலபமாகப் பணக்காரராகிவிடலாம். மற்ற அநேக இடங்களில் உள்ள நிலைகளை ஒப்பிட்டுப்பார்க்கும்பொழுது,

நிகோபார் தீவுகளில் ஏழை, பணக்காரர் இடையே வேறுபாடு மிக முக்கியமானதாகக் கருதப்படுவதில்லை என்பதற்கு அவர்களிடையே அதிக வேறுபாடு இல்லை என்பதுடன், இருவரின் நிலையுமே வெகு சுலபமாக மாறிவிடக்கூடும் என்பதும் ஆகும். மேலும், ஒருவர் நிரந்தரமாக நலன்களை அனுபவித்துக்கொண்டிருப்பது என்பதும், ஒருவர் முன்னேற முடியாமல் நிரந்தரமாக வருந்திக்கொண்டிருப்பது என்பதும் இல்லை.

நிகோபார் தீவுகளில் நெடுங்காலமாகவே உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகங்கள் இருந்து வந்திருக்கின்றன. உள்நாட்டு வர்த்தகம் என்றால், நிகோபார் பகுதிகளில் உள்ள பல்வேறு தீவுகளுக்குள்ளாகவே பரிமாற்ற முறையின்மூலம், சோவ்ராவிலிருந்து படகுகளும், பானைகளும், கொண்டுலிலிருந்து படகுகளும் வாங்கிக்கொண்டு, அவைகளுக்குப் பிரதியாக அரிசி, துணி, கத்தி, புகையிலை, பன்றி ஆகியவைகளைக்கொடுத்து மாற்றம் செய்துகொள்வதுமாக இருந்தது.

ஒவ்வொரு தீவுக்குள்ளும் கிராமங்களிடையே வர்த்தகம் என்று நடைபெறுவதில்லை. ஏனென்றால், எல்லா கிராமங்களும் தன்னிறைவு பெற்றதாக உள்ளன. கிராமத்திற்கு வேண்டிய பொருள்கள் அனைத்தும் அங்கேயே உற்பத்தியாகின்றன. சந்தைகள் என்றும், காய்கறிகள், பழங்கள், முட்டை, கோழி, இறைச்சி, மீன் விற்பனை என்றும் இல்லை. சந்தை இல்லாமை, நிகோபார் மக்களுக்குப் பாதகம் இல்லாவிட்டாலும், அரசாங்க ஊழியர்களுக்கும், மற்ற அயலார்களுக்கும் வசதிக் குறைவாகயிருக்கின்றது. அவர்கள் உள்ளூர் மக்களிடம் எல்லாவிதமாகவும் பேசி, முயற்சிகள் பல மேற்கொண்டு வேண்டியபொருள்களைப் பெறவேண்டியிருக்கின்றன. நிகோபார் மக்களுக்கு, அவர்கள் விளைவிக்கும் பொருளின் மதிப்புத் தெரியாமையால், பேரம் பேசுவது மிகவும் கடினமாகிவிடுகின்றது. அதனால் அவர்கள் மிக அதிகமாகக் கண்டபடி விலை கூறுகின்றார்கள். இந்தியாவிலிருந்து சென்ற கூலிகளும், மற்றவர்களும் சில சமயம் மிகக் குறைந்த விலைக்குப் பொருள்களை உள்ளூர் மக்களிடமிருந்து, பீடிக் கட்டுகளையோ அல்லது விநோதமான சிறு சாமான்களையோ தந்து, பெற்றுக்கொள்ளுகின்றார்கள். ஆனால், மற்றவர்கள் இந்தியாவில் விற்கப்படும் விலையைப்போல் மும்மடங்கு தரவேண்டியிருக்கின்றது.

கார் நிகோபாரில் குறிப்பிட்ட மதாலய விழா நாட்களில் உள்ளூர் பண்டங்களை விற்கும் சந்தை ஒன்று கூட்டப்படுகின்றது. விற்பனைக்குவரும் பொருள்கள் அனைத்துக்குமே நல்ல கிராக்கி இருக்கின்றது. ஒரு மணி நேரத்தில் பொருள்கள் அனைத்தும் விற்பனையாகி, மதாலய நிதிக்கான தொகை சேர்ந்துவிடுகின்றது.

மேலும் கார் நிகோபாரில், ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் 'பிக் லபாடி' என்ற கிராமத்தில் கூட்டப்படும் வாரச் சந்தையிலும், அவர்களுடைய கூட்டுறவு பண்டகசாலைமூலமே, உள்ளூர் பொருள்களை விற்பனைக்குக் கொண்டுவரும்படி மக்கள் கேட்டுக் கொள்ளப்பட்டு வருகின்றார்கள். இந்த ஏற்பாடுகள் காரணமாக, இந்தியாவிலிருந்து வந்த அரசாங்க ஊழியர்களுக்கும், மற்றவர்களுக்கும் நெடுங்காலமாக அவர்களின் அன்றாடத் தேவைகளை வாங்குவதற்கிருந்த தொல்லைகள் ஓரளவு குறைய ஆரம்பித்திருக்கின்றன. எனினும், அந்தப் பிரச்சினை இன்னமும் தீர்ந்தபாடில்லை. காரணம், தேவை அதிகமாயிருக்கின்றது. உள்ளூர் பொருள்களில் விற்பனைக்குக் கொண்டுவரும் அளவுக்கு உபரி இல்லை. இரண்டாவதாக, நிகோபார் மக்கள் பணத்திலே கருத்துக் கொண்டவர்களல்ல. பண்டகசாலைக்கும், வாரச் சந்தைக்கும் தங்கள் பண்டங்களைக் கொண்டுசென்று விற்பனைசெய்ய முயற்சியோ, அக்கறையோ எடுத்துக்கொள்வதில்லை.

நிகோபார் தீவுகளில் வெளி வர்த்தகம் மிகுதியாக நடைபெறுகின்றது. முன்பு இந்தியாவுக்கும், தென் கிழக்கு ஆசிய நாடுகளுக்கும் இடையே வர்த்தகம் நடைபெற்றுக்கொண்டிருந்த காலத்தில், நிகோபார் தீவுகள் வழியே கப்பல்கள் சென்றுகொண்டிருந்தன. கப்பல் மார்க்கத்தில் தீவுகள் இருந்ததால், அங்குத் தேங்காய்களையும் பாக்குகளையும் பெற்றுக்கொண்டு பண்டமாற்றாக நுகர்ப் பொருள்களைத் தந்து சென்றனர் வர்த்தகர்கள். பிரிட்டிஷார் காலத்தில் வர்த்தகம் அதிகரிக்கத் தொடங்கியது. இந்தியாவிலிருந்தும், பர்மாவிலிருந்தும் வர்த்தகர்கள் நிகோபார் தீவுகளுக்குச்சென்று, தங்கள் கடைகளைத் திறந்தனர். இந்த வர்த்தகர்கள் நேரடியாக மக்களிடமிருந்து கொப்பரைகளையும், பாக்குகளையும் வாங்கிக்கொண்டு, நுகர்ப் பொருள்களை விற்று வந்தனர். பண்டமாற்று முறையில் வியாபாரம் நடந்துவந்தது. ஒரு நிகோபார்வாசி சில பொருள்கள் வாங்கவேண்டுமென்றால், வர்த்தகரிடம்சென்று, தேங்காய்களையும், பாக்குகளையும் அடகு வைத்து வாங்கிக்கொள்ளுகின்றார். வியாபாரி அவரிடம் குறிகள்

இட்ட குச்சியொன்றை, ஒவ்வொரு குறியும் 1000 காய்கள் என்று, நடந்த பேரத்தைக் குறிப்பிடும் வகையில் கொடுத்து விடுகின்ருர். வியாபாரி, தன்னுடைய ஆட்களை வைத்துத் தரவேண்டிய காய்களை நிகோபார்வாசியின் தோட்டத்திலிருந்து பறித்து எடுத்துக்கொள்ளுகின்ருர். காய்களை எடுத்துக்கொண்ட தற்குத் தகுந்தாற்போல் குச்சியில் உள்ள குறிகள் அழிக்கப் படுகின்றன அல்லது குச்சியின் குறியிட்ட பகுதி வெட்டப்படு கின்றது. இந்த பேரங்கள் அனைத்தும் நிகோபார் மக்களுக்குப் பாதகமாகவே இருக்கின்றன. அவர்களுக்கு வர்த்தகர்களிட மிருந்து வாங்கும் பொருள்களின் மதிப்பு என்னவென்றே தெரியாது. அந்தப் பொருள்களின் விலைமதிப்புக்கு பத்துமடங்கு மேலாகவே வியாபாரிகள் தேங்காய்களைப் பெற்றுக்கொள்ளு கின்ருர்கள். மேலும், மக்கள் தாங்களாகவே தேங்காய்களைப் பறித்துத் தருவதில்லை. மக்களின் கடனுக்காக, வியாபாரிகள் மிக அதிகமாகவே தேங்காய்களைப் பறித்துக்கொள்ளுகின்ருர்கள். அதைச் சரிபார்ப்பதும் இல்லை. நிகோபார் மக்கள் நேர்மை யானவர்கள். அவர்கள் குச்சியைப் பெற்றுக்கொள்வதுடன், பேரத்திற்கான எந்தக் குறிப்பும் கிடையாது. அவர்கள் குச்சி களைத் தூக்கியெறிந்துவிட்டு, காய்கள் எதுவும் வியாபாரிக்குத் தரவேண்டியதில்லை என்று கூறமுடியும்; அதை யாரும் தடுத்துவிட முடியாது. ஆனுல், அவர்கள் அவ்வாறு செய்வதில்லை. அதற்கு மாருக, உண்மையில், வர்த்தகர்களின் வஞ்சனையால், தங்கள் கடன்களை மீண்டும் மீண்டும் அடைத்தவர்கள் இருக்கின்ருர்கள். இவ்வழியில் வர்த்தகர்கள் பெரும் கொள்ளையடிக்க, நிகோபார் மக்கள் மீளாக் கடன் சுமையில் அழுந்தியிருந்தனர். சிலர் மிகவும் வறியவர்களாகிவிட்டனர்; தங்கள் மானத்தை மறைக்கும் சிறு துணிகூட வாங்கமுடியாமல் போய்விட்டது.

பிரிட்டிஷ் நிர்வாகம் நிகோபார் மக்களின் நலனைக்காக்க முன்வரவில்லை. இரண்டாவது உலகப் போர் துவங்குமுன்னரே தான் வர்த்தகர்களுக்குத் தரவேண்டிய கடன்கள் அனைத்தையும் தந்தனர். ஜப்பானியர் ஆக்கிரமிப்பின்போது, அநேக வர்த்த கர்கள் ஓடிவிட்டார்கள். தங்கியிருந்த வியாபாரிகளும், அவர் களின் சொந்த சூழ்ச்சிகள், சூதுகள் காரணமாகக் கொல்லப் பட்டனர்.

நாட்டு விடுதலைக்குப் பின்னர் அரசாங்கம், நிகோபார் மக்களை வர்த்தகர்கள் சுரண்டுவதைத் தடுக்க அக்கறைகாட்டியது.

அதன்படி, தீவுகளில் வர்த்தகம்செய்ய ஒரு நிறுவனத்திற்கே அரசாங்கம் அனுமதி தந்தது. நிகோபார் மக்களின் நலன்களைக் காக்கும் வகையில் சில நிபந்தனைகளை விதித்து ஓர் ஒப்பந்தத்தை அந்த நிறுவனத்துடன் செய்துகொண்டது.

அதே சமயத்தில், போர் காலத்திற்குப் பின்னர் ரிச்சர்டுசன் பாதிரியாரின் பெரும் முயற்சியினுல் துவக்கப்பட்ட கூட்டுறவு இயக்கத்திற்கு அரசாங்கம் ஊக்கமளித்தது. 1948-க்குப் பின்னர் கார் நிகோபார் தீவுகளில் உள்ள 14 கிராமங்களிலும் 'பனம் ஹைனகோஸ்' என்றழைக்கப்படும் ஆதாரக் கூட்டுறவுச் சங்கங்கள் நிறுவப்பட்டன. வர்த்தகத்தில் பண்டமாற்றுமுறை கைவிடப் பட்டது. மக்களிடமிருந்து வர்த்தக நிறுவனங்கள் நேரடியாக கொப்பரையும், பாக்கும் வாங்குவது தடுக்கப்பட்டது. இப் பொருட்களைக் கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்தே அரசாங்கம் நிர்ணயித்த விலைகளில் வாங்கவேண்டியிருந்தது. கார் நிகோபா ரின் உதாரணத்தைப்பற்றி, நிகோபார் பகுதிகளில் உள்ள மற்ற தீவுகளிலும் முக்கியமான கிராமங்களில் ஆதாரக் கூட்டுறவுச் சங்கங்கள் தோன்றின. 1951இல் எல்லா முக்கிய கிராமங்களி லும் சங்கங்கள் ஏற்பட்டுவிட்டன.

1956இல் அந்தமான், நிகோபார் தீவுகளின் பூர்வீகக் குடிகள் பாதுகாப்புச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. அதன்படி இத் தீவுகளில், நிகோபார் மக்கள் அல்லாத மற்றவர்கள் வர்த்தகம் செய்வது கட்டுப்படுத்தப்பட்டது. இப்பொழுது அயலார் எவரும் முதன்மை மேலாளரிடம் அனுமதி பெறுமல், இத்தீவுகளுக்கு வந்து வியாபாரம் செய்ய முடியாது. அனுமதிக்கான நிபந்தனை களை நிறைவேற்றித் தரவேண்டும்.

கூட்டுறவு இயக்கத்தினுல் மற்ருெரு முன்னேற்றமும் ஏற் பட்டது. 1956ஆம் ஆண்டின் முதல் தேதி முதலாக பழைய வர்த்தக நிறுவனமான ஆர். அகூஜி ஜாட்வெட் கம்பெனியின் வர்த்தக உரிமைகள் ரத்துசெய்யப்பட்டன. நிகோபார் மக்களுக் கும், கம்பெனி உரிமையாளர்களுக்கும் இடையே ஏற்பட்ட பரஸ்பர ஒப்பந்தப்படி, கார் நிகோபாரில் வர்த்தகம் நடத்த கார் நிகோபார் டிரேடிங் கம்பெனி என்ற புதிய நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டது. இந்த நிறுவனத்திற்குள்ள பங்கு மூல தனமான ரூ. 7 இலட்சத்தில் 50 சதவிகிதம் பழைய நிறுவன மான ஆர். அகூஜி ஜாட்வெட் கம்பெனியின் உரிமையாளர் களான அகூஜிகளுக்கும், மீதமுள்ள 50 சதவிகிதம் நிகோபார்

மக்கள் கையிலும், அதாவது அவர்களின் ஆதாரக் கிராமக் கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் செலுத்தப்பட்ட வகையிலு மாகும். மற்ற தீவுகளிலும் இதுபோன்ற புதிய நிறுவனம், நான்கோவ்ரி டிரேடிங் கம்பெனி என்று 1958இல் நிறுவப்பட்டது. அதிலும் பங்கு மூலதனத்தில் 50 சதவிகிதம் அகூஜிகளுக்கும், மற்ற 50 சதவிகிதம் நிகோபார் மக்களின் கூட்டுறவுச் சங்கங்களுக் கும் தரப்பட்டுள்ளன.

இந்த வகையில் நிகோபார் தீவுகளில் வர்த்தகம் நடந்துகொண் டிருக்கின்றது. இந்த இரு வர்த்தக நிறுவனங்களையும், நிகோபார் மக்களும் அங்கம் வகிக்கும் பொறுப்பாளர்கள் குழுக்கள் நிர்வகித்துவருகின்றன. ரிச்சர்டுசன் பாதிரியார் கார் நிகோபார் டிரேடிங் கம்பெனியில் ஒரு பொறுப்பாளர். நான்கோவ் ரியின் தலைவியான ராணி லட்சுமி, நான்கோவ்ரி டிரேடிங் கம்பெனியில் ஒரு பொறுப்பாளர்.

நிகோபார் தீவுகளில் இந்த இரு கம்பெனிகள் மாத்திரமே வர்த்தக நிறுவனங்களாக இருக்கின்றன. அவைகள் அரசாங்கம் நிர்ணயித்த விலையில் கொப்பரையையும், பாக்கையும் ஆதார கிராமக் கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்து வாங்கி, அவர்களுடைய ஏஜென்டுகள்மூலம் இந்தியாவில் விற்பனை செய்யக் கப்பலேற்றி அனுப்புகின்றன. மேலும் இந்தியாவிலிருந்தும், போர்ட் பிளேரி லிருந்தும் நுகர்ப் பொருள்களை வாங்கி, நிகோபார் தீவுகளில் தங்கள் கிளைகள்மூலம் விற்கின்றன. கார் நிகோபார் டிரேடிங் கம்பெனியின் தலைமை அலுவலகம் சுக்சுக்கியா என்ற கிராமத்தில் உள்ளது. அதற்குத் தீவில் மலாக்கா, சுக் சுக்கியா, ககாரு, அராங், சவாய், கின்மாய் என்ற கிராமங் களில் கிளைகள் இருக்கின்றன. நான்கோவ்ரி டிரேடிங் கம்பெனி யின் தலைமை அலுவலகம் நான்கோவ்ரித் தீவில் சேம்பின் என்ற கிராமத்தில் உள்ளது. இந்தக் கம்பெனிக்கு நிகோபார் பகுதியில் உள்ள மற்ற தீவுகளில் பல்வேறு இடங்களில் 17 கிளைகள் இருக் கின்றன. அக்கிளைகள் அனைத்தும் கொப்பரையும், பாக்கும் கிடைப்பதையும், நுகர்ப் பொருள்களின் தேவைகளைப் பொறுத் தும் நிறுவப்பட்டிருக்கின்றன. கட்சாலிலும், டெரசாவிலும் ஒவ் வொன்றிலும் ஐந்து கடைகளும், கமோர்டாவில் நான்கும், நான்கோவ்ரி, புலோமிலோ, கொண்டுல் தீவுகளில் ஒவ்வொன் றும் இருக்கின்றன.

எல்லாக் கிளைகளிலும் நுகர்ப் பொருள்கள் நல்ல இருப்புடன் வைக்கப்பட்டிருக்கின்றன. அத்தியாவசியப் பொருள்களுடன், அன்றாடத் தேவைகளும், மற்றும் விசித்திரப் பொருள்களும் இக் கடைகளில் காணலாம். நுகர்ப் பொருள்களின் விலைகளை அந்தமான், நிகோபார் நிர்வாகம் நிர்ணயித்திருக்கின்றன. இந்தியாவிலிருந்து வரவழைக்கப்பட்ட பொருள்களுக்கு, மொத்த மாக வாங்கும் விலைகளின்மேல் 25 சதவிகிதம் இலாபம் வரும்படி விற்பனை செய்ய அனுமதிக்கப்பட்டிருக்கின்றது. கெட்டுப் போகும் பண்டங்களான வெங்காயம், உருளைக்கிழங்கு ஆகிய வற்றுக்கு 40 சதவிகித இலாபம். போர்ட் பிளேரில் வாங்கப் படும் பொருள்களின்மீது $9\frac{3}{8}$ சதவிகித இலாபம் வைத்து நிகோபார் தீவுகளில் விற்க அனுமதிக்கப்பட்டிருக்கின்றது. அரசாங்கம் அனுமதிக்கும் விற்பனை விலைகளில் கிடைக்கும் இலாபம் நியாயமானதாகும். போக்குவரத்துச் செலவு, ஏற்றி இறக்கும் செலவு ஆகியவைகளை மனதில்கொண்டே விலைகள் நிர்ணயிக்கப்படுகின்றன. இப்பொழுது மக்கள் நுகர்ப் பொருள் களை, அவர்கள் வாங்கும் தகுதியில் விலைகள் இருப்பதால், வாங்க முடிகின்றது.

வருடாந்திர அனுமதிக் கட்டணங்கள் அல்லாமல், அந்தமான், நிகோபார் தீவுகளின் பூர்வீகக் குடிகளின் பாதுகாப்புச் சட்டப் படி, கொப்பரையும் பாக்கும் ஏற்றுமதி செய்ய ஆதாயப் பங்கும் (Royalty) வர்த்தக நிறுவனங்கள் தரவேண்டியிருக்கின்றது. ஆதாயப் பங்குத்தொகை கொப்பரைக்கு கிலோவுக்கு 15 பைசா வும், பாக்குக்கு 38 பைசாவும் ஆகும். இத்தீவுகளில் 1961இல் கிடைத்த ஆதாயப் பங்குத்தொகை ரூ. 3,49,680·58 ஆகும். நிகோபார் தீவுகளில் நில வரியோ, மற்ற வரிகளோ கிடையாது. நிகோபார் மக்கள் எவரும் வருமான வரி தருவதில்லை. அரசாங் கத்திற்கு இத்தீவுகளிலிருந்து கிடைக்கும் வருமானம் ஆதாயப் பங்கு ஒன்றுதான். நிர்வாகத்திற்கும், தீவுகளின் வளர்ச்சிக்கும், மற்றும் பூர்வீகக் குடிகளின் நலனுக்கும் அரசாங்கம் செய்யும் செலவுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இந்த வருமானம் ஒன்று மில்லை.

நிகோபாரில் வர்த்தகம் இப்பொழுது ஒழுங்காக நடந்து வருகின்றது. எனினும், நிகோபார் வர்த்தகத்தில் கிடைக்கும் இலாபம் அனைத்தும் நிகோபார் மக்களுக்கே கிடைக்கவேண்டும் என்பதில் அரசாங்கம் மிகுந்த அக்கறைகொண்டிருக்கின்றது.

வர்த்தகம் முழுமையும் மக்களே எடுத்து நடத்த ஊக்குவித்து வருகின்றது. நிகோபார் வர்த்தகத்தின் வருங்கால அமைப்புப் பற்றித் தெளிவாக இப்பொழுது எதுவும் கூறமுடியாது. ஏனென்றால், நிகோபார் தீவுகளில் நடைபெறும் வர்த்தக நடவடிக்கைகள் சிக்கல் மிகுந்தவை. வர்த்தகத்தை அவர்களே நடத்திக் கொள்ளப் போதுமானவகையில் அவர்கள் முன்னேறவேண்டும். வர்த்தகத் திறனும், நிர்வகிக்கும் தகுதியும் பெறவேண்டும். வர்த்தக நிறுவனங்களின் பதவிகளை ஏற்க இளைஞர்கள் கல்வி பெறுவதுடன், பயிற்சியும் பெறவேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, நிகோபார் வர்த்தகப் பொருள்களை நினைத்தபொழுது ஏற்றுமதி செய்யவும், இறக்குமதி செய்யவும் கப்பல்துறைவசதிகள் இருக்கவேண்டும். ஆனால் சமீபத்தில் கார் நிகோபார் டிரேடிங் கம்பெனியின் வர்த்தகத்தை மேற்கொள்ள நிகோபார் மக்களை மாத்திரமேகொண்ட புதிய நிறுவனம் ஒன்று கார் நிகோபாரில் அமைக்கப்பட்டுள்ளது. அதனால், நிகோபார் மக்களே, தீவுகளின் வர்த்தகத்தை மிகச் சமீபகாலத்தில் ஏற்றுக்கொள்ளுவார்கள் என்று மிக நியாயமாக எதிர்பார்க்கலாம். வர்த்தகத் துறைகளில் அவர்கள் வளர்ச்சி பெறுவது நிறைவுபெற்றுவிடும்.

வர்த்தக நிறுவனங்கள் நன்கு பணியாற்றுவதும், வர்த்தக ரீதியில் அவர்களின் நலன் பாதுகாக்கப்படுவதும் ஒன்றுக்கொன்று மிக நெருக்கமாக இணைந்தவை. மேலும் கிராம ஆதாரக் கூட்டுறவுச் சங்கங்கள் சரியாக இயங்குவதைப் பொறுத்தும் இருக்கின்றது. இதுவரை நிகோபார் தீவுகளில் உள்ள சங்கங்கள் அனைத்தும் வெகு நன்றாகவே பணியாற்றி வருகின்றன. கிராமங்களில் உள்ள குடும்பங்களின் தலைவர்கள் அனைவரும் கூட்டுறவுச் சங்கங்களில் அங்கத்தினர்கள். அவர்களுக்குள்ளேயே பங்குகள் அனைத்தும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. கிராமத் தலைமகன் சங்கத்தின் தலைவராக இருக்கின்றார். சங்கத்தின் உள் நிர்வாகப் பணிகளில் அவருக்கு உதவிசெய்ய ஒரு நிர்வாகக் குழு இருக்கின்றது. சங்கத்தின் பணிகளையும், கணக்குகளையும் பார்த்துக்கொள்ள ஒரு விற்பனையாளர் சம்பளத்தில் அமர்த்தப்பட்டிருக்கின்றார்.

ஆதாரக் கூட்டுறவுச் சங்கங்கள் அரசாங்கம் நிர்ணயித்த விலைகளிலிருந்து கொப்பரையை கிலோ விலையிலிருந்து 5 பைசா தள்ளியும், பாக்கை 10 பைசா தள்ளியும் வாங்குகின்றன. நிகோபாரிகள் அல்லாத மற்றவர்களுக்கு விற்க இவ்வாறு வாங்குகின்றன. எனினும் கொப்பரையையும் பாக்கையும், அரசாங்கம்

நிர்ணயித்த குறைந்தபட்ச விலையான முறையே கிலோ 70 பைசாவுக்கும், ரூ. 2·20-க்கும் வர்த்தகக் கம்பெனிக்குத் தருகின்றன. அதனால் சங்கங்களுக்கு கொப்பரையில் 5 பைசாவும், பாக்கில் 10 பைசாவும் இலாபம் கிடைக்கின்றது. இந்த இலாபத்தைக் கொண்டே, கார் நிகோபார் டிரேடிங் கம்பெனியும், நான்கோவ்ரி டிரேடிங் கம்பெனியும் அமைக்கப்பட்டபொழுது 50 சதவிகிதப் பங்குகளை கூட்டுறவுச் சங்கங்கள் வாங்கின.

நிகோபார் தீவுகளில் கூட்டுறவு இயக்கம், கூட்டுறவு வாணிகச் சங்கங்களை நிறுவியதல்லாமல் மேலும் இரு சாதனைகளையும் சாதித்திருக்கின்றன. கூட்டுறவு முறையில் ஒரு சிற்றுண்டி விடுதியையும், சோப் செய்யும் தொழிற்சாலை ஒன்றையும் நிறுவியிருக்கின்றது.

தீவின் தலைமை அலுவலகப் பகுதியில் நிகோபார் மக்களே ரூ. 25,000 சேர்த்துத் தாங்களே சிற்றுண்டி விடுதிக்காக நல்லதொரு கட்டடத்தைக் கட்டியுள்ளார்கள். 1965 ஜனவரி மாதம், அப்பொழுது இந்திய யூனியன் மந்திரியாகயிருந்த திரு. ஜெ. எல். ஹாத்தி இந்தச் சிற்றுண்டி விடுதியைத் திறந்து வைத்தார். தேநீர், சிற்றுண்டிகள், மற்றும் அப்பொழுது கிடைக்குமானால் காய்கறிகள், பழங்கள், இறைச்சி, கோழி, முட்டைகள் நியாயமான விலையில் விற்பனை செய்யப்படுகின்றன. ரொட்டிக் கடையொன்றும் வைக்கப்பட்டிருக்கின்றது. அங்கு தயாரிக்கப்படும் தரமான ரொட்டிகளும், பிஸ்கட்டுகளும் அரசாங்க ஊழியர்களிடையேயும், நிகோபார் மக்களிடமும் நன்கு விற்பனையாகின்றன. அவர்களும் மிகவும் விரும்புகின்றார்கள்.

தேங்காய் எண்ணெய் எப்போதும் கிடைப்பதால், நிகோபார் தீவுகளில், சோப் செய்வதற்கான வாய்ப்பு அதிகமாக இருக்கின்றது. அதனால் கார் நிகோபாரைச் சேர்ந்த கின்யூகா என்ற கிராமத்தில் 1965இல் சோப் தயாரிக்கும் கூட்டுறவுச் சங்கம் ஒன்று துவக்கப்பட்டது. துணி வெளுக்கும் சோப்புகளை இப்பொழுது தயாரிக்கின்றது. இந்தச் சோப்புகளை கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள்மூலம் விற்பனை செய்கின்றார்கள். சோப்பு தரத்தில் உயர்ந்ததாகவும், வெளியில் கிடைப்பதைவிட விலை குறைவாகவும் இருப்பதால், தேவை மிகுதியாகயிருக்கின்றது. சில ஆண்டுகளில் அதன் உற்பத்தி அதிகரிக்கவும் கூடும்.

கார் நிகோபாரில் மூன்று கிராமங்களில் துணிகள் தைக்கவும், ஆடைகள் தயாரிக்கவுமான கூட்டுறவுச் சங்கங்கள், மக்களின் விருப்பத்திற்கு ஏற்ற முறையில், ஆயத்த ஆடைகள் நியாயமான விலைகளில் கிடைக்கக்கூடிய வகையில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

உண்மையில் நிகோபார் தீவுகளில் கூட்டுறவு இயக்கம் நன்கு பலப்பட்டு வருகின்றது. மேலும் வளர்ச்சியடைந்தும் வருகின்றது. நிகோபார் மக்களின் சமுதாய அமைப்பில் மனிதனுக்கு மனிதன் என்ற உணர்வு மிகுதியும், பரஸ்பர நம்பிக்கையும், பொறுப்புணர்வும் இருப்பதால், கூட்டுறவு நிறுவனங்கள் நன்கு வளரவே செய்யும். உண்மையில் நிகோபார் மக்களின் ஒருங்கிணைந்த சமுதாய வாழ்வின் வளர்ச்சியாகவே கூட்டுறவுக் கொள்கை இருக்கின்றது. அதனால் தனிப்பட்ட முறையில் அல்லாமல், ஒன்றுபட்ட நடவடிக்கையில் ஈடுபடும் கருத்துக்கு உடனடியான சம்மதமுடன் பாடுபடுகின்றார்கள்.

அம்மக்களின் குணத்தினாலும், வாழ்க்கை முறையினாலும் கூட்டுறவு நிறுவனங்கள் வளர்ச்சி பெறுகின்றன என்றாலும், கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சியும் அம்மக்களின் வாழ்க்கையை மாற்றியிருக்கின்றது. தனிப்பட்டவர்களிடையே புதிய போக்கையும் தோற்றுவித்திருக்கின்றது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். நிகோபார் மக்களே அதை உணருகின்றார்கள். கூட்டுறவு இயக்கம் தோன்றுமுன்னர், பல்வேறு குடும்பங்களிடையே போட்டியும், பூசலும் இருந்ததென்றும், நிலத் தகராறுகள் அதிகமென்றும், அநேக முக்கியமான விஷயங்கள் கிராம மக்கள் அனைவரின் சம்மதத்துடனும், நம்பிக்கையுடனும் தீர்க்கப்படவில்லையென்றும் அவர்கள் சுட்டிக் காட்டுகின்றார்கள். கூட்டுறவு நிறுவனங்களின் அமைப்பும், திறமைகளும், வளங்களும் ஒன்று சேர்ந்ததாலும், கிராமத்தில் பல்வேறு குடும்பங்களிடையே இருந்த உறவுகள் உறுதிப்பட்டன; பல்வேறு கிராமங்களின் மக்களையும் ஒன்றுசேர்த்திருக்கின்றன. அதனால் தனிப்பட்டவர்களுக்கும், வேறுபட்ட குடும்பங்களுக்கும் இடையே இருந்துவந்த தகராறுகள் முன்பு இருந்ததைவிடக் குறைந்துவிட்டன. எல்லா முக்கிய விஷயங்களிலும் கிராமத்தில் உள்ள குடும்பங்கள் அனைத்தின் சம்மதமும், சில சமயங்களில் மற்ற கிராமங்களில் உள்ளவர்களின் சம்மதமும் பெறப்படுகின்றன. மகிழ்ச்சியான இதே போக்கு நீடிக்குமானால், இத்தீவுகளில் இதுவே மிகவும் குறிப்

பிடத்தக்க அம்சமாக விளங்கும். எல்லா சமூகங்களிலும் பொருளாதார முன்னேற்றம் என்பது தனிப்பட்டவர்களின் வளர்ச்சியையும் சார்ந்திருக்கும்; சமுதாய வளர்ச்சியின் பூர்வாங்க கட்டத்தில் காணப்படும் ஒற்றுமை உணர்வும், பரஸ்பர நம்பிக்கையும் மெதுவாக மறைந்துவிடும். ஆனால், நிகோபார் தீவுகளில், தீவிரத் தனித்தன்மை இனிமேல் வரவே வராது என்ற நம்பிக்கை இருக்கின்றது. வருங்காலத்தில், இன்றைய ஆதிக் குடிகளின் சமுதாய வாழ்வு முடிவுகண்டாலும், அது கூட்டுறவுக் கருத்துக்கள் நிரம்பிய, எல்லோருக்கும் நன்மை என்ற சிறப்பான கருத்தைப் பகுத்துணர்ந்ததான, தனிப்பட்டவர்களின் விருப்புக் களும், வெறுப்புக்களும் சமுதாய நலனில் அடங்கியதான, சமூக அமைப்பாகவே அது மாறக்கூடும்.

அத்தியாயம் 9

# கலைகளும், கைத்திறனும்

நிகோபார் மக்களிடம் நல்ல கைவேலைத் திறமையும், தேர்ச்சியும் இருந்தாலும், அவர்களுடைய கலைப் பொருள்களும், கைவினைப் பொருள்களும் வெகு குறைவாகவே யிருக்கின்றன. எல்லா சமுதாயங்களிலுமே கலையும், கைத்திறனும் மக்களின் வாழ்வைப் பொறுத்தேயிருக்கின்றது என்பது ஓரளவு உண்மை. எளிய வாழ்க்கை நடத்திவரும் நிகோபார் மக்களிடம் உடைமைகள் என்று எடுத்துக்கொண்டாலும் அதிகமில்லை. அதனால் அவர்களின் கலைப் பொருள்களும், கைவினைப் பொருள்களும் பெருகும் வாய்ப்பு குறைந்துவிடுகின்றன. மேலும் அந்த மக்களில் அவைகளையே கைத்தொழிலாகக்கொண்டவர்கள் என்றுமில்லை. எல்லோரும் ஒரேவிதமான வேலைசெய்து வருகின்றார்கள். அநேகருக்குத் தச்சுவேலை தெரியும். அன்றாட வாழ்விற்குத் தேவைப்பட்ட சாதாரண கைவினைப் பொருள்களைச் செய்துகொள்ளத் தெரியும். சிலர், மற்றவர்களைவிட திறமை வாய்ந்தவர்களாக யிருக்கின்றார்கள் என்பதில் சந்தேகமில்லை. இவர்களின் சேவை தேவைப்பட்டால், மற்றவர்கள் இவர்களைப் பயன்படுத்திக்கொள்ளுகின்றார்கள். எனினும், இந்தத் திறமை மிகுந்தவர்கள், மற்றவர்களுக்கு ஊழியம் செய்யும் காலத்திற்கு உணவைத் தவிர மற்றெதையும் பெற்றுக்கொள்ளுவதில்லை. உண்மையில் நிகோபார் மக்களின் புதுமையான சமுதாய அமைப்பில், ஒருவர் எவ்வளவுதான் ஒரு தொழிலில் திறமையும், தேர்ச்சியும் பெற்றிருந்தாலுங்கூட, தன் காலத்தையும், சக்தி அனைத்தையும் அத்தொழிலிலேயே செலவிட்டு, அதையே மேற்கொள்வதற்கு எந்தவித ஊக்கமும் கிடையாது.

மக்களின் மிக முக்கியமான தொழில் தச்சுவேலை. எல்லோருக்குமே தச்சுவேலையில் அடிப்படையான தொழில் முறை தெரியும். சிறு வயதிலிருந்தே பெரியவர்கள் வேலை செய்யும் பொழுது பார்த்துக்கொண்டும், அவர்களுக்கு உதவிபுரிந்தும் தெரிந்துகொண்டிருக்கின்றார்கள். வீடுகள் கட்டுவது, தோட்டங்

களுக்கு வேலி அடைப்பது என்பதுடன் அல்லாமல், படகுகள் செய்வதற்கும் நிகோபார் மக்களுக்குத் தச்சுத் தொழில் தெரிந் திருக்கவேண்டியது மிக அவசியமாக யிருக்கின்றது.

பலவகையான படகுகள் இருக்கின்றன. சில மிகச் சிறியவை. 2 அல்லது 3 பேரை மாத்திரமே எடுத்துச் செல்லக்கூடியவை. மற்றவை மிகப் பெரியவை. சுமார் 40 பேர்கள் சுலபமாக உட்காரலாம். பெரிய படகுகள் 'கொண்டுலி'லும், 'சோவ்ரா' விலும் மாத்திரமே தயாரிக்கப்படுகின்றன. அவைகளைவிடச் சிறியதான படகுகள் மீன் பிடிப்பதற்கும், கொஞ்ச தூரம் செல்லு வதற்குமான 20 அல்லது 30 அடி நீளமுள்ளவைகள் மற்ற தீவுகளிலும் செய்யப்படுகின்றன.

ஒரு படகு செய்யப்படவேண்டுமானுல், நாலைந்து பேர்கள் உட் பகுதிக் காடுகளுக்குச் சென்று, நல்லதொரு மரத்தைத் தேர்ந் தெடுத்து அடிமரத்தைக் கோடரிகொண்டு வெட்டி எடுக் கின்றுர்கள். கோடரியாலேயே அதைக் குடைந்து, மேலும் வேலைசெய்வதற்காகக் கிராமத்திற்குக் கொண்டுவருகின்றுர்கள். மேலும், அந்த மரக்கட்டையைக் குடைய, உள்ளூரத் தீவைத்துச் சுடுகின்றுர்கள். பின்னர் உளிகள்கொண்டு மரக்கட்டையின் இரு முனைகளைச் சிறிது வளைவாக்கித் தண்ணீரைக் கிழித்துக்கொண்டு செல்லும் வகையில் கூர்படுத்தவும் செய்கின்றுர்கள். பின்னர் அந்தப் படகைத் திருப்பிப்போட்டு, கப்பலின் அடிப்பாகம்போல் மிதப்பதற்கு ஏற்ற மாதிரி செதுக்குகின்றுர்கள்.

படகின் வெளிப்பாகம் உருவானவுடன், அதன் திறந்த பாகத் தின் குறுக்கே நிறைய மரக்கம்புகளை, உட்காருவதற்கான இடங்க ளாகவும், சாமான்கள் வைப்பதற்கும், படகை வலுப்படுத்தவும் கட்டுகின்றுர்கள். படகின் ஓரங்களில், குறுக்குக் கம்புகளுக்கு மேலாக நீண்ட கழிகளை வைத்துப் பிரம்பால் இறுக்கிக் கட்டு கின்றுர்கள். இந்த நீண்ட கழிகள் இருப்பதால், சாமான்கள் தண்ணீருக்குள் சுலபமாக நழுவாமல் காக்கப்படுகின்றன.

அடிமரத்தின் சுற்றளவில் மூன்றில் இரண்டு பங்கு அளவு படகு செதுக்கப்பட்டுள்ளதால், படகு ஓரளவு நல்ல குழிவாக இருக் கின்றது. இதனுலும், அதன் அகலத்துக்கு ஏற்ப, மிக நீளமாக வும் படகு இருப்பதால், ஒவ்வொரு படகுக்கும் 10 அடி நீளமும், 8 அங்குல குறுக்களவுகொண்ட ஒரு கட்டை புறச்சட்டமாக இணைக்கப்படுகின்றது. படகைச் சமப்படுத்தும் வகையில் புறச் சட்டம் தேர்ந்தெடுக்கப்படுகின்றது. படகுடன் இணையான

கோணத்தில் 8 அடி தூரத்தில் வெகு கவனமுடன், மூங்கில்களை வைத்து இணைத்துப் புறச்சட்டம் கட்டப்படுகின்றது. புறச் சட்டத்தை இணைக்க ஆணிகள் எதுவும் அடிப்பதில்லை. உண்மை யில், படகில் எதற்கும் ஆணிகளே அடிப்பதில்லை. புறச்சட்டங் களைச் சேர்ப்பதற்கும் சரி, மற்ற இணைப்புகளைச் சேர்ப்பதற்கும் சரி பிரம்புகளையோ, நார்களையோ பயன்படுத்திக் கட்டுகின்றனர்கள். புறச்சட்டத்துடன் இணைக்கும் மூங்கில்களையும், கயிறுகளையும் எப்பொழுதும் கவனமுடன் சோதித்த பின்னரே, கடலில் நீண்ட பயணங்களை மேற்கொள்ளுகின்றனர்கள். பயணத்தில் அவசர நிலைமைகள் ஏற்பட்டால், சமாளிப்பதற்கு வேறு புறச்சட்டங் களும், பிரம்பும், நார்களும் எடுத்துச் செல்லுகின்றனர்கள்.

படகு பொதுவாக சமனுகவே இருக்கும். நன்கு பாதுகாப்பான கலமும் ஆகும். கடல் அமைதியாக இருக்கும்பொழுது, மக்கள் 40–50 மைல் தூரமுள்ள பல்வேறு தீவுகளுக்குச் செல்லு கின்றனர்கள். வழியில் உள்ள இடைஞ்சல்களையும், தொல்லைகளை யும் எண்ணிப் பார்க்கும்போது, விபத்துக்கள் வெகு குறைவு என்றே சொல்லவேண்டும். விபத்து ஏற்பட்டால், படகு முழுகுவ தில்லை. உதவி வரும் வரையில் மக்கள் அதைப் பிடித்துக் கொண்டே மணிக்கணக்காக மிதந்துகொண்டிருக்கின்றனர்கள். பொதுவாக விபத்து ஏற்பட்டால், அதற்கு முக்கிய காரணமாக இருப்பது, புறச்சட்டம் உடைபட்டிருக்கும் அல்லது புறச்சட்டம் இருக்கும் மறுபாகத்தில் அதிகப் பளு ஏற்றப்பட்டு படகு கவிழ்ந் திருக்கும். அதனுலேயே படகில் மக்கள் உட்காரும்போது, புறச் சட்டம் இருக்கும் பக்கமாகவே உட்காரச் சொல்லுகின்றனர்கள். அப்பொழுதுதான் படகில் உள்ள பளுவானது மையமான ஈர்ப்புக் கருகில் இருக்கும். படகு கவிழுவதற்கான வாய்ப்புகள் குறைந்து விடும்.

போட்டிகளில் கலந்துகொள்ளும் படகுகளுக்குப் பொதுவாக முகப்புச் சட்டங்கள் இருக்கும். படகின் முன்பாகத்தில் நீரைக் கிழித்துக்கொண்டு செல்ல முகப்புச் சட்டத்தில் முள்போன்ற முனைகள் இருக்கும். படகின் பின்புறம் ஒரு சிறிய குமிழுடன் முடிவடையும். முகப்புச் சட்டங்களைப் பகட்டான நிறங்களில் பூசியிருக்கின்றனர்கள். பொதுவாக முகப்புச் சட்டத்தைப் படகில் துளைகள் செய்து பொறுத்துகின்றனர்கள். போட்டிக்கான படகு களின் பக்கங்களும், பளபளக்கும் வெவ்வேறு வண்ணங்களில், அழகான கோலங்கள் இட்டுப் பூசப்படுகின்றன.

படகுகள் பயன்படுத்தப்படாதபொழுது, வீட்டின் அடியின் தரையில் தென்னை ஓலைகளால் மூடிவைத்திருக்கின்றார்கள். மக்கள் படகுகளை மிகப் பெருமையுடன், கவனமாகப் பாதுகாக்கின்றார்கள். கிராம மக்கள் அனைவராலும் கட்டப்பட்ட சில பொதுப் படகுகளும், கிராமப் படகுகளும், படகுப் போட்டிகளில் பயன்படுத்துவதற்காக இருக்கின்றன. இந்தப் படகுகள் புனிதமானவை. மீன் பிடிப்பது, கப்பல்களில் சாமான் ஏற்றுவது போன்ற சாதாரணக் காரியங்களுக்கு இப்படகுகள் பயன்படுத்தப் படுவதில்லை. கிராமப் படகுகளின் அருகில் குழந்தைகள் செல்லக் கூடாது. பெரியவர்களும் அதன்மீது உட்காரக்கூடாது. கடலில் செல்லாத காலங்களில், கிராமப் படகுகளை 'எல்பானம்' என்ற தூய சமுதாய இல்லத்தில் மிக மரியாதையுடன் வைத்திருக்கின்றார்கள்.

சில சிறப்பான நாட்களில், வெளியிலிருந்து முக்கிய பிரமுகர்கள் வருகைதருங் காலங்களில் இரு படகுகளிலிருந்து புறச்சட்டங்களை நீக்கிவிட்டு, அவைகளை இணைத்து மரப்பலகைகளால் மேடை ஒன்று தயார் செய்துவிடுகின்றார்கள். மேடையின் நான்கு மூலைகளிலும் நான்கு கழிகளை நிறுத்தி அவைமீது இளந்தென்னங் குருத்துக்களைப் பரப்பி விதானம் அமைத்துவிடுகின்றார்கள். அத்தகைய இரட்டைப் படகுகள் பார்ப்பதற்கு வெகு அழகாகயிருக்கும்; வசதியாகவும் உள்ளது. இருந்தாலும் படகுகள் சமன்நிலையில் இருப்பதில்லை. சில சமயம் வேகமான அலைகள் கவிழ்த்துவிடுகின்றன. 1959இல் யூனியன் துணை அமைச்சராக இருந்த திருமதி வயலட் ஆல்வா கார் நிகோபாருக்கு வந்திருந்தபொழுது, கரையிலிருந்து அவர் கப்பலுக்கு இரட்டைப் படகுகளில் செல்லுகையில், படகுகள் கவிழ்ந்ததினால், அவர் கடலில் வீழ்ந்தார். அங்கிருந்த ரிச்சர்டுசன் பாதிரியார், 75 வயதானவராகயிருந்தும், கடலில் உடனே குதித்து அவரைக் காப்பாற்றினார். மீண்டும் 1965 ஜனவரியில் யூனியன் மந்திரியாக இருந்த திரு. ஜே. எல். ஹாத்தி கார் நிகோபாருக்கு வருகை தந்திருந்தபொழுது, இரவில் இரட்டைப் படகுகளில் ஏறிக் கப்பலுக்குச் சென்றுகொண்டிருந்த காலையில், அது ஒரு பக்கமாகச் சாய்ந்துவிட்டது. அந்த விபத்து கரையருகே நிகழ்ந்ததால், படகுகளை இயக்கியனுப்பிய சிலர் அருகிலேயே இருந்தார்கள். அவர்கள் விரைந்து சென்று படகைக் கரை சேர்த்து அமைச்சரையும், மற்றவர்களையும் காப்பாற்றினார்கள். அவர்கள் அருகில் இல்லாவிட்டால், இருட்டு நேரத்தில்

எதுவும் நடந்திருக்கக்கூடும். விபத்தில் அகப்பட்டுக்கொண்டவர்களுக்கு எந்த உதவியும் செய்திருக்க முடியாது. அதற்குப் பின்னரே, இதுபோன்ற இரட்டைப் படகுகளைச் சிறப்பான வரவேற்பு அம்சமாகப் பயன்படுத்துவதைக் கைவிட்டுவிட்டனர். முக்கிய பிரமுகர்கள் இரட்டைப் படகுகளில் வசதியாகச் செல்வதைவிட, சாதாரணப் படகுகளில் வசதிக் குறைவுடன், ஆனால் பாதுகாப்பு மிகுதியுடன் செல்வது நல்லது என்ற முடிவுக்கு வந்துவிட்டனர்.

நீண்ட பயணங்களின்போது படகுகளில் பாய்மரங்களையும் கட்டிக்கொள்ளுகின்றார்கள். படகுகளின் நடுவில் உட்காரும் இடங்களில் இரண்டு நீண்ட கழிகளை நட்டு, அவைகளின்மீது கித்தானையோ அல்லது கெட்டியான துணிகளையோ விரித்துப் பாய்மரங்களாகச் செய்துவிடுகின்றார்கள். காற்று சாதகமாக வீசும்பொழுது பாய்மரப் படகுகள் மிக வேகமாக, மோட்டார் படகுகளைவிட வேகமாகப் போகின்றன. ஒரு பாய்மரப் படகில் செல்வது மிகுந்த எழுச்சியூட்டுவதாகயிருக்கின்றது. நீலக்கடலைக் கிழித்துக்கொண்டு, சருக்கியதுபோல் படகு விரைந்து செல்லுகையில் ஒரு பக்கம் காற்று மோத, வேகத்தின் விறுவிறுப்பால் மயிர்க்கூச்சலிட, நீர்த் திவலைகள் உடல்மீதும், முகத்தின்மீதும் முத்தமிட்டுச் செல்ல ஒரே மகிழ்ச்சிகரமாகயிருக்கும்.

நிகோபார் மக்கள் தங்கள் தச்சுவேலைத் திறமையை மனைக்கான தட்டுமுட்டுப் பொருள்கள் செய்வதிலும் காட்டுகின்றார்கள். ஒவ்வொரு வீட்டிலும் ஒரு சாய்மனை இருக்கின்றது. அடிப்பாகம் மரத்திலும், மேல்பாகம் பிரம்புகளைக்கொண்டும், மூங்கில் பிளாச்சுகளைக்கொண்டும் செய்யப்பட்டிருக்கின்றது. இப்பொழுது சிலர் நாற்காலிகளும், சிறு மேஜைகளையும் செய்யத் துவங்கியிருக்கின்றார்கள். கார் நிகோபாரில் 'பிக் லபாடி' கிராமத்தில் இருக்கும் தச்சுவேலைப் பொருள்கள் தயாரிப்புப் பயிற்சிக் கேந்திரம், சிலருக்குத் தட்டுமுட்டுச் சாமான்கள் தயாரிப்பதற்குப் பயிற்சியளித்திருக்கின்றது.

தச்சுத் தொழிலுக்கு கோடரி, உளிகள், இரம்பம், முக்கோணங்கள் ஆகியவைகள் பயன்படுத்தப்படுகின்றன. அடிக்கோல்களை உபயோகப்படுத்துவதில்லை. கைவிரல்களை அளவாகக் கொண்டு அளக்கின்றார்கள். சில சமயம் சிறு மூங்கில் துண்டுகளையும் அளவுக்குப் பயன்படுத்திக்கொள்ளுகின்றார்கள்.

கிராமத்தில் கொல்லர்கள் இல்லை. வேண்டிய இரும்புச் சாமான்களை உள்ளூர் கடைகளிலோ அல்லது கார் நிகோபாரில் 'பிக் லபாடி' கிராமத்தில் குடிசை கைத்தொழில் துறையினரின் கொல்லுத் தொழில் பொருள்கள் தயாரிப்புப் பயிற்சிக் கேந்திரத்திலிருந்தோ பெற்றுக்கொள்ளுகின்றார்கள். அந்தக் கேந்திரத்தில் கொல்லுத் தொழிற்பயிற்சிபெற வசதிகள் இருக்கின்றன. ஆனால் அப்பயிற்சிபெற அதிகமாக யாரும் முன்வருவதில்லை. ஏனென்றால் தீவுகளில் அத்தொழிலை மேற்கொள்ளுவதற்கான வாய்ப்புகள் இல்லை. எனினும், ஒருசிலர் தங்களுக்கிருக்கும் கொல்லு வேலைத் திறமையை அரிவாள்கள் செய்வதில் காட்டுகின்றனர். அவர்களின் அன்றாட வாழ்வில் அரிவாள்கள் வெகுவாகப் பயன்படுகின்றன. இதற்கு ஜப்பானியர் விட்டுச் சென்ற பழைய இரும்புத் துண்டுகளைத் தேர்ந்தெடுத்து நெருப்பில் காய்ச்சி, சம்மட்டியால் அடித்து அரிவாளை வடித்தெடுக்கின்றனர். பின்னர் கல்லில் தீட்டிப் பதப்படுத்திக்கொள்ளுகின்றார்கள்.

கார் நிகோபாரில், எல்லாப் பெண்களுமே தையல் வேலை செய்வதிலும், பின்னல் வேலைகளிலும் திறமை பெற்றிருக்கின்றார்கள்.

மற்ற தீவுகளில் உள்ளவர்கள் இத்தொழில்களில் விரைவான முன்னேற்றம் கண்டுவருகின்றார்கள். அரசாங்கம் கார் நிகோபாரிலும், நான்கோவ்ரியிலும் தையலும், ஆடைகள் தயாரிக்கவும், பின்னல் வேலையும் சொல்லித்தர இரு கேந்திரங்களை நடத்திவருவதால் நிகோபார் பெண்கள் இத் தொழிலில் முன்னேற உதவிகரமாகயிருக்கின்றன. நிகோபார் தீவுகளில் தையற் தொழிலாளிகள் என்று இல்லை. பெண்களே தங்கள் கணவன்மார்களுக்கும், குழந்தைகளுக்கும் வேண்டிய ஆடைகளை தைத்துக்கொள்கின்றார்கள். கையாலும், இயந்திரங்களைக் கொண்டும் தைக்கின்றார்கள். மேஜை விரிப்புகள், படுக்கை உறைகள், அதன்மேல் விரிக்கும் துணிகள், தலையணையுறைகள், மற்றும் குழந்தைகளின் ஆடைகள் ஆகியவற்றில் பின்னல் வேலைகள் செய்யப்பட்டிருப்பதைக் காணலாம். சில சமயம் குழந்தைகளுக்கான கம்பளிச் சட்டைகளையும் பெண்கள் பின்னுகின்றார்கள். பெண்களின் ரவிக்கை, உள்சட்டை, தலையணையுறைகள் ஆகியவற்றுக்கு இழை நூல் கரைகளையும் பின்னுவதில் அவர்கள் தேர்ச்சிபெற்று வருகின்றார்கள்.

அவர்களிடம் பரம்பரையாக இருந்துவரும் இரு முக்கியமான கைத்தொழில்கள் கூடைகள் முடைவதும், பாய்கள் பின்னுவதும் ஆகும். பெண்கள் தங்கள் ஓய்வு நேரங்களில் அவ்வேலைகளைச் செய்கின்றார்கள். காட்டில் நிறைந்து கிடக்கும் பிரம்புகளைக்கொண்டு கூடைகளை முடைகின்றார்கள். கூடைகளைச் சாமான்கள் எடுத்துச்செல்லவும், சேகரித்துவைக்கவும் பயன்படுத்துகின்றார்கள். மூடியுடனும், மூடியில்லாமலும் அவர்கள் கூடைகளைத் தயாரிக்கின்றார்கள். கூடைகள் நல்ல உறுதியுடனும் நல்ல வேலைப்பாடுடனும் செய்யப்பட்டிருக்கின்றன.

தென்னையின் காம்புகளைக்கொண்டும், பண்டானுஸ் இலைகளைக்கொண்டும் அவர்கள் பாய்களைப் பின்னுகின்றார்கள். தென்னையின் காம்புகளைக் காயவைத்து, நீண்ட கீற்றுகளாக நறுக்கி அவைகளைப் பாயாகப் பின்னுகின்றார்கள். அந்தப் பாய்கள் உறுதியாக 10 அல்லது 15 ஆண்டுகள்கூட நீடித்து உழைக்கின்றன. அவைகளை உட்காருவதற்கும், படுப்பதற்கும் பயன்படுத்துவதுடன், அவர்களுடைய நீண்ட சதுரமான கூரை வீடுகளில், அவைகளைத் தடுப்புச்சுவர்களாகவும் பயன்படுத்துகின்றார்கள். பண்டானுஸ் இலைகளையும் காயவைத்து நீண்ட கீற்றுகளாகக் கீறிப் பாய்கள் பின்னுகின்றார்கள். அவைகள் தென்னம் பாய்களைப்போல் உறுதியாக இல்லாவிட்டாலும், ஆறு அல்லது ஏழு ஆண்டு நீடிக்கின்றன. அவைகள் மென்மையாக, மழமழப்புடன் குளிர்ச்சியாக இருக்கின்றன. அவைகள் பளபளப்பாகக் காணப்படுவதால் பார்ப்பதற்கு நன்றாகயிருக்கின்றன. அதனால் அவைகளைத் தூங்குவதற்கும், பகலில் உட்காருவதற்கும் பயன்படுத்துகின்றார்கள். சாதாரணமாக அந்த இலைகள் வெண்மையாகயிருக்கும். சில கருமையான இலைகளும் இருக்கின்றன. இந்த கருமையான இலைகளைப்பயன்படுத்தி, வெண்மையான பாய்களில் அழகான வடிவமைப்புகளை எளிமையுடன் செய்துவிடுகின்றார்கள். அவை நல்ல வேலைப்பாடுடனும், புதுமையாகவும் இருப்பதால், வெளியார்கள் அவைகளை மிகவும் விரும்புகின்றார்கள். நிகோபார் மக்கள் இந்தப் பாய்களை இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்ய முனைந்தால், இந்தியாவில் நல்ல வரவேற்பு இருக்கக்கூடும்.

கள், தண்ணீர் ஆகியவைகளை எடுக்கத் தேங்காய்த் தொட்டிகளைப் பயன்படுத்துகின்றார்கள். தேங்காயின் உச்சியில் ஒரு துளை செய்து, தேங்காய்ப் பருப்பைக் குடைந்து அகற்றிவிடுகின்றார்கள். பிறகு தொட்டியின் மேல்பாகத்தைக் கூர்மையான கத்தியைக்

கொண்டு சுரண்டிய பின்னர், உப்புக்காகிதத்தால் தேய்த்து மழமழப்பாக்குகின்றார்கள். மேலும் அது புழக்கத்தில் மிகவும் மென்மையாகி மினுமினுக்கின்றது. அதை ஒற்றையாகப் பயன் படுத்தினால், அதன் வாய்க்கு மரத்தால் மூடிசெய்து மூடுகின் றார்கள். பொதுவாக இரண்டு குடுவைகளைத் தூக்கிச் செல்ல வசதியாக பிரம்பில் கைப்பிடிசெய்து இணைக்கின்றார்கள். இந்தத் தேங்காய் குடுவைகளையும், தீவிற்கு வருகை தருபவர்கள் பெரிதும் விரும்பி அலங்காரப் பொருளாகப் பயன்படுத்த வாங்கிச் செல்லு கின்றார்கள்.

அவர்களுக்குத் தெரிந்த மற்றொரு கைவேலைப் பொருள், குறுக்கு வில். 4 அங்குல கனமும், 2 அல்லது $2\frac{1}{2}$ அடி நீளமுள்ள தடித்த கம்பை எடுத்துக்கொண்டு, அடிப்பாகத்தைத் துப்பாக்கி முனைபோல் செய்துகொள்ளுகின்றார்கள். அரை அங்குல சுற்றளவுகொண்ட சன்னமான ஒரு கம்பை வில்போல் வளைத்து தடித்த கம்பின் மேல்பாகத்திலிருந்து நீளத்தில் மூன்றில் ஒரு பங்குவைத்து, அங்கு வில்போன்ற கம்பைப் பொருத்துகின் றார்கள். வில் கம்பின் முனைகளை ஒரு நூலால் இணைக்கின்றார்கள். தடித்த கம்பில் அம்புகளை வைக்கப் பள்ளங்கள் செய்து, அம்புகள் பிறழாமலிருக்க இரும்புக் கொக்கிகளை மாட்டிவிடுகின்றார்கள். மரம் அல்லது எலும்பால் ஆன விசையொன்றை தடித்த கம்பின் கீழ்ப்பகுதியில் வைத்து, அதற்குச் சற்றுமேலே சிறிய ஆணி யொன்றை அடிக்கின்றார்கள். வில்லின் நூலின் நடுவிலிருந்து மற்றொரு சிறிய நூல் இணைக்கப்பட்டு, ஒரு சிறு கட்டையொன்று அதிலிருந்து தொங்கவிடப்படுகின்றது. வில்லைப் பயன்படுத்தும் போது ஓர் அம்பை மாத்திரம் சரியானபடி வைத்து, வில்லின் நூலை இழுத்து, அதில் தொங்கிக்கொண்டிருக்கும் கட்டையை விசையில் பொருத்திக் கட்டை தொங்கிக்கொண்டிருக்கும் நூலை, விசைக்குச் சற்று மேலே இருக்கும் ஆணியில் கட்டிவிடுகின்றார்கள். விசையை இழுத்துவிட்டால், மரக்கட்டை நகர்ந்துவிடுகின்றது. அதனால் அதிக விறைப்புடன் இருக்கும் வில்லின் நூல் தன்னிலை வருவதற்குள் வெகுவேகமாக நூல்மேல் தொடுத்துக்கொண்டிருக் கும் அம்பைப் பாய்ச்சுகின்றது. அம்பும் வெகு விரைவுடன் பாய்ந்து செல்லுகின்றது. ஒரு கையாலேயே இந்தக் குறுக்கு வில்லைப் பயன்படுத்துகின்றார்கள். இதன் புதுமையான அமைப்பும், விசை ஏற்பாடும், தீவிற்கு வருபவர்களைப் பெரிதும் கவருகின்றன.

அதனால் அதை அதிக விலை கொடுத்து வாங்கிச் செல்லத் தயங்குவதில்லை.

தீவிற்கு வருகை தருபவர்கள் மிக அதிகமாக விரும்பி வாங்கிச் செல்லும் கைவினைப் பொருள் பொம்மைப் படகு. மிருதுவான மரத்தைக்கொண்டு கத்தியால் படகுபோல் செதுக்கித் துணிகளால் பாய்மரமும் செய்து, புறச்சட்டங்களுடன் அப்படியே படகு மாதிரி செய்துவிடுகின்றார்கள். பளபளப்பான வண்ணப் பூச்சுகளும் தந்துவிடுவதால், பார்ப்பதற்கு வெகு அழகாகயிருக்கின்றன.

சிலர் மோதிரங்களும், கழுத்தில் அணிவதற்குச் சிலுவைகளும், சாவிக்கொத்தும், மற்றும் புதுமையான பொருள்களும் ஆமை ஓட்டிலிருந்து தயாரிக்கின்றார்கள்.

சோவ்ராவில் பானைகள் செய்வது மிக முக்கியமான கைத்தொழிலாக யிருந்துவருகின்றது. அந்தத் தீவில் அதற்குத் தகுந்த களிமண் கிடைப்பதில்லை, பக்கத்துத் தீவான டெரசாவிலிருந்து களிமண் கொண்டுவரப்படுகின்றது. மார்ச், ஏப்ரல் அல்லது நவம்பர், டிசம்பர் மாதங்களில் களிமண் சேகரிக்கப்படுகின்றது. களிமண் சேகரிப்பவர் நல்ல வெள்ளைத்துணிக் கோவணம் அணிந்துகொள்ளவேண்டும். புகை பிடித்தலும் கூடாது. வாயு பிரிதலும் தவிர்க்கவேண்டும். இல்லாவிட்டால், அந்த மண்ணில் செய்யப்படும் பானைகள் உறுதியாக இராது என்று நம்புகின்றார்கள். களிமண்ணைப் பிசைந்து பானைகளாக உருவாக்குவது முதல் எல்லா வேலைகளையும் பெண்களே செய்கின்றார்கள். முதலில் களிமண்ணில் சிறிது தண்ணீர் சேர்த்து, நன்கு குடையப்பட்ட மரப்பொந்துகளில் (சுமார் 5 முதல் 7 அடி நீளமுள்ளவை) இட்டு, பழைய கோணிச்சாக்குகளால் சில நாட்களுக்கு மூடிவைக்கின்றார்கள். பின்னர் இளம் பெண்கள், அந்தக் களிமண்ணை எடுத்துத் தட்டையான பாறைமீது வைத்து இரும்பு உலக்கைகளால் குத்துகின்றார்கள். மண் நன்கு கடைபட்டதும்; அத்துடன் மணலை கொஞ்சம் சேர்த்து, அனுபவமுள்ள வயதான பெண்கள், அந்தக் களிமண் கலவையிலிருந்து மண் உருண்டைகள் எடுத்துப் பானைகளாகக் கையால் உருவாக்குகின்றார்கள். அவையெல்லாம் ஒரே மாதிரி உருவமுடன் இருப்பது குறிப்பிடத்தக்கது. எல்லா அளவுகளிலும் பானைகள் செய்யப்படுகின்றன. பெரிய பானைகளின் வாய் ஓரம் சிறிது உள்ளுக்கு மடிந்திருக்கும். அந்தப் பானைகளின் ஈரம் உலர்ந்து கெட்டியாவதற்கு, வீடு

களிலேயே சில நாட்கள் வைக்கப்பட்டிருக்கும். பின்னர் அவை சுடவைக்கப்படும். உடைந்த சட்டித்துண்டுகளை அடியில் போட்டு, பானைகளின் வாய்ப்புறமாக ஒன்றின்மேல் ஒன்முகக் கவிழ்த்து, காய்ந்த சருகுகளையும் குச்சிகளையும் அவைகளின்மேல் எல்லாப் பக்கமும் பரப்பி சருகுகளுக்குத் தீவைத்துச் சுடவைப்பார்கள். ஒரு பானை எவ்வளவு சுடப்படவேண்டும் என்பதை அனுபவமுள்ள பெண்கள் அறிவார்கள். சரியான சூடானதும், பானைகளை அவர்கள், அகற்றிவிடுவார்கள். சுடப்பட்ட பானைகள் பளபளப்புடன் மழமழப்பாக இருக்கும். எவ்வளவு சூட்டையும் அவைகள் தாங்கும். அவை பழுப்பு நிறமானவை. இளந்தென்னைங் குருத்துக்களின் நீரைக்கொண்டு, கருமையான பழுப்பு வண்ணக் கோடுகள் இட்டுப் பானைகளை அழகுபடுத்துகின்முர்கள்.

கார் நிகோபாரில் பூச்சு வேலையோ, மரங்களைச் செதுக்கிச் சிலைகளைச் செய்தலோ இல்லை. ஆனல் மற்ற தீவுகளில் மரத்தில் ஆணும், பெண்ணுமான இரட்டை உருவங்கள், பறவைகள், மிருகங்கள் என்று செய்து, பேய் பிசாசுகளை விரட்ட, அந்த உருவங்களை வீடுகளில் வைத்துக்கொள்ளுகின்முர்கள். அந்த மர உருவங்களுக்கு பகட்டான வண்ணப்பூச்சு தருகின்முர்கள். அவைகள் நல்ல வேலைப்பாடுடனும் இருக்கின்றன. எல்லா உருவங்களிலுமே பிறப்புக் குறிகள் எடுப்பாகக் காட்டப்பட்டிருக்கின்றன. சில உருவங்நள் விசித்திரமானவைகளாக பொய் முகங்களுடனும், சில பாதி மனித உருவிலும், பாதி மிருகங்கள் வடிவிலும் இருக்கின்றன. மரப் பலகைகளில் பறவைகள், மிருகங்கள், மனிதர்கள் முதலான உருவங்களைப் பளபளக்கும் வண்ணங்களில் தீட்டியும் வீட்டில் வைத்துக்கொண்டிருக்கின்முர்கள். மக்களின் கற்பனையைத் தெரிந்துகொள்ள இந்த உருவங்களும், ஓவியங்களும் உதவுகின்றன. சில சமயங்களில், தீவிற்கு வருகை தருபவர்கள் கேட்டுக்கொள்வதின் பேரில், நிகோபார் உடையணிந்த ஆண்களையும், பெண்களையும் போன்ற ஓரளவு நல்ல உருவங்களை செய்து தருகின்முர்கள். அவை மிக நல்ல அலங்காரப் பொருள்களாக இருக்கின்றன.

கார் நிகோபார் மக்கள் மர உருவங்கள் செய்யாவிட்டாலும், மரவேலைத் திறமை குறைந்தவர்கள் என்று சொல்லிவிட முடியாது. மூஸ் கிராமத்தில் உள்ள புகழ்பெற்ற புனித தாமஸ் மதாலயத்தில் தூண்களிலும், மேடையிலும், வழிபாட்டுப் புத்தகங்கள் வைக்கும் நிலைகளிலும், நல்ல மர வேலைப்பாடு காணப்

படுகின்றது. எளிதாகவும் இருக்கின்றது. ரிச்சர்டுசன் பாதிரியாரால், நிகோபார் மக்களையே கொண்டு கட்டப்பட்ட மதாலயம் மிக நல்ல கட்டடம். நிகோபார் மக்களின் திறமையையும் வேலைப்பட்டுத் திறமையையும், பாராட்டும் வகையில் அமைந்த சிறந்த கட்டடம்.

நிகோபார் மக்களுக்கு நல்ல கலையுணர்வும், கலைச்சுவையும் உள்ளதென்பது குறிப்பிடத்தக்கது. அவர்கள் பளபளப்பான நிறங்களை விரும்பினாலும், அவை ஒன்றுடன் ஒன்று பொருந்தும் படியாகவும், நன்கு மாறுபட்டும் காணப்படும். அவர்கள் அன்றாட வாழ்வில் பயன்படுத்தும் பொருள்களிலும், அவர்களிடம் காணப்படும் ஒரு சில கைவினைப் பொருள்களிலும் சரி கண்களுக்கு இதமான வண்ணங்களைக் காணலாம். எல்லாம் பொருத்தமாக இருக்கும். இளம் தென்னங் குருத்துக்களையும், வாழை இலைகளையும்கொண்டு அலங்கரிப்பதில் அவர்களுக்கு மிக நல்ல திறனிருப்பதைக் காணலாம். அந்த இலைகளைக்கொண்டு நட்சத்திரங்கள், சிலுவைகள், பூக்கள்போன்ற மாதிரிகளைத் தயாரிக்கின்றார்கள். கார் நிகோபாருக்கு முக்கிய பிரமுகர்கள் வருகை தரும்பொழுது, அத்தகைய அலங்காரங்காளால், தீவே தேவலோகம்போல் காட்சி தரும். மக்களும் அவர்களுடைய பணிகளையும், கைவினைப் பொருள்களையும் மிகப் பெருமையுடனேயே கருதுகின்றார்கள். அவை ஒரு சிலவே இருந்தாலும், நல்ல கைத்திறனுடன் இருக்கின்றன. அவர்கள் நிறைய பொருள்கள் செய்யாவிட்டாலும், தரமான பொருள்கள் செய்கின்றார்கள். அவர்கள் தங்கள் கைவினைப் பொருள்களை நிறையத் தயார் செய்து, நல்ல விளம்பரமும் தந்து, இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்வார்களானல், இந்தியாவில் அவைகளுக்கு நல்ல கிராக்கி இருக்கவே செய்யும்.

அத்தியாயம் 10

# வீட்டு வசதி

நிகோபார் மக்களின் வீடுகள் தனித்தன்மை கொண்டன. பொதுவாக உயர்தரமானவை. அவர்கள் தங்கள் வரலாற்றில் வெகு முன்னதாகவே நல்ல வீடுகளைக் கட்டத் தெரிந்துகொண்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இப்பொழுதுகூட சில திருத்தங்களுடன் வீடுகளைக் கட்டினாலும், பரம்பரையான பாணியிலேயே உள்ளன.

கார் நிகோபாரிலும், சோவ்ராவிலும் வீடுகள், குறிப்பாக மிக நன்றாகக் கட்டப்பட்டிருக்கின்றன. வேலைக்கூறுடனும் இருக்கின்றன. மற்றத் தீவுகளில் உள்ள மக்கள் சோம்பேறித்தனமாக இருப்பதால், அவர்கள் தங்கள் வீடுகளைப்பற்றி அவ்வளவாக அக்கறைகொள்ளுவதில்லை. அதனால் அங்கெல்லாம் இழிந்த தோற்றமான குடிசைகளையே காணமுடியும்.



அநேக வீடுகள், தரைமட்டத்திலிருந்து 6 முதல் 8 அடி உயரத்தில் நல்ல வலுவான தூண்களைக் கால்களாக அமைத்து அவைமீது கட்டப்பட்டிருக்கின்றன. வீடுகள் கட்ட பெரிய மரத் தூண்கள், உத்திரங்கள், பாக்கு மரக் கதுப்புகள், வேய்வதற்

கான புல், பிரம்பு, மூங்கில், தென்னை மர ஓலைகள் ஆகியவை பயன்படுத்தப்படுகின்றன.

பரந்த அடிப்படையில் வீடுகளை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்: (1) கால்களின்மீது குவிந்த வடிவில் கட்டப்பட்ட வட்டமான வீடுகள். (2) கால்களின்மீது நீண்ட சதுரவடிவில் சாய்வான கூரைகளுடன் கட்டப்பட்டவை. (3) கால்களின்மீது கட்டப்பட்ட மேம்பாடான வீடுகள். (4) நன்கு உறுதியாகக் கட்டப்பட்ட வீடுகள்.

மிகப் பழமையானதும், கவர்ச்சியானதுமான வீடுகள் வட்ட வடிவமான குவிந்த வீடுகள். அவை பெரிய தேன்கூடுகள்போல் காணப்படுகின்றன. சுவர்களே கூரையாக நீடிக்கின்றன. பாதி உருண்டை வடிவிலான கூரையே சுவர்களாகவும் பயன்படுகின்றன. இந்த வீடு கட்டுவதற்கு, வீட்டிற்கருகில் அதன் மேல் கூரையின் கூட்டைத் தரையிலேயே கட்டத் துவங்குகின்றார்கள். இதற்கு நீண்ட பாக்கு மரக் கதுப்புகளை 18 அங்குல இடைவெளி தூரத்தில் வைத்து, பிளந்த பிரம்புகளால் இறுக்கிக் கட்டுகின்றார்கள். இவ்வாறு இணை இணையாக கூரையின் உச்சிவரை கட்டுகின்றார்கள். இந்தக் கூட்டை மேலும் வலுப்படுத்த, வெளியே மூங்கில் பிளாச்சுகளை வரிசையாக நெருக்கி வைத்து நன்கு வரிந்து கட்டுகின்றார்கள். அதுபோன்றே உள் பக்கத்தில், பிரம்புகளையும் அதே வரிசையில் வைத்துக் கட்டுகின்றார்கள்.

கூரையின் கூடு முடிக்கப்பட்டதும், அங்கேயே கிடைக்கும் நல்ல உறுதியான மரங்களிலிருந்து $\frac{3}{4}$ அடியிலிருந்து 1 அடிவரை கனமுள்ள தூண்கள் எடுக்கப்படுகின்றன. தூண்களில் 4 அடியை நிலத்தில் புதைத்து, தரைமேல் 6 முதல் 8 அடிவரை உயரம் நிற்கும்படி நடுகின்றார்கள். இணையான வரிசைகளில் தூண்கள் நடப்படுகின்றன. கட்டப்படும் வீடுகளின் அளவுகளைப் பொறுத்துத் தூண்களின் எண்ணிக்கையும், வரிசைகளும் இருக்கின்றன. சாதாரணமான ஒரு வீட்டின் தளம் 20 சதுர அடி உள்ளது. அதற்கு 3 வரிசையில் ஐந்தைந்து தூண்கள் ஒரே சீரான இடைவெளியில் நடப்படுகின்றன. இந்தத் தூண்களின்மீது 5 அங்குல அகலமும், 3 அங்குல கனமும், வீட்டின் அளவுக்குத் தகுந்தாற் போன்ற நீளமும்கொண்ட விட்டங்கள் நீள வாக்கிலும் அகல வாக்கிலும், மர ஆணிகளைக்கொண்டு உறுதியாக அடிக்கப்படுகின்றன. இவ்வாறு தள அமைப்புக்கான கூடும் தயாராகி விடுகின்றது. இந்தத் தரை அமைப்பின்மீது கூரைக் கூட்டை 60,

70 பேர்கள் சேர்ந்து தூக்கிவைக்கின்றார்கள். அந்தக் கூட்டைத் தூண்களுடனும், தள விட்டங்களுடனும் பிரம்பால் இறுக்கிக் கட்டுகின்றார்கள். பின்னர் மூங்கில் பிளாச்சுகளை தள அமைப்பில் ஒன்றுக்கொன்று நெருக்கமாக வைத்து சதுர சதுரமாக பிரம்பு குறுக்கே செல்லும்படிக் கட்டுகின்றார்கள். தளத்தில் கீழிருந்து காற்றுவர சிறிது திறந்தவெளிகளும் செய்கின்றார்கள். அதே சமயம் வீட்டிலுள்ள மனிதர்கள், மற்ற சாமான்கள் ஆகிய வற்றின் பளுவைத் தாங்கும் வகையில் தளம் உறுதியாகவும் அமைக்கப்படுகின்றது. பொதுவாக வீட்டின் மையப் பகுதியில் மூங்கில் பிளாச்சுகளை வேயாமல், நீண்ட மரப் பலகைகளை அடித்துவிடுகின்றார்கள். இந்த இடத்தில் கீழிருந்து காற்று வருவதில்லை. இதனால், வீட்டிலுள்ளவர்கள், மூங்கில் வேயப் பட்ட தரையில் தூங்கும்பொழுது அதிகக் காற்று வீச்சால் அவதிப்பட்டால், அவர்கள் தூங்க, மரப்பலகைகள் அடிக்கப் பட்ட மையப் பகுதிக்கு வந்துவிட முடிகின்றது.

பின்னர் 'அஃபோவ்' என்று கூறப்படும் புல்லைக்கொண்டு கூரை வேயப்படுகின்றது. அடுக்கடுக்காகப் புல் கத்தைகளை, கூரை முழுவதும் ஒரே மாதிரியாகப் பரப்பி வேய்கின்றார்கள். அடியில் தொங்கிக்கொண்டிருக்கும் ஓரங்கள் ஒழுங்காகக் கத்திரிக்கப் படுகின்றன: அழகான குவிந்த வடிவமுள்ள வீடாகிவிடுகின்றது. இந்தக் குவிந்த கூரை, வீட்டின் தளத்திலிருந்து 25 அடி உயர மிருக்கும். வீட்டின் தளம் தரைமட்டத்திலிருந்து 8 அடி உள்ளது.

வீட்டில் ஒரே ஒரு அறைதான் இருந்தாலும், அறை நன்றாகப் பெரிதாகப் பரந்து இருக்கின்றது. சில சமயம், குவிந்த வடிவ முள்ள கூரையில், மிகுந்த உயரத்தில், காற்றோட்டத்திற்காக திறந்தவெளி ஒன்றும் அமைக்கப்படுகின்றது.

பாதி உருண்டை வடிவமான மேல் தளத்திற்குக் கீழே மரச் சட்டங்களை அமைத்து பரண் ஒன்று செய்யப்படுகின்றது. அதில் ஒரு திறவையும் இருக்கும். மேல் தளம்போன்று தென்படும் இந்தப் பரண், கூரைக்கு நல்ல ஆதரவாகவும், கூரை கீழே விழுந்து விடாமலும் தடுப்பதுடன், பானைகள், தகரப் பெட்டிகள், கிழங்கு கள், பன்றிக்கொழுப்பு, துணிமணிகள், பாய்கள் முதலான வற்றை வைக்கவும் பயன்படுகின்றது.

வீட்டின் நுழைவாயிலில் ஏணி ஒன்றை வைத்து, ஏறி இறங்கப் பயன்படுத்துகின்றார்கள். வீட்டில் உள்ளவர்கள் தூங்கிக்கொண்

டிருந்து, அவர்கள் அமைதி விரும்பினுல், ஏணியை மேலே இழுத்துக்கொள்ளுகின்ருர்கள். நுழைவாயிலில் விரும்பும்பொழுது மூடுவதற்கும், திறப்பதற்கும் ஒரு பலகை இருக்கின்றது. வீட்டிற்குள் நுழையப் பயன்படுத்தும் ஏணியே பரண்மீது ஏறவும் பயன்படுகின்றது.

இந்த வீடுகளில் காணப்படும் மற்ருெரு கவர்ச்சிகரமான அம்சம், வீட்டின் தளத்தின் கீழேயுள்ள தூண்கள்மீது கனமுள்ள வட்டமான மரப்பலகைகள் பொறுத்தப்படுகின்றன. வீட்டில் எலிகள் நுழைவதைத் தடுக்க இவை உதவுகின்றன. வீட்டில், வேயப்பட்ட கூரைகளில் எலிகள் ஒருதரம் நுழைந்துவிட்டால், அவைகளைக் கண்டுபிடித்து, ஒழித்துக்கட்டுவது மிகவும் கடினம்!

அவர்கள் வசிக்கும் வீட்டில் சமைப்பதாகயிருந்தால், நுழைவாயிலுக்கு மறுகோடியில் அடுப்பு இருக்கின்றது. நல்ல கெட்டியான மரப்பலகைகளைக்கொண்டு 4 அல்லது 5 அடி நீளத்திலும், 3 அடி அகலத்திலும் நீண்ட சதுர வடிவில், பெட்டி ஒன்றை வீட்டின் தளத்தில் அமைக்கின்ருர்கள். அதனை மணலால் நிரப்பி, அதன்மேல் அடுப்பு மூட்டுகின்ருர்கள். மணல் நிரப்பப்படுவதால் தீ பரவாமல் காக்கப்படுகின்றது.



உயர்ந்த, குவிந்த வடிவான வீடுகளல்லாமல், நீண்ட சதுர வடிவில் பெட்டிபோன்ற வீடுகளும் இருக்கின்றன. வட்ட வடிவமான வீடுகளைப்போன்று எடுப்பாகவும் இல்லை, நீடித்தும் இருப்பதில்லை. இருந்தாலும் இவைகளைக் கட்ட அதிக நாட்கள் ஆவதில்லை. நல்ல காற்ருேட்டம் இருக்கின்றது. வட்ட வடிவமான வீடுகளைக்காட்டிலும் விரும்பப்படுகின்றன. எனினும், நிகோபார் மக்கள் இரு வகையான வீடுகளுக்குமிடையே அதிக

வேறுபாட்டைக் காண்கின்றார்கள். வீடு என்று பொருள்படும் 'பட்டி' என்ற சொல்லை, வட்ட வடிவமான வீடுகளுக்கு மாத்திரமே பயன்படுத்துகின்றனர். மற்ற தாழ்மையான வகையைச்சேர்ந்த நீண்ட சதுர வீடுகளைத் 'தாலிகா' என்கின்றார்கள். 'தாலிகா' என்றால் குடிசை என்று பொருள்.

இந்த நீண்ட சதுர வீடுகளுக்கும் மேல்கூடு தனியே செய்யப்பட்டுக் கால்களின்மீது பின்னர் அமைக்கப்படுகின்றது. கால்களை நிறுத்துவதும், தளங்களின் அமைப்பும் வட்ட வடிவமான வீடுகளைப்போன்றே நடைபெறுகின்றது. எனினும் இவைகளில் கூரையும், சுவர்களும் தனித்தனியே இருக்கின்றன. இந்த வீடுகளிலும் ஓர் அறைதான் உள்ளது. தென்னையின் கீற்றுகளைக் கொண்டு பின்னப்பட்ட பாய்களைச் சுவர்களாகவும், கூரைகளை நீண்ட ஓலைகளைக்கொண்டு சீராகவும், ஓர் ஒழுங்காகவும் வேய்கின்றார்கள். கூரை சுவர்களுக்குமேல் நீட்டிக்கொண்டிருப்பதால், மழை நீர் உள்ளே செல்லாமல் தடுக்கின்றது. இந்த வீடுகளில், தளத்தின் வழியே நுழைவாயிலில்லாமல், முன்சுவற்றில் கதவு வைத்து, ஏணியை அதற்கு நேரே வைத்து ஏறி இறங்குகின்றார்கள். வீட்டின் அளவுக்கு ஏற்றாற்போல் ஜன்னல்கள் கூடியும் குறைந்துமிருக்கின்றன. இந்த வீடுகளிலும், போலியான மேல்தளங்கள் பரண்களாகப் பயன்படுத்த அமைக்கப்படுகின்றன.

சமீப காலங்களில், வீடுகள் கட்டும் பாணி மாற்றமடைந்திருக்கின்றது. இந்தியாவுடன் தொடர்பு அதிகரித்திருப்பதாலும், தீவுகளில் அரசாங்கம் பல கட்டடங்களைப் புதிதாக எழுப்பியுள்ளதாலும், மக்களும் தங்கள் வீடுகளைக் கட்ட, மற்ற கட்டடப் பொருள்களை உபயோகப்படுத்தத் துவங்கியுள்ளனர். பிற்பட்ட வகுப்பினர் நலனுக்காகக் கட்டப்படும் வீடுகளுக்கு போர்ட் பிளேரிலிருந்து தரமான மரங்கள் வரவழைக்கப்பட்டு, குறைவான விலையில் மக்களுக்குத் தரப்படுவதால், அவர்கள் நல்ல மேம்பட்ட வீடுகளைக் கட்டுவதற்கு ஊக்கம் பெற்றிருக்கின்றார்கள். இந்த மேம்பாடான வீடுகள் அநேகமாகப் பரம்பரைப் பாணியிலேயே கட்டப்படுகின்றன. அவைகளையும் கால்களை நட்டே கட்டுகின்றார்கள். ஆனால், மரத்திலான தூண்களுக்குப் பதிலாகத் தூண்களைக் கல் கட்டடமாக, உறுதி மிகுந்ததாகக் கட்டுகின்றார்கள். இதற்கு வேண்டிய சுண்ணும்பைப் பவழப் பாறைகளைச் சுட்டுப் பெறுகின்றார்கள். பொதுப் பணித் துறையிடமிருந்து சிமென்ட் வாங்கிக்கொள்ளுகின்றனர்.

மேம்பாடான வீடுகள் அனைத்தும் நீண்ட சதுர வடிவ மானவை. சரியான கூரைகளுடன் இருக்கும். இந்த வீட்டு மேல்கூரை அமைப்பும் தனியே கட்டப்பட்டு, கால்களின்மேல் எடுத்துவைக்கப்படுகின்றது. இந்த வீடுகளுக்குப் பொதுவாக நடுவில் ஒரு கூடமும், வீட்டைச்சுற்றிலும் 6 அடி அகலத்தில் தாழ்வாரமும் இருக்கின்றன. கூடத்தின் சுவர்கள் பலகை களால் ஆனவை. வீட்டின் அளவுக்கு ஏற்பக் கதவுகளும், ஜன்னல்களும் கூடத்தில் காற்றோட்டம் தங்கு தடையில்லாம லிருக்க எதிரெதிரே அமைக்கப்படுகின்றன. வீட்டின் தளத்தை மூங்கில் பிளாச்சுகளால் அல்லது பலகைகளால் வழக்கப்படி அமைக்கின்றார்கள். நீண்ட சதுர வடிவமுள்ள கூடங்களின் அகலவாட்டில் உள்ள தாழ்வாரங்களை மறைத்து, அவைகளை சாமான்கள் வைக்கும் அறைகளாகப் பயன்படுத்துகின்றார்கள். சில வீடுகளில் போலியான மேல் தளங்களும், பரண்களும் இருக்கின்றன. வீட்டின் நுழைவாயில், ஒரு பக்கத் தாழ்வாரத் தளத்தின் வழியே அமைக்கப்பட்டிருக்கின்றது. இத்தகைய சில வீடுகளில் ஏணிகளுக்குப் பதிலாக நிரந்தரமான மாடிப் படிகள் மரத்தால் கட்டப்பட்டுள்ளன. கூரைக்கு ஓடுகள் போடப் பட்டிருக்கின்றன. உள்ளூர் வர்த்தகக் கம்பெனிகள் ஓடுகளை வரவழைத்து விற்கின்றன. ஓடுகள் கிடைக்காவிட்டால், மரப் பலகைகளையும், இரும்புத் தகரங்களையும் கூரைக்குப் பயன் படுத்துகின்றார்கள். அநேக வீடுகள் நல்ல நிறங்களில் கருமை யான பழுப்பு நிறம், கருமையான பச்சை, மஞ்சள் அல்லது சிவப்பு நிறங்களில் பூசப்பட்டிருக்கின்றன.

கால்களின்மீது கட்டப்பட்ட இத்தகைய வீடுகள் அல்லாமல், தரையில் கட்டப்பட்ட நல்ல உறுதியான வீடுகளும் உள்ளன. இந்த வீடுகளில், நடுவில் ஒரு பெரிய கூடம் நீண்ட சதுரமாக, நுழைவாயிலுடன் இருக்கின்றது. வீட்டின் தளம் கல்லும் காரையும்கொண்டு கட்டப்பட்டு உறுதி மிகுந்திருக்கின்றது. அறையின் இருபுறங்களிலும் சுவற்றோடு மேடைகளும் சிறு இடை வெளிகளுடன் கட்டப்பட்டிருக்கின்றன. மக்கள் அதன்மீது உட்கார்ந்துகொண்டும், படுத்துக்கொண்டும் அரட்டை அடிக் கின்றார்கள். இந்த வீடுகளில் சிலவற்றின் முன்புறத்தில் அகல மான தாழ்வாரமும், அதன் வழியே உள்கூடத்திற்குச் செல்லும் கதவும் இருக்கின்றது. நடுக்கூடத்திற்குப் பின்புறம் ஒரு சிறிய அறை, சாமான்கள் சேமித்துவைக்க இருக்கிறது. நல்ல சமைய

லறை ஒன்றும் கட்டப்பட்டுள்ளது. கூரைகள், சாய்வாக இருக்கின்றன. மங்களூர் ஓடுகள் வேயப்பட்டிருக்கின்றன. இவ்வீடுகள், போதுமான ஜன்னல்கள், கதவுகளுடன் நல்ல காற்றோட்டமுடன் இருக்கின்றன. சில வீடுகளில் மழையும், வெயிலும் உள்ளே அடிக்காமலிருக்க, ஜன்னல்களுக்கு மரக்கதவுகளும் பொருத்தியிருக்கின்றார்கள்.

நிகோபார் மக்களின் எல்லாவகையான வீடுகளுமே உள்ளே பரந்து, மிக சுத்தமாகக் காணப்படுகின்றன. கார் நிகோபாரில் அநேக வீடுகளில் ஒன்றுமே இல்லாததுபோல் பளிச்சென்று காணப்படும். ஏனென்றால், அவர்களிடம் இருக்கும் சில பொருள்களையும் பரண்மீது ஏற்றிவிடுகின்றார்கள். மற்ற தீவுகளில், மக்கள் தங்கள் பொருள்களைப் பரண்மீது வைத்திருந்தாலும் வீடு முழுவதிலும் மரச்சிலைகள், ஓவியங்கள், தொங்கவிடப் பட்டிருக்கும் இலை தழைகள் ஆகியவற்றால், பேய் பிசாசுகளை விரட்டுவதற்காக நிரப்பிவைத்திருக்கின்றார்கள்.

வீடுகளில் தட்டுமுட்டுச் சாமான்களும் வெகு குறைவு. அவர்கள் உட்காருவதற்கும், படுப்பதற்கும் தரையும், பாய்களுமே போதுமானதாக இருக்கின்றன. அகலமான சாய்மணை ஒன்றும் மரத்தால் செய்யப்பட்டு, கீழ்ப்பாகம் மூங்கில் பிளாச்சுகளாலும், மேல்பாகம் பிரம்பாலும் பின்னப்பட்டிருக்கிறது. மிகச் சிறப்பான தட்டுமுட்டுச் சாமானாக அது உள்ளது. இந்த சாய்மணைகள் தரையில், வீட்டின் தளத்திற்குக் கீழே வைக்கப்பட்டுள்ளன. பகல் நேரங்களில் மக்கள் அவைகளின் மீது உட்கார்ந்துகொண்டும், படுத்துக்கொண்டும், அரட்டையடித்துக்கொண்டும் இருப்பதைக் காணலாம். இந்த சாய்மணைகளில் மக்கள் கால்மேல் கால்போட்டு உட்கார்ந்த வண்ணம், பல முக்கியமான கூட்டங்களை நடத்துவதையும் காணலாம். படித்த சிலரிடமும், கிராமத் தலைமகனிடமும், கிராமத்திலேயே செய்யப்பட்ட மரத்திலான மேஜைகளும், நாற்காலிகளும் உள்ளன. ஆனால் இவைகளை வீட்டிற்கு வருகை தரும் அதிகாரிகளும், மற்ற முக்கிய பிரமுகர்களுமே பயன்படுத்துகின்றார்கள். அம்மக்கள் அவைகளை அன்றாடம் உபயோகப்படுத்துவதில்லை.

எல்லாவகையான வீடுகளிலும் குளிக்கும் அறைகளும், கழிவிடங்களும் புறம்பே இருக்கின்றன. பொதுவாக மக்கள் குளிப்பதற்கு சில குறிப்பிட்ட கிணறுகளுக்குச் செல்லுகின்றார்கள். காலைக் கடன்களைக் கழிக்க கடற்கரை அல்லது காடுகளின்

ஒதுக்குப்புறத்திற்குச் செல்லுகின்றனர். இப்பொழுது கார் நிகோபாரில், சமுதாய நலத் திட்டத்தின்கீழ் குளிக்கும் அறை களும், நவீனக் கழிவிடங்களும்கொண்ட வீடுகள் கட்டப் பட்டுள்ளன. அவைகள் ஒரு சிலவே இருந்தாலும், மக்க ளிடையே அவை படிப்படியே இடம்பெற்று வருகின்றன.

கால்களின்மீது கட்டப்பட்டுள்ள வீடுகளில் முன் சொன்னது போல் அடுப்புகள் இருக்கின்றன. சமையல் முழுவதும் அங்கு நடப்பதில்லை. அநேக வீடுகளில் சமையலறை தனியாக, மிகச் சிறியதாக உள்ளன. அவை வெறும் சாதாரணக் குடிசைகள். பொதுவாக சமையலறைகள் கால்கள்மீது கட்டப்படுவதில்லை. சமையலறைகளில் சாமான் வைப்பதற்கும், மக்கள் உட்கார்ந்து சாப்பிடவும் உயரத்தில் மேடைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அடுப்புகள் பெரிய வீடுகளில் உள்ளதுபோலவே மரப் பெட்டி களில் மணல் நிரப்பி போடப்பட்டிருக்கின்றன.

சமையலுக்கான பாத்திரங்கள் என்று எடுத்துக்கொண்டால், சோவ்ராவில் இருந்து வாங்கப்பட்ட பல்வேறு அளவுகளிலான மண்பாண்டங்களே ஆகும். இப்பொழுதெல்லாம் உள்ளூர் கடைகளில் கிடைக்கும் அலுமினியப் பாத்திரங்களையும் நிகோபார் மக்களின் வீடுகளில் காணலாம். பாத்திரங்கள் என்றால் டீ கெட்டில், பல்வேறு அளவுகளிலான அண்டாக்கள், குண்டான்கள், சப்பாத்தி இடத் தோசைக்கல், வறுப்பதற்கும், பொரிப்பதற்கானவட்டச் சட்டிகள்,வாணலி ,பல அளவுகளிலான கரண்டிகள், தட்டுகள், கிண்ணங்கள், ஸ்பூன்கள் முதலானவை யாகும். எனமல் தட்டுகளும், ஜாடிகளும் அன்றாட உணவு சாப்பிடப் பயன்படுத்தப்படுகின்றன. பீங்கான் பாத்திரங்களும், கண்ணாடி தம்ளர் முதலானவைகளும் தேநீர், தண்ணீர் குடிக்க வும், விருந்தினர்களை உபசரிக்கவும் உபயோகப்படுத்தப்படு கின்றன.

வீடுகளுக்குப் பொதுவாக புற மதிற்சுவர்கள் இல்லை. இருந் தாலும் காரைக் கட்டட வீடுகள் வீட்டின் எல்லையைக் குறிக்கும் வகையில் 5 அடி உயர மதிற்சுவர்களுடன் இருக்கின்றன. மதிற் சுவர்கள் பவழப்பாறைகளை வைத்துக் காரை பூசிக் கட்டப் பட்டுள்ளன. வீட்டைச் சுற்றிலும் பூந்தோட்டங்களோ, காய் கறித் தோட்டங்களோ இல்லை. அவர்களுடைய தோட்டங் களும், தோப்புகளும், தீவின் உள்ளேதான் இருக்கின்றன.

எல்லா வீடுகளிலும் பொதுவாக ஒரு நடுக் கூடம் இருப்பது குறிப்பிடத்தக்கது. இது, கூட்டுக் குடும்பத்தின் அவசியத்திற்கு ஏற்றமாதிரி இருக்கின்றது. ஒவ்வொருவருக்கும் தனித்தனியே அறைகள் என்பது, நிகோபார் மக்களுக்குப் புறம்பான எண்ண மாகும். மேலும் தனித்திருப்பது அல்லது மற்றவர் கண்ணில் படா நிலே என்பதில் நிகோபார் மக்கள், இந்திய மக்களுடன் வேறுபட்டே நிற்கின்ருர்கள். இரவில் ஒரே அறையுள்ள வீடுகளில் மணமான இரண்டு அல்லது மூன்று தம்பதிகள் தங்கிக் கொண்டிருப்பதும், தூங்குவதும் சகஜம்.

ஒவ்வொரு வீடும் சிறிது தூரம் தூரமாகக் கட்டப்பட்டிருக் கின்றது. தூய்மைக்காக என்றுமட்டுமல்லாமல், ஏதாவது ஒரு வீட்டில் தீப்பிடிக்க நேர்ந்தால், மற்ற வீடுகளுக்கும் பரவி விடாமல் தடுக்கவே அவ்வாறு வீடுகள் தூரம் தூரமாகவே கட்டப்பட்டுள்ளன.

கார் நிகோபாரிலும் சோவ்ராவிலும் வீடுகளின் உள்புறமும் சுற்றுப்புறமும் மிகவும் தூய்மையாக வைக்கப்பட்டிருக்கின்றது. மூங்கில் பிளாச்சுகளே வைத்துத் தளங்கள் அமைக்கப்பட்டிருப்ப தால் தூசு, தும்புகள் துவாரங்கள் வழியே விழுந்துவிடுவதால், வீட்டைப் பெருக்குவது சுலபமாகயிருக்கின்றது.

நிகோபார் மக்களின் வாழ்க்கை முறைப்படி, வீடுகள் கட்டுவது என்பது சமுதாய நிகழ்ச்சி. பொதுவாக, ஒரு கூட்டுக் குடும்பத்தின் ஆண்கள் அனேவரும் வீடு கட்டுவதில் முனேகின்ருர்கள். ஒரு குடும்பத்தில் போதுமான ஆண்கள் இல்லேயென்ருல், கிராமத் தில் உள்ள மற்ற ஆண்கள் உதவி செய்கின்ருர்கள். ஒரு பெரிய வட்ட வடிவமான வீடு கட்ட, 20 அல்லது 30 பேர்கள் விடாமல் வேலே செய்தால் 2 அல்லது 3 மாதங்கள் ஆகின்றன. மேலும் அந்த வீடுகளின் மேல் கூட்டைக் கால்களின்மேல் வைப்பதற்கு உதவிபுரிய நிறையப் பேர்கள் வருகின்ருர்கள். எனினும் வீடு கட்டும் எவருக்கும் கூலி எதுவும் தரப்படுவதில்லே. வீடு கட்டும் வேலேயில் ஈடுபட்டுள்ளோருக்கு பன்றி இறைச்சியுடன் உணவு தருவது மாத்திரமே வீட்டுச் சொந்தக்காரரின் பொறுப்பு.

வீடு கட்டி முடிக்கப்பட்டவுடன் புதுமனே புகுவிழா நடைபெறு கின்றது. அதற்கு வீடு கட்டியவர்கள், குடும்பத்தைச் சேர்ந்த வர்கள், நெருங்கிய நண்பர்கள், கிராமத்தின் முக்கியப் பிரமுகர்கள் ஆகியோர் அழைக்கப்படுகின்றனர். நல்லதொரு விருந்தும் கொடுக்கப்படுகின்றது.

தீவுகளின் தட்பவெப்ப நிலைக்கும், நிகோபார் மக்களின் வாழ்க்கை முறைக்கும் மிகப் பொருத்தமாக அந்த வீடுகள் அமைந்திருக்கின்றன. அநேகமான வீடுகளுக்கு கீற்றுகள் வேயப் பட்டிருப்பதால், நல்ல வெயில் காலத்திலும்கூட, வீடுகள் குளிர்ச்சியாகயிருக்கும். அவை நல்ல மழையையும் தாங்கிக் கொள்கின்றன. கடுமையாக மழை கொட்டினாலும் வீடுகளின் உட்புறம் நனைவதில்லை. வீடுகள் கால்களின்மீது கட்டப்பட் டிருப்பதால், தரையின் ஈரம் வீட்டை எட்டுவதில்லை. வீட்டின் உட்புறம் எப்போதும் உலர்ந்திருப்பதால், இருப்பதற்கு இதமாக இருக்கின்றது. வீட்டிற்குள் புக ஏணி இருப்பதால், மிக வசதி யாக உள்ளது. அதை எடுத்துவிட்டால் யாரும், மற்றும் தீங் கிழைக்கும் பாம்புபோன்ற ஊர்வன வகைகளும் உள்ளே நுழைய முடியாது. அதனால் வீடுகள் பாதுகாப்பு மிகுந்ததாகவுள்ளன. மக்கள் தங்கள் பொருள்கள் அனைத்தையும் வைப்பதற்குப் பரண்கள் மிக வசதியாகயிருக்கின்றன. மூங்கில் தளம் மிக இலேசாக அசைந்து தருவதால் பாய் ஒன்றை மாத்திரம் விரித்து படுத்தால் தூங்குவதற்கு வசதியாக உள்ளது. அதிகப் படுக்கை தேவையில்லை. வீடுகளுக்குக் கீழே கால்களுக்கு மத்தியில் உள்ள இடம், பகல் நேரத்தில் மக்கள் உட்கார்ந்து அரட்டையடிப்பதற் கும், இரவில் கால்நடைகளும் பன்றிகளும் தங்குவதற்கும் வசதி யாக இருக்கின்றது. துவைத்த துணிகளைக் காயவைப்பதற்கும் அங்கேயே கொடிகள் கட்டப்பட்டிருக்கின்றன. மழைகாலத்தில் கூட துணிகளை உலரவைக்க அங்கு நிறைய இடம் இருக்கின்றது. வீடுகளில் மரச்சட்டங்கள் வெகு திறமையுடன் இணைக்கப்பட்டு பிரம்பால் கட்டப்பட்டிருக்கின்றன. ஆணிகளோ அல்லது உலோக வகைப் பொருத்துக்களோ எங்கும் இல்லை. ஈரமான காலங்களில் அவை துருப்பிடித்துவிடும் என்று தவிர்க்கப்பட்டிருக் கின்றன. வீடுகள் பளுவில்லாத பொருள்களால் கட்டப் பட்டுள்ளன. நிகோபார் தீவுகளில் அடிக்கடி நில நடுக்கங்கள் ஏற்படுவதால், அவ்வாறு கட்டவேண்டியிருக்கின்றது. பளுவான கட்டடப் பொருள்களால் கட்டப்பட்டிருந்தால், மக்களுக்கு ஏற்படும் உயிர்ச்சேதமும், இழப்புகளும் அதிகமாகிவிடக்கூடும்.

எனினும் இவ்வீடுகளில் இரு குறைபாடுகளும் உள்ளன. கட்டடப் பொருள்கள் விரைவில் தீப்பிடித்துக்கொள்ளக் கூடியவை. தீப் பற்றினால், வீடு முழுவதும் விரைவில் பற்றி எரிந்துவிடுகின்றது. இரண்டாவதாக, வட்டமான வீடுகளில் சாளரங்களே இல்லா

மல், காற்ருேட்டம் என்பது தளத்தின் வழியாகவே இருப்பதால் வெளிச்சமும், தூய்மையான காற்றும் போதுமானதாக இல்லே. ஆனல் புதிதாகக் கட்டப்படும் மேம்பட்ட வீடுகளில் காற்ருேட்ட வசதிக் குறை நீக்கப்பட்டிருக்கின்றது. அவைகளில் போதுமான சாளரங்களும், கதவுகளும் எதிரெதிரே பொருத்தப்பட்டிருப்ப தால் நல்ல காற்ருேட்டம் இருக்கின்றது.

வீடுகள் நன்கு நீடித்து நிற்கக்கூடியவைகளாக உள்ளன. மேல் கூரையின் கீற்றுக்களே ஒவ்வொரு 5 அல்லது 6 ஆண்டுகளுக்கு ஒருமுறை மாற்றவேண்டியிருக்கின்றன. பழுது பார்ப்பதும், சில பாகங்களேப் புதுப்பிப்பதும் அவசியமாகயிருக்கின்றன. இருப்பி னும், நன்கு பேணி வந்தால் வட்ட வடிவமான வீடுகள் 20 அல்லது 30 ஆண்டுகளுக்கு இருக்கின்றன. நீண்ட சதுர வீடுகள் உள்ளூர் பொருள்களேக்கொண்டே கட்டப்பட்டிருப்பதால், கூரையை மாத்திரம் அடிக்கடி மாற்றவேண்டியிருக்கின்றது; என்றுலும், 15 ஆண்டுகளுக்கு நீடிக்கின்றன.

அவர்களுடைய வீடுகளே நிகோபார் மக்கள் மிக்க பெருமை யுடனேயே கருதுகின்ருர்கள் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. நல்லதொரு வீடு செல்வத்தின் சின்னமாகவும், அவர்களிடம் உயர்வான மதிப்பையும் தருகின்றது. குடும்பத்தில் பணம் சேர்ந் தால், உடனடியாக ஒரு வீடு கட்ட முனேகின்ருர்கள். ஒவ்வொரு வீடும் மிகுந்த ஆசையுடன் கட்டப்படுகின்றது. முடிக்கப்படும் பணிகளில் எந்தப் பழுதும் வரக்கூடாது என்பதில் மிகுந்த அக்கறையும் காட்டப்படுகின்றது.

அத்தியாயம் 11

# மக்களின் பருப்பொருள் பண்பாடும், பழக்கவழக்கங்களும்

நிகோபார் மக்களுக்கு உண்பதற்கு என்று குறிப்பிட்ட நேரம் கிடையாது. நாள் முழுவதும், எப்பொழுது வேண்டுமானலும், உணவும், நேரமும் கிடைக்கும்பொழுது உண்ணுகின்றார்கள். குறிப்பான உணவுகள் என்றும் அவர்கள் அக்கறைகாட்டுவதில்லை. தேங்காய், பண்டானுஸ், சேனைக்கிழங்கு, வாழைக்காய் ஆகியவை சைவ உணவாகவும்; மீன், ஆடு, பன்றி, கோழி இறைச்சி அசைவ உணவாகவும் இருக்கின்றன. ஆனல், அவர்கள் அசைவ உணவையே விரும்புவதாகத் தெரிகின்றது. ஆனல், அது அதிகமாகக் கிடைப்பதில்லையென்பதால், எல்லாச் சாப்பாட்டு வேளைகளிலும் அசைவ உணவு இருப்பதில்லை.

அவர்கள் உணவில், பண்டானுஸ், வெளியிலிருந்து வருபவர்களுக்குப் புதுமையாக யிருக்கும். அவர்களுக்கு அது ஓர் அரும் சுவைப் பொருள். பூசணிக்காயின் தோற்றத்தில் உள்ள இந்தப் பழம், சில சமயம் 10 கிலோகிராம் வரை எடை இருக்கும். வெள்ளையும், சிவப்புமாக சாப்பிடும் வகைகள் இரண்டு உள்ளன. இரு வகைகளுமே சாப்பிடக்கூடியவை. ஆனல், சிவப்பு வகையையே விரும்புகின்றார்கள். அந்தப் பழத்தில் அநேக நெற்றுக்கள் உள்ளன. நெற்றின் மேல்பாகம் நார்நாராகவும், உள்ளே பசையான பொருளும் இருக்கின்றன. அதைச் சமைப்பதும் சுலபமல்ல; சில முறைகளைக் கையாளவேண்டியுள்ளது. ஒரு பானை அல்லது டிரம்மின் அடியில் தண்ணீர்விட்டு, சிறிது மேலாகக் குச்சிகளை வைத்து, அவைகளில் பழத்தை வைக்கவேண்டும். பழம் தண்ணீரைத் தொடக்கூடாது. பானையின் வாயை தென்னை ஓலைகளால் மூடிவிட்டுத் தீ மூட்டுகின்றார்கள். ஆவியில் பழம் வெந்தவுடன் உடைந்து நெற்றுக்கள் தனித்தனியே விலகிவிடுகின்றன. நெற்றுக்கள் மிருதுவாயிருக்கின்றன. பின்னர் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த நாலைந்து பெண்கள் ஒரு வட்டமான

பலகையின்மீது உட்கார்ந்துகொண்டு நெற்றுக்களை கடல் கிளிஞ்சல்களைக்கொண்டு சுரண்டி எடுக்கின்றார்கள். சுரண்டுவதால் கிடைக்கும் பசையான பொருளைச் சேர்க்கின்றார்கள். நார்களைப் பெருக்குவதற்கான பிரஷ்களாகப் பயன்படுத்துகின்றனர். சில சமயம் நாரான நெற்றுக்களை உடைத்தால், அதனுள்ளே வெள்ளையான, ஆனால் மிருதுவான கொட்டைகள் இருக்கின்றன. அந்தக் கொட்டைகளை விரும்பிச் சாப்பிடுகின்றனர். சேர்க்கப்பட்ட பசையான பொருளை ஒன்று திரட்டி, அதனுள் ஒரு குச்சியையோ அல்லது நூலையோ விட்டுச் சுழற்றச் சுழற்ற மீதமுள்ள நாரும் அகற்றப்படுகின்றது. நார் முழுவதும் அகற்றப்பட்ட அந்தப் பசைப்பொருள் இனிப்பாக, சர்க்கரை வள்ளிக்கிழங்குபோல் இருக்கின்றது. அத்துடன் தேங்காய்த் துண்டுகளையும் சேர்த்துக்கொள்ளுகின்றார்கள். அதை அவர்கள் மிகவும் விரும்புகின்றார்கள்.

பொதுவாக, நிகோபார் மக்களின் சமையல் எளிமையானது. பெரும்பாலான உணவை நீரிலோ அல்லது ஆவியிலோ வேகவைத்துச் சாப்பிடுகின்றார்கள். சேனைக்கிழங்கு, வாழைக்காய், பப்பய்யாக்காய் ஆகியவைகளைச் சிறு துண்டுகளாக நறுக்கிப் பானையிலிட்டு நீரிலோ, ஆவியிலோ வேகவைத்துச் சாப்பிடுகின்றார்கள். மற்ற காய்கறிகள் கிடைக்கும்போது அவைகளையும் வேகவைத்து உண்கின்றார்கள். எல்லா உணவுடனும், வழக்கமாகத் துருவிய தேங்காய்ப்பூவைச் சேர்த்துக்கொள்ளுகின்றனர்.

முன்பெல்லாம் உப்பைச் சேர்த்துக்கொள்ளுவதில்லை. உணவைச் சமைக்கும்போது சிறிது கடல்நீரைத் தெளித்துவிடுவார்கள். ஆனால், இப்பொழுது உப்பு சேர்த்துக்கொள்ளுகின்றனர். அவர்கள் மொழியிலும் 'சால்' என்ற வார்த்தை, ஆங்கில வார்த்தையான 'சால்ட்' என்பதிலிருந்து இடம்பெற்றுள்ளது. இப்பொழுதும் பதார்த்தங்கள் வெந்துகொண்டிருக்கும் பானையில் உப்பைப் போடாமல், மிளகாயுடன் உப்பைக் கலந்து பொடித்து, அதைச் சமைத்த உணவுடன் சேர்த்து உண்கின்றார்கள். எலுமிச்சம்பழம் கிடைத்தால் அதையும் மிளகாய், உப்புடன் கலந்து ஒருவகை சட்னியாக்கிக்கொள்ளுகின்றனர்.

இப்பொழுது இங்கே சமையல் முறை கூடிவிட்டது. இந்தியாவில் உள்ளதுபோலவே காரம், மணங் கூடிய மசாலா வகைகளைச் சேர்க்கப் பழகிவிட்டனர். காய்களைக் கறியாகவும் உண்ணத் தொடங்கியுள்ளார்கள்.

மக்களுக்கு மீன் என்றால் மிகுந்த விருப்பம். மீன் கிடைக்கும் போது சிலபொழுதில் வேகவைத்தும், ஆனால் அநேகமாக ஒரு குச்சியில் செருகித் தீயில் வாட்டியே சாப்பிடுகின்றார்கள். சிறிய மீன்களாகயிருந்தால் அப்படியே பச்சையாக உண்டுவிடுகின்றனர். ஆடு, கோழி இறைச்சியையும் வாட்டியோ, வதக்கியோ அல்லது கறி செய்தோ சாப்பிடுகின்றனர். அவைகளுக்கு அவர்கள் மிகவும் ஆசைப்படுகின்றார்கள். ஆனால், அவைகள் ஒரு அளவிலேயே கிடைப்பதால், விருந்துகளின்பொழுது மாத்திரமே உண்கின்றார்கள்.

நிகோபாரிகள், பன்றி இறைச்சியைவிட மிக அதிகமாக எதையும் விரும்புவதில்லை என்றே கூறலாம். எனினும், முன்பு சொன்னதுபோல், எல்லாக் குடும்பங்களும் நிறைய பன்றிகள் வைத்திருந்தாலும், அவர்கள் அன்றாடம் பன்றி இறைச்சி உண்பதில்லை; சில விருந்துகளின்போதும், முக்கியமான நாட்களில் மாத்திரமே சாப்பிடுகின்றார்கள். வெளியிலிருந்து விருந்தாளிகள் வந்தால், புதுப் படகு வாங்கினால், புது வீடு கட்டினால் அல்லது திருமணம், பரம்பரையான விருந்துகள் ஆகிய நாட்களிலேயே பன்றி இறைச்சி விருந்தில் இடம்பெறுகின்றது. ஒருவர் உடல் நலம் குன்றியிருந்தாலும், அவர் உடல் தேறும் சமயத்திலும் பன்றி இறைச்சி தரப்படுகின்றது. அது உடலுக்கு நல்லது என்று கருதப்படுகின்றது. பன்றியைக் கொல்லக் கால்களைக் கட்டி, அதை மல்லாந்துப் படுக்கவைத்து, கூரிய ஈட்டியால் இதயத்தைக் குத்திப் பிளக்கின்றார்கள். அதைக் கொன்றதும், தென்னை ஓலைகளைக்கொண்ட தீப்பந்தத்தைக் காட்டி அதன் உடலில் உள்ள மயிரையும், மேல்தோலையும் பொசுக்கிவிடுகின்றார்கள். பின்னர் அதனைச் சிறு துண்டுகளாக நறுக்கி, வாட்டியோ, வதக்கியோ அல்லது கறி செய்தோ சாப்பிடுகின்றனர். கொழுப்பை நீக்கி, அதைச் சமையல் நெய்யாக அல்லது சாதத்துடன், பழத்துடன் சேர்த்து உண்கின்றனர்.

அறுபது, எழுபது வருடமாக வெளி உலக மக்களுடன் தொடர்பு கொண்டுள்ளதால், இப்பொழுது அரிசி அடிக்கடி சாப்பிட்டுவருகின்றனர். விருந்துகளின்பொழுது, அது அவசியமான உணவு. இல்லாவிட்டாலும் சில குடும்பங்களில் சில நாட்கள் அரிசி இடம் பெறுகின்றது. மற்றும் சிலர் அதையே முக்கிய உணவாகத் தினமும் உண்கின்றனர்.

நிகோபார் மக்கள் பாலை விரும்புவதில்லை. ஆனால், சிலசமயம் குழந்தைகளுக்குப் பால் தரப்படுகின்றது. எனினும், அநேகர் தேநீர் குடிக்கத் துவங்கியுள்ளனர். சிலர் ஒரு நாளைக்கு மூன்று, நான்குமுறைகூடக் குடிக்கின்றார்கள்.

தீவுகளில் சர்க்கரை கிடைக்காததாலோ என்னவோ, அவர்களிடம் தித்திப்புப் பண்டங்கள் என்பதே இல்லை. இருந்தாலும், அவர்கள் சுவைத்து சாப்பிடுவது வெயிலில் காயவைத்த வாழைப் பழம். வாழைப்பழங்களை உரித்து, அவைகளைப் பாய்மீது பரப்பி வெயிலில் ஒரு வாரம் அல்லது 10 நாட்களுக்கு உலரவைக்கின்றார்கள். அவை நன்கு காய்ந்தவுடன் பழுப்பு நிறமடைந்து இறுகிவிடுகின்றன. அந்தக் காய்ந்த வாழைப்பழம், பேரீச்சம்பழம்போல் ருசிக்கின்றது. அவைகளை மாதக்கணக்கில் வைத்துக்கொள்ளுகின்றனர். அது அவர்களுக்கு ஓர் அரும்சுவைப் பொருள்.

நிகோபார் மக்கள் எப்போதாவதுதான் தண்ணீர் குடிக்கின்றார்கள். தாகத்திற்கு இளநீரே அருந்துகின்றனர். ஒருவரின் தாகத்திற்கும், பசிக்கும் தகுந்த மாதிரியான தேங்காய்களை வெட்டி எடுத்து, அரிவாளால் உச்சிபாகத்தை ஒரே வீச்சால் வெட்டி, நீரைக் குடித்தவுடன், தேங்காயைப் பிளந்து, சீவப்பட்ட தேங்காய்ச் செரட்டையால் வழுக்கையை எடுத்துச் சாப்பிடுகின்றார்கள்.

மக்கள் கிளர்ச்சிதரும் பொருள்கள் அனைத்தையும் விரும்புகின்றனர். அநேகமாக அனைவரும் வெற்றிலை போடுகின்றனர். காடுகளிலும் தோட்டங்களிலும் வெற்றிலை விளைகின்றது. கடற்கரைகளில் கிடக்கும் பவழப்பாறைகளைச் சுட்டுச் சுண்ணும்பு எடுக்கின்றார்கள்.

நிகோபார் வெற்றிலை காரமாக இருக்கின்றது. கசக்கின்றது என்றுகூடச் சொல்லலாம். நாள் முழுவதும் அதைக் குதப்பிக் கொண்டே இருக்கின்றனர். 20 வயதுக்குட்பட்டவர்கள் வெற்றிலைபோட அனுமதிக்கப்படுவதில்லை. சில சமயம் காய்ந்த புகையிலையையும் சேர்த்துக்கொள்ளுகின்றனர். வர்த்தக நிறுவனக் கடைகளில் புகையிலை கிடைக்கின்றது.

ஆண்களும், பெண்களும் இருவருமே புகை பிடிப்பதை மிகவும் விரும்புகின்றனர். அவர்களே 'பாப்' என்று கூறப்படும் ஒருவித பீடியைச் செய்துகொள்ளுகின்றனர். காய்ந்த பண்டானுஸ் இலைகளை சிறு துண்டுகளாக வெட்டி அவைகளைப் பீடிகள் சுற்றும் இலைகளாகப் பயன்படுத்துகின்றனர். காய்ந்த புகையிலையுடன்,

பண்டானுஸ் இலையையும் பொடி செய்து கலக்கி, சுற்றும் இலையில் வைத்துச் சுருட்டிப் பீடியாகச் செய்கின்றார்கள். இந்த உள்ளூர் பீடிகளுக்குக் காரம் குறைவு. அவைகள் அளவில் பெரிதாகச் சுருட்டுகளைப்போல் கருமையாக இருக்கின்றன. இப்பொழுது உள்ளூர் கடைகளில் கிடைக்கும் சிகரெட்டுகளையும் புகைக்கத் துவங்கியுள்ளார்கள். 20, 25 வயது வராமல் சிறுவர்கள் யாவரும் புகைக்க அனுமதிக்கப்படுவதில்லை. புகை பிடித்தால், இளைஞர்களின் உடல் கெடும், அதே சமயத்தில் அவர்கள் எச்சரிக்கையுடன் இல்லாமல் எரியும் பீடி, சிகரெட் துண்டுகளைக் கண்ட இடங்களில் எறிந்துவிட்டால், வீடுகள் தீப்பற்றிக் கொள்ளுமோ என்ற பயங்காரணமாகவே இளைஞர் புகை பிடித்தலைத் தடுத்திருக்கின்றார்கள்.

கள் பெரும்பாலோர் அருந்தும் போதை தரும் குடி வகை. அவர்களின் பெருங்களிப்புக்கு உரிய ஒரே பானம் அது. தென்னையிலிருந்து கள் எடுக்கின்றார்கள். கள் எடுக்க, மரத்தைத் தேர்ந்தெடுக்கத் தனிப்பட்ட முறை எதையும் கையாளுவதில்லை. எல்லா மரத்திலும் கள் இறக்க முயற்சிக்கின்றனர். எந்த மரத்தில் அதிகக் கள் கிடைக்கின்றதோ அம்மரத்தையே கள்ளுக்காக வைத்துக்கொள்ளுகின்றனர். மரத்தில் காலையில் கட்டிவிடப்பட்ட பானையை மாலையில் எவ்வளவு நிறைந்திருந்தாலும், அத்துடன் இறக்கிவிடுகின்றார்கள். சேகரித்த கள் அனைத்தையும் பெரிய கண்ணாடிப் புட்டிகளில் ஊற்றி நாலைந்து நாட்களுக்கு, அவை புளிக்கும்வரை வைத்துவிடுகின்றார்கள். இனிப்பாக இருந்த கள் புளித்ததினால் போதைச் சத்துப் பெற்றுவிடுகின்றது, குடிப்பதற்கு ஏற்றதாகிறது.

மக்கள் நிறைய குடிக்கின்றார்கள். சாதாரணமாக ஒரு மனிதன் 2 காலன் அளவு குடிக்கின்றான். பெண்களும் குடிக்கின்றார்கள். ஆனால் ஆண்கள் குடிக்கும் அளவு குடிப்பதில்லை. மற்ற கிளர்ச்சிப் பொருள்களை இளைஞர்கள் தொடக்கூடாது என்பதைப்போலவே கள் குடிப்பதும் தடுக்கப்பட்டிருக்கின்றது. ஆண்கள் பொதுவாக 25,30 வயது ஆகும் வரையிலும், பெண்கள் 35, 40 வயது வரையிலும் கள் குடிப்பதில்லை. பெண்களில் வயதானவர்களுக்கு சாதாரணமாகக் குடிக்கும் வழக்கமில்லை. ஆனால் அவர்கள் குடிப்பதற்குச் சமூகக் கட்டுப்பாடு எதுவும் இல்லை.

கிராமங்களில் மக்கள் தனித்தனியாகவே கள் குடிக்கின்றார்கள். ஆனால் விருந்துகளிலும், மற்ற முக்கிய தினங்களிலும் அவர்கள்

நண்பர்களுடன் சேர்ந்தே குடிக்கின்றார்கள். நண்பர்களாகப் பத்து இருபது பேர்கள் விருந்தளிப்பவர் வீட்டுக்குக் கீழே மூங்கில் சாய்மனைகளில் உட்கார்ந்துகொள்ளுகின்றனர். வழக்கமாக தேங்காய் மூடிகளில் ஊற்றியே கள் குடிக்கின்றார்கள். சில சமயம், கண்ணாடித் தம்ளர்கள் அல்லது எனாமல் ஜாடிகளில் ஊற்றிக் குடிக்கின்றார்கள். தேங்காய் மூடிகளில் ஊற்றிக் குடிக்கும்போது, அவைகளை வைக்க, ஒவ்வொருவருக்குப் பக்கத்திலும் கவிழ்க்கப்பட்ட தேங்காய் மூடிகள், மேல்பாகம் வெட்டப்பட்டு இருக்கும். ஒரு மனிதர் கள்ளை ஊற்றிக் கொடுப்பார். குடிப்பவர்களுக்கு வெற்றிலை மடித்துத்தரவும், பீடி, சிகரெட்டுகள் கொடுக்கவும் ஒரு பெண்ணும் இருக்கின்றாள்.

கள்ளை ஓய்வாகக் கொஞ்சம் கொஞ்சமாகக் குடிக்கின்றார்கள். சில சமயம், இவ்வாறு குடிப்பது நாள் பூராவும் நீடிக்கும். இப்படிக் கூட்டாகச் சேர்ந்து குடிக்கும் நாட்களில் நிறையக் குடிக்கின்றார்கள். எனினும் அவர்கள் முறை தவறி நடப்பதில்லை. வன்செயலில் ஈடுபடுவதில்லை. பொதுவாக, அங்கு குடிக்கத் துவங்கும்பொழுதே குடிக்கும் எல்லோரிடமும் ஒரு அமைதியும், நட்புறவும் குடிகொண்டு விடுகின்றது. நேரம் செல்லச்செல்ல உலகையே மறந்துவிடுகின்றார்கள். மற்றவர்கள் அவர்களைக் கவனிக்கின்றார்களா, இல்லையா என்பதுபற்றியெல்லாம் அவர்கள் கவலைப்படுவதில்லை. பின்னர் போதை ஏறியவர்கள் ஆடிப்பாட ஆரம்பிக்கின்றனர். குடிக்கும் நேரம் முழுவதும் வேடிக்கைப் பேச்சுக்களும் இருப்பதால், அங்கு ஒரே கூத்தும், கும்மாளமும் நிறைந்துள்ளன.

நிகோபார் மக்கள் ஒருவருக்கொருவர் கள்ளை விற்பதில்லை. இருந்தாலும், அதிகாரிகளும், கிராம முதியவர்களும் கட்டுப்படுத்தியுங்கூட, இந்தியாவிலிருந்து வந்துள்ள கடைநிலை ஊழியர்களுக்கு மக்கள் கள்ளை விற்கவே செய்கின்றார்கள்.

அதிக போதை தரும் விஸ்கி, ரம் போன்ற அந்நிய மது வகைகளையும் அவர்கள் மிகவும் விரும்புகின்றார்கள். ஆனால் அவர்களுக்கு அவை கிடைப்பதில்லை. ஏனென்றால், இத்தீவுகளில் ஒரு வகையான மதுவிலக்கு இருக்கின்றது. அனுமதிபெற்ற மதுக் கடைகள் எதுவும் இல்லை.

ஆண்கள் முன்பெல்லாம் 'கிசாட்' என்று கூறப்படும் கையகலக் கோவணமே கட்டிக்கொண்டிருந்தார்கள். அது பின்னால் வால்போலத் தொங்கிக்கொண்டிருக்கும். கார் நிகோபாரில்

இப்போது கோவணம் கட்டுவதை எல்லோரும் கைவிட்டுவிட்ட னர். மற்ற தீவுகளில் சில இடங்களில் இன்னமும் அணிந்து வருகின்றார்கள். எனினும் காலத்துக்கேற்ற மாதிரியில்லை என்று வேகமாகக் கைவிட்டு வருகின்றார்கள்.

ஆண்கள் சாதாரணமாக அரை டிரவுசர்களை பளபளப்பான வண்ணங்களில் அணிந்து வருகின்றார்கள். துணிகளைக் கடை களில் வாங்கி, அவர்கள் வீட்டுப் பெண்கள் தைத்துவிடுகின் றார்கள். அரை டிரவுசர்கள் அந்தத் தட்பவெட்ப நிலைக்கும், மக்களின் வாழ்க்கை முறைக்கும் ஏற்ப மிக வசதியாக இருக்கின் றன. கிராமத்தில் மக்கள் பொதுவாக மேல் சட்டை எதுவும் அணிவதில்லை. மேல் சட்டை அணிவதாகயிருந்தால், ஆயத்த உடைகளான பனியன்கள், சர்ட்கள் முதலானவற்றை உள்ளூர் கடைகளில் வாங்கிக்கொள்கின்றனர். ஆனால் அரசினர் அலுவல கங்களிலும், வர்த்தக நிறுவனங்களிலும் பணிபுரிவோர் சர்ட்கள், புஷ்சர்ட்கள், அரை டிரவுசர்கள், முழு டிரவுசர்கள் அணி கின்றார்கள். மற்ற கிராம மக்களும் இந்த ஆடைகளை, முக்கிய மான தினங்களிலும், அரசாங்க அதிகாரிகளைக் காணச் செல்லும் பொழுதும் அணிந்துகொள்ளுகின்றனர். எப்பொழுதாவதுதான் கோட்டு போடுகின்றார்கள். கிராமத் தலைமகன் அல்லது ஓரிரு குடும்பத் தலைவர்கள் மாத்திரமே கோட்டு அணிகின்றார்கள்.

முக்கிய தினங்களின்போதும், அவர்களுடைய கிராமங்களி லிருந்து வெளியே செல்லும்பொழுதும் மாத்திரமே 'ஷு' அணி கின்றார்கள். இத்தீவுகளில் பாதஅணித் தொழிலாளிகள் யாரும் இல்லாமையால், தோல் அணிகள் அதிகமாக அணியப்படுவ தில்லை. அந்தத் தட்பவெப்ப நிலைக்கும், மண்ணுக்கும் ஏற்ற தான ரப்பர் பாதஅணிகளையே போட்டுக்கொள்ளுகின்றனர்.

முன்காலத்தில் பெண்கள் புல்லால் பின்னப்பட்ட பாவாடை களைக் கட்டிக்கொண்டிருந்தனர். ஆனால் இப்பொழுது அதைக் காணமுடியாது. எல்லோரும் கைவிட்டுவிட்டனர். இப்பொழுது சில காலமாகவே மிகப் பளபளக்கும் வண்ணங்களில் அச்சிட்ட பர்மிய வகை உடைகளை உடுத்திவருகின்றார்கள். மேல் சட்டை நன்கு இறுகப்பிடித்த ரவிக்கை. இடையில் லுங்கி. லுங்கி நழுவா மல் இருக்க, அதன்மேல் ஒரு துணியையும் இறுக்கிக் கட்டிக் கொள்கின்றார்கள். விசேட தினங்களில் நாகரீகமான ஆடை என்பது, பூவேலை நிறைந்த உள்பாடி தெரிய நைலான் ரவிக்கை.

கிராமங்களில் பெண்கள் அன்றாட வேலைகளில் ஈடுபட்டிருக்கும் பொழுது, அநேகர் மேல் சட்டை எதுவும் அணிவதில்லை. அவ்வாறே நிகோபார் ஆண்கள்முன் தோன்றுவது சகஜமாக இருந்தாலும், வெளியார் பார்த்துவிட்டால் வெட்கப்படுகின்றார்கள்.

சிறு குழந்தைகள் அம்மணமாகவே இருக்கின்றன. ஏதாவது முக்கியமான விழாக்களுக்குக் குழந்தைகளைக் கூட்டிச்செல்லும் போது, பையன்களுக்கு புஷ்சர்ட்களையும், அரை டிரவுசர்களையும், பெண்களுக்கு மேலாடைகளையும் அணிகிறார்கள். பள்ளி செல்லும் பையன்கள் சர்ட்களும் அரை டிரவுசர்களும், பெண்கள் ரவிக்கையும், பாவாடையும் அல்லது மேலங்கி உடுத்திக்கொள்ளுகின்றனர். இப்பொழுதெல்லாம் சில பெண்கள் 'சால்வார் கமிஸ்' அணிந்துவருகின்றனர். ஆதிக் குடிகளின் தலைவிகளான கட்சால் தீவின் ராணி சங்காவும், நான்கோவ்ரித் தீவின் ராணி லட்சுமியும் தவிர, மற்ற பெண்கள் எவரும் புடவை கட்டுவதில்லை.

வருடம் முழுவதும் இங்கு தட்பவெப்ப நிலை சூடாகவே இருப்பதால், கம்பளி ஆடைகளுக்கு இங்கு அவசியமில்லை. எனினும் கடும் மழையும், பலத்த காற்றும் வீசும்பொழுது குளிருவதால், குழந்தைகள் அணிந்துகொள்வதற்காக கம்பளிச் சொக்காய்களைப் பெண்கள் பின்னுகின்றனர்.

கார் நிகோபார் அல்லது மற்ற தீவுகளில் ஆண்களும், பெண்களும், முக்கியமான தினங்களிலும், விழாக் காலங்களிலும் பரம்பரைப் பழக்கமாகத் தொப்பி அணிந்துகொள்ளுகிறார்கள். இத்தொப்பிகள் வைக்கோலால் பின்னப்பட்டு, வண்ணத் துணிகளால் மூடப்பட்டிருக்கின்றன. ஆண்கள் அணியும் தொப்பியின் மேல் பாகம் தட்டையாக இருக்கின்றது. இரு முனைகளும் நாய் காதுகள்போல் நீட்டிக்கொண்டுள்ளன. பெண்கள் அணியும் தொப்பி பல வண்ணங்களுடன், துண்டுத் துணிகளைக் கொண்டு செய்யப்பட்டிருக்கின்றன. தொப்பியைச் சுற்றிலும் வட்டமாகப் பட்டையொன்று இருக்கின்றது. தொப்பியின் மேலே இரண்டு ஓரங்களில் நீண்ட குச்சிகள் செருகப்பட்டுள்ளன.

நிகோபார் மக்களுக்குத் துணிகளில் விருப்பம் மிகுதி. அவைகளைக் கவனமுடன் வைத்துக்கொள்ளவும் செய்கின்றார்கள். துணிகளை ஒழுங்காகத் துவைத்துக்கொள்ளுகின்றனர். இந்தியாவில் சாதாரணமாக ஒரு கிராம மனிதர் உடுத்துவதைவிட மிகத் தூய்மையான துணிகளை உடுத்துகின்றனர். அவர்கள் பளிச்

சிடும் வண்ணங்களில் உடுத்தும் தூய்மையான துணிகள், தீவுகளை மேலும் கவர்ச்சிகரமாக ஆக்குகின்றன.

டெரசா, சோவ்ராத் தீவுகளில் உள்ள சில மனிதர்களைத் தவிர மற்ற எவரும் நீண்ட முடி தரிப்பதில்லை. இப்பொழுது இருக்கும் நவீன முடி அலங்காரங்கள் அனைத்தையும் அங்குக் காணலாம். சிகை அலங்காரம் செய்பவர்கள் எவரும் தொழில் ரீதியில் இல்லாததால், மக்கள் தாங்களாகவே முடி வெட்டிக் கொள்ளுகின்றனர்.

பெண்கள் கழுத்து வரையே முடியை வளர்க்கின்றனர். அதற்குமேல் வளருவதை ஒழுங்காக வெட்டிவிடுகின்றனர். அவர்கள் நடுவில் வகிடு எடுத்து இருபுறமும் வாரிவிட்டிருக்கின்றனர். சிலர் பின்னித் தொங்கவிட்டுக்கொண்டுள்ளனர். மணமாகாத பெண்கள் ரிப்பன் கட்டிக்கொள்கின்றனர். சில பெண்கள் மேற்கத்திய பாணியில் முடியைச் சுருட்டிவிட்டுக்கொண்டுள்ளார்கள். மற்றும் சிலர் இந்தியப் பெண்களைப்போல் கொண்டை போட்டுக்கொள்கின்றனர்.

ஆண்களும் பெண்களும் இரு பாலாருமே தேங்காய் எண்ணெயைத் தலைக்கும் உடலுக்கும் தடவிக்கொள்கின்றார்கள். குளிப்பதற்கு அநேகமாக எல்லோரும் சோப்பு தேய்த்துக்கொள்ளுகின்றனர். கல்வி கற்று முன்னேறிய ஆண்கள் நவீன வாசனைப் பொருள்களைப் பயன்படுத்துகின்றனர். பெண்கள் பவுடர், உதட்டுச்சாயம், நகச்சாயம் முதலானவைகளை உபயோகிக்கின்றார்கள். பெண்கள் தங்கள் அழகைப் பேணுவதில் மிகக் கண்ணுங்கருத்துமாக இருக்கின்றனர். முடிந்தது அனைத்தையும் செய்துகொள்ளுகின்றனர்.

ஆண்கள் எப்போதும் நன்கு சவரம் செய்துகொண்டுள்ளனர். சிலர் சன்னமான மீசை வைத்துக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் முகத்தில் மயிர் அதிகம் வளருவதில்லை. அதனால் அன்றாடம் சவரம் செய்யவேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை. ஆண்கள் சிறு இடுக்கிகொண்டு தாடி மயிர்களைப் பிடுங்கிவிடுகின்றனர். வலியெடுத்தாலும், அவ்வாறே செய்கிறார்கள். படித்து முன்னேறியவர்கள் மாத்திரமே கத்தியால் முகத்தை மழித்துக்கொள்கின்றனர்.

நிகோபார் மக்கள் தங்க நகைகளை எப்பொழுதுமே அணிந்ததில்லை. ஆனால், வெள்ளி நகைகளைப் பரவலாக அணிந்துவந்திருக்கின்றனர். பழைய வெள்ளி நாணயங்கள், வெள்ளிக்

கம்பிகளைக்கொண்டு வெள்ளி அணிகள் செய்யப்படுகின்றன. வெள்ளி நாணயங்களைத் துளைத்து ஒரு நூலால் இணைக்கின்றனர். இதற்கு 25 பைசாக் காசுகளைப் பயன்படுத்துகின்றனர். சில சமயம் 50 பைசாக் காசுகளும் ஒரு ரூபாய் நாணயங்களும் இடம் பெறுகின்றன. இந்தக் காசு மாலையைக் கழுத்தணியாக அணி கின்றார்கள். மேலும் இரு மாலைகளைக் கைகள் வழியே கொண்டு வந்து மார்பின் குறுக்காகத் தோள்களைச் சுற்றிப் போட்டுக் கொள்ளுகின்றனர். சில சமயம் இடுப்புவரை தொங்கும்படியாக ஒரு மாலையை மற்ற மாலையுடன் கட்டிவிடுகின்றனர். காசு மாலை களை ஒரு வடமாக அல்லது இரண்டு, மூன்று, நான்கு வடங்க ளாக, அவரவர்களுடைய பண வசதிக்கேற்ப அணிந்துகொள்ளு கின்றனர். நல்ல கனமான வெள்ளிக்கம்பியை பாதத்திற்கு மேலாகக் காலிலும், கைகளில் மணிக்கட்டிலிருந்து முழங்கை வரை கட்டிக்கொள்ளுகின்றார்கள். வெள்ளிக்கம்பியால் செய்யப் பட்ட வளையல்களையும் போட்டுக்கொள்ளுகின்றனர். காசு மாலை யைத் தலையைச் சுற்றியும், காசுகள் நெற்றியில் தொங்கும்படியும் அணிந்துகொள்ளுகின்றனர்.

முன்பெல்லாம் சிறுவர், சிறுமியர்களின் காதுகளைக் குத்தி, வெள்ளிக்கம்பியால் கட்டப்பட்ட காசுகளைத் தொங்கவிட்டு வந்தனர். இப்பொழுது கார் நிகோபாரிலும், மற்றத் தீவுகளில் அநேகக் குடும்பங்களிலும் பையன்களுக்குக் காது குத்துவதில்லை. ஆனால், பெண்களுக்குக் காது குத்தப்படுகின்றது. வெள்ளிக்கம்பி வளையங்களைக் காதுகளில் தொங்கவிட்டுக்கொள்ளுகின்றனர்.

கை விரல்களில் வெள்ளிக்கம்பியாலும், ஆமை ஓட்டாலும் செய்யப்பட்ட மோதிரங்களை அணிந்துவருகின்றனர்.

இந்த நாட்களில் பரம்பரையான அணிகளை அணிவதில்லை. சோவ்ரா, டெரசாத் தீவுகளில் மாத்திரமே சிலர் எப்போதும் அணிந்துகொண்டிருக்கின்றனர். கார் நிகோபாரிலும், இன்னும் அநேக இடங்களிலும் விருந்துகள், விழாக்களின்போதுதான் மக்கள் அணிகள் பூணுகின்றனர். சோவ்ராவில் படகில் முதன் முதலாகப் போகும் பையன்கள் எல்லா வகையான பரம்பரை அணிகளையும் போட்டுக்கொள்கின்றனர். உடல் நலம் குறைந்த போதும் வெள்ளிக்கம்பியால் ஆன கணுக்கால் அணியைப் போட்டுக்கொள்கின்றனர். காலைப் பாதுகாப்பதால் விரைவில் உடல் நலம் தேறும் என்று அவர்கள் நம்புகின்றனர்.

இப்பொழுது பெண்கள் மலிவான தங்கப்பூச்சு நகைகள், கழுத்து மாலை, வளையல், தோடு முதலியனவற்றை அணியத் துவங்கியிருக்கின்றனர். அவைகள் உள்ளூர்க் கடைகளில் கிடைக்கின்றன.

விழாக் காலங்களில் பூக்கள், தென்னை ஓலை, வாழை இலைகளால் ஆன அழகிய மாலைகளைக் கழுத்திலும், தலையிலும், மணிக் கட்டுகளிலும் சூடிக்கொள்ளுகின்றனர். குறிப்பாக, விழாக் காலங்களில் வாழை இலை மாலையை அணிவது அவசியமானது. அது விழாச் சின்னமாகவும், பேய் பிசாசுகளிடமிருந்து காப்பதாகவும் கருதப்படுகின்றது.

நிகோபார் மக்களுக்குப் படுக்கச் செல்லும் நேரம் என்று குறிப்பாகக் கிடையாது. பொழுது சாயுமுன் வீடு திரும்பிவிடுகின்றார்கள். ஆனால், நேரம் கழித்தே படுக்கச் செல்லுகின்றனர். உண்டு, உரையாடிக் கள் குடித்துப் பாடிக் களித்து வெகுநேரம் ஆனபின்னரே அவர்கள் உறங்கச் செல்லுகின்றனர். சில சமயம் விழாக் காலங்களில் இரவெல்லாம் விழித்திருந்து ஆடிப்பாடிக் களிக்கின்றனர். மீன் பிடிக்கும்பொழுதும் விடியும்வரை தூங்காமலிருக்கின்றனர். அதனால் பகல் நேரத்தில் அநேகர் எந்த நேரத்திலும் தூங்கிக்கொண்டிருப்பதைக் காண்பது சகஜம். உண்மையில் ஒரு நிகோபார் மனிதன், இந்தியாவில் உள்ள ஒருவரைக்காட்டிலும் அதிகம் தூங்கினாலும், ஒரேயடியாக நீண்ட நேரம் இரவில் தூங்காமல், பகலிலும் சிறிது சிறிது தூக்கம்போட்டு, தூக்க நேரத்தை அதிகப்படுத்திக்கொள்ளுகின்றார்.

தீவுகளின் தட்பவெப்ப நிலை சிறிது சூடாக இருப்பதால் படுக்கை என்று பெரிதாக வேண்டுவதில்லை. வீட்டின் தளத்தின் மேலேயே வழக்கமாகப் படுத்துக்கொள்ளுகின்றனர். மூங்கில் பத்தைகளால் தளம் வேயப்பட்டிருப்பதால் படுப்பதற்கு இலகுவான ஆட்டமுடன் மெதுவாகயிருக்கின்றது. படுப்பதற்கு மெத்தை இல்லை. தென்னம்பாய் அல்லது பண்டானுஸ் இலைப் பாயையே விரித்துக்கொள்ளுகின்றனர். முன்பெல்லாம் தலைக்கு வைத்துக்கொள்ள மரக்கட்டையைப் பயன்படுத்திக்கொண்டிருந்தனர். ஆனால் இப்பொழுது, அங்கு நிறையக் கிடைக்கும் இலவம்பஞ்சு திணித்த தலையணைகளையே அநேகர் வைத்துக் கொள்ளுகின்றனர். இரவில் சிறிது குளிரும்போது அநேகர் துப்பட்டிகளைப் போர்த்துக்கொள்ளுகின்றனர். ஒரு சிலரிடம்

மெத்தை, அதன் மேல் விரிப்பு, போர்வை என்றும் இருக்கின்றன. ஆனால், யாராவது ஒருவரிடமே இப்படி முழுப் படுக்கையும் காணமுடியும். குறிப்பாக நல்ல காரைக் கட்டடங்களில் இருப்பவர்களிடமே மெத்தைகள் காணப்படுகின்றன. கார் நிகோபாரில் கொசுவலைகளைப் பயன்படுத்துவது அதிகரித்துவரு கின்றது. மற்றத் தீவுகளில் வெகு சிலரே உபயோகிக்கின் றார்கள்.

வீடுகளில் பழைய முறைப்படி விளக்கேற்றி வந்தார்கள். தேங்காய் மூடி அல்லது அகலமான கடல் கிளிஞ்சலில் தேங்காய் எண்ணெயோ அல்லது பன்றி கொழுப்போ விட்டு, பஞ்சுத் திரி அல்லது துண்டுத் துணியால் திரிசெய்து எரிய விட்டு வந்தார்கள். இப்பொழுது மண்ணெண்ணெய் விளக்குகளும், மற்ற விளக்கு களும் உள்ளூர்க் கடைகளில் கிடைக்கின்றன. அவைகளை உபயோகப்படுத்துகின்றனர். கிராமங்களில் மின்சாரம் கிடை யாது. விழாக் காலங்களில், கிராமத்தில் ஒரு பகுதிக்கோ, சில வீடுகளுக்கோ மிகுந்த வெளிச்சம் இரவு முழுவதும் தேவையாக யிருந்தால் தேங்காய் மூடிகளைக் குவியல் குவியலாக சிறிதுதூர இடைவெளிகளில் வைத்து எரியவிடுகின்றனர். ஒரு குவியலில் தேங்காய் மூடிகளைப் பெரிய பிறைவடிவில் ஒன்றின்மீது ஒன்று தொட்டுக்கொண்டிருக்கும்படி வைத்து, கடைசி மூடியை எரிய விடுகின்றார்கள். பிறகு அந்த மூடிகள் ஒவ்வொன்றாக, இரண்டு, மூன்று மணி நேரம் தொடர்ந்து எந்தவிதக் கவனிப்புமில்லாமல், நல்ல ஒளிவிட்டு எரிகின்றது.

இரவு நேரங்களில், கிராமங்களிலும், காடுகளிலும் அவர்கள் செல்லும்பொழுது தென்னை ஓலைப் பந்தங்களை வெளிச்சத்திற்காக எடுத்துச் செல்லுகின்றார்கள்.

இப்பொழுது நெருப்புக்குச்சிகொண்டு தீ மூட்டிக்கொள்ளு கின்றனர். எனினும், பழைய முறையில் தீ மூட்டுவது சிறிது சுவாரஸ்யமானது. சிலர் இன்னமும் வீட்டுக்கு வெகுதூரத்தில் உள்ள நடுக் காடுகளுக்குச் செல்லும்போது தீப்பெட்டி யில்லா விட்டால், பழைய முறையையே கையாளுகின்றனர். அதிலும் இரு முறைகள் இருக்கின்றன. முதலில் இரு மூங்கில் பத்தைகளை எடுத்துக்கொள்ளுகின்றனர். ஒரு பத்தையில் சிறிய துளையொன்று செய்து, சருகுகளை அடியில் பரப்பி, அதன்மேல் வைத்து இரு முனைகளையும் இரு கால்களால் அழுத்திப் பிடித்துக்கொள்ளு கின்றனர். மூங்கிலின் வழுவழுப்பான மேல்பாகம் மேலாகவே

இருக்கின்றது. மற்ற மூங்கில் பத்தையை, நேர்குத்தாக, கிடத்தப்பட்டிருக்கும் மூங்கிலுடன் வேகமாக உரசுகின்றூர்கள். வேகமாக உரச உரச மூங்கில் துகள் சிதறிச் சூடு உண்டாகித் தீப்பொறிகள் தெறித்து, கீழ்ப்பத்தையில் இருக்கும் துளை வழி சென்று சருகுகள் பற்றிக்கொள்கின்றன.

இரண்டாவது முறைப்படி, மூங்கிலுக்குப் பதிலாக மரக்கட்டைகளைப் பயன்படுத்துகின்றனர். கடினமான மரக்கட்டை ஒன்றைக் கீழே தரையில் வைத்து, மெல்லியதொரு மரக்கட்டையை உரசுகின்றனர். மெல்லிய கட்டையில் கத்தியால் கூரிய முனை ஒன்றும் செய்யப்படுகின்றது. இதைக்கொண்டு, கீழே கிடக்கும் கட்டையின்மீது வட்டமாக, அதே சமயத்தில் வேகமாகத் தேய்க்கும் போது, தீப்பொறி பறந்து, மரத் துகள்மீது பட்டதும் எரியத் துவங்குகின்றது. உடனே சருகுகளையும், குச்சிகளையும் அதன்மீது சிறுகச் சிறுக வைத்து பெருந் தீ மூட்டுகின்றனர்.

கார் நிகோபாரிலும் மற்றும் வளர்ச்சியடைந்த இடங்களிலும் இப்பொழுது ஆங்கில நாட்குறிப்பேடு பரவலாகப் பயன்படுத்தப்படுகின்றது. மக்களுக்கு ஆங்கில ஆண்டுகளும், மாதங்களும், நாட்களும் ஓரளவு சரியாகத் தெரியும். எனினும், மற்றவர்கள், படிக்காதவர்கள், முதியவர்கள், கார் நிகோபாரில் இருப்பவர்கள்கூட பரம்பரையான நாட்குறிப்புகளையே வைத்துக் கொண்டிருக்கின்றனர். இந்த நாட்குறிப்புப்படி, ஆண்டுகள் பற்றிய குறிப்போ அல்லது வரலாற்றுப் பிரிவின் துவக்கமோ ஆக எதுவும் இல்லை. ஒரு குறிப்பிட்ட ஆண்டு, அதன் மாதங்கள், நாட்கள் என்றுதான் இருக்கின்றன. அதற்கான அடிப்படை நிலாவும், இரு பருவ காலங்களுமே யாகும். வருடத்திற்கு 12 மாதங்கள், மாதத்திற்கு 30 நாட்கள். அதாவது, நிலா ஒரு சுற்று சுற்றிவர 30 நாட்கள் ஆகின்றன என்பதை மக்கள் அறிவார்கள். தீவுகளில் காணப்படும் இரு பருவ காலங்களையும் அவர்கள் தெரிந்துவைத்திருக்கின்றூர்கள். அவைகளைக்கொண்டு, தென்மேற்கு பருவத் துவக்கத்தின் முதல் அமாவாசையன்று, அதாவது மே மாதம் முதல் வாரத்தில், அவர்களின் நாட்குறிப்புப்படி, ஆண்டின் முதல் நாள் துவங்குகின்றது. ஒரு நீண்ட கம்பை எடுத்துக்கொண்டு ஒவ்வொரு நாளுக்கும் ஒரு குறியிட்டுக் கொள்கின்றனர். நிலா வளரும் முதல் 10 நாட்களுக்குக் கம்பில் நேர் கோடுகளை இட்டுக்கொள்கின்றனர். நிலா வளர்ச்சியின் அடுத்த ஐந்து நாட்களுக்கும் நிலாவின் தேய்வுக்கு முதல் நாளையும்

ஒளிமிகுந்த நாட்கள் என்று ஆறு சாய்ந்த கோடுகளை இடுகின்றார்கள். மீண்டும் தேய்பிறையின் 10 நாட்களை நேர் கோடுகளாகக் குறிக்கின்றார்கள். அமாவாசையுடன் முடிவடையும் மீதமுள்ள நாட்களை இருண்ட இரவுகளாகக்கொண்டு சாய்வான கோடுகளை வரைகின்றனர். இந்த வழியில் பிறையின் முழு மாத வட்டமும் வளர்ச்சிக்கட்டத்தை 10 நேர் கோடுகளும், ஒளிமிகுந்த இரவுகளை 6 சாய்வுக் கோடுகளும், தேய்நிலையை 10 நேர் கோடுகளும், இருண்ட இரவுகளை 4 சாய்வுக் கோடுகளும் குறிக்கின்றன. இம்மாதிரி வருடம் முழுவதும், ஒவ்வொரு நாளையும் நிலவின் மாதச் சுழற்சியையும் மக்கள் கம்பில் குறித்துக்கொள்ளுகின்றனர்.

இதையே சரிபார்த்துக்கொள்ளும் வகையில் ஒரு பலகையில் ஓர் ஓரத்தில் 30 துளைகள் ஒன்றின்மேல் ஒன்றாகவும், மறு ஓரத்தில் முதல் துளைகளுக்கு இணையாக 12 துளைகளும் இட்டுக்கொள்ளுகின்றனர். 30 துளைகள் ஒரு மாதத்தின் நாட்களைக் குறிக்கின்றன. அவைகளும் 10, 6, 10, 4 என்று நிலவின் சுழற்சியைக் குறிக்கும் வகையில் பகுதிகளாக உள்ளன. மறு ஓரத்தில் உள்ள 12 துளைகள் 12 மாதங்களைக் குறிக்கும். இரண்டு வரிசையிலும் தீக்குச்சி அளவில் இரு குச்சிகள் இருக்கின்றன. முதல் வரிசையில் உள்ள குச்சி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு துளையாக நகற்றப்படுகின்றது. அடுத்த வரிசையில் உள்ள குச்சி, ஒரு மாதம் முடிந்த பின்னர் மாற்றப்படுகின்றது. இவ்வாறு சரியான நாளையும், மாதத்தையும் அவர்களால் கணித்துக்கொள்ள முடிகின்றது.

அளவுகளை நிர்ணயிக்கும் பழைய முறைகளையெல்லாம் குறிப்பாகக் கார் நிகோபார் மக்கள் கைவிட்டு வருகின்றனர். மெட்ரிக் எடைகளும், அளவைகளும் இப்பொழுது பயன்படுத்தப்படுகின்றன. தூரத்தை வழக்கமாக கஜம், பர்லாங், மைல் என்றே கணித்து வந்தாலும், மீட்டர் முறையும் பழக்கத்திற்கு வந்து கொண்டிருக்கின்றது. அநேகர் கடிகாரங்களை இந்திய நேரப்படி வைத்துக்கொண்டு, சரியான மணியைக் குறிப்பிடுகின்றார்கள். அளவைகளில், அவர்களிடம் இன்னமும் ஒரு பழைய பழக்கம் இருந்து வருகின்றது. எதையும் இரட்டையாகவே எண்ணுகின்றனர். ஒருவருக்கு 10 தேங்காய்கள் என்றால், 10 ஜோடித் தேங்காய்கள், அதாவது 20 தேங்காய்கள் என்றே அர்த்தம்.

அத்தியாயம் 12

# உடல் நலம்

நிகோபார் மக்கள் வெளியில் நல்ல காற்றேட்டமான சூழ் நிலையில் வாழ்ந்துகொண்டு, நல்ல முறையில் உண்டு, உலகக் கவலைகள் எதுவும் இல்லாமலிருப்பதால், அவர்கள் மிக நல்ல உடல் நிலையுடன் இருக்கின்றனர். உண்மையில் இத்தீவுகளுக்கு வருபவர்கள், அவர்களை வரவேற்கும் மக்களின் உருண்டு திரண்ட உடல்கட்டையும், உடல் நலத்தின் மினுமினுப்பையும், முகங் களில் காணப்படும் மகிழ்ச்சியையும் காணும்பொழுது முதலில் அதிசயப்படவே செய்கின்றனர்.

எனினும், பொதுவாக அவர்கள் உடல் நலம் நன்றாக இருந்தா லும், மக்கள் அநேக நோய்களால் அவதிப்படவே செய்கின் றார்கள். தீவுகளில் புல்புதர்கள் அடர்த்தியாகயிருப்பதாலும், உட்பகுதிகளில் சேறும் சகதியுமான இடங்கள் நிறைந்திருப்பதா லும் அவையெல்லாம் கொசுக்கள் பல்கிவளரும் இடங்களாக இருக்கின்றன. கொசுக்களால் மலேரியாவும், பிலேரியாவும் பரவியிருக்கின்றன. மக்களின் உண்ணும் பழக்கவழக்கங்கள், குறிப்பாக கண்ட நேரங்களில் உண்பதும், சில சமயங்களில் வயிறு புடைக்கச் சாப்பிடுவதும், சரியாக சமைக்கப்படாத உணவுகளை உண்பதும் ஆகிய காரணங்களினால் வயிற்று வலி முதலிய நோய்களினால் அவதிப்படுகின்றார்கள். புழு, பூச்சிகளால் அசுத்தப்பட்டதும், தீட்டுப்பட்டதுமான கிணறுகளிலிருந்து எடுக்கும் நீரைக் காய்ச்சாமல் அப்படியே குடிப்பதால் வயிற்றுக் கடுப்பு, வயிற்றுளைச்சல் ஆகிய நோய்களினாலும் பீடிக்கப்பட்டுள் ளனர். பன்றி இறைச்சி சாப்பிடுவதால் குடல் புழுவும், வெறுங் கால்களுடன் நடப்பதால், கால்களின் மயிர்க்கால்கள் வழியே கொக்கிப் புழுக்களும் அவர்கள் உடலில் இடம்பெற்றுவிடு கின்றன. ஈரமான தட்பவெப்ப நிலையிருப்பதால், வியர்த்துக் கொட்டுவதுடன் அதனால் சொறி, படை முதலான தோல் வியா திகள் அவர்கள் உடலில் பரவ இடமாகின்றது. வானிலையும் திடீரென்றும், அடிக்கடியும் மாறுபடுவதால் அநேகருக்கு சளியும்,

இருமலும், இன்புளுயன்ஸாவும் இல்லாமலில்லை. வெற்றிலை பாக்கு அடிக்கடி போட்டும், பற்களை சரியாக ஒழுங்காக விளக்கா மல் விடுவதாலும், பல் நோய்களாலும் பாதிக்கப்பட்டிருக்கின் றார்கள்.

எலும்புருக்கி நோய், மேக நோய், கண் நோய் முதலிய சில நோய்கள் வெளியிலிருந்தே, விடுதலை காலத்திற்கு முன்பு வந்த வர்த்தகர்களாலும், ஜப்பானியர் ஆக்கிரமிப்பின்போதும் வந் திருக்கவேண்டும் என்று தெரிகின்றது. இந்த நோய்கள் கண்ட வர்களை, ஒதுக்கிவைத்திருக்கவேண்டும் என்ற அவசியத்தை அவர்கள் உணராததினுலேயே, அவைகள் பரவியிருக்கின்றன.

எலும்புருக்கி நோயாளி ஒரு கூரையின் கீழேயே நல்ல உடல் நலமுள்ளவர்களுடன் வாழுவது மிகச் சாதாரணமாகயிருக் கின்றது. முன்பெல்லாம் உடலுறவு கொள்வதில் கட்டுப்பாடு எதுவுமில்லாமலிருந்ததும், இப்பொழுதும் ஓரளவு இருப்பதும், வெட்டை போன்ற மேக நோய்கள் பரவியிருப்பதற்கு முக்கிய மான காரணமாகும்.

பேய், பிசாசுகளால் எல்லா நோய்களுமே பரப்பப்படுகின்றன என்பது நிகோபார் மக்களின் பழமையான நம்பிக்கை. பேய்களை வசப்படுத்தி நோயாளிகளைக் குணப்படுத்தவென்றே சூனியவாதி களும் இருந்தனர். இப்பொழுது கல்வி வளருவதாலும் கிருஸ்துவ சமயம் பரவியுள்ளதாலும், இந்த நம்பிக்கை மறைந்து வரு கின்றது. கார் நிகோபாரில் சூனியவாதிகள் என்று இப்பொழுது யாருமேயில்லை. மற்ற தீவுகளிலும் அவர்கள் செல்வாக்கு மடிந்து வருகின்றது. எனினும் சோவ்ராவிலும், இன்னும் சில இடங் களிலும் சூனியவாதங்களை மக்கள் நம்பிக்கொண்டிருப்பதால், நோய்களைப்பற்றிய பழைய நம்பிக்கைகள் இருக்கவே செய்கின் றன. சூனியவாதிகள் மக்களை ஆட்டிவைக்கவே செய்கின்றார்கள்.

சூனியவாதிகளே ஒரு விந்தையான வகுப்பைச் சேர்ந்த மனிதர் களாகயிருக்கின்றார்கள். அவர்கள் தொழில் பரம்பரையானது என்றாலும், யார்வேண்டுமானாலும் அந்தத் தொழிலை ஏற்றுக் கொள்ளலாம். சூனியவாதிகளில் பெண்களும் இருக்கின்றார்கள். ஆனால், அவர்கள் வெகு குறைவே.

இத்தொழிலில் ஆர்வம்கொண்ட எவரையும் சூனியவாதிகள் சீடர்களாக ஏற்றுக்கொள்கின்றனர். அவர்கள்மீது நம்பிக்கை வரவேண்டும். குறிப்பிட்ட ஒருவரை, இத்தொழிலுக்கு அனு மதிக்கத் தீவுகளில் உள்ள சூனியவாதிகள் அனைவரும் ஒத்துக்

கொண்டவுடன் தொடக்கவிழாவுக்கு ஒரு பௌர்ணமி தினத்தை நிர்ணயிக்கின்றனர். அன்று அவர் புதிய கோவணம் அணிந்து கொள்ளுகின்றார். வெள்ளிக்கம்பியால் ஆன அணிகளை கைகளிலும் கால்களிலும் கட்டிக்கொண்டு பன்றி இறைச்சித் துண்டுகளைச் சேர்த்து இளம் வாழை இலைகளால் கட்டப்பட்ட மாலைகளையும் போட்டுக்கொள்ளுகின்றார். மஞ்சள் கலந்த தேங்காய் எண்ணெய் அவர்மீது கொட்டப்படுகின்றது. சூனியவாதிகள் இரவெல்லாம் விருந்துண்டும், கள் குடித்தும் விழித்துக்கொண்டிருக்கின்றனர். சூனியவாதிகளில் முதியவர் ஒருவர் எழுந்து, சைத்தானை விளித்துப் புதிதாக சூனிய வித்தை கற்க விரும்புபவருக்கு, அவர் என்றென்றும் சைத்தானைப் பின்பற்றுவார்; அவருக்கு சக்தியளித்து அருளவேண்டும் என்று வேண்டிக்கொள்கின்றார். சைத்தான் மனித உருவில் இரவில் வரும் என்று சூனியவாதிகள் கூறிக்கொள்கின்றார்கள். அவர்களுக்கு ஏதாவது மருந்து வேண்டுமென்றால், சைத்தானைக் கேட்டுக்கொண்டால், தேவையான மருந்துகள் கிடைக்கின்றன என்றும் கூறிக்கொள்ளுகின்றனர்.

ஆரம்ப விழா முடிந்தவுடன், சூனியம் கற்க விரும்புபவருக்குப் பயிற்சி தரப்படுகின்றது. அந்தப் பயிற்சிக் காலத்தில், அனுபவமுள்ள சூனியவாதியின் தலைமையின்கீழ் நோயாளிகளைக் கவனிக்கின்றார். அவர் தனியே நோயாளிகளைக் கவனிக்க அனுமதிக்கப்படுவதில்லை. காடுகளிலிருந்து மருந்து இலைகளையும், வேர்களையும் சேகரிக்கவும், சைத்தானை அழைக்கவும், தீய பேய்களைக் கட்டுப்படுத்தவும் கற்றுத்தருகின்றார்கள்.

புதிய சீடர் தொழில் நுணுக்கம் அனைத்தையும் கற்றுக்கொண்டார் என்று அனுபவம் மிகுந்த சூனியவாதிகள் திருப்தியடைந்தால், சீடரைத் தனியாகவே தொழில்புரிய அனுமதிக்கின்றனர். அத்தீவில் உள்ள சூனியவாதிகள் அனைவருமே ஒரு நெருங்கிய இன உறவுகொண்டுள்ளனர். நோயைக் குணப்படுத்துவதிலும் சரி, மற்ற முக்கிய விஷயங்களிலும் சரி, அவர்கள் ஒருவருடன் மற்றொருவர் ஒத்துழைக்கவே செய்கின்றனர்.

சூனியவாதிகள் தொழிலில் ஈடுபடாத காலங்களில் மற்ற மக்களைப்போலவே அவர்களும் உடை உடுத்து, கிராமங்களில் மற்ற வழக்கமான வேலைகளில் ஈடுபடுகின்றனர். கிழங்குகள் விதைப்பது முதலான பணிகளில், அவர்களுடைய குடும்பத்தினருக்கு உதவிபுரிகின்றார்கள். உண்மையில் அத்தகைய பணி

களில் அவர்கள் ஈடுபடுவது, தோப்பு, துரவுகளைக் காக்கும் பேய்களுக்கு உணவு படைக்கும் காரியங்களுக்கு அவசியமாகின்றது. அவர்கள், மற்ற தீவுகளுக்கு மக்கள் பயணம் செல்லும்பொழுதும் உடன் செல்லவேண்டும். அப்பொழுதுதான், மற்றத் தீவுகளிலுள்ள சூனியவாதிகளின் மந்திர தந்திரங்கள், சூனியங்களிலிருந்து மக்களைக் காக்க முடியும்.

அவர்கள் வீடுகளும் மற்றவர்களின் வீடுகளைப்போலவே உள்ளன. ஆனால் அங்கே, அவர்களுடைய முன்னோர்கள், மறைந்த சூனிய வித்தைக் குருக்கள், பேய்கள் முதலானவற்றின் மர உருவங்கள் இருக்கின்றன. அந்த உருவங்களுக்கு மாதா மாதம் பன்றி இறைச்சி, கோழி மற்ற உணவுகளைப் படைக்கின்றனர்.

பொதுவாகத் தீவின் தலைமை சூனியவாதி சைத்தானுக்கு ஜெபம் செய்வதற்கும், நோயாளிகளைக் குணப்படுத்த புதிய வழிகளைக் கண்டுபிடிக்கவும் தனித்த வீட்டில் தன்னந்தனியே இருக்கின்றார். உண்மையில் அவர் வீடு ஓர் ஆராய்ச்சிக்கூடம்.

நோயாளிகளைக் குணப்படுத்த சூனியவாதிகள் புறப்படும்பொழுது, பரம்பரையாக கட்டிக்கொள்ளும் கோவணமல்லாமல் வாழை இலை மாலை, காசு மாலை ஆகியவைகளை அணிவதுடன் வெள்ளிக்காசுகள் முடியப்பட்ட வெள்ளைத் துணிகளை இரு கைகளில் கட்டிக்கொள்ளுகின்றார்கள். நோய்களுக்குக் காரணமான தீய பேய்களைக் குத்துவதற்காக சிறிய கத்திகளும் வைத்திருக்கின்றார்கள். அவர்கள் எல்லா வகையான தொப்பிகளையும், உள்ளூர்க் கடைகளில் கிடைக்கும் நவீனத் தொப்பிகளையும் விதவிதமாகப் போட்டுக்கொள்ளுகின்றனர். அவர்களுடைய பரம்பரை அணிகளுடன், இவ்வாறு தொப்பிகளை அணிந்திருப்பது ஏறுக்குமாறாகயிருக்கின்றது.

பேய்கள் இரவிலேயே நடமாடுகின்றன என்பதால், சூனியவாதிகள் பொதுவாக நோயாளிகளை இரவிலேயே கவனிக்கின்றார்கள். சைத்தான் வசிக்கும் ஓர் இடத்தை ஒருவர் தெரியாமல் தாண்டிச்சென்றால், அந்தப் பேய் அவருடைய உடலில் ஒரு சிறு கல்லையோ, இரும்புத் துண்டையோ செலுத்திவிடுவதால் பெரும் நோயும், அவதியும் ஏற்படுகின்றது; அவர் நோயாளியாகின்றார் என்று அவர்கள் கூறுகின்றார்கள். அப்படியே அவர்கள் நோயாளிகளின் உடல்களிலிருந்து சிறு கல், இரும்புத் துண்டு, மிளகாய், புகையிலை முதலான புறப்பொருள்களை அகற்றிக்காட்டுகின்றனர்.

அவ்வாறு சூனியவாதிகள் நோயாளிகளின் உடல்களிலிருந்து புறப்பொருள்களை அகற்றும்பொழுது, அந்த நோயாளி படுத்திருக்கும் இடத்தில் வெளிச்சம் படாதபடி செய்து, நோயாளியைக் குணப்படுத்துவதற்கு உதவிபுரிய சைத்தான் வருவதற்கே, இருட்டடிக்கப்படுவதாகக் கூறுகின்றார்கள். உண்மையில், நோயாளியின் உடலிலிருந்து புறப்பொருள்களை அகற்றுவதற்கு இருள் தேவையாக உள்ளது. அப்பொழுதுதான் நோயாளியையும், அவரது உறவினர்களையும் சுலபமாக ஏமாற்ற முடியும்.

சூனியவாதிகள் வைத்தியர்களாகவும், பூசாரிகளாகவும் இருக்கின்றார்கள். பிறப்பு, இறப்பு, திருமணம் முதலான எல்லா விழாக் காலங்களிலும் அவர்கள் முக்கியமான பங்கு ஏற்கின்றார்கள். அவர்களுடைய வைத்திய முறையை சூனிய வித்தையிலிருந்து பிரித்துவிட முடியாது. அவர்கள் நோயாளிகளைக் குணப்படுத்தும் முறை தாயத்துகள், மந்திரங்கள், சடங்குகள் என்று நோய்களுக்குக் காரணமான பேய்களை விரட்டுவதாகவே இருக்கின்றன.

வீட்டிற்குள், வீட்டு வாசலில் இளந்தேங்காய்களுடன், ஒருவிதமான இலைகளைக் கட்டித் தொங்கவிடுவது சாதாரணமாக காணப்படும் மந்திரக்கட்டாகும். வெவ்வேறு வகையான நோய்களை, வெவ்வேறு வகையான இலைகள் தடுக்கின்றன என்று கூறப்படுகின்றது. சில சமயங்களில், வீடுகளுக்கு வெளியே சில குறிப்பிட்ட மரங்களின் அடி மரங்களை வெட்டி நடுகின்றார்கள். அவை சில நோய்களைத் தீர்க்கின்றன என்று கூறப்படுகின்றது.

பாம்புக் கடியைத் தடுக்கவும், குணப்படுத்தவும் மரத்தில் பாம்பு போன்ற சிறிய உருவம் செய்து, வீட்டில் வைத்து, உணவுடன் சுண்ணும்பு கலந்து வைக்கப்படுகின்றது. அதனுல் கடித்த பாம்பு மயக்கமுற்றுவிடும், அதன் விஷம் பயனற்றுவிடும் என்று கருதப்படுகின்றது.

மக்களைத் தாக்கும் நோய்களுக்குக் காரணமான பேய்களின் கூட்டத்தைக் காண்பதாக சூனியவாதிகள் சில பொழுதில் கூறுவார்கள். அப்பொழுது இளம் 'சாவாக்' மரங்களை வெட்டி, அந்த மரங்களின் கால்களை கடற்கரையில் நட்டு, இளந் தென்னங் குருத்துக்களையும், மற்ற இலைகளையும்கொண்டு அலங்கரித்துவிடுகின்றார்கள்.

எல்லா நோய்களின்போதும் வெள்ளிக்கம்பியால் செய்த அணிகளைக் கால்களிலும், கைகளிலும் அணிந்துகொள்வதனுல்,

நோய் குணமாக உதவுகின்றது என்று நம்புகின்றார்கள். சிறிய மரக்கட்டைகளைக்கொண்டு கத்திகளைப்போல் செய்து, சிவப்பு வண்ணத்தால் பூசிக் கழுத்தில் கட்டிக்கொள்வதும், நோயைக் குணப்படுத்த உதவுகின்றதாம்.

ஒரு தவறான மரத்துக்குப் பக்கத்தில் நோயாளி சிறுநீர் கழித்த தினால், அந்த மரத்தைக் காக்கும் பேயின் கோபத்துக்கு ஆளாகி, நோய் வந்துவிட்டதாக அடிக்கடி கூறப்படும். அப்பொழுதெல் லாம் அந்தப் பேயை சமாதானப்படுத்த அம்மரத்தின் அடியில் உணவு படைக்கப்படுகின்றது.

ஆண்டுக்கு ஒருமுறை, மக்களின் உடல் நலம் காக்க, தீய பேய் களை விரட்ட ஒரு விழா கொண்டாட சூனியவாதிகள் ஏற்பாடு செய்கின்றார்கள். அந்த நாளில் பன்றிகள் நிறையக் கொல்லப் படுகின்றன. இளந் தென்னங்குருத்துக்களால் கிராமம் முழுவ தும் அலங்கரிக்கப்படுகின்றன. சேனைக்கிழங்கையும், வாழைப் பழத்தையும்கொண்டு செய்யப்பட்ட அல்வா போன்ற பொருளை வாழை இலைகளில் கட்டி, பன்றி இறைச்சித் துண்டுகளுடன் குறிப்பாகப் பன்றிகளின் ஈரல், இருதயம், சிறுநீர்ப் பைகளுடன் கிராமத்தைச் சுற்றியும் தொங்கவிடுகின்றார்கள். சில நாட்க ளுக்கு அவைகளைத் தொங்கவிட்டிருந்து, அவைகளைத் தூர எறிந்துவிடுகின்றார்கள். பின்னர் மக்கள் 30 அடி நீளமுள்ள கட்டுமரம் ஒன்று செய்து, அதில் காய்ந்த குச்சிகளை செங்குத்தா கக் கட்டி, அதன்மேல் தென்னை ஓலைகளைச் சுற்றி, தீவட்டிகளாக எரிய விடுகின்றனர். இளந் தென்னங்குருத்துக்களாலும் கட்டு மரத்தை அலங்கரித்துள்ளனர். மாலை நேரத்தில் அதைக் கடலில் விட்டுவிடுகின்றனர். அதன்படி நோய்களையும், நோய்களுக்குக் காரணமான தீய பேய்களையும் தீவிலிருந்தே விரட்டுவதாக அர்த்தமாம். இதற்குப் பின்னர் விருந்துகளும், ஆட்டமும் பாட்டமும் மூன்று, நான்கு நாட்களுக்குத் தொடர்ந்து நடை பெறுகின்றன.

நோயாளியின் நிலை மிகவும் மோசமாகயிருந்தால், அவருக்கு அருகில் அவரது உறவினர்களும், நண்பர்களும் உட்கார்ந்துகொண்டு இரவெல்லாம் பாடிக்கொண்டிருக்கின் றார்கள். அவர் சாவை நெருங்கிக்கொண்டிருந்தால், இளந் தென்னங்குருத்துக்களால் வெள்ளையும், கறுப்பும் ஆன துணி யால் பின்னப்பட்ட படுக்கையில், முகம் மேல் நோக்கியிருக்கப் படுக்கவைக்கின்றார்கள். இளந் தேங்காய்கள் அவர் உடலைச்

சுற்றிலும், அவர் உடல்மீதும் வைக்கப்படுகின்றன. பின்னர் அவர்மீது தேங்காய் எண்ணெயை ஊற்றுகின்றனர். ஓர் ஓரத்தில் இளநீர்க் காய்கள்மீது வைக்கப்பட்டுள்ள கோழி இறகுகளைக் கொளுத்துகின்றனர். இறகுகள் முழுவதும் எரிந்தவுடன், இளநீர்க் காய்களை இரண்டாகப் பிளக்கின்றனர். பின்னர் நோயாளியைத் தூக்கி, வேறு இடத்திற்கு அப்புறப்படுத்துகின்றனர். நோயாளி படுத்திருந்த தென்னை ஓலைப் படுக்கையையும், இளநீர்க் காய்களுடன் கடலில் தூக்கியெறிந்துவிடுகின்றனர். அவ்வாறு தூக்கியெறியும்போது எல்லோருமாகச் சேர்ந்து பெருங்குரல் எழுப்பிக் கூச்சலிடுகின்றார்கள். இந்த முறையில் எப்பொழுதாவது ஒருமுறை நோயாளி பிழைத்துக்கொள்வதுமுண்டு. ஆனால் பெரும்பாலும் இறக்கவே செய்கின்றனர்.

கடுமையான விபத்துகளுக்கும், உயிருக்கே ஆபத்து ஏற்படுகின்றநிகழ்ச்சிகளுக்கும் சைத்தான்களே காரணம் என்று கூறப்படுகின்றது. அந்த நிகழ்ச்சிகளில் உயிர் பிழைத்தவர்கள் இலைகளால் கிரீடம் செய்து அவர்களின் தலைகளின்மீது அணிந்துகொள்ளுகின்றனர். பின்னர் ஒரு நாயைப் பிடித்து, அதன் காதை சிறிது வெட்டி, ஒரு பானையில் இரத்தத்தைப் பிடிக்கின்றார்கள். அந்தக் குருதியை இலைக் கிரீடத்தின்மீது தெளித்து, அதைக் கடலில் தூக்கி யெறிந்துவிடுகின்றார்கள். நாயின் குருதி என்றால் பேய்க்கு மிகவும் விருப்பம்; இலைக் கிரீடத்தின்மீது தெளிக்கப்பட்ட இரத்தத்தை விட்டுவிட பேய் விரும்பாது, உயிர் பிழைத்தவர்களின் உடலை விட்டுவிட்டு கிரீடத்தைத் துரத்திக்கொண்டு, பேய் கடலுக்கு ஓடிவிடும் என்று மக்கள் நம்புகின்றார்கள்.

இந்த ஏமாற்று வித்தைகளான மந்திர, தந்திரங்களுடன் சூனியவாதிகள் அவர்களுடைய அனுபவத்தினாலும், பயிற்சியினாலும் காடுகளில் கிடைக்கும் இலைகளையும், மூலிகைகளையும் வைத்துக்கொண்டு நாட்டு வைத்திய முறையையும் உருவாக்கிக் கொண்டுள்ளனர்.

நோய்களுக்குக் காரணமான பேய்களை விரட்டும் சடங்குகளை நிறைவேற்றும்போதே இந்த நாட்டு மருந்துகளையும் நோயாளிகளுக்குத் தருகின்றனர். இந்த நாட்டு மருந்துகளுக்கு கார் நிகோபாரில்கூட ஓரளவு மதிப்பு இருக்கவே செய்கின்றது. கார் நிகோபாரில் சூனியவாதிகளும் இல்லை. பேய் பிசாசுகளை வணங்குவதை மக்களும் கைவிட்டுவிட்டனர். அப்படியிருந்தும் இம் மருந்துகளுக்கு ஓரளவு பலன் இருக்கின்றது என்றே மக்கள் நம்பு

கின்றனர். கல்வி கற்ற ஒரு சிலரைத் தவிர, மற்ற அனைவரும் முதலில் நாட்டு மருந்துகளையே நாடுகின்றார்கள்.

மருந்து மூலிகைகளையும் இலைகளையும், தண்ணீர், தேங்காய் எண்ணெய், பன்றிக் கொழுப்பு ஆகியவைகளில் கலந்தே தருகின்னர். சில மருந்துகளை உட்கொள்ளுகின்றனர் அல்லது குடிக்கின்றனர். உடலின்மேல் காயம் ஏதாவது இருந்தால் அல்லது வலி இருந்தால் உடல்மீது தேய்க்கின்றார்கள். நோயுற்றிருக்கும் போதும், உடல் நலம் தேறும்போதும் பன்றி இறைச்சி சாப்பிடுவது நலம் என்று சிபார்சு செய்யப்படுகின்றது. குறிப்பாக இளம் பன்றி இறைச்சியை வேகவைத்துச் சாப்பிடவும், நிறைய இளநீர் குடிக்கவும் சொல்லுகின்றார்கள்.

சமீப ஆண்டுகளில், நிகோபார் மக்கள் ஓரளவு நல்ல நவீன வைத்திய வசதிகளைப் பெற்றுவருகின்றனர். ஆரம்பத்தில், பிரிட்டிஷாரின் காலத்தில், கார் நிகோபாரில் உள்ள 'மூஸ்' என்ற கிராமத்தில் ஒரு சிறிய மருந்தகம் திறக்கப்பட்டது. அதில் ரிச்சர்டுசன் பாதிரியார் மருத்துவ உதவியாளராகப் பணி புரிந்தார். இரண்டாவது உலகப் போருக்குச் சில ஆண்டுகளுக்கு முன்னர், அந்த மருந்தகம் மருத்துவ மனையாக மாற்றப்பட்டது. அதை சமயக்குழுவினைச் சார்ந்த வைத்தியர்களின் உதவியால் நடத்திவந்தனர்.

விடுதலைக்குப் பின்னர், இத்தீவுகளின் மக்களுக்கு அதிகமான நவீன வைத்திய வசதிகள் தருவதில் கவனம் செலுத்தப்பட்டது. கார் நிகோபாரில், இப்பொழுது ஆண் டாக்டர் ஒருவரின் பொறுப்பில் ஒரு மருத்துவ மனை இருக்கின்றது. பெண் டாக்டர் ஒருவரும் இருக்கின்றார். 75 நோயாளிகளை மனையில் வைத்துக் கவனிக்கும் வசதிகள் உள்ளன. கார் நிகோபார் தீவின் அளவுக்கும், மக்கட் தொகைக்கும் போதுமான வகையில் இம்மருத்துவ மனையில் சாதனங்கள் இருக்கின்றன. எக்ஸ்ரே எடுப்பதற்கும், சாதாரண அறுவைச் சிகிச்சைக்கும் ஏற்பாடுகள் இருக்கின்றன. எலும்புருக்கி நோய், தொத்து நோய்கள் ஆகியவற்றுக்காகத் தனிப்படுத்தப்பட்ட பிரிவுகளும் இருக்கின்றன. அவை மலாக்கா கிராமத்தில் ஒரு மைலுக்கு அப்பால் கடலோரமாக இருக்கின்றன.

கார் நிகோபாரில், மருத்துவ மனையல்லாது, பிக் லபாடி, அராங் கிராமங்களில் பேறுகால மருத்துவ மனைகளுடன் இணைந்த மருந்தகங்கள் இரண்டு உள்ளன. தூரத்திலுள்ள கிராமங்களிலிருந்து நோயாளிகளை மருத்துவ மனைக்குக் கொண்டுவருவதற்

காக 'ஆம்புலன்ஸ்' ஏற்பாடும் நிகோபார் தீவு மக்களுக்கு செய்யப்பட்டிருக்கின்றது.

மற்ற தீவுகளில் மக்கள் இங்கும் அங்கும் இருப்பதால், எல்லோருக்கும் நவீன வைத்திய வசதி தருவது கடினமாக இருக்கின்றது. எனினும் கமோர்டாவில் தலைமை அலுவலகப் பகுதியில் 20 படுக்கைகள்கொண்ட மருத்துவ மனையொன்று ஆண் டாக்டர் ஒருவரின் பொறுப்பின்கீழ் இயங்கிவருகின்றது. மேலும் கமோர்டாத் தீவில் பில்பிலோ, ககாஞு; கட்சால் தீவில் கபாங்கா, வெஸ்ட் பே கட்சால் ஆகிய இடங்களிலும் மருந்தகங்கள் திறக்கப் பட்டிருக்கின்றன. சோவ்ரா, டெரசா, புலோமிலோ, கொண்டுல் ஆகிய தீவுகளிலும் மருந்தகங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

நல்ல பருவத்தில், டிசம்பர் முதல் ஏப்ரல் மாதம் வரை கடல் அமைதியாக இருக்கும்போது, ஆஸ்திரேலியாவால் நன்கொடையாகத் தரப்பட்ட 'இண்டாஸ்' என்ற வைத்தியக் கப்பல் ஒரு டாக்டருடன் இத்தீவுகளிடையே சென்று, ஒவ்வொரு முக்கிய இடத்திலும் ஒரு வாரம் தங்கிச் செல்லுகின்றது.

நிகோபார் தீவுகளில் உள்ள மருத்துவ மனைகளில் நோயாளிகள் குணமடையாவிட்டால், அரசாங்க செலவிலேயே நோயாளிகள் போர்ட் பிளேருக்கு அனுப்பப்படுகின்றனர். அங்கு ஒரு பெரிய மருத்துவ மனை உள்ளது. நோயாளிகளுக்கு நல்ல வைத்தியக் கவனிப்பும் கிடைக்கின்றது.

இத்தீவுகளில் எல்லோருக்கும் அரசாங்கம் இலவச வைத்திய உதவி தருகின்றது. மனையில் உள்ள நோயாளிகளுக்கு இலவசமாக உணவும் தருகின்றது.

கார் நிகோபாரில் சமுதாய வளர்ச்சித் துறையினர் மேற்கொண்டுள்ள திட்டங்களால் (கிணறுகளில் நச்சகற்றுதல், காரைக் கட்டடக் கிணறுகள் கட்டுதல், குளிக்கும் அறைகளும் கழிவிடங்களும் கட்டுதல், வலிமை தரும் மருந்துகள் தருதல், சத்துள்ள உணவுகளும், வைட்டமின் மாத்திரைகளும் வழங்குதல்) மக்களின் உடல் நலம் தேறியிருக்கின்றன. மேலும் 1964இல் மேக நோய் ஒழிப்புக்கும், கண் வைத்தியத்திற்கும் தீவில் வைத்திய முகாமிடப்பட்டது நல்ல பலனைத் தந்திருக்கின்றது. எனினும், இத்தகைய முயற்சிகளும், முகாம்களும் மிகுந்த அவசியமாக இருப்பதுடன், மற்ற தீவுகளுக்கு இவ்வசதிகள் கிடைக்க ஏற்பாடு செய்வது முக்கியமாகும்.

இத்தீவுகளில் மேற்கொள்ளப்பட்ட மலேரியா, பிலேரியா நோய்களின் ஒழிப்புத்திட்டங்கள் நல்ல பலனைத் தந்திருக்கின்

றன. கார் நிகோபாரில் இந்த நோய்களைக் கண்டு பயப்பட வேண்டிய அவசியமில்லை. இரவில் கொசு வலைக்குள் படுத்துக் கொண்டிருக்கும் வரையில், ஒருவர் இந்த நோய்களுக்கு ஆளாகாமல் காத்துக்கொள்ளலாம். மற்ற தீவுகளில் பணிகள் நிறைய மேற்கொள்ளவேண்டி இருக்கின்றன. குறிப்பாகச் சோவ்ரா விலும், டெரசாவிலும், மலேரியாவாலும், பிலேரியாவாலும் பாதிக்கப்பட்ட நோயாளிகள் நிறைந்திருப்பதைக் காணலாம். யானைக்கால்களுடன் அநேகரைக் காணலாம். இருப்பினும் இத் தீவுகளிலும் மலேரியா, பிலேரியாத் தடுப்பு இயக்கங்கள் முன்னேறி வருகின்றன. அந்நோய்களால் பாதிக்கப்படுவது குறைந்து வருகின்றது.

ஒரு சில ஆண்டுகளிலேயே நிகோபார் மக்கள், குறிப்பாக கார் நிகோபார் மக்கள் நவீன வைத்திய முறைகளை ஏற்றுக்கொண்டிருப்பது அதிசயமாக இருக்கின்றது. அநேகர் நாட்டு மருந்துகளை முதலில் நாடினாலும், அம்மருந்துகள் ஓரிரு நாட்களுக்குள் பலன் தராவிட்டால், அவர்கள் அருகே இருக்கும் மருந்தகத்துக்கோ, மருத்துவ மனைக்கோ செல்லுகின்றார்கள். மேம்பாடடைந்த மக்கள் சிலர் நாட்டு மருந்துகளை முழுமையுமாகக் கைவிட்டுவிட்டனர். அத்தகையோர் இப்பொழுது படிப்படியாக அதிகரித்து வருகின்றனர். பின் தங்கிய சில பகுதிகளில், குறிப்பாக சூனியவாதிகள் சர்வ வல்லமையுடன் விளங்கும் சோவ்ரா, டெரசாத் தீவுகளில் மாத்திரமே நவீன வைத்திய முறைக்கு எதிர்ப்பு இருந்துவருகின்றது. இந்த இடங்களிலெல்லாம் மக்களின் உடல் நலம் மிகவும் கெட்டே இருக்கின்றது. இருப்பினும் கல்வி பரவப்பரவ, இந்த இடங்களில் உள்ள மக்களும் நவீன வைத்திய முறையின் மதிப்பை உணர்ந்து, அவர்களுக்கு கிடைக்கும் நவீன வைத்திய வசதியைப் பயன்படுத்திக்கொள்ள முன்வருவார்கள் என்று நம்பப்படுகின்றது.

உண்மையில், நிகோபார் மக்களுக்கு இருக்கும் இயற்கையை ஒட்டிய இன்ப வாழ்வுக்கும், வறுமையின் கொடுமையே தெரியாமலிருப்பதற்கும், இத்தீவுகளில் நோய் நொடிகளை விரட்ட முனைப்புடன் ஈடுபட்டால், மக்களும் அவர்களுக்குக் கிடைக்கும் நவீன வைத்திய வசதிகளைப் பயன்படுத்திக்கொண்டால், உலகிலேயே வெகு அரிதாக இருக்கும் நல்ல உடல் நலத்தைப் பெறும் பேறுகொண்டவர்களாக அம்மக்கள் இருப்பார்கள்.

அத்தியாயம் 13

# கல்வி

அண்மையில்தான் நிகோபார் மக்களுக்குக் கல்வி வாய்ப்புக் கிடைத்துள்ளது. முன்பும் அவர்களிடம் எந்த கல்வி முறையும் கிடையாது. அன்றாடப் பணிகளுக்குப் பெறவேண்டிய திறமை யனைத்தையும், பெரியவர்கள் ஏதாவது பணிகளில் ஈடுபட்டிருக் கும்போது, சிறுவர்கள் கவனித்தும், அவர்களுக்கு உதவி செய்தும் கற்றுக்கொண்டனர். பிரிட்டிஷார் காலத்திலும் இந்தப் பழங்குடி மக்களுக்குப் போதுமான கல்வியளிப்பதில் கவனம் செலுத்தப்படவில்லை. கார் நிகோபாரில் மூஸ் என்ற கிராமத்தில் ஒரே ஒரு பள்ளிதான் இருந்தது. அதை சமயக் குழுவினர் நடத்திவந்தனர். அதிலும், மாணவர்கள் கொஞ்சம் பேர்களே இருந்தனர்.

நாட்டு விடுதலைக்குப் பின்னர், நிகோபார் மக்களுக்கு கல்வி வசதிகள் அளிக்க அரசாங்கம் பெரிதும் முன்வந்தது. கார் நிகோபாரில் ககானு, மலாக்கா, டமாலூ, கின்யூகா, பிக் லபாடி, மூஸ், டீடாப், சவாய், அராங், கிமூஸ் ஆகிய கிராமங்களில் ஆரம்பப் பள்ளிகள் திறக்கப்பட்டன. அந்தப் பள்ளிகள், தீவில் உள்ள கிராமங்கள் அனைத்துக்கும் போதுமானதாக இருந்தன. பிக் லபாடி கிராமத்தில் உயர்தர செகண்டரி பள்ளியொன்று, ஆண்களுக்கும் பெண்களுக்கும் என்று தனித்தனியான தங்கும் விடுதிகளுடன் அமைக்கப்பட்டது. அதனால் நிகோபார் பகுதியில் உள்ள எல்லாத் தீவுகளிலிருந்துவரும் மாணவர்கள், விடுதிகளில் தங்கி சரியான முறையில் உயர்தரக் கல்விபெறுவது சாத்திய மாயிற்று.

மற்ற தீவுகளில் 'பள்ளிகளின் நிலைமை திருப்திகரமாகயில்லை. சோவ்ராவில் பள்ளியொன்று திறப்பதற்குப் பெரும் எதிர்ப்பு இருந்துவந்தது. கார் நிகோபார்வாசியான அபெட் நெகோ என்ற ஆசிரியரின் சீரிய முயற்சியால், சுமார் 75 மாணவர்களுடன் கூடிய பள்ளியொன்று தோன்றியிருக்கின்றது. அந்தத் தீவில் இருக்கும் பள்ளி செல்லக்கூடிய சிறுவர்களின் தொகையுடன் ஒப்பிட்டால், இது மிகவும் குறைவுதான்.

மற்ற தீவுகளில், மக்கள் அங்கும் இங்கும் வசிப்பதால், பள்ளி செல்லும் வயதில் இருக்கக்கூடிய எல்லாச் சிறுவர்களுக்குமே கல்வி வசதி தருவது என்பது கடினம். பள்ளிகளை ஏராளமாகத் திறந்தாலும், பள்ளிகளுக்கும், மக்கட் தொகைக்கும் உள்ள விகிதாச்சாரம் அதிகமாக இருப்பதால், இத்தீவுகளில் ஒவ்வொரு கிராமத்திலும் பள்ளிகளை திறப்பது என்பது முடியாது. ஏனென்றால், ஒருசில வீடுகள் சேர்ந்து இருந்தாலே அவை ஒரு கிராமமாக இருக்கின்றது. மையமான ஓர் இடத்தில் பள்ளி இருந்தாலும், தூரந் தொலைவிலிருந்து சிறுவர்கள் பள்ளி செல்வதற்கும் போக்குவரத்து சரியாகயில்லை. மக்கள் பின்னடைந்திருப்பதும், கல்வியின் சிறப்பை அவர்கள் உணராதிருப்பதுமே, மேலும் பல பள்ளிகள் திறக்கப்படுவதற்குத் தடையாக யிருக்கின்றன. இந்தியத் தரத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, சிறியதாக யிருந்தாலும், மிக முக்கியமான கிராமங்களில் எல்லாம் பள்ளிகள், மிகத் தாராளமான எண்ணத்திலேயே திறக்கப்படுகின்றன. அப்படியிருந்தும், அந்தக் கிராமத்திலிருக்கும் பள்ளி செல்லும் வயதில் இருக்கக்கூடிய சிறுவர்கள் பள்ளிக்குச் சரியாகச் செல்லுவதில்லை. தினமும் 5 முதல் 10 மாணவர்களே வரும் அளவுக்கு சுருங்கிவிடுகின்றது. அந்தப் பள்ளியில் ஓர் ஆசிரியரை வீணுக்கு வைத்துக்கொண்டு, அதை நடத்துவதில் வெட்டிச் செலவையும் ஏற்க விரும்பாமல் பள்ளி மூடப்படுகின்றது. இந்தக் குறைபாடுகள் இருப்பினும், இத்தீவுகளில் அநேக ஆரம்பப் பள்ளிகள் துவக்கப்பட்டுள்ளன. டெரசாத் தீவில் மின்யூகா, பெங்காலி என்ற இடங்களிலும்; கமோர்டாத் தீவில் ககானு, பில்பிலோ, டாரிங், கமோர்டாத் தலைமை அலுவலகப் பகுதி ஆகிய நான்கு இடங்களிலும்; கட்சால் தீவில் கபாங்கா, ஜான்சன், ஈஸ்ட் பே கட்சால், வெஸ்ட் பே கட்சால் ஆகிய நான்கு இடங்களிலும்; புலோமிலோ, கொண்டுல் என்ற சிறிய தீவுகளில் இரு பள்ளிகளும் இருக்கின்றன.

நான்கோவ்ரித் தீவில் சேம்பின் என்ற இடத்தில் எட்டாவது வகுப்பு வரையுள்ள சீனியர் ஆதாரப் பள்ளியும் நிறுவப்பட்டிருக்கின்றது. தூரந் தொலைவிலிருந்துவரும் மாணவர்களுக்கென ஒரு தங்கும் விடுதியும் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

புத்தகங்கள், தாள்கள் மற்றும் எழுது கருவிகள் முதலியன இலவசமாக வழங்கியும், தங்கும் விடுதியில் உள்ள மாணவர்களுக்கு உதவிப் பணமும், நண்பகல் உணவும், தகுதி அடிப்படை

யில் உபகாரச் சம்பளமும் அரசாங்கம் தந்து, நிகோபார் மக்களுக்கான கல்வி வசதிகளைப் பெருக்கியிருக்கின்றார்கள். அந்தமான், நிகோபார் தீவுகள் முழுவதிலும் கல்வி கற்கச் சம்பளம் கட்ட வேண்டியதில்லை. விளையாட்டு முதலான கலாச்சார ஈடுபாடுகளுக்கும் போதிய கவனம் தரப்பட்டிருக்கின்றன. முன்பு கல்வித் துறையில் மிகவும் பின்னடைந்திருந்த நிகோபார் தீவுகளை, நாட்டின் மற்றைய பாகங்களைப்போல் முன்னேறும் வகையில் ஊக்குவிப்பதற்காக, அரசாங்கம் மக்களுக்குத் தனி வசதிகளைச் செய்து தந்திருக்கின்றது.

அநேக ஆரம்பப் பள்ளிகள் நல்ல காரைக் கட்டடங்களில் இருக்கின்றன. இந்தப் பள்ளிகளில், பள்ளி நேரம் காலை 8·30 மணிக்குத் துவங்கி, சாப்பாட்டு இடைவேளையுடன் மாலை 3·00 மணிக்கு முடிவடைகின்றது. வகுப்புகள் இறைவணக்கத்துடன் துவங்குகின்றன. கணக்கு, நிகோபார் மொழி, இந்தி, சமூக நூல், பொது விஞ்ஞானம், வரைதல் ஆகிய பாடங்கள் கற்பிக்கப் படுகின்றன. வகுப்புகள் முடிந்தவுடன், மாணவர்கள் எழுந்து தேசிய கீதம் பாடுகின்றார்கள். வகுப்புப் பாடங்களுக்குப் பின்னர் தோட்டக்கலை கார் நிகோபாரில் எல்லாப் பள்ளிகளிலும், மற்ற தீவுகளில் சில பள்ளிகளிலும் கற்றுத்தரப்படுகின்றது. அங்கெல்லாம் சிறு தோட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. சில பள்ளிகளுடன் சேர்ந்தாற்போல் விளையாட்டு மைதானங்களும் உள்ளன. விளையாட்டுகளுக்கு உரிய ஊக்கம் தரப்படுகின்றது. கார் நிகோபார் பள்ளிகளில் உடற்பயிற்சிக்காக ஒரு வகுப்பு இருக்கின்றது. அதனால் மாணவர்கள் ஒழுக்கம் பெறுகின்றனர். நல்ல தோற்றமுடன் நடந்துகொள்ளவும் பயிற்சிபெறுகின்றனர்.

ஆரம்பப் பள்ளிகளில் பயிற்சி மொழியாக நிகோபார் மொழியும், இந்தியும் இருக்கின்றன. ஆசிரியர்களாக நிகோபார்வாசிகளும், இந்தியாவிலிருந்து சென்றவர்களும் உள்ளனர். மற்றத் தீவுகளில், இடைஞ்சலான சூழ்நிலைகளில் பள்ளிகளை நடத்துவதில், குறிப்பாகக் கார் நிகோபாரைச் சேர்ந்த ஆசிரியர்கள் முக்கிய பங்காற்றியுள்ளனர்.

அரசாங்கம் நடத்தும் பள்ளிகளல்லாமல், கார் நிகோபாரில் அநேக கிராமங்களிலும், மற்றத் தீவுகளில் ஓரிரு இடங்களிலும், கிருஸ்துவ மதாலயத்தினரின் நாட்டுமொழிப் பள்ளிகளும் இருக்கின்றன. பாதிரியார்களே இப்பள்ளிகளில் ஆசிரியர்களாகக் கல்வி போதிப்பதற்கு என்பதைவிட, மதநூல் போதனைக்காகவே

தங்களை அர்ப்பணித்துக்கொண்டு, ஏதோ பெயரளவிற்குச் சம்பளம் வாங்கிக்கொண்டு பணிபுரிகின்றனர். அரசாங்கமே தீவிலுள்ள எல்லாச் சிறுவர்களுடைய கல்வித் தேவைகளை நிறைவேற்ற முடியுமாதலால், இங்கு உண்மையில் நாட்டுமொழிப் பள்ளிகளுக்கே அவசியமில்லை. எனினும், நம் நாட்டின் மதச் சார்பின்மைக் கொள்கைக்கேற்ப, அரசாங்கப் பள்ளிகளில் மத போதனை தடுக்கப்பட்டிருக்கின்றநிலையில், கிருஸ்துவ சமயத்தினர் சிறுவர்களுக்கு மத போதனையளிக்கவே இந் நாட்டுமொழிப் பள்ளிகளைத் துவக்கியிருக்கின்றனர்.

நாட்டுமொழிப் பள்ளிகளில் கணக்கு, நிகோபார் மொழி, ஆங்கிலம், சமய நூல் ஆகியவை கற்றுத்தரப்படுகின்றன. இறைவணக்கப் பாடல்களும் துதிப் பாடல்களும் போதிக்கப்படுகின்றன. மற்ற அரசாங்கப் பள்ளிகளில் உள்ளதுபோலவே, நாட்டுமொழிப் பள்ளிகளிலும் பள்ளி நேரம் இருந்துவருகின்றது.

தங்கள் மதத்தையொட்டி இப்பள்ளிகள் இருப்பதால், நிகோபார் மக்கள் தங்கள் சிறுவர்களை இந்த நாட்டுமொழிப் பள்ளிகளுக்கே அனுப்புகின்றனர். அதனால் அரசாங்கப் பள்ளிகளைக் காட்டிலும், நாட்டுமொழிப் பள்ளிகளில் அதிகப் பிள்ளைகளைக் காணமுடிகின்றது. உண்மையில், நிகோபார் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை முதலில் நாட்டுமொழிப் பள்ளிகளுக்கே அனுப்புகின்றனர். இப்பள்ளிகளில் இரண்டு வகுப்புகளே இருக்கின்றன. அவைகளில் தேறியவுடன், மேலே படிக்கவைப்பதற்காகப் பெற்றோர்கள் அவர்களை அரசாங்கப் பள்ளிகளுக்கு அனுப்புகின்றனர். அரசாங்கப் பள்ளிகளில் அவர்களைச் சேர்க்கு முன்னர் நுழைவுப் பரீட்சை எழுதவேண்டியிருக்கின்றது. இதில் தேறமுடியாததினால், மீண்டும் ஆரம்பப் பள்ளியில் முதல் அல்லது இரண்டாவது வகுப்பிலேயே சேரவேண்டி நேருவதால், ஓரிரு ஆண்டுகளை இழக்கின்றனர். இதனாலேயே ஒரு வகுப்பிலுள்ள நிகோபார் சிறுவர்களிடையே வயது வேறுபாடு மிகுதியாகவும், இந்தியாவில் அதே நிலையில் உள்ளவர்களுடன் ஒப்பிட்டால் இன்னமும் அதிகமாகவும் இருக்கின்றன.

உயர்தர செகண்டரிக் கட்டத்தில் கல்விபெற எல்லாத் தீவுகளிலிருந்தும் மாணவர்கள் கார் நிகோபாரில் உள்ள உயர்தர செகண்டரிப் பள்ளிக்கே வரவேண்டியிருக்கின்றது. இந்தப் பள்ளிக்கு நல்ல பரந்த கட்டடமும், மேஜை, நாற்காலிகளுடன்

வகுப்புகளும், நல்ல புத்தகசாலையும் இருக்கின்றன. இப்பள்ளிக்காக விளையாட்டு மைதானமும் அமைக்கப்பட்டுவருகின்றது.

உயர்தரப் பள்ளியின் வகுப்பு நேரம் காலை 9 மணி முதல் மாலை 3 மணி வரை ஆகும். இப்பள்ளி டில்லியில் உள்ள கல்வித்துறைக்கான மத்திய குழுவுடன் இணைக்கப்பட்டுள்ளது. இங்கு ஆங்கிலம், இந்தி, கணக்கு, சமூக நூல், நில நூல், வரலாறு, வரைதல், வடமொழி ஆகியவை கற்றுத்தரப்படுகின்றன. இப்பள்ளியின் ஆசிரியர்கள் அனைவரும் இந்தியாவிலிருந்து வந்தவர்கள். ஏனென்றால், இதுவரை இந்தக் கட்டத்திற்கு ஆசிரியராகும் அளவுக்கு நிகோபார்வாசியின் கல்வித்தரம் உயரவில்லை.

உயர்தரக் கல்விக் கட்டத்திலும் விளையாட்டுகளுக்கும், மற்ற கலாச்சார நடவடிக்கைகளுக்கும் சிறப்பான இடம் தரப்படுகின்றது. அவைகளில் நிகோபார் மாணவர்கள் நன்கு தேறிவருகின்றனர்.

எனினும், உயர்தர செகண்டரிக் கல்விக் கட்டத்திலுங்கூட விஞ்ஞானப் பாட போதனைக்கு, அம்மாணவர்களுக்கு வசதிகள் எதுவும் செய்யப்படவில்லை. அவர்கள் இயந்திரங்களைக் கையாளுவதில், இயல்பாகவே நல்ல திறங்கொண்டிருக்கின்றார்கள். ஓரளவு அனுபவத்திறமை அமைந்திருக்கின்றது என்று கூறலாம். அதனால் விஞ்ஞானக் கல்வி அறிவு அவர்களுக்குக் கிடைத்தால், வருங்காலத்தில் தொழில்நுட்பப் பாடங்களைக் கற்கமுடியும். அதில் அவர்கள் சிறப்பாகவும் முன்னேற முடியும்.

நிகோபார் மக்களுக்குத் தரப்பட்ட கல்வித் திட்டங்களினால் ஏற்பட்டுள்ள விளைவுகளை இப்பொழுது மதிப்பிட்டுக் கூறுவது கடினம். பள்ளிகள் பல திறக்கப்பட்டுள்ளதால், அவர்களின் விளையாட்டுகளும், மற்ற கலாச்சார நடவடிக்கைகளும் முன்னேறியுள்ளன என்பதில் சந்தேகமில்லை. அவர்களுக்குக் கிடைத்த அந்த வசதிகளையும் அவர்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டுவருகின்றார்கள். அவைகளில் அவர்கள் திறமை கொண்டவர்களாகவும் உள்ளார்கள். குழந்தைகளின் நடையும் தோற்றமும் இப்பொழுது நன்றாகயிருக்கின்றன. பழக்க வழக்கங்களும் பண்படைந்திருக்கின்றன. இயல்பாகவே நிகோபார் குழந்தைகள் தன்னடக்கம்கொண்டவை. பள்ளிப் படிப்பினால் அவர்கள் மேலும் ஒழுங்குபெற்றுள்ளனர். கல்வியின் காரணமாக மக்களின் போக்கிலும் சிறிது மாற்றம் காணப்படுகின்றது. புதுக் கருத்துக்களுக்கு இப்பொழுது அதிகமாக செவிசாய்க்கின்

றூர்கள். வெளி உலகில் என்ன நடக்கின்றது என்பதை அறிய ஆவலாகயிருக்கின்றனர். குறிப்பாகப் பள்ளிக் கல்வி காரண மாக, நாட்டின் மற்றைய பாகங்களைப்பற்றி மக்கள் ஓரளவு தெரிந்துகொண்டிருக்கின்றூர்கள். இதன் காரணமாக நாட் டைப்பற்றிய ஒற்றுமை உணர்வு அவர்களிடம் பெரிதும் காணப் படுகின்றது.

மறுபுறம், அவர்களுக்குக் கற்றுத் தரப்பட்ட பாடங்களில் அவர்களின் தரம் ஒரு குறிப்பிட்ட அளவுகூட உயரவில்லை. இத் தீவிலேயே கல்வி கற்ற ஒருவர்கூட உயர்தர செகண்டரி பரீட்சை யில் தேறவில்லை. ஆனுல், இந்தியாவில் கல்வி கற்ற நிகோபார் மாணவர்கள் நன்கு முன்னேறியுள்ளனர். இம்மாணவர்களை நிகோபார் பெற்றோர்கள் தங்கள் சொந்தப் பணத்தைக் கொண்டே, இந்தியாவில் கல்விபெற அனுப்பிவைத்துள்ளனர். அவர்கள் பீகார் மாநிலத்திலுள்ள ராஞ்சிக்கே அனுப்பப்படு கின்றனர். அங்குதான், தங்கள் நாட்டைப்போன்ற சூழ்நிலை இருப்பதாகக் கருதுகின்றனர். அம்மாணவர்களில் ஒருவர் பட்ட மும் பெற்று, மதாலய வேலைகளில் இப்பொழுது ஈடுபட்டிருக் கின்றூர்.

கல்வித் துறையில் நிகோபார் மக்கள் அதிகமாக முன்னேற முடியாமைக்குப் பல காரணங்கள் உள்ளன. முதலில் நிகோபார் சிறுவர்களுக்குச் சொல்லித்தரப்படும் அநேக விஷயங்கள் இந்தியாவைப்பற்றியதாகவும் அல்லது வேறு இடங்களைப்பற்றிய தாகவும் இருப்பதால், அவைகளைப்பற்றிய ஒரு தெளிவான கருத்து கிடைப்பதில்லை. இத்தீவுகளில் உள்ள நிலைமையும், இந்தியாவிலிருந்து மிகவும் வேறுபடுகின்றது. இந்தியாவிலுள்ள சாதாரணமான ஒரு சிறுவன் அன்றூட வாழ்வில் கண்டும், கேட்டும் தெரிந்துகொள்ளும் அநேகப் பொருள்களை நிகோபார் மக்கள் புரிந்துகொள்வது கடினமாக இருக்கின்றது. புத்தகங் களில் படிக்கும் அநேக விஷயங்களை சினிமாப்படங்களில் காட்டு வதால், அச் சிறுவர்கள் ஓரளவு புரிந்துகொண்டிருக்கின்றூர்கள் என்பதில் சந்தேகமில்லை. இருப்பினும், அவர்கள் வாழ்விலிருந்து முற்றிலும் வேறுபட்டவைகளைப் படித்துத் தெரிந்துகொள்வது என்பது கடினமாகவுள்ளது.

நிகோபார் மாணவர்களின் சராசரி வயதும் மிக அதிகமா யுள்ளது. அதனுல் கல்வி வசதிகளின் முழுப்பலனையும் பெற முடிவதில்லை. பெற்ருேர்களும் சிறுவர்களை மிகவும் வயதான

பின்னரே பள்ளிகளுக்கு அனுப்புகின்றனர். மேலும் அரசாங்கப் பள்ளிகளுக்குத் தங்கள் சிறுவர்களை அனுப்புவதற்கு முன்னர், ஓரிரு ஆண்டு நாட்டுமொழிப் பள்ளிகளில் பயின்றுவருவதால், அரசாங்கப் பள்ளிகளில் சரியான பாடங்களை அச்சிறுவர்கள் துவங்கும்போது அவர்கள் மிக அதிக வயதுள்ளவர்களாக யிருக்கின்றார்கள். ஆரம்பப் பள்ளிகளில் 10 அல்லது 11 வயதுடைய பையன்களும், 12 அல்லது 13 வயதுடைய சிறுமி களும் முதல் வகுப்பு அல்லது இரண்டாம் வகுப்பில் படிப்பதைச் சாதாரணமாகக் காணலாம். உயர்தர செகண்டரிக் கட்டத்தி லும் 20 முதல் 25 வயது வரை உள்ள மாணவர்களைக் காணலாம். அவர்கள் தங்கள் படிப்பை முடிப்பதற்குள்ளாகவே வயதாகி விடுவதால், அநேகர் மணம் செய்துகொண்டு குடியமர்ந்து விடுகின்றார்கள். அதனால் உயர் வகுப்புகளில் ஒரு சில மாணவர் களே இருக்கின்றனர். கண்ணுங்கருத்துடன் கல்வி மேற்கொள் ளும் மாணவர்கள் அருகிவிடுகின்றனர்.

மேலும், குறிப்பாக நிகோபார் மாணவர்கள் உயர் வகுப்பு களில் பாடங்களில் மனம்வைத்துக் கவனமுடன் பாடுபடவும் முடிவதில்லை. பொதுவாகவே நிகோபார் மக்கள் கடின உழைப்பை விரும்பாதவர்கள்; மெத்தனமாக வாழுகின்றவர்கள். அவர்களுடைய குழந்தைகள் இந்தியாவில் உள்ள சில சிறுவர் களைப்போல் கடினமாக உழைத்துப் படிப்பது என்பது முடியாத காரியமாகும்.

பள்ளிகளுக்குச் சரிவர செல்லாததினாலும், அவர்கள் கல்வியில் முன்னேற முடிவதில்லை. கிராமங்களில் சிறிய அளவிலும் சரி, பெரிய அளவிலும் சரி, பெற்றோர்களின் அன்றாட வேலைகளில் சிறு வர்களும் உதவிபுரியவேண்டியிருக்கின்றது. அதனால் அவர்கள் ஒழுங்காகப் பள்ளிக்குச் செல்ல முடிவதில்லை. மேலும் அவர்க ளுடைய முதியவர்களைப்போலவே கிராமங்களில் நடக்கும்விருந்து களுக்கும், விழாக்களுக்குமே அதிக சிறப்பு தந்து, பள்ளிக்குச் செல்லாமலிருந்துவிடுகின்றனர். கிராம விழாக்களும் அதிகமாக நடப்பதால், நிகோபார் சிறுவர்கள் பள்ளி செல்லாமலிருப்பதும் அதிகமாகிவிடுகின்றது. பள்ளி நேரத்திற்குப் பின்னர் வீட்டு வேலைகளையும் சிறுவர்கள் செய்யவேண்டியிருப்பதால், பள்ளியில் கற்ற பாடங்களை வீட்டில் திரும்பவும் கவனத்துக்குக் கொண்டு வரவோ, படிக்கவோ நேரமிருப்பதில்லை. பெற்றோர்களும் கல்வி யற்றவர்களாகயிருப்பதால், வீட்டில் சிறுவர்கள் பாடங்களைக்

கற்கும்போது, தேவைப்பட்டால் உதவவும் முடியாமலிருக்கின்றது.

எல்லாவற்றுக்கும் மேலாக அம்மாணவர்களின் வருங்கால நலனோ, தொழிலோ அவர்களின் கல்வித் தகுதியைப் பொறுத்ததாகயில்லை என்பதால், அவர்கள் தங்கள் படிப்பில் குறிப்பான ஆர்வம் எதுவும் காட்டுவதில்லை. அவர்களின் ஆதாரத் தேவைகள் அனைத்தையும் கூட்டுக் குடும்பம் கவனித்துக்கொள்ளும் என்ற நம்பிக்கை உணர்வு அவர்களுக்கு இருப்பதுடன், கிராமங்களில் உள்ள சாதாரண வேலைகளைச் செய்தால் போதுமான உணவும் கிடைத்துவிடுகின்றது.

அவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள தனிப்பட்ட வசதிகளைக் கொண்டு பார்க்கும்பொழுது, அரசாங்கத்தின் கல்வித் திட்டங்களினால் நிகோபார் மக்கள் அதிக நலன்களைப் பெறவில்லை என்றே கூறவேண்டும்.

உண்மையில் இப்பொழுதுள்ள கல்வித் திட்டங்களினால், ஒரு வினோதமான நிலைமை தோன்றியுள்ளது. அத்தீவுகளில் கிடைக்கும் ஓரளவு அரசாங்கப் பணிகளை ஏற்கும் கல்வித் தகுதியையும் திறமையையும்கூட நிகோபார் மக்கள் பெறவில்லை. ஒரு சிலரே அவர்களுடைய பள்ளிக் கல்விக்குப் பின்னர் கிராம நிலை ஊழியர்கள், ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள், டிரைவர்கள் என்ற வேலைகளுக்குத் தகுதியாகயிருக்கின்றார்கள். அவர்களில் ஒருவர்கூட எழுத்தர் வேலைக்குத் தகுதிபெற முடியவில்லை. அதே சமயத்தில் பள்ளிகளில் கல்விகற்ற சிறுவர்கள் உடலுழைப்பு போன்ற கடினமான வேலைகளை வெறுக்கின்றனர். அவர்கள் கிராமங்களிலும், தோட்டங்களிலும் வேலை செய்வதைவிட தங்களைச் சிங்காரித்துக் கொண்டு, நன்கு உடை உடுத்திக்கொள்வதையே பெரிதாகக் கருதுகின்றனர். அதனால் வெள்ளை உடை உடுத்து அலுவலகம் சென்று செய்யும் வேலைகளுக்கும் தகுதியில்லாமல், சொந்தத் தேவைகள் கூடியிருந்தும், அதற்கு அதிக உழைப்பே அவசியம் என்பதை உணர்ந்திருந்தும், கிராமத்து வேலைகளுக்கும் அவர்கள் இலாயக்கில்லாதவர்களாகிவிட்டனர். இதன் காரணமாக, இப்பொழுதெல்லாம், தங்கள் குழந்தைகள் கிராமங்களில் உள்ள தங்கள் தோட்டங்களையும், தங்களின் வீட்டு வேலைகளையும், மீன் பிடித்தலையும் கவனிப்பதற்கு முடியாமல், தங்களுக்கு உதவியாகயிருப்பதற்குப் பதிலாக சுமையாகிவிடுவார்களோ என்று

பெற்றோர்கள் பயந்து, அவர்களை உயர்தரக் கல்வி பெறுவதற்கு அனுப்ப மறுக்கத் துவங்கியிருக்கின்றார்கள்.

நிகோபார் தீவுகளில் உள்ள கல்வித் திட்டங்கள்பற்றி உறுதியுடன் இவ்வளவு சீக்கிரமாக விமர்சிக்க முடியாது. விடுதலை காலத்திற்கு முன்னர் அவர்களுக்குக் கல்வியறிவு என்பதே கிடையாது. புதிய கல்வித் திட்டங்களினால் ஏற்பட்ட விளைவுகளைக் காண சில காலம் செல்லவேண்டும். மாறுபடும் நிலையில் ஏற்படும் இன்னல்களாகவே இவை தென்படுகின்றன. இப்பொழுதுள்ள கல்வித் திட்டங்கள் இந்தியாவிலுள்ளதைப் பின்பற்றியுள்ளன. அவைகளை நிகோபார் மக்களின் தேவைகளுக்கு ஏற்ப, அனுபவ வாயிலாகத் திருத்தியமைக்க வேண்டும். குறிப்பாக, நிகோபார் மொழியில் நல்ல பாடப் புத்தகங்கள், கேள்வி, காட்சி சாதனங்களைக்கொண்ட கல்வி முறை முதலானவை இத்தீவுகளில் கல்வித் தரத்தை உயர்த்தவே செய்யும்.

கார் நிகோபாரில் சில கீழ் வகுப்புகளில், படிப்பில் மிகுந்த ஆர்வமும், பள்ளிக்கு ஒழுங்காக வருவதுமான சில சிறந்த மாணவர்களை இப்பொழுது காணும்பொழுது மகிழ்ச்சியளிக்கின்றது. இவர்கள் மேல் வகுப்புகளிலும் சிறந்து விளங்குவார்கள்; அரசாங்கத்தின் உயர் பதவிகளுக்கும் தகுதி பெறுவார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக, வருங்காலத்தில் நிகோபார் மக்களுக்குத் தேவையான தலைமைப் பகுதிகளையும் மேற்கொள்ளுவார்கள் என்ற நம்பிக்கையளிக்கின்றது. மேலும், பள்ளிகளில் துவக்கப்பட்டிருக்கும் தோட்டக்கலைப் பயிற்சி வகுப்புகளில் உடலுழைப்பு வற்புறுத்தப்படுவதால், உழைப்பின் மேன்மையை உணர்ந்து, தாங்கள் கற்ற கல்வி, தங்களின் அன்றாட வாழ்வின் பணிகளுக்குக் குந்தகமாக இராமல், பணிகளைச் செவ்வனே செய்வதற்கு உதவும் என்று கல்வி கற்றவர்கள் கருதுவார்கள் என்றே நம்பப்படுகின்றது. ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னரே துவக்கப்பட்ட இந்தக் கல்வித் திட்டங்கள், நாளாவட்டத்தில், நிகோபார் மக்களுக்கு நலம்பயக்கச் செய்து, அவர்களிடம் தேவையான மனமாற்றத்தையும் ஏற்படுத்தி, வருங்கால வளர்ச்சிக்கும், வளத்துக்கும் அவர்களைத் தகுதிபெறச்செய்யும் என்றே நம்பப்படுகின்றது.

அத்தியாயம் 14

# விளையாட்டுகளும், பொழுதுபோக்குகளும்

நிகோபார் மக்களுக்கு விளையாட்டுகள் என்றாலே மிகுந்த விருப்பம். அவர்கள் வாழ்வின் எல்லா அம்சங்களிலுமே வேடிக்கை, விநோதங்களை விரும்புகின்றனர். அவர்களிடம் விளையாட்டுத் திறமையும் மிகுதியாக உள்ளது. எந்தப் புது விளையாட்டையும் விரைவில் கற்றுக்கொள்கின்றனர். ஆக, நிகோபார் தீவுகளில் இப்பொழுது படகுப் போட்டிகள், பன்றிச் சண்டை, மற்போர், சிலம்பப் போட்டி ஆகிய பரம்பரை விளையாட்டுகளுடன், வெளியிலிருந்து வந்த கால்பந்தாட்டம், கைப்பந்தாட்டம் (Volleyball) முதலானவை இருக்கின்றன.

விளையாட்டுப் போட்டிகளில் படகுப் போட்டியே மிகவும் கவர்ச்சிகரமானதும், முனைப்பானதாகவும் இருக்கின்றது. குறிப்பாகக் கார் நிகோபாரில் மிகவும் சிறப்பாக நடத்தப்படுகின்றது. சோவ்ராவிலும், நான்கோவ்ரியிலும் ஓரளவே சிறப்பிடம் பெறுகின்றது.

அப்போட்டி இரு கிராமங்களுக்கும் இடையே நடைபெறுகின்றது. இதற்கு ஒரு கிராமத்து மக்கள் முன்னதாக ஏற்பாடுகள் செய்து, போட்டிக்கான படகுகளைப் பெற்றிருந்தால், மற்றொரு கிராமத்துடன் போட்டிபோட முனைகின்றார்கள். அந்தக் கிராமத்து முதியவர்கள், மற்ற கிராமத்து முதியவர்களை அணுகி, இரு சாராரும் கலந்து பேசி, கடல் அமைதியாக யிருக்கக்கூடும் என்று எதிர்பார்க்கும் தினம் ஒன்றைக் குறிப்பிடுகின்றார்கள்.

போட்டிக்குக் குறிப்பிட்டுள்ள தினத்திற்கு முந்திய மாலையில், போட்டிக்கு அழைப்பு விடுத்த கிராமத்திற்கு, போட்டியிட வந்த கிராமத்தைச் சேர்ந்த போட்டியாளர்கள் வருகைபுரிகின்றனர். போட்டிக்கான படகுகளைக் கடல் வழியே கொண்டுவருகின்றனர். கடல் கொந்தளித்தோ, நீரோட்டம் வேகமாகவோ இருந்தால், படகுகளைத் தூக்கிவருகின்றனர். ஒவ்வொரு படகையும் 40, 50

பேர்கள் சேர்ந்து மூங்கிலில் கட்டித் தூக்கிவருகின்றூர்கள். கிராமத்தை அடைந்ததும், விருந்தினர்கள் 'எல்பானம்' என்ற தூய சமுதாய வீட்டில் தங்குகின்றனர். கிராமத்தைச் சேர்ந்த பல்வேறு குடும்பத்தினர்கள் விருந்தாளிகளைக் கவனித்துக் கொள்ளுகின்றனர். இரவில் ஒரே விருந்தும், கள் குடிப்பதும், ஆட்டமும்பாட்டமும் நடைபெறுகின்றது.

மறுநாள் படகுப் போட்டி, பிற்பகல் உணவுக்குப் பின்னரே பொதுவாக நடைபெறுகின்றது. போட்டியைக் காண கிராமம் முழுவதும் திரண்டு கடற்கரையில் கூடுகின்றது. மக்கள் அனை வரும் கூச்சலும், கும்மாளமும் இட்டு, விழாக்கோலம்பூண்டிருக் கின்றனர். போட்டிக்கான படகுகளின் இரு பக்கங்களும் முன் புறமும் பளிச்சிட்ட வண்ணங்களில் பலவித கோலங்கள் இடப் பட்டு, எழில்மிகத் தோற்றமளிக்கின்றன. அவைகளை மேலும் இளந் தென்னங்குருத்துக்களாலும் அலங்கரித்துள்ளனர். போட்டி யாளர்களும் வண்ண ஆடைகள் அணிந்து, இளந் தென்னங் குருத்துக்களையும், வாழை இலைகளையும், பூக்களையும்கொண்டு கட்டப்பட்ட மாலைகளையும், கிரீடங்களையும் தரித்துக்கொண் டுள்ளனர்.

கிராமத்தின் ஒவ்வொரு படகும், மற்ற கிராமத்தின் ஒரு படகுடன் போட்டியிடுகின்றது. ஒவ்வொரு படகிலும் சுமார் 40 பேர்கள் இருக்கின்றனர். மொத்தத்தில் ஒவ்வொரு கிராமத் திற்கும் என்று 5 முதல் 9 படகுகள் போட்டியில் இறங்குகின்றன. ஒவ்வொரு கிராமமும் போட்டியில் பங்குகொள்ள அனுப்பும் படகுகளின் எண்ணிக்கை ஒற்றைப்படையிலேயே இருக்கின்றன. அப்பொழுதுதான் முடிவு எடுப்பது சுலபமாகயிருக்கின்றது. ஆரம்பக் கட்டமும், இறுதிக் கட்டமும் அறுதியிடப்பட்டதாக யில்லாவிட்டாலும், கடற்கரையோரமாகவே 150 கஜ தூரம் கடலுக்குள்ளே, அழைப்பு விடுத்த கிராமத்திலிருந்து, அழைப்புப் பெற்ற கிராமம் வரை போட்டி தூரம் இருக்கின்றது, போட்டி ஆரம்பமாகும் முன்னர், போட்டிக்கான படகுகள், கடலில் இரட்டை இரட்டையாக போட்டி துவங்கும் இடத்திலிருந்து ஒன்றன்பின் ஒன்ருக நிறுத்தப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட நேரத்தில் போட்டி ஆரம்பமாகின்றது. முதல் ஜோடிப் படகுகள் விரைந்து முன்னேறுகின்றன. அந்தப் படகுகள் 200 கஜ தூரம் சென்றதும் அடுத்த ஜோடிப் படகுகள் பாய்கின்றன. அவை போன்றே மற்றவையும்.



படம் 15. பாரம்பரியமான ஆபரணங்களுடன்
ஒரு நிகோபார் பெண்



படம் 16. படகுப் போட்டி

படம் 17. கார் நிகோபாரில் படகுப் போட்டி முடிந்தவுடன் படகைக் கரைமேலே எடுத்துச் செல்லுகிறார்கள்





படம் 18. பன்றிச் சண்டை

படம் 19. கம்பு வீச்சுப் போட்டி



படம் 20. கார் நிகோபாரில் பெண்களின் கைப்பந்தாட்டப் போட்டி நடைபெற்றுக்கொண்டிருக்கிறது

படம் 21. நான்கோவ்ரித் தீவுகளில் நடனம்



படகுப் போட்டி ஓர் அதிசயமான காட்சி. அந்தக் காட்சியைக் கண்டவர்கள் யாருமே அதை எளிதில் மறந்துவிட முடியாது. கடற்கரை வெண்மணலில் பளபளக்கும் வண்ண ஆடைகளில் நூற்றுக்கணக்கான மக்கள், அவர்கள் பின்னே பசுமையும், கருமையும் கலந்து, ஒய்யாரமாக ஓங்கி வளர்ந்த தென்னை மரங்கள், முன்னே நீலத்திரைக் கடல்; கடலிலே எழில்மிகுந்த வண்ணப் படகுகள் நீரைக் கிழித்துக்கொண்டு பாய்ந்துசெல்ல, படகுகளிலே உருண்டு திரண்ட இளைஞர்கள் மார்பிலும், முடியிலும் மலர்மாலைகள் அணிந்து, உடலெல்லாம் பொன்னிளம் வெயிலில் மின்ன, கைகளிலே ஆர்வமுடன் துடுப்புக்களை வலிக்க, கரையோரத்து மக்கள் கடல் உற்சாக மிருதியால் குரல் உயர்த்திப் பாட, இறுதிக்கட்டத்தையடையும் படகுகளை நெருக்கியடித்து, படகுகளை வலித்த வீரர்களை வெற்றி தோல்வி என்று பாராமல் அப்படியே ஆரத்தழுவி, ஆர்ப்பரிக்கும் மக்கள் கூட்டத்தின் மகிழ்ச்சிக்குரல் விண்ணையே எதிரொலிக்கும்.

போட்டி முழுவதும் மிகுந்த உற்சாகம் காணப்படினும், தங்கள் படகுகள்பற்றி அவர்கள் பெருமை மிகக்கொண்டாலும், அவர்கள் மிகச் சிறந்த பெருந்தன்மை உணர்வுகொண்டவர்கள். அவர்கள் பெருமையுடன் தங்கள் திறனைக் காண்பிக்கின்றார்கள். அதே சமயத்தில் தங்கள் எதிரிகளைப் பகைவர்கள் என்றுகூட குறிப்பிடாமல் தங்கள் நண்பர்கள், விருந்தாளிகள் என்றே கருதி, அவர்களை வெட்கப்படுவதற்கே இடமில்லாமல் செய்துவிடுகின்றார்கள். அவ்வளவு மென்மை உணர்ச்சிகொண்டவர்களாக இருக்கின்றனர். வெவ்வேறு கிராமத்தைச் சேர்ந்த இரு படகுகள் ஒன்றையொன்று முந்தக் கடினமாகப் போட்டியிட்டு முனைந்த காலத்தில் ஒரு படகு முன்னேறிவிட்டால், அந்தப் படகிலிருப்பவர்கள் மற்ற படகு மீண்டும் நெருங்கிவருவதற்காக வேகத்தைக் குறைத்துக் காத்திருக்கின்றார்கள். அதனால் போட்டியின் விறுவிறுப்புக் குறைவதில்லை. எந்தக் கட்சியும் வெட்கப்பட வேண்டிய அவசியத்திற்குள்ளாவதில்லை.

எந்தக் கிராமத்தைச் சேர்ந்த படகுகள், அதிக எண்ணிக்கையில் முன்னதாக இறுதிக்கட்டக் கிராமத்தை அடைகின்றனவோ, அந்தக் கிராமமே போட்டியில் வெற்றிபெற்றதாகின்றது. இருப்பினும் போட்டியில் வெற்றி, தோல்வி மிக முக்கியமானதல்ல. இரு கிராமங்களையும் சேர்ந்த தலைமகன்களும், முதியவர்களும் இரு கிராமங்களின் படகுகளும் சிறந்தவை, இவைகளை

விட, அவைகள் உயர்ந்தவையல்ல என்றே திரும்பத் திரும்பச் சொல்லுகின்றார்கள்.

இந்த நாட்களில், வெளியிலிருந்து பிரமுகர்கள் கார் நிகோபாருக்கு வருகை தரும்பொழுது, படகுப் போட்டிகள் ஏற்பாடு செய்யப்படுகின்றன. படகுப் போட்டிகள்பற்றிய சில கருத்துக்களுடன் பிரமுகர்கள் வருவதால், போட்டியில் வெற்றிபெறுவதை அம்மக்கள் பெரிதாகக் கருதாமையைக் கண்டு, பிரமுகர்கள் ஏமாற்றமடைந்துவிடக்கூடாது என்று, ஏற்பாடும் செய்யப்படும் போட்டிகளில், போட்டி மனப்பான்மை இருக்கும்படி செய்கின்றார்கள்; இத்தகைய போட்டிகளில் இரண்டுக்கும் மேற்பட்ட கிராமங்கள், சுமார் ஏழு, எட்டுப் படகுகள், ஒவ்வொன்றும் ஒரு கிராமத்தைச் சேர்ந்தவை ஈடுபடுகின்றன. ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து புறப்பட்டு, மற்றொரு குறிப்பிடும் இடத்தை அடைகின்றன. போட்டியின் முடிவில் வெற்றிபெற்றவர்களுக்குப் பிரமுகர்கள் பரிசளிப்பதினால், போட்டியில் உற்சாகம் மிகுதியாகின்றது. எப்போதும்போல் போட்டிகளில் படகுகள் இரட்டை இரட்டையாகப் போவதற்குப் பதிலாக, எல்லாப் படகுகளும் ஒரே சமயத்தில் புறப்படுகின்றன. **1964**இல் கார் நிகோபாருக்கு வருகைதந்த உப ராஷ்டிரபதி டாக்டர் ஜாகீர் ஹுசேன் அளித்த படகு உருவிலான வெள்ளிச் சின்னத்தைச் சில சமயங்களில், படகுப் போட்டியில் வெற்றிபெற்றவர்களுக்கு, மற்ற பரிசுகளுடன் தருகின்றனர்.

இந்த மாற்றத்துடன்கூடிய படகுப் போட்டியையும் நிகோபார் மக்கள் ரசிக்கின்றார்கள். ஆனால், அவர்களே நடத்திக்கொள்ளும் போட்டி எனும்போது, பரம்பரை வழக்கப்படி, வெற்றி தோல்வி பாராமல், போட்டியின் இறுதியில் பரிசு என்றில்லாமல், எல்லோரும் விருந்துண்டு கூடிக் களிக்கவே விரும்புகின்றனர்.

போட்டி முடிந்தவுடன் இரு கிராமத்து மக்களும் கடற்கரையில் ஒன்றுகூடுகின்றார்கள். அங்கே மற்போர் நடைபெறுகின்றது. இந்த மற்போரில், படகுப் போட்டியில் பங்குகொண்டவர்கள் மட்டுமே கலந்துகொள்ளுகின்றனர். ஒவ்வொருவருடைய வயதுக்கும், பருமனுக்கும் தகுந்தபடி ஆட்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு ஒருவருக்கொருவர் என்று மற்போர் நடைபெறுகின்றது. மற்போர் முடிவுற்றதும் விருந்து. இப்பொழுது போட்டிக்கு அழைப்பு விடுத்தவர்கள் விருந்தாடும் முறை வந்துவிடுகின்றது. போட்டியை ஏற்றுக்கொண்ட கிராமத்தினர் விருந்தளித்து

மகிழ்கின்றார்கள். விருந்தினர்களை சமுதாய வீட்டில் தங்க வைத்து, இரவில் விருந்தளித்தும், கள் குடித்தும், ஆடியும் பாடியும் களிக்கின்றனர். அடுத்த நாள் மீண்டும் விருந்தாடி, தங்கள் இடத்தில் மறுபோட்டி நடத்த ஒரு தேதியும் குறிப்பிட்டு அழைப்பு விடுத்த கிராமத்தினர் தங்கள் படகுகளில், கிராமத்தை நோக்கித் திரும்புகின்றனர்.

வெகு தூரத்துக்குக் கடல் அமைதியாக இருக்கும் இடங்களில் இளைஞர்கள் பொம்மைப் படகுகளைக்கொண்டு ஒரு போட்டி நடத்துகின்றனர். அந்த பொம்மைப் படகுகள் மிகக் குறுகிய தாக 5 முதல் 10 அடி நீளமுள்ளவைகளாக இருக்கின்றன. காற்றைத் தாங்கவல்லதும், அகன்றதுமான 'ரஹுக்' என்ற காய்ந்த இலைகளைப் பாய்மரங்களாக அந்தப் படகுகளில் கட்டி விடுகின்றார்கள். இளைஞர்கள் அந்தப் படகுகளைக் கடலில் சிறிது ஆழமான இடம் வரை தூக்கிக்கொண்டு சென்று, அங்கே அவைகளை ஒரேசமயத்தில் விட்டுவிடுகின்றார்கள். காற்று அடிக்கும் வேகத்தில் அவை கரைசேருகின்றன. இப்பொம்மைப் படகுப் போட்டிப் பொது விழாவாகக் கொண்டாடப்படுவ தில்லை. கிராமங்களைச் சேர்ந்தவர்கள் அனைவருமே இதில் பங்கு கொள்வதில்லை. வெவ்வேறு கிராமங்களைச் சேர்ந்த, பரம்பரை யாக நட்புக்கொண்ட இரு குடும்பங்களிலும் உள்ள உறுப்பினர் களே இதில் பங்குபெறுகின்றார்கள். ஓரளவு விருந்தும் நடை பெறுகின்றது.

படகுப் போட்டிக்கு அடுத்தபடியாக நிகோபாா் மக்களின் பரம்பரையான முக்கியமான விளையாட்டுப் போட்டி மற்போர். அது எப்பொழுதும் படகுப் போட்டிக்குப் பின்னரும், சில விழாக்களுக்குப் பின்னரும் நடைபெறுகின்றது. எனினும் படகுப் போட்டிபோல் அது ஓர் ஒழுங்குமுறைப்பட்டதல்ல. சாதாரண நாட்களில்கூட ஒரு கிராமத்தைச் சேர்ந்த சிலர் ஒருவருடன் மற்றொருவர் மற்போர் புரிவதைக் காணலாம். வழக்கமாக இந்த மற்போர் கடற்கரையில் மெத்தென்றிருக்கும், வெண்மணற் பரப்பில், விழுந்தால் காயம் எதுவும் ஏற்படாது என்பதால் நடைபெறுகின்றது. குழந்தைகள் சில சமயம் ஆழமில்லாத கடலோரத்தில் மற்போர் புரிவதையும் காண லாம். சம வயதும், சம எடையும் உள்ளவர்களே எதிர் எதிராக நின்று சமர்புரிகின்றார்கள். எதிரியின் முதுகு தரையில்படும்படி எதிரியை வீழ்த்திவிட்டால், வீழ்த்தியவர் மற்போரில் வென்றவர்

ஆவார். கழுத்தைப் பிடிப்பது, ஒரு கையைப் பிடிப்பது, இடுப்புக்குக் கீழே பிடிப்பது ஆகியவை தப்பாட்டம். ஆனால் ஒருவர் தன் காலை எதிரியின் கால்களிடையே விட்டுக் கவிழச் செய்வது அனுமதிக்கப்படுகின்றது. போட்டியாளர் இருவரும் இறுகக் கட்டித் தழுவுவதுபோல் கைகளை மற்றவர் முதுகைச் சேர்த்துப் பிணைத்துக்கொண்டே மற்போர் துவங்குகின்றது. இருவரும் தங்கள் உடல் வலிமைகொண்டு மற்றவரைக் கீழே வீழ்த்த முயற்சிக்கின்றனர். ஒருவர் கீழே விழுந்துவிட்டாலும், அவர் முதுகு முழுவதும் தரையில்படாவிட்டால், ஆட்டம் இருவருக்கும் வெற்றி தோல்வியின்றி முடிவடைகின்றது. வெற்றியும், தோல்வியும் மூன்று ஆட்டங்களில் நிர்ணயிக்கப்படுகின்றது. எனினும் மக்கள் படகுப் போட்டியைப்போலவே இதிலும் இறுதி முடிவைப் பெரிதாக எண்ணுவதில்லை.

பன்றிச் சண்டை என்ற கருத்தில் பார்த்தால் உண்மையில் அப்படி நடப்பதில்லை. கடிக்க வரும் அந்த மிருகத்தை மனிதன் மேலும் சீற்றத்திற்குள்ளாக்குகின்றான். 'கா-நா-அன்-ஹவுன்' என்ற சாவு விருந்தின்போது மாத்திரமே பன்றிச் சண்டை நடைபெறுகின்றது. ஆனாலும் வெளியிலிருந்து பிரமுகர்கள் வருகை தரும்பொழுது சில சமயங்களில் பன்றிச் சண்டைக்கு ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. சண்டைக்கு முன்தினம் காட்டிலிருந்து மூர்க்கமான பன்றிகளைப் பிடித்துவந்து, கிராமத்தின் மத்தியில் உள்ள திறந்தவெளி ஓரத்தில் இருக்கும் மரக் கூண்டுகளில் அடைத்துவிடுகின்றார்கள். அவைகள் சீற்றமுடன் இருக்கவேண்டுமென்பதற்காக, இரவெல்லாம் அவைகளைப் பட்டினி போடுகின்றனர். அவைகளை மேலும் தூண்டிவிடச் சில சமயம் கள்ளையும் புகட்டுகின்றனர். சண்டை நடக்கும் நாளில் பார்வையாளர் அனைவரும் திறந்தவெளியைச் சுற்றிலும் அமர்ந்துகொள்ளுகின்றார்கள். சண்டைக்காக ஒரு வட்டமான களம் அமைக்கப்படுகின்றது. கூண்டின் கதவுகள் ஒன்றன்பின் ஒன்றாகத் திறக்கப்படுகின்றன. மிகுந்த சீற்றமுடன் இருக்கும் பன்றி களத்துக்குள் ஓடிவருகின்றது. பன்றியின் பின்னங்கால்களில் ஒன்றை ஒரு கயிற்றால் கட்டிக் கூண்டுக்கருகில் நிற்கும் ஒருவர் பிடித்துக்கொள்ளுகின்றார். பன்றியுடன் சண்டையிடுபவர், பன்றியைச் சீண்டிவிடுகின்றார். சீண்டும் மனிதரை நோக்கிப் பன்றி பாய்ந்து, அவரைக் கடிக்க முயலுகின்றது. சண்டையிடுபவர் பன்றியின் காதுகளைப்பிடித்து அதை அப்படியே

நிறுத்திவிட்டால், அவர் சண்டையில் வெற்றிபெற்றவரா கின்றார். எப்பொழுதாவது ஒரு தடவை சண்டையிடுபவரைப் பன்றி பயங்கரமாகக் கடித்துவிடுவதுமுண்டு. ஆனால் சாதாரண மாக அதற்குமேல் அது எதுவும் செய்யமுடியாது. சண்டை யிடுபவரைக்காட்டிலும் பன்றியின் வலிமை ஓங்குமாகில், பன்றியின் காலில் கட்டியிருக்கும் கயிரைப் பின்னுக்குப் பலமாக இழுத்து, அதை அப்படியே நாலைந்துபேர்கள் களத்திலிருந்தே தூக்கிச் சென்றுவிடுகின்றார்கள். இங்கு ஒன்று குறிப்பிட வேண்டும். லத்தீன் நாடுகளில் மாட்டுச் சண்டையில் உத்வேக முடன் சண்டையிடும் மாட்டை மன்னித்து, அதைக் கொல்லுவ தில்லை. ஆனால் இங்கு நடைபெறும் பன்றிச் சண்டையில் நன்கு சீற்றமுடன் போராடும் பன்றியைச் சிறப்புடன் கருதாமல், அதை நிகோபார் மக்கள் கொன்றுவிடுகின்றார்கள். உண்மை யில் மனிதனுக்கும், மிருகத்திற்கும் இடையே நடைபெறும் இந்தப் போட்டி நியாயமற்ற போட்டி. இதனாலேயே வெளி யார், அதுவும் குறிப்பாக மிருகங்களை நேசிப்பவர்களாகயிருந்தால் பன்றிச் சண்டையைக் காண விரும்புவதில்லை. மேலும் இந்த ஒரு சமயத்திலேயே, நிகோபார் மக்கள், தாங்கள் மிகவும் நேசிக்கும் பன்றிகளிடம் மிகவும் குரூரமாக நடந்துகொள்ளு கின்றனர்.

சிலம்ப விளையாட்டும் முன்பெல்லாம் ஒரு முக்கியமான விளையாட்டுப் போட்டியாக இருந்தது. ஆனால் இப்பொழுது அது சாதாரணமான நாட்களில் நடைபெறுவதில்லை. கார் நிகோபாரில் அது நடைபெறுவதேயில்லை. நிகோபார் பகுதியில் உள்ள மற்ற தீவுகளில் எப்பொழுதாவது ஒரு முறை சில விழாக் களின்போதும் அல்லது பிரமுகர்களின் வருகையின்போதும் சிலம்ப விளையாட்டு ஏற்பாடு செய்யப்படுகின்றது. 10 அடி நீளமுள்ள இரு கழிகளைக்கொண்டு விளையாட்டு நடைபெறு கின்றது. முன்பெல்லாம் சிலம்பப் போட்டியில் மிகுந்த உக்கிர முடன் ஒருவருக்கொருவர் வலுவுடன் தாக்கிக்கொண்டும், மற்றவர் தற்காத்தும் சண்டையிட்டனர். சண்டையிடுபவர்கள் பலத்த காயமடைவதுமுண்டு, மரண அடி பெறுவதுமுண்டு. ஆனால் இப்பொழுது விடுதலைக் காலத்திற்குப் பின்னர் முனைப் பான சிலம்பச் சண்டையை அரசாங்கம் தடுத்துவிட்டது. காயம் ஏற்படும் ஆபத்து எதுவும் இல்லை. அதனால் அந்த சிலம்ப விளையாட்டில் விறுவிறுப்பு எதுவும் இல்லை. வெகு சாதாரணமாக

இருக்கின்றது. இந்த விளையாட்டில் இப்பொழுதுள்ள ஒரே கவர்ச்சிகரமான அம்சம், போட்டியாளர்கள் பரம்பரையான கோவணங்களுடன், விழாக் காலங்களில் அணியும் பல வண்ணத் தொப்பிகளை அணிந்துகொண்டு, உருண்டு திரண்ட உடற் கட்டுடன் இளைஞர்களாகத் தோன்றுவதுதான்.

சில சமயம் இளைஞர்கள் கோழிகளை மூர்க்கமாகப் பழக்கிக் கோழிச் சண்டைகளை நடத்துகின்றார்கள். வெவ்வேறு கிராமங்களைச் சேர்ந்த கோழிகளைச் சண்டையிடச் செய்கின்றனர். இந்தச் சண்டைகள் இப்பொழுது அதிகமாக நடப்பதில்லை.

இந்தப் பரம்பரையான போட்டிகளிலும், விளையாட்டுகளிலும் பெண்களும் தீவிரப் பங்குகொள்ளுகின்றனர், ஆனால் போட்டியாளர்களாக அல்ல. நான்கோவ்ரியில் சில சமயம் பெண்களும் படகுப் போட்டிகளில் ஈடுபடுகின்றனர். ஆனால் அது மெத்தனமாக இருக்கின்றது. விறுவிறுப்பு இல்லை. அவர்கள் வழக்கமாகப் பார்வையாளராகப் பங்குகொண்டு, விளையாட்டைத் தொடர்ந்த விருந்துகளை ஏற்பாடு செய்வதில் உதவுகின்றனர். உண்மையில் அவர்கள் அம்மாதிரியான விழா, மற்றும் விருந்து முதலான ஏற்பாடுகளில் மிகவும் அவசியமாகயிருக்கின்றனர். அவர்கள் உதவி மிகவும் தேவைப்படுகின்றது. ஆண்களைப் போலவே அவர்களும் விளையாட்டுகளில் தீவிரப் பங்கெடுத்து மகிழ்கின்றார்கள்.

இந்தப் பரம்பரையான விளையாட்டுப் போட்டிகளில் பந்தயம் என்ற பேச்சேயில்லை. சூதாடுவது என்ற கருத்தே நிகோபார் மக்களுக்குப் புறம்பானது.

இந்தப் பாரம்பரியமான விளையாட்டுகள் என்பதல்லாமல், கார் நிகோபார் மக்கள் வெளியிலிருந்து வந்துள்ள மற்ற விளையாட்டுகளிலும் ஈடுபடுகின்றனர். மற்ற தீவுகளில், நான் கோவ்ரித் தீவில் சேம்பின், கட்சால் தீவில் வெஸ்ட் பே கட்சால், கபாங்கா ஆகிய நன்கு வளர்ச்சியடைந்ததும், மக்கட் தொகை கொண்டதுமான இடங்களில் புதிய விளையாட்டுகள் விளையாடப் படுகின்றன. இவைகளில் பெரிதும் விரும்பப்படுவது கால் பந்தாட்டம். கார் நிகோபாரில் ரிச்சர்டுசன் பாதிரியார் கால் பந்தாட்டத்தைக் கற்றுத்தந்தார். அவர் பர்மாவில் கல்வி கற்கும்போது, கால்பந்தாட்டம் ஆடத் தெரிந்துகொண்டார். இப்பொழுது இத்தீவில் உள்ள ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு கால்பந்தாட்ட மைதானமும், குழுவும் இருக்கின்றது. இப்

பொழுது 'மூஸ்' கிராமத்தில் உள்ள பந்தாட்ட மைதானத்தைச் சுற்றிலும் காரை மதிற்சுவர் எழுப்பப்பட்டிருக்கின்றது. மைதானமும் செம்மையாகக் காப்பாற்றப்படுகின்றது. கிராமங்களிடையே நடைபெறும் கால்பந்தாட்டப் போட்டிகளும், வருடாந்தர விளையாட்டுப் பயிற்சிப் போட்டிகளும் இங்கு நடைபெறுகின்றன.

கார் நிகோபாரில் கால்பந்தாட்டத்தின் தரமும் சீராக உயர்வாகயிருக்கின்றது. நிகோபாரர் மக்கள் தென்னை மரங்கள் ஏறி நன்கு பழக்கப்பட்டவர்கள் என்பதால், அவர்கள் திரட்சியான வலிமையுடைய கால்களைப் பெற்றவர்களாயிருக்கின்றனர். மேலும் அவர்கள் உருண்டு திரண்டவர்களாகவும், உள்ளுரம் மிக்கவர்களாகவும் இருப்பதால், நல்ல கால்பந்தாட்டக்காரர்களாக உள்ளனர். தீவிற்கு வருகைதந்த சிறப்பான கால்பந்தாட்டக் குழுக்கள் எல்லாம் தோல்வியடைந்துள்ளன. 1965இல் சுபராட்டோ நினைவுக் கோப்பைப் போட்டியில், உயர் செகண்டரிப் பள்ளிக் குழு செமிபைனல்ஸ் ஆட்டத்திற்குத் தகுதி பெற்றது. 1966இல் அந்தக் குழு, குறிப்பிடத்தக்க வகையில் வெற்றிகள் பல பெற்று, இறுதிப் போட்டியில் முதன்மை இடத்தை வென்றது.

நிகோபாரர் மக்களுக்கு முறையான பயிற்சி இதுவரை தரப்படவில்லை. சமீபத்தில் அரசாங்கத் திட்டத்தின்படி நிகோபாரர் மக்களுக்கு விளையாட்டுகளில் பயிற்சி தரவென்று ஒரு பயிற்சியாளர் நியமிக்கப்பட்டிருக்கின்றார். அவருடைய பயிற்சியின்கீழ் தீவுகளில் கால்பந்தாட்டத்தின் தரம் உயரும் என்று எதிர்பார்க்கப்படுகின்றது.

பரம்பரையான விளையாட்டுப் போட்டிகளில்போலல்லாமல், கால்பந்தாட்டத்தில் வெற்றி தோல்வி என்பது நிகோபாரர் மக்களுக்கு மிக முக்கியமாகவுள்ளது. அவர்கள் விளையாட்டை மிக நியாயமாகவே ஆடுகின்றார்கள். முரட்டு ஆட்டம் ஆடுவதில்லை. மேலும் பெனல்டி ஆட்டங்கள் மூலம், அவர்கள் கோல்கள் போட்டு வெற்றிபெற விரும்புவதில்லை. அப்படி பெனல்டி ஆட்டம் ஆடநேர்ந்தால், வேண்டுமென்றே பந்தை கோல் பக்கம் தள்ளாமல், வேறு பக்கம் உதைக்கின்றனர்.

கால்பந்தாட்டத்திற்கு அடுத்தபடியாக அவர்கள் வெளியிலிருந்து வந்த ஆட்டங்களில் கற்றுக்கொண்டது வாலிபால். கார் நிகோபாரில் எல்லாக் கிராமங்களிலும் வாலிபால் அரங்குக

ளுள்ளன. இந்த ஆட்டத்திலும் சிறந்த ஆட்டத்திறன்களை அவர்கள் கொண்டுள்ளனர். நல்ல முறையில் பந்தை எதிர்பார்ப்பதும், கால்களைச் சரியாக வைத்துக்கொண்டு தாக்குவதும், குழுவினர் அனைவரும் ஒருங்கிணைந்து ஆடுவதும் சிறப்பாகயிருக்கின்றன. பெண்களும் இந்த ஆட்டத்தை ஆடுகின்றனர். நல்ல உயர்ந்த தரத்தை எட்டியுள்ளனர். பெண்கள் ஆடும் வாலிபால் ஆட்டம் கவர்ச்சிகரமாகவுள்ளதால், அயலார்களும் அதைக் காண வருகின்றார்கள்.

வெளியிருந்து வந்த மற்ற ஆட்டங்கள் ஹாக்கி, கிரிக்கெட், பாட்மிண்டன். ஆனால் அவைகளை அதிகமாக விரும்புவதில்லை. ஏனென்றால் தீவுகளின் ஈரமான தட்பவெப்ப நிலையில் அந்த ஆட்டங்களை ஆடுவது சுலபமாகயில்லை. மேலும் அதற்கு ஏகப்பட்ட கருவிகளும், ஏற்பாடுகளும் வேண்டியிருக்கின்றன.

கடற்கரையில் 'கபாடி' ஆடவும் செய்கிறார்கள். ஆனால் அதில் அவர்கள் குறிப்பிடத்தக்க வகையில் தரத்தை எட்டவில்லை.

ஓட்டம், தாண்டுதல் முதலான உடற்பயிற்சிப் போட்டிகளிலும் அவர்கள் தரம் உயரவில்லை. சிறிது தூர ஓட்டங்களிலும், முட்டுக்கட்டைப் போட்டியிலும் அவர்கள் சிறப்பாகயிருந்தாலும் குறிப்பாக நீண்ட தூர ஓட்டங்களில் மோசமாகவேயிருக்கின்றனர். போட்டியில் கலந்துகொண்டவர்களை, முழு தூரத்தையும் ஓடி முடிக்கும்படித் தொந்தரவு செய்யவேண்டியிருக்கின்றது.

சமுதாய அபிவிருத்தித் துறையினரும், கல்வித் துறையினரும் விளையாட்டுப் போட்டிகளுக்கும், பந்தயங்களுக்கும் ஓரளவு ஏற்பாடு செய்தாலும், அவைகளுக்கு நிகோபார் உடற்பயிற்சிக் கழகமே பெரும்பாலும் ஏற்பாடு செய்கின்றது. தீவில் உள்ள எல்லா கிராமங்களிலும் விளையாட்டுப் போட்டி ஏற்பாடுகளை இக்கழகம் கவனித்துக்கொள்ளுகின்றது. கிராமங்கள் அனைத்திலும் உள்ள கிராம விளையாட்டுச் சங்கங்கள் இத்துடன் இணைந்திருக்கின்றன. இந்தக் கழகம் கால்பந்தாட்டம், வாலிபால், சைகிள் பந்தயம், நீச்சல் போட்டி, ஓட்டப் பந்தயம் முதலான போட்டிகளை ஆண்டு முழுவதும் ஏற்பாடு செய்கின்றது.

தட்பவெப்ப நிலை சிறப்பாக இருக்கும் ஜனவரி மாதத்தில் சைகிள் பந்தயம் நடைபெறுகின்றது. கார் நிகோபார்வாசிகள் ஆண்களும் சரி, பெண்களும் சரி, நன்கு சைகிள்விடுகின்றார்கள். அதனால், இப்போட்டியில் தீவில் எல்லா கிராமங்களைச் சேர்ந்த

வர்களும் நிறையப் பேர்கள் போட்டிபோடுகின்றார்கள். பெண்களின் சைகிள் பந்தயம் IAF விமான ஓட்டப்பாதையில் துவங்கி, வட்டமாகச் செல்லும் சாலையில் 10 கிலோ மீட்டர் தூரத்திற்கு சுக்சுக்கியா கிராமம்வரை செல்கின்றது. ஆண்களின் சைகிள் பந்தயம் சுமார் 16 கிலோ மீட்டர் தூரம் செல்லுவதாக, IAF விமான ஓட்டப்பாதையில் துவங்கி மூஸ் கிராமம் வரை இருக்கின்றது. போக்குவரத்துக் குறைவாக இருக்கும் காலைநேரத்தில் பந்தயம் துவங்குகின்றது. சைகிள் பந்தயங்களை மக்கள் மிகவும் விரும்புகின்றனர். வழிநெடுக ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் பந்தயத்தைக் காண குழுமியிருக்கின்றனர்.

1965 முதல் ஆண்கள் நீச்சல் போட்டியும் துவக்கப்பட்டிருக்கின்றது. இதற்கும் கழகமே மார்ச்—ஏப்ரல் மாதத்தில் நடத்த ஏற்பாடு செய்திருக்கின்றது.

நீச்சல் போட்டி, கடலில், மூஸ் கிராமக் கடற்கரையை அடுத்துள்ள தோணித் துறையில் நடைபெறுகின்றது. போட்டியாளர்கள் சுமார் 200 கஜ தூரம் கரையை நோக்கி நீந்த வேண்டும். நிகோபார் மக்களின் அன்றாட வாழ்வு, கடலுடன் நெருங்கிய தொடர்புகொண்டிருந்த பொழுதிலும், நீந்துவதில் அவர்களின் தரம் மோசமாக இருப்பது அதிசயமாகவேயிருக்கின்றது. மக்கள் நீரில் வெகு நேரம் மிதந்துகொண்டிருக்கின்றார்கள். ஆனால் அவர்கள் அரை மைல்கூட நீந்துவதற்குச் சிரமப்படுகின்றனர். வேகமும் வெகு குறைவாகயிருக்கின்றது. தீவைச் சுற்றிலுமுள்ள நீரில், கடித்தால் மிகவும் வலிதரும் பூச்சிகள் இருப்பதும், ஆழமான இடங்களில் சுறுமீன்கள் இருப்பதுமே, அவர்கள் கடலில் நீண்டதூரம் நீந்திச் செல்லுவதற்குக் குந்தகமாயிருக்கவேண்டும். அதனாலேயே நீந்துவதில் அவர்களின் தரம் உயரவும் இல்லை.

மனையக விளையாட்டுகளான கேரம், டிராட்ஸ் ஆகியவைகளில் அவர்கள் பெருவிருப்பம்கொண்டுள்ளனர். கார் நிகோபாரில் எல்லா கிராமங்களிலும் ஆடப்படுகின்றன. சில பள்ளி மாணவர்கள் டேபிள் டென்னிஸ் ஆட்டமும் ஆடுகின்றார்கள். சீட்டாட்டத்தையும் மிக விரும்புகின்றனர். ஆனால் சாதாரணமான ஆட்டங்களே ஆடத்தெரியும். வயது முதிர்ந்தவர்கள் ஓய்வு நேரத்தில் வீடுகளின் அடியில் சாய்மனைகளில் உட்கார்ந்து கொண்டு சீட்டாடுவதைச் சாதாரணமாகக் காணலாம். கள் குடுவைகளும் சுற்றிவரும்!

இந்த விளையாட்டுகளும், போட்டிகளும் அல்லாமல் வேட்டையாடுவதிலும் அவர்களுக்கு மிகுந்த ஆவல். ஈட்டிகள், அரிவாள்களுடன், 9ஆவது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்ட குறுக்கு வில் ஆகியவைகளே அவர்களின் வேட்டைக்கான ஆயுதங்கள். பன்றிகளைத் துரத்திப்பிடிக்கத் தனிப்பட்ட பயிற்சிதரப்பட்ட வேட்டை நாய்களையும் வேட்டையாடச் செல்லுகையில் வழக்கமாகக் கூட்டிச் செல்லுகின்றனர். பொதுவாக, வறட்சியான காலத்தில் பன்றி வேட்டைக்குச் செல்லுவதில்லை. காடுகளில் போதுமான உணவு கிடைக்காததால், பன்றிகள் அப்பொழுது கொழு கொழுப்புடன் இருப்பதில்லை. அதனால் மழைக் காலங்களில் அவர்கள் சாதாரணமாகப் பன்றி வேட்டைக்குச் செல்வதைக் காணலாம்.

குறுக்கு வில்லையும், அம்பையும்கொண்டு பறவைகளையும், வெளவால்களையும் வேட்டையாடுகின்றனர். ஒரே ஒரு கையில் மாத்திரமே அந்தக் குறுக்கு வில்லை வைத்துக்கொண்டு, அம்பை எய்யவேண்டியிருப்பதால், அதற்கு நல்ல வலிமையும், திறமையும் தேவையாகயிருக்கின்றது. அவர்கள் நன்கு குறிபார்த்து எய்யும் திறனைக்கொண்டிருப்பதால், ஒரு சில மணி நேரங்களில், ஓரிரு சாப்பாட்டுக்குப் போதுமான பறவைகளை அடித்துவிடுகின்றனர்கள். அவர்கள் மணிப்புறு, பச்சைப்புறு ஆகியவைகளையே சுடுகின்றனர். குறிப்பாக மணிப்புறுக்களே அதிகம். மணிப்புறுக்கள் காட்டின் மத்தியில் உயர்ந்த மரங்களில் உச்சிக் கொம்புகளில் இலைகளுடன் இலையென மறைந்திருக்கும். அவைகளைச் சாதாரணமாக நம் கண்களால் காண்பது கடினம். அவைகளின் கூவுதலைக்கொண்டு, காடுகளில் அவைகள் இருப்பதைத் தெரிந்து கொள்ள முடியும். கூவுதலைக் கேட்டவுடன், மணிப்புறுக்களை வேட்டைக்காரர்கள் தேடுகின்றனர்கள். அவர்கள் கண்கள் நன்கு பழக்கப்பட்டிருப்பதால், அந்தப் பறவை இலைகளின் மத்தியில் எவ்வளவுதான் மறைந்திருந்தாலும், அதைக் கண்டுபிடித்து அம்பை எய்து பறவையை வீழ்த்துகின்றனர். அவைகளை அம்பால் எய்து வீழ்த்துவதில் பெரும்பாலும் வெற்றிபெறவே செய்கின்றனர்.

ஒரே மரத்தில் கூட்டங்கூட்டமாக வெளவால்கள் இருப்பதால் அம்பால் வீழ்த்துவது சுலமாகயிருக்கின்றது. அவைகளின் பழுப்பு நிறமும், இலைகளின் பச்சை நிறத்துடன் பொருந்தாமல், அவைகளின் கீச்சுக்குரலும் தனியே ஒலிப்பதால், அவைகளை எளிதில்

கண்டுபிடித்து அம்பு எய்து வீழ்த்திவிடுகின்றார்கள். அதனால் வேட்டையாடித் திரும்பும்பொழுது ஓரிரு வௌவால்களை அநேகமாக கொண்டுவருவது வழக்கமாகிவிட்டது. அவைகளை அவர்கள் ருசி மிகுந்த இறைச்சியாகக் கருதுகின்றனர்.

பையன்கள், படகுப் போட்டித் தவிர, பெரியவர்கள் ஈடுபடும் விளையாட்டுகள் அனைத்தையும் ஆடுகின்றார்கள். அவர்கள் 18 வயது ஆகும்வரை அல்லது ஆண்மையின் முழு வலிமை பெறும் வரை படகுப் போட்டிகளில் கலந்துகொள்வதில்லை. சிறுவர்கள் தங்களுக்குத் தெரிந்த புதுமையான விளையாட்டுகளையும், பொம்மைகளையும் வைத்துக்கொண்டு விளையாடுகின்றார்கள்.

வர்த்தகக் கம்பெனிகளின் கடைகளில் எல்லாவிதமான விளையாட்டுப் பொம்மைகளும் கருவிகளும் ஓரளவு கிடைக்கின்றன. உள்ளூரிலும் சில பொம்மைகளும், கருவிகளும் செய்யப்படுகின்றன. பொம்மைப் படகு தவிர மற்றவை மிக எளியவை. பாக்குக் கொட்டையின் மூடியைக்கொண்டு, பன்றிபோல் செய்து, நான்கு சிறு குச்சிகளைக் கால்களாக வைத்து இணைக்கின்றார்கள். சன்னமான குச்சியைக் கத்தியால் செதுக்கி உருட்டி, அதன்மீது மிருதுவான மரத்தால் செய்த இலையொன்றைத் துளையிட்டுக் குச்சியுடன் இணைத்துக் கையால் சுற்றுகின்றார்கள். அது விசிறி போல் சுழலுகின்றது அல்லது அது காற்றிலேயே சுழலுகின்றது. தரையில் தென்னை ஓலைத் துண்டுகளையும், பண்டானுஸ் இலைகளையும் சுருட்டிப் போட்டுக் காற்றில் உருளவைக்கின்றார்கள். அவைகளை 'இன்ரூல்' (வாகனங்கள்) என்று கூறுகின்றனர். சில சமயம் இறகுகளையும் தென்னை ஓலைத் துண்டுகளுடன் இணைத்து உருளவைக்கின்றனர்.

எனினும் குழந்தைகளுக்கே உரித்தான ஒரு முக்கியமான கவர்ச்சியுள்ள விளையாட்டு, போலிப் படகுப் போட்டியாகும். இரண்டு அல்லது மூன்று அடி நீளமுள்ள உறுதியான பச்சை தென்னந்தண்டை எடுத்துக்கொள்ளுகின்றனர். ஒவ்வொரு தண்டின்மீதும் ஒரு சிறுவன் தன்னுடைய ஒரு காலைத் தரையிலும், மற்றொரு காலைத் தண்டின்மீதும் வைத்துக்கொண்டு உட்கார்ந்துகொள்ளுகின்றான். இரண்டடி நீளமுள்ள கனமான குச்சியை கைகளில் துடுப்புப்போல் பிடித்துக்கொண்டு, தரையில் கால் இருக்கும் மறுபக்கத்தில் அழுத்துகின்றான். குச்சியைத் தரையில் அழுத்தும் வேகத்திலும், மறுபுறத்தில் காலைத் தரையில் உந்துவதாலும் தென்னந்தண்டு சருக்கிக்கொண்டு பாய்கின்

றது. இந்தப் போட்டியில் எந்த சிறுவன் ஒரு குறிப்பிட்ட இடத்தை முதலில் அடைகின்றானோ அவனே வெற்றி பெற்றவன் ஆவான். பொதுவில் மூன்று நான்கு சிறுவர்கள், கிராமத்தில் தங்கள் வீடுகளுக்கு முன்புள்ள திறந்தவெளியில் இந்தப் போட்டியில் ஈடுபடுகின்றனர். சில சமயம் தென்னந் தண்டுகளுக்குப்பதிலாக, இலகுவான மரக்கட்டைகளையும் போலிப் படகுப் போட்டிகளுக்குப் பயன்படுத்துகின்றனர். இந்தப் போலிப் படகுகளை மலர்களால் அலங்கரித்தும், வண்ணத் துணிகளைப் பாய்மரங்களாகக் கட்டியும், சரியான படகுகளைப் போலவே தோற்றமளிக்கும்படிச் செய்கின்றார்கள்.

அரட்டையடிப்பதும், கதை சொல்வதும் அம்மக்களின் மற்றொரு பொழுதுபோக்காகும். அன்றாட வேலைகள் எதுவும் இல்லாதபொழுதோ, வேடிக்கை, விளையாட்டுப் போட்டிகள் எதுவும் இல்லாதபொழுதோ, அவர்கள் வீட்டின்கீழ் அல்லது வெளியே கூடி உட்கார்ந்து அரட்டையடிக்கின்றார்கள். வேடிக் கையாக நகைச்சுவையுடன் பேசுவதும், கதைகள் கூறுவதும் மிகக் கவனமுடன் கேட்கப்படுகின்றது. குழந்தைகள் கதைகளை மிகவும் ரசிக்கின்றனர். இவ்வழியே மக்களின் கட்டுக்கதைகள் பரம்பரை பரம்பரையாகத் தொடருகின்றன.



அத்தியாயம் 15

# கலாச்சார ஈடுபாடுகள்

நிகோபார் மக்களின் வாழ்வில் இசை ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கின்றது. மக்கள் தரும் விருந்துகளின்போதும், அவர்கள் கொண்டாடும் விழாக்களின்போதும் அது ஒரு முக்கியமான அம்சமாக இருப்பதுடன், அவர்களின் அன்றாட வாழ்விலும் இசை இடம்பெற்றிருக்கின்றது. நாகரீகமான மக்களைப்போலல்லாமல், நல்ல உரத்த குரலில், மற்றவர்கள் கேட்கும்படியாகப் பாடுவதற்கும் அவர்கள் கூச்சப்படுவதில்லை. மூன்று, நான்கு மனிதர்கள் கிணற்றில் தண்ணீர் இறைக்கும்பொழுதும், அவர்கள் ஏதாவது சுமையை சுமந்துகொண்டு செல்லும்பொழுதும், தோட்டங்களில் வேலை செய்துகொண்டிருக்கும்பொழுதும், கடலில் மீன் பிடிக்கும் போதும், திடீரென்று ஒருவர் பாட ஆரம்பிப்பார், மற்றவர்கள் அவருடன் சேர்ந்துகொள்வார்கள். எல்லோருமாகச் சேர்ந்து, ஒன்றன்பின் ஒன்றாக பல பாட்டுகளைப் பாடிக்கொண்டே வேலைகளை முடிப்பார்கள்.

நிகோபார் மக்களின் பரம்பரையான இசை, ஒரேமாதிரியாக யிருக்கும். எல்லாப் பாட்டுகளுமே ஒரே மெட்டில் பாடுவதுபோ லிருக்கும். கார் நிகோபாரில், அயலார்களின் செல்வாக்குகள் காரணமாக, அவர்களின் பரம்பரை இசையை இப்பொழுது கேட்பது அரிதாக யிருக்கின்றது. ஆனால், நிகோபார் பகுதியில் உள்ள மற்ற தீவுகளில் இன்னமும் பரம்பரை இசை முக்கிய இடம் பெற்றிருக்கின்றது. சீரான தாளத்திற்கு ஏற்ப இசையில் ஏற்றமும், இறக்கமும் காணப்படுகின்றது. பின்னர் சுருதி மேல் நிலைக்குச் சென்று, திடீரென்று ஆரம்பித்த இடத்திற்கே சரிகின்றது. பின்னர் மீண்டும் மேல் சஞ்சாரமாகச் செல்லு கின்றது. இதேமாதிரி சுர வரிசையிலேயே திரும்பத் திரும்பப் பாடுகின்றார்கள். பாட்டுக்கு முடிவே இல்லாததுபோல் பாடிக் கொண்டேயிருக்கின்றார்கள்.

அநேக மெட்டுக்களில் மேல் சுரத்திற்கும், கீழ் சுரத்திற்கும் அதிக வேறுபாடு இல்லாமையால், பாட்டு சாரமற்றதுபோல்

ஒலிக்கின்றது. உண்மையில் கார் நிகோபாரில்கூட, சில பாட்டுகள் வெறும் செய்யுட்களைப் படிப்பதுபோலிருக்கின்றன. இப்பாட்டுகளை ஒன்றுசேர்ந்து கூட்டாகப் பாடுகையில், ஒரேமாதிரியான சுரங்களையே திரும்பத் திரும்பப் பாடுவது, இந்துப் புரோகிதர்கள் வேத மந்திரங்களை ஓதுவதுபோலிருக்கின்றது.

இசைக்கான தாளமும் தாமதமாக இருக்கின்றது. அவர்களின் ஆய்ந்து ஓய்ந்த வாழ்வைப்போலவே இசையின் தாளக்கட்டு அமைந்திருக்கின்றதுபோலும்! படகுப் போட்டிகளைப்பற்றிய பாட்டுகளில்கூட படகு வலிக்கும்போது இருக்கும் வேகமும், விறுவிறுப்பும் பாட்டுகளில் காணப்படுவதில்லை. நாட்டின் மற்ற பகுதிகளில் பாடப்படும் விறுவிறுப்பான ஓடப் பாட்டுகளைக் கேட்டவர்களுக்கு, இப்பாட்டுகள் மந்தமாயிருக்கின்றன. ஓடப் பாட்டுகளாக அவைகளை ஏற்பதுகூடக் கடினம். தாமதமான தாளக் கட்டுடன் இருப்பதால், அவர்களுடைய பரம்பரையான இசை ஏதோ நீட்டிக்கொண்டே செல்வதுபோலிருக்கின்றது. அதனால் பாட்டு ஒரேமாதிரியாக யிருக்கின்றது என்ற உணர்வு மேலும் அதிகரிக்கின்றது.

எனினும், சில அருமையான இராகங்களும் உள்ளன. அவைகளை மறப்பது என்பது முடியாது. அவைகளில் அயலாரின் செல்வாக்கு இல்லையென்றாலும், பரம்பரை இசையில் வந்தனவா? அல்லது சமீபத்தில் இயற்றப்பட்டனவா? என்று கூறுவது கடினமாக இருக்கின்றது. அந்த இனிமையான இராகங்களில் ஒரு புதுமையான நெளிவு இருக்கின்றது. அந்தக் காலத்தில் பழங்குடி மக்களின் வாழ்வில் இயற்கையையும், இயற்கையின் ஆற்றல்களையும் வியப்புடனும், அச்சத்துடனும் நோக்கி வாழ்ந்துவந்த மனிதனின் மனப்போக்கை உணர்த்துவதாக இருக்கின்றது.

இந்தியாவில் உள்ள சில பழங்குடி மக்களின் இசைபோன்றும் சில இனிமை மிகுந்த இராகங்கள் உள்ளன. இரு வேறு இடங்களிலும் மனிதனின் கற்பனை வளம் ஒரே அமைப்பான இசையை உருவாக்கியிருக்கவும் கூடும்! அல்லது இந்தியாவில் ராஞ்சியிலிருந்துவந்த தொழிலாளர்களின் பாட்டைக் கேட்டதினால் இந்த இன்னிசை பிறந்திருக்கவும் கூடும்! சோட்டா நாக்பூரிலிருந்து வரும் இந்தப் பழங்குடி மக்கள், தீவுகளில் வேலைசெய்கின்றார்கள். இவர்கள் சில சமயம் நிகோபார் மக்கள்முன், தங்கள் நாட்டுப் பாடல்களைப் பாடவும், ஆடவும் செய்கின்றனர்.

சில இராகங்கள் கடலோசையைக் கேட்டது காரணமாகவும் பிறந்திருக்கவேண்டும். கடலலைகள் போன்ற சில இராகங்களில் உள்ள பாட்டுகள், மேல் சுரங்களுக்குச் சென்று, அங்கேயே சஞ்சாரம் செய்து, திடீரென்று கீழ் சுரங்களைத் தடவி, மெதுவாக மீண்டும் உச்சத்தையடைந்து, பெரிய அலைகள் கரைகளில் மோதுவதுபோல் அமைந்திருக்கின்றன.

பாரம்பரியமான இசைக்கேற்ற இசைக் கருவிகள் எதுவுமே இல்லை எனலாம். முன்காலத்தில் யாழ் போன்ற இசைக் கருவியொன்று தென்னந்தண்டில், நாணல் குச்சிகளையும் இணைத்துச் செய்யப்பட்டிருக்கலாம். ஆனால், இப்பொழுது அது காணப்படவில்லை. மற்ற பழங்குடி மக்களிடம் உள்ளதுபோல், நிகோபார் மக்களிடம் தாள வகை மத்தளங்கள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கதாயிருக்கின்றது. அவர்கள் போர்குணம்கொண்ட மக்களல்ல என்ற உண்மையே அதற்குக் காரணமாக யிருக்கலாம். மனத்திட்பத்தை வலுப்படுத்தவும், உணர்ச்சி ஊட்டவுமே மத்தளங்கள் அவசியமாகின்றன.

நிகோபார் மக்களின் இசைக்கு ஒரு வரையறை இருப்பினும், அவர்களுக்கு நல்லதொரு இசைத்திறன் உள்ளது. அவர்களுக்கு நல்ல ஞானமும் இருக்கின்றது. ஒருமுறை ஒரு பாட்டைக் கேட்டால், அதை அப்படியே பாடிவிடுகின்றனர். அவர்கள் நல்ல குரல்வளமும் கொண்டுள்ளனர். அநேகர் மிக நன்முகப் பாடுகின்றனர். பெண்களின் குரல் எடுப்பாக இருந்தாலும், மேல் சுரங்களில் செல்லும்பொழுது கீச்சென்று இருக்கின்றது. ஆனால், ஆண்கள் குரல்கள் பரவலாகப் பலவகைகளில், எல்லாக் கட்டை சுருதிகளிலும் இருப்பதைக் காணலாம். அவர்கள் கூடி சேர்ந்து பாடும்பொழுது குரல்கள் எல்லாம் நன்கு இணைந்து, இனிமையான இசை வெளிப்படுகின்றது.

மனிதன் தனது அன்றுட வேலையில் ஈடுபட்டிருக்கும்பொழுதும், கள் குடுவையைக் கையில் ஏந்தியிருக்கும்பொழுதும் தனியே பாடுகின்முன். விருந்துகளின்போதும், விழாக்களின்போதும் கூட்டமாகச் சேர்ந்து பாடுகின்முர்கள். சாவு விருந்துகள், படகுப் போட்டிகள் போன்ற முக்கியமான நிகழ்ச்சிகளின்போது, அநேகர் கூடிச் சேர்ந்து பாடுகின்றனர். இந்தச் சமயங்களில் மகிழ்ச்சிகரமாக யிருப்பதாலும், அதிகமாகக் கள் உண்ட போதை காரணமாகவும் எழுச்சிமிகப் பாடுகின்றனர். அப்பொழுது

அவர்களின் பாரம்பரிய இசைக்கு இயல்பாகவே இல்லாத தனி விறுவிறுப்பும், ஈர்ப்பும் வந்துவிடுகின்றது.

ஏற்பாடு செய்யப்படும் விழாக்களில் பாடும் பாட்டுகளை எடுத்துக்கொள்ளாமல், எழில்மிகுந்த இயற்கைச் சூழ்நிலையில், மக்களின் பாடும் திறமையுடன் பார்த்தால் நிகோபார் இசைக்கும் ஒரு கவர்ச்சியிருக்கின்றது. பொழுதுசாய்ந்த நேரம், கார் நிகோபாரில் ஒரு கிராமத்தின் சாலைவழியே நடந்துசென்றால் போதும், அதுவே ஒரு மிக அருமையான அனுபவமாக யிருக்கும்! செக்கற்வானத்தே பொன்னிறக் கதிர்கள் மின்னப் பகலவன் மறைகின்றான்; அந்தி ஒளி பரவுகின்றது. கிராமமே புத்துணர்வு பெற்றதுபோல் காட்சி தருகின்றது. இருள் சேரச்சேர, மாலை நிழலும் நீண்டு படருகின்றது. வேலைக்குச் சென்ற ஆண்கள் ஆவலுடன் வீடு திரும்புகின்றார்கள். எங்குமே ஓர் அமைதி. வீடுவீடாக விளக்குகள் மினுக்கத் துவங்குகின்றன. அடுப்புக்கள் மூட்டப்படுகின்றன. வறுபடும் மீன் வாடையுடன், தேங்காய் எண்ணெய்யின் நறுமணமும் கலந்துவீச, கிராமமே உயிர்பெற்றெழுந்துவிட்டதுபோல், எங்கெங்கு கேட்கினும் இன்னிசை மிதந்துவருகின்றது. வீடுகளில் ஓரிரு ஆண்கள் தங்களுக்குள்ளாகவே பாடிக்கொண்டு ஓய்வெடுக்கின்றார்கள். கிணற்றடியில் ஒருவன் கடைசிக் குடம் இழுத்து, அன்றைய பொழுதுடன் திருப்தியடைந்த ஆர்வத்தில் உற்சாகமிகப் பாடுகின்றான். சாலையிலே இரு சிறுவர்கள் கைகோத்துக்கொண்டு இன்ப இராகமொன்றை சீழ்க்கையடித்துச் செல்லுகின்றார்கள். வீடுகளுக்கு முன்னேயுள்ள பரந்தவெளியில் சிறுவர்கள் சிறுசிறு கும்பல்களாகக் கூடிநின்று பறவைகளின் கீச்சுக்குரலில் பாடிக் களித்துக்கொண்டிருக்கின்றார்கள். கிராமத்திலே மக்களின் மகிழ்ச்சி இசை காற்றிலே மிதந்துவர, பின்னேயுள்ள தென்னந்தோப்புக்களில் சில் வண்டுகள் ரீங்காரமிட, கடலலைகள் முழங்கி நிற்க, எல்லாமே வாத்தியக் குழுவொன்றின் பேரிசைபோல் ஒலிக்கின்றது.

நிகோபார் மக்களின் பாட்டுகளும் செழுமையுடன், பொருள் செறிந்திருக்கின்றன. நாட்டுப் பாடல்கள் என்ற பொருளில் பார்த்தால், எந்தப் பாட்டும் பரம்பரை பரம்பரையாக வரவில்லை. பாட்டுகள் எதுவும் முன்பும் எழுதப்படவில்லை. இப்பொழுது எப்பொழுதாவதுதான் எழுதப்படுகின்றன. மக்களுக்கும் ஞாபகசக்தி குறைவு. விரைவில் அவைகளை மறந்து

விடுகின்றனர். சில பாட்டுகள் நல்ல பெருவழக்கில் வந்து விட்டால், மக்களின் மனதில் நீண்ட நாட்கள் நிலைத்து நிற்கின்றன. இருந்தாலும் ஒரு பரம்பரையில் பாடப்பட்டு வந்த பாட்டுகள், அடுத்த பரம்பரையில்கூட நிலைப்பதில்லை. அதே சமயத்தில் மக்களின் பரம்பரையான வாழ்வும், பண்பாடும் தொடர்ந்து நீடிப்பதால், அநேக பாட்டுகளின் உட்கருத்து ஒரே மாதிரியானதாக இருக்கின்றது. அவைகளைப் பரம்பரையான இசையில் பாடும்பொழுது பாட்டுகள் சமீபத்தில் இயற்றப் பட்டிருந்தாலும், ஏதோ பழமையான நாட்டுப் பாடல்களைக் கேட்பதுபோலவே தோன்றுகின்றது.

அவர்கள் இயற்றியுள்ள பாடல்களில் கற்பனைவளம் செறிந் திருப்பதைக் காணலாம். ஒவ்வொரு ஆண்டும் பல்வேறு தலைப்பு களில், பலதரப்பட்டவர்கள் புதிய பல பாட்டுகளை இயற்றி யுள்ளார்கள். நிகோபார் மொழியில் இலக்கியம் எதுவும் இல்லாமையால், அவர்களின் படைப்புத் திறனில் விளைந்தவை களாகப் பாட்டுகள் மாத்திரமே இருக்கின்றன. அதனால், அவை மிகுந்த கவனத்துக்கு உரியவை.

பாட்டுகள் இயற்றுவதை மக்கள் மிக முக்கியமாகக் கருது கின்றனர். தாங்கள்கொண்டிருக்கும் சிறந்த நல்லெண்ணத் தையும், அன்பையும் காண்பிக்கவேண்டிய காலங்களில், ஒரு கிராமத்தைச் சேர்ந்த மக்கள் மற்றொரு கிராமத்தினர் புதிய தொரு படகைப் பெற்றகாலையில், புதிதாக ஒரு பாடலை இயற்றுகின்றார்கள். குறிப்பிட்டதொரு நாளில், எந்தக் கிராமத்து மக்களின் நலனுக்கு பாட்டு இயற்றப் பட்டதோ, அந்தக் கிராமத்து மக்கள் பாட்டு இயற்றியவர்களை அழைத்து விருந்துவைக்கின்றார்கள். சமுதாய வீட்டில் நடை பெறும் விருந்தில் கள்ளும் மிகுதியாகக் குடித்து, உணவும் உண்ட பின்னர், புதிய பாட்டு பாடப்படுகின்றது. கேட்பவர்கள் மகிழ்ச்சி மிகப் போற்றிப் பாராட்டுகின்றனர். மற்ற கிராமங்களிலும் முக்கியமான விருந்துகளின்போது, மக்கள் புதிய பாடல்களைத் தயார் செய்து, மற்றவர்களிடையே பாடுவதற்கு முன்பாகப் பாடிப் பழகிக்கொள்கின்றனர்.

பாடல்களில் எதுகையில்லை. அவைகளின் பொருளும் வெளி யார்களுக்குச் சில சமயம் விளங்குவதில்லை. ஏனென்றால், பழமையான கதைகளையே சுட்டிச் சுட்டிக் குறிப்பிடுகின்றனர். பாடல்களைக் கேட்பவர்கள் எல்லோருக்குமே, அந்தப் பழமை

யான கதைகள் தெரியும் என்று பாட்டுகளை இயற்றியவர்கள் எடுத்துக்கொள்கின்றார்கள். இருப்பினும் பாட்டின் பொருளடக்கம் சுவாரஸ்யமாகவே உள்ளது. இயற்கையின் நிகழ்ச்சிகளைக் கண்டு எளிய சுபாவம்கொண்டுள்ள மக்கள் அதிசயப்பட்டு, ஆச்சரியப்படுவதையும் சில பாட்டுகள் வர்ணிக்கும். அன்றாட வாழ்வில் சிறப்பான இடம்பெற்ற தென்னை மரங்கள் போன்ற பொருள்களைப் பாராட்டியே பெரும்பாலான பாடல்கள் இருக்கின்றன. சில பாடல்கள், நீதிகளை அடிப்படையாகக்கொண்ட கதைகளாக இருக்கும். மனித இனத்திற்கே பொதுவான காதல் பற்றியும், துன்பம்பற்றியும் கூறும் உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் கவிதைகளாக சில உள்ளன. சில காதல் கவிதைகள், காதல் பிரிவால் ஏற்படும் துயர் அனைத்தையும் வடித்துக் காட்டும். சில பாட்டுகள் படகுப் போட்டி, சாவு விருந்து போன்ற விழாத் தினங்களில் படகுகளையும், பன்றிகளையும் பாராட்டும் வகையில் அமைந்திருக்கின்றன. மற்றும் சில ரிச்சர்டுசன் பாதிரியார் போன்றோரையும், அதிகாரிகளையும், குறிப்பாக கூட்டு உதவி ஆணையரைப் பாராட்டியும் இருக்கின்றன. வெளியார்களைப் பற்றிமக்கள் கருதுவதை வெளிப்படுத்தும் பாடல்களும் உள்ளன. முக்கியமான புதிய தலைப்புக்களிலும் பாடல்களை இயற்றுகின்றனர். சிலவற்றை நகைச்சுவையுடன் அரிசித் தட்டுப்பாடு, புதிய கப்பல்களின் வருகை ஆகிய தலைப்புக்களின்மீதும் பாடுகின்றார்கள். நாட்டுப்பற்று மிகுந்த பாடல்களையும் சில சமயம் பாடுகின்றனர். 1965 செப்டம்பர் மாதத்தில், பாகிஸ்தான் ஆக்கிரமிப்பின்போது உணர்ச்சியும், கொந்தளிப்பும் மிக்க நாட்டுப்பற்றுப் பாடல்கள் கார் நிகோபாரில் இயற்றப்பட்டுப் பாடப்பட்டன.

பாடலைப்போலவே ஆடலும் நிகோபார் வாழ்வில் சிறப்பிடம் பெற்றிருக்கின்றது. இருந்தாலும் அன்றாட வாழ்வில், பாடலைப் போல் நெருங்கிய தொடர்புகொண்டிருக்கவில்லை. சாதாரண நாட்களில்கூட, குறிப்பாக பௌர்ணமி தினங்களில் மக்கள் நடனமாடுவது சகஜமாகயிருந்த காலம் இருந்தது. சூனியவாதியாகத் தீட்சைபெறும் ஆரம்ப நாட்களில், அந்த ஆண்டில் ஒவ்வொரு இரவும் தீட்சைபெறுபவர்கள் நடனமாட வேண்டியது கட்டாயமாகயிருந்தது. இருப்பினும் இப்பொழுது அதிக நாகரீகமடைந்துவிட்டதால், சாதாரண நாட்களில் நடனங்கள் இருப்பதில்லை. எனினும் முக்கியமான விருந்துகளிலும், விழாக்களிலும் ஆடல் ஒரு சிறப்பான அம்சமாக உள்ளது.

சூனியவாதிகளின் செல்வாக்குள்ள சோவ்ராவிலும், மற்ற இடங்களிலும், அவர்களின் உத்தரவுப்படி, விருந்துகள் அல்லாத மற்ற நாட்களில் இருட்டிலேயே விளக்குகள் இல்லாமல் நடனம் ஆடவேண்டும். இதனுல் நடனம் ஆடும்பொழுது இளைஞர்களான ஆண்களும், பெண்களும் கட்டியணைத்துக்கொள்ள அதிக வாய்ப்புகள் கிடைக்கின்றன. பாலுறவும் ஏற்பட்டுவிடுகின்றது.

நிகோபார் மக்களின் நடனம் வெகு எளிமையானது. கும்பலாகவே சேர்ந்து ஆடப்படுகின்றது. சேர்ந்து பாடிக்கொண்டே ஆடுவார்கள். ஒருவரை ஒருவர் கைகளை நீட்டிப் பிடித்துக் கொண்டே வட்ட வடிவில் நின்று அல்லது பாதி வட்டத்தில் நின்று ஆடுவார்கள். சில சமயம் கைகளை நீட்டுவதற்குப் பதிலாக வலது கையை மற்றவரின் தோளிலும், இடது கையை இந்தப் புறத்தில் நிற்பவரின் இடுப்பிலும் வைத்துக்கொள்கின்றனர். கார் நிகோபாரில், பரம்பரையான நடனங்களில் ஆண்களும், பெண்களும் சேர்ந்து நடனமாடுவதில்லை. ஆனுல், நிகோபார் பகுதியின் மற்ற தீவுகளில் சேர்ந்தே ஆடுகின்றுர்கள். எனினும் கார் நிகோபாரில் ஆண்களும், பெண்களும் கலந்த பார்வையாளர்கள் முன்னிலையில் பெண்கள் தனியாகவும், ஆண்கள் தனியாகவும் நடனமாடுகின்றனர். சோவ்ராவில், மணமாகாத பெண்களே நடனமாட அனுமதிக்கப்படுகின்றனர்.



கார் நிகோபாரில், நடனம், மூன்று பாகங்களில் நிகழ்த்தப்படுகின்றது. முக்கியமான நடனம் ஆரம்பமாவதற்கு முன்னர்ப் பாட்டு ஆரம்பமாகின்றது. நடனமாடுபவர்கள் தங்கள் இடது கால்களைத் தூக்கிக்கொண்டு, வலது கால்களை வலஞ்சுழியாக, விரைவாக மூன்று அடிகள் எடுத்துவைக்கின்றார்கள். பின்னர் கால்களை மாற்றி, இடஞ்சுழியாக அதேபோன்று மூன்று அடிகள் எடுத்துவைக்கின்றனர். இம்மாதிரி மும்முறை வலஞ்சுழியாகவும் இருமுறை இடஞ்சுழியாகவும் அடிகள் எடுத்துவைத்தவுடன், நடனமாடுபவர்கள் முக்கியமான பாட்டைப் பாடிக்கொண்டு ஆடுகின்றார்கள். முக்கியமான நடனத்தில் அடிகள் எடுத்து வைப்பது மிக மெதுவாக இருக்கின்றன. வட்டங்களில் சுற்றுவதும் வழக்கமாக வலஞ்சுழியாகவுள்ளது. அடிகள் எடுத்து வைப்பதும் வெகு சாதாரணம். ஆங்கில நடனமான 'சம்பா' நடனத்தில் அடிகள் எடுத்துவைப்பது போன்றது. வலது காலை எடுத்து வைக்கும்போது உறுதியாகத் தாளத்தை வற்புறுத்தத் தரையில் ஓங்கி உதைக்கின்றார்கள். ஆனால் இடது காலை இலேசாகத் தட்டிப் பின்னுக்குக் கொண்டுசெல்லுகின்றனர். பாட்டு முடிந்தவுடன், முக்கியமான நடனமும் முடிவடைகின்றது. ஆனால் கலைவதற்கு முன்னர், ஆரம்பத்தில் குறிப்பிட்டதுபோல், அதே வரிசையில், ஒற்றைக் கால்களில் அடிகள் எடுத்து வைப்பதை வேகமுடன் நிகழ்த்துகின்றனர்.

மற்ற தீவுகளில், வேகமாக ஒற்றைக் கால்களில் அடியெடுத்து வைப்பது நடன ஆரம்பத்திலோ அல்லது நடனம் முடியும் தறுவாயிலோ இல்லை. ஒரேபோக்கில் செல்வதுமில்லை. மற்றபடி கார் நிகோபாரில் இருப்பதைப் போன்றே இருக்கின்றது.

நடனங்களில் அடியெடுப்புக்களில் வேறுபட்டாலும், மாறுபாடு அதிகமில்லை. அடிப்படையில் ஒரே மாதிரியாகவே உள்ளன. சாதாரண நாட்களில் நடனம் நிகழ்ந்துகொண்டிருக்கும்பொழுது கூட, யாராவது நினைத்தவுடன் நடனத்தில் கலந்துகொள்வதில்லை. குறிப்பிட்ட பாடலையும், ஆடலையும் சேர்ந்து பயின்று பழக்கப்பட்டவர்களே மற்றவர்கள் முன்னிலையில் ஆடமுடியும்.

பரம்பரையான நடனத்தில் அபிநயமோ அல்லது முகபாவங்களில் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதோ கிடையாது. எனினும் அவர்கள் தலைகளை அசைத்து, உடல்களை ஆட்டி, அதுவும் கள் குடித்திருந்து ஆடினால், அவர்களின் மகிழ்ச்சியை அவை தெரிவிப்பதாகயிருக்கும். வட்டத்தைக் கலைக்காமலே அவர்கள் சில

சமயம் முன்னும் பின்னும் வளைந்து கொடுத்து ஆடுவார்கள். பிறகு வட்டத்தின் மையத்திற்கே எல்லோரும் நெருங்கி வந்து குழுமி நிற்பார்கள். ஆனால், இசையின் அடுத்த தாளத்தில் எல்லோரும் பின்சென்று கைகள் முழுவதையும் நீட்டுவார்கள்.

எளிய இந்த நடனங்களை மக்கள் மிக மகிழ்ச்சியுடன் ஆடுகின்றார்கள். விழாக்கோலம் அவர்கள் மனதில் இருப்பதும், கள் குடித்த பின்னரே ஆடுவதும், எளிதில் மகிழ்ச்சிக் கடலில் மூழ்குவதற்குச் சுலபமாக்கிவிடுகின்றன. சாவு விருந்து போன்ற தினங்களில் ஆண்களும், பெண்களும், சிறுவர்களும் நடனமாடத் துவங்கிவிட்டால், ஆர்வம் பிறந்துவிட்டால் இரவெல்லாம் ஆடிக் களிப்பார்கள். அவர்கள் சளைக்காமல் ஆடுவது குறிப்பிடத் தக்கது.

சமீப காலங்களில் நிகோபார் மக்களின் ஆடல், பாடல்கள், குறிப்பாகக் கார் நிகோபாரில் கிருஸ்துவ மதம், சினிமாப் படம் ஆகிய வெளித்தொடர்புகள் காரணமாகப் பாதிக்கப்பட்டிருக்கின்றன.

கிருஸ்துவ மதம் பரவிய பின்னர், நிகோபார் மொழியில் துதிப்பாடல்கள் பெயர்க்கப்பட்டிருக்கின்றன. அத்துதிப்பாடல்களே இப்பொழுது பெரிதும் பாடப்படுகின்றன. மதாலயப் பள்ளிகளிலும் பல துதிப்பாடல்கள் நிகோபார் மொழியிலும், ஆங்கிலத்திலும் கற்றுத்தரப்படுகின்றன. அவைகளைச் சிறு வயது முதற்கொண்டே பாடிவருகின்றார்கள். அவைகளைக் கருத்துடன் பயின்று மதவிழாக் காலங்களிலும், சமய வழிபாடுகளின்போதும் பாடுவது உயர்ந்த தரத்திலிருக்கின்றது.

கிருஸ்துமஸ் காலத்தில் இரவுகளில் அவர்கள்கூடி மகிழ்ச்சிப் பாடல்களைப் (Carol singing) பாடும் பொழுது தான், நிகோபார் மக்களின் இசைத்திறன் உச்சகட்டத்தை அடைந்திருப்பதைக் காணலாம். இந்த மகிழ்ச்சிப் பாடல்களின் பொழுதுதான், நிகோபார் மக்களின் இயல்பான திறமையும், குரல் வளமும், ஆழ்ந்த சமயப்பற்றுடன், உண்மையான திடநம்பிக்கையோடு கலந்து மிளிருகின்றது. உண்மையில் கார் நிகோபாரில் பாடும் கரோல் பாட்டுகள் எந்தத் தரத்திலும் உயர்ந்தவை. கிருஸ்துமஸ் தினத்திற்குமுன் ஒரு வாரம் வரை கரோல் பாட்டுகள் பாடப்படுகின்றன. இந்த சமயத்தில் வெவ்வேறு கிராமங்களைச் சேர்ந்த கரோல் பாடகர்கள் ஒவ்வொருவராக—சில சமயம் ஒரே கிராமத்தைச் சேர்ந்த வெவ்

வேறு குழுவினைச் சேர்ந்த பாடகர்கள் இரவில் தீவு முழுவதும் வீடு வீடாகக் கிராமம் கிராமமாகச் சென்று பாடுகின்றனர். ஆண்கள், பெண்கள், சிறுவர்கள் எல்லோரும் இந்தப் பாடலில் சேர்ந்துகொள்ளுகின்றனர். வழக்கமாக இந்தப் பாடகர்கள் ஒரு 'டிரக்'கை வாடகைக்கு எடுத்துக்கொண்டு, அதைப் பூக்களாலும் காகிதச் சுருள்களாலும் அலங்கரித்து, பெட்ரோமாக்ஸ் விளக்குகளையும் ஏற்றிவைத்துக்கொண்டு, பெருமிதமோங்க இரவுப் பயணங்களைத் துவக்குகின்றனர். முக்கியமான இடங்களில் நிறுத்திப் பாடுகின்றார்கள். சிற்றுண்டிகளை அருந்துகின்றார்கள். இந்தப் பாட்டுக் குழுவினர் வருகைபற்றி முன்னதாகவே கிராம மக்களுக்குத் தெரிவிக்கப்படுவதில்லை. ஆனால் இந்தக் கிருஸ்துமஸ் காலத்தில், மற்ற கிராமங்களிலிருந்து வரும் கரோல் பாடகர்களை வரவேற்கவும், அவர்களுடன் சேர்ந்து பாடவும் கிராம மக்கள் இரவெல்லாம் விழித்திருந்து காத்திருக்கின்றார்கள். ஆனால் தூக்கத்தைப் பெரிதாக நினைக்கும் அரசாங்க அதிகாரிகளுக்குக் கரோல் பாடகர்கள், கருத்துடன் முன்னதாக, அவர்கள் வீட்டுக்கு வரும் நேரத்தைத் தெரிவித்துவிடுகின்றார்கள். அதிகாரிகள் தூங்க அனுசரணையாக இருக்கும் என்பதுடன் பாடகர்களுக்கு இனிப்புகளும், சிகரெட்டுகளும், தேநீரும், தின்பண்டங்களும் வழங்கத் தயார்படுத்திக்கொள்ளவும் முன்னதாகவே பாடகர்கள் அறிவிப்புக் கொடுத்துவிடுகின்றார்கள். அதிகாரிகளும் கரோல் பாடகர்களின் அருமையான பாட்டுகளைப் பாராட்டிச் சிற்றுண்டிகள் வழங்குகின்றனர்.

கிருஸ்துவ மத இசையினால் மதச் சார்பற்ற இசையும் பாதிக்கப் பட்டிருக்கின்றது. சாதாரணமான சில பாட்டுகள்கூட எழுச்சியற்ற தொனியில் பாடப்படுகின்றன.

ஆனால் சினிமாப் படங்களினால் ஏற்பட்ட மாற்றம் மிகவும் குறிப்பிடத்தக்கதாயிருக்கின்றது. நிகோபார் மக்களின் அநேக புதிய பாட்டுகள் கவர்ச்சி மிகுந்த மெட்டுக்களில் இருக்கின்றன. படப் பாட்டுகளின் செல்வாக்கு இடம் பெற்றிருக்கின்றது என்பதை சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். படங்களில் வரும் நடனங்களைக் கண்டதினால், மக்கள் ஆடும் நடனங்களில் அபிநயங்களும் இடம்பெறத் துவங்கிவிட்டன. அவர்களுக்கு இசை ஞானம் அதிகமாக இருப்பதால், இந்திப் படங்களில் வரும் அநேகப் புகழ்பெற்ற பாட்டுகளைக் கற்றுக்கொண்டுவிட்டனர். அவர்கள் அன்றாடமும் பாடிக்கொண்டிருப்பதைக் கேட்கலாம்

நிகோபார் மொழிப் பாட்டுகளைப்போல் பாடுவதில்லை என்றாலும், இந்திப் பாட்டுகளை நன்றாகவே பாடுகின்றார்கள். 'ஷ' என்ற வார்த்தையை அவர்கள் தவறாக உச்சரிப்பதைக் கேட்பது தான் கடூரமாகயிருக்கின்றது. அவர்களுக்கு வார்த்தைகள் சரியாகத் தெரியாவிட்டால், மேல் சுரங்களுக்குச் செல்லும் பொழுது அப்படியே நிறுத்திவிடுகின்றார்கள். அதனாலும் பாடலின் நயம் கெட்டுவிடுகின்றது.

சில சமயங்களில், கார் நிகோபாரில், ஆங்கிலத்தில் எப்பொழுதும் பிரபல்யமாயிருக்கும் பாட்டுகளான 'Clementine', 'Swanee River ', ' Beautiful Brown Eyes ', ' Good Night Irene' போன்ற பாட்டுகளின் மெட்டுக்களில் அமைத்த நிகோபார் மொழிப் பாடல்கள் கேட்கப்படுகின்றன. இது அதிசயமாக இருக்கின்றது. நிகோபார் மக்கள் பொதுவாக மேற்கத்திய இசையைக் கேட்பதில்லை. இந்த மெட்டுக்களை அவர்கள், 1956 வரை தீவில் இருந்துவந்த ராயல் விமானப் படையினர் வாசித்ததைக் கேட்டுப் பின்பற்றியிருக்கவேண்டும் என்று ஊகிக்கப்படுகின்றது.

படப் பாட்டுகள் அல்லாத சில இந்திப் பாட்டுகளையும், பள்ளிச் சிறுவர்கள் தங்கள் ஆசிரியர்களிடமிருந்து கற்றுக்கொண்டிருக்கின்றார்கள். அவர்கள் சில பஜனைப் பாடல்களையும் தெரிந்து வைத்திருக்கின்றார்கள். அவர்கள் மொழிகளைக் கற்றுக்கொள்வதில் ஆற்றல்கொண்டவர்களாக இருப்பதாலும், இசையிலும் திறன்கொண்டிருப்பதால் தமிழ், மலையாளம், வங்காளம், பஞ்சாபி முதலான மற்ற இந்திய மொழிப் பாட்டுகளையும் சில பள்ளிப் பையன்களிடமிருந்து தெரிந்து வைத்திருக்கின்றார்கள். ஆனால் அந்தப் பாட்டுகளின் பொருள் தெரியாது.

கடந்த இரண்டு ஆண்டுகளாக கார் நிகோபார் மக்களின் ஆடலும், பாடலும் பெரிதும் வளம்பெற்றிருக்கின்றது. பின் தங்கிய வகுப்பினரின் நலனுக்கான திட்டத்தின்கீழ் நிகோபார் மக்களுக்கு ஆடலும், பாடலும் சொல்லித்தர நடன ஆசிரியர்களும், இசை ஆசிரியர்களும் நியமிக்கப்பட்டுள்ளனர். பள்ளிச் சிறுவர்களுக்கு இந்திய நடனங்கள் சில கற்றுத்தரப்படுகின்றன. குறிப்பாகப் பஞ்சாப் மாநிலத்து 'பங்காரா' நடனத்தை பள்ளிச் சிறுவர்கள் வெகு நன்றாக ஆடத் தெரிந்துகொண்டுள்ளார்கள். அதை மிகுந்த ஆர்வமுடன், சரியான அங்க அசைவுகளுடன், இன்ப உணர்ச்சி மேலிட ஆடுகின்றனர். அந்த நடனத்தை அவர்கள் ஆடும்பொழுதெல்லாம் இந்தியர்களிடமிருந்தும், நிகோ

பார் மக்களிடமிருந்தும் பெருத்த பாராட்டுக் கிடைக்கின்றது. பள்ளிச் சிறுமிகள் பரதநாட்டியமும், மணிப்புரியும் கற்றுக் கொண்டிருக்கின்றார்கள். அந்த நடனங்களுக்கே உரித்தான கடினமான முகபாவங்களையும், அபிநயங்களையும் பெற நிறையப் பயிற்சி தேவையென்றாலும், பொதுவில் அவைகளிலும் நல்ல முன்னேற்றம் காணப்படுகின்றது.

நிகோபார் மொழியில், அவர்களின் அன்றாட வாழ்வின் அம்சங் களையே தலைப்புகளாகக்கொண்டு பாட்டுகளை இயற்றுவதும், நடனங்களுக்கேற்ற பாட்டுகளை உருவாக்கிக் கவர்ச்சியான மெட்டுக்களில் அமைப்பதும் மற்றொரு குறிப்பிடத்தக்க சாதனை யாகும். அத்தகைய பாடல்களுக்கு, படப் பாட்டுகளிலிருந்து வேறுபட்ட, ஆனால் காதுக்கினிமையான இசையாகத் தேர்ந் தெடுக்க முனைப்புடன் முயலுகின்றார்கள். சில காலத்திற்குப் பின்னர், இத்தகைய பாடல்களை, தங்கள் இசை மரபில் வந்த தாகவே கருதுவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகின்றது. இத்தகைய புதிய நிகோபார் மொழிப் பாடல்களை மக்கள் மிகவும் விரும்பிக் கேட்கின்றார்கள். தீவுகளின் ஆடல், பாடலின் சிறந்த அம்சங்கள், இந்திய இசையுடனும், நடனத்துடனும் கலந்ததால், ஒரு புது வகையான நிகோபார் இசையும், நடனமும் தோன்றி வருகின்றன என்பதே உண்மையாகும்.

இருப்பினும் தொன்மையான இசையும், நடனமும் மடிந்து விடும் ஆபத்தும் இல்லை. புதிய வகையான நிகோபார் பாட்டு களையும், நடனங்களையும் மக்கள் விரும்பினாலும், அன்றாட வாழ்வில் அந்தப் பாட்டுகளையே அடிக்கடி பாடி வந்தாலும், பரம்பரையான விருந்துகளிலும், விழாக்களிலும் அவர்களுக்கே உரிய பழமையான பாட்டுகளையே பாடுகின்றனர்; நடனங் களையே ஆடுகின்றனர். அரசாங்க அதிகாரிகளும் தொன்மை யான பாட்டுகளுக்கும், நடனங்களுக்கும் எல்லாவித ஊக்கம் தருகின்றனர். குடியரசு தினம், பிரமுகர்கள் வரவேற்பு போன்ற தினங்களில் கலை நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்யும் பொழுது நிகோபார் மக்களின் தொன்மையான பாட்டுகளுக் கும், நடனங்களுக்கும் மிகக் கவனமுடன் இடம் தருகின்றனர். வருங்காலத்தில் ஆடல் பாடல்களில் இரு வகைகளுமே, பழமை யும், புதுமையும் சேர்ந்தே வளரும், மக்களின் பண்பாட்டை வளம்பெறச் செய்யும் என்றே எதிர்பார்க்கப்படுகின்றது.

பாரம்பரியமாக நாடகம் என்று எதுவும் இல்லை. எனினும் சினிமாப் படங்களை பார்ப்பதிலும், பள்ளி விழாக்களில் சிறுவர்கள் நடத்தும் இந்தி, ஆங்கில நாடகங்களைக் காண்பதிலும் தூண்டப்பட்ட சில இளைஞர்கள், கார் நிகோபாரில், நிகோபார் மொழியில் சிறிய நகைச்சுவை நாடகங்களைத் தயாரித்து வருகின்றனர். அவைகள் மிகுந்த நகைச்சுவையுடன் உள்ளன. சூனியவாதிகளையும், கடந்தகால ஆதிக் குடிகளின் பழக்க வழக்கங்களையும் கேலி செய்வதாக இருக்கின்றன. இந்த நாடகங்களிலும், பள்ளி மாணவர்கள் தயாரிக்கும் இந்தி, ஆங்கில நாடகங்களிலும் நிகோபார் மக்களின் சிறப்பான நடிப்புத் திறமை புலனாகின்றது. அவர்களின் முகங்களிலும் உணர்ச்சிகளை நன்கு காட்டுகின்றனர்.

மற்றொருவரைப்போலவே நடித்துக் காட்டும் திறமையும் நிகோபார் மக்களிடம் இருக்கின்றது. உள்ளூர் பிரமுகர்கள் அல்லது படங்களில் வரும் காட்சிகள், மற்றும் குறிப்பாக வைதீகப் பண்டிதர்கள், தாடியுள்ள முல்லாக்கள், கஞ்ச மனதுள்ள வட்டிக் கடைக்காரர்கள் ஆகியோர்களைப்போல் அப்படியே சில இளைஞர்கள் நடித்துக்காட்டுவதைக் காணலாம்.

எனினும், இந்த நாட்களில் சினிமாப் படங்களைப்போல் வேறெதுவும் நிகோபார் மக்களுக்கு கவர்ச்சியாக இருப்பதில்லை. அவைகளே அவர்களுக்குத் தலைசிறந்த பொழுதுபோக்காக இருக்கின்றன. கிராமங்களில் மின்சாரம் இல்லாமையால், தீவுகளில் வெகு சில இடங்களிலேயே மக்கள் படம் பார்க்க முடிகின்றது. ஆனால் கார் நிகோபார் மக்கள், இந்த விஷயத்தில் பேறு பெற்றவர்கள் என்றே கூறவேண்டும். நிர்வாகத் தலைமை அலுவலகப் பகுதி, இந்திய விமானப்படை நிலையம், சுக்சுக்கியா கிராமத்தில் உள்ள வர்த்தகக் கம்பெனியின் தலைமை அலுவலகம் ஆகிய இடங்களில் மின்சாரம் இருப்பதால், மக்கள் அங்கெல்லாம் வாராவாரம் ஏற்பாடு செய்யப்படும் படங்களை பார்க்கின்றனர். பிக் லபாடி கிராமத்தில் சமுதாய நல கேந்திரத்தில் ஒரு சிறு ஜெனரேட்டர் உதவிகொண்டு, ஒவ்வொரு வாரமும் படம் காண்பிக்கப்படுகின்றது. மற்ற சில கிராமங்களிலும் சில சமயங்களில் காட்டப்படுகின்றன.

மற்ற தீவுகளின் மக்களைப் பொறுத்தவரையில் நான்கோவ்ரியில் சேம்பின் கிராமத்தில் உள்ள மக்கள், அங்கு வர்த்தகக் கம்பெனித் தலைமை அலுவலகத்தில் மின்சாரம் இருப்பதால், சில

சமயம் பழைய முழுநீள கதை படங்களைக் காணுகின்றனர். கம்பெனியின் அலுவலக ஊழியர்களுக்காக அப்படங்களைக் கம்பெனி விலைக்கே வாங்கிவிடுகின்றது. இப்பொழுது அரசாங்கம் மற்ற தீவுகளில் படங்கள் காட்டுவதற்கென ஒரு ஜெனரேட்டரையும், புரொஜெக்டர் ஒன்றையும் வாங்கியிருக்கின்றது. இத்தீவுகளில் உள்ள மக்களும் விரைவில் படங்களைப் பார்ப்பார்கள்.

திறந்தவெளியிலேயே படங்கள் காட்டப்படுகின்றன. கார் நிகோபாரில், சமுதாய நலக் கேந்திரத்தில், மழை நாட்களில் காட்டப்படும் படக்காட்சிகள்பற்றி நிகோபார் மக்களுக்கு முன்னதாக அறிவிப்பதில்லை. திரையைக் கட்டுவது தெரிந்தால் போதும், எப்படியோ ஆண்களும், பெண்களும், சிறுவர்களும் நூற்றுக்கணக்கில் சில நிமிடங்களில் கூடிவிடுகின்றனர்.

கார் நிகோபாரில் அரசாங்க நிர்வாகத்திடமிருக்கும் இரு புரொஜெக்டர்களும் டாகுமெண்டரிப் படங்களைக் காண்பிக்கவே முக்கியமாக இருக்கின்றன. அப்படங்களின் வர்ணனையை முன்னதாகவே ‘டேப்’களில் பதிவு செய்து படத்துடன் கேட்கச் செய்கின்றார்கள். மக்கள் மனதில் இப்படங்களின் கருத்துக்கள் நன்கு பதிந்துவிடுவதால் டாகுமெண்டரிப் படங்கள் சிறந்த கல்வி போதனை தருவதாகவும், நாட்டின் மற்ற பாகங்களில் உள்ள தங்கள் சகோதரர்களின் வாழ்வை நிகோபார் மக்கள் புரிந்து கொள்ளவும் பெரிதும் உதவுகின்றது.

கார் நிகோபாரில், படக் காட்சிகளின்போது, டாகுமெண்டரிப் படங்கள் அல்லாமல் முழுநீள கதை படம் ஒன்றும் காண்பிக்கப் படுகின்றது. இந்திய விமானப்படையின் விமானத்தின்மூலம் ஒவ்வொரு வாரமும் முழுநீளகதை படங்கள் இந்தியாவில் பரக்பூரிலிருந்து வரவழைக்கப்படுகின்றன. அரசாங்க அதிகாரிகளும் வர்த்தகக் கம்பெனி ஊழியர்களுமே இதற்குப் பணம் தந்தாலும், நிகோபார் மக்களும் இந்தப் படங்களைப் பார்க்க முடிகின்றது. எல்லாப் படக் காட்சிகளிலும் அவர்களே நிறைந்திருக்கின்றார்கள்.

நிகோபார் மக்கள் எந்த மொழியில் உள்ள எந்தப் படமாயினும் பார்க்கின்றார்கள். ஆனால் அவர்கள் இந்திப் படங்களையே விரும்புகின்றனர். அவர்கள் இந்தி மொழியை புரிந்தும்கொள்ளுகின்றனர். அதே சமயத்தில், இந்திப் படங்களில் பாட்டுகள் அதிகமாக இருப்பதும், அவர்களுக்கு வெகு முக்கியமாக இருக்கின்றது.

சமூகக் கதைகளையும், துன்பவியல் கதைகளையும்கொண்ட படங்கள், அவர்களின் நெஞ்சைத் தொடுவதில்லை. ஆனால் அவர்கள் நகைச்சுவை மிக்க படங்களையே விரும்புகின்றனர். அவர்கள் சிரித்து மகிழவே ஆசைப்படுகின்றனர். சண்டைகள் நிறைந்த படங்களையும் விரும்புவது அதிசயமாகயிருக்கின்றது. ஏனென்றால், அவர்கள் தங்கள் அன்றாட வாழ்வில் வன்மையை எந்த நிலையிலும் ஏற்றுக்கொள்வதில்லை.

நிகோபார் மக்கள் சினிமாப்படம் பார்க்கும்போது, தங்களையே மறந்துவிடுகின்றார்கள். அவர்களே சுவாரஸ்யமான மனிதர்களாகயிருக்கின்றனர். இளைஞர்களும், பெரியவர்களும் படம் பார்க்க மணிக்கணக்கில் உட்கார்ந்துகொள்ளுகின்றனர். மின்சாரம் தடைப்பட்டாலும் சரி, படங்கள் அறுந்துவிட்டாலும் சரி (பழைய பிரதிகள் என்பதால்), புரொஜெக்டரில் ஏதாவது கோளாறு ஏற்பட்டாலும் சரி, அவர்கள் முணுமுணுக்காமல் உட்கார்ந்திருக்கின்றனர். திறந்தவெளியில் படக் காட்சி நடக்கும் பொழுது, திடீரென்று மழை வந்துவிட்டாலுங்கூட அவர்கள் கலைவதில்லை. குறிப்பாக குழந்தைகளுடன் இருக்கும் பெண்கள் உடனே குடைகளை விரித்துக்கொள்ளுகின்றார்கள். ஆனால் மற்றவர்கள், கொஞ்சம் திடமானவர்கள் மழையைப்பற்றிக் கவலைப் படுவதில்லை. மழையிலேயே நனைந்துகொண்டிருக்கின்றனர். படக் காட்சிகளைக் காண வரும் அநேக பெண்கள் தங்கள் இடுப்புகளில் ஏந்திவந்திருக்கும் கைக்குழந்தைகள்கூட, மற்ற இடங்களில்போல் வீரிட்டு அழாமல், நன்றாக நடந்துகொள்ளுகின்றன. படம் பார்ப்பதிலேயே ஒன்றிவிடுவதால், பார்ப்பவர்கள் பேசிக் கொள்வதேயில்லை. ஆனால் படங்கள் அவர்கள் மனதில் ஏற்படுத்தும் மாற்றங்களைத் தாராளமாக வெளிக்காண்பிக்கின்றனர். அந்தப் படம், தீவில் முன்னதாகத் திரையிடப்பட்டிருந்தால்—அவ்வாறு நடப்பது சகஜம்—ஏற்கனவே அதைப் பார்த்திருந்த இளைஞர்கள் பாட்டுகளைத் தாழ்ந்தக் குரலில், பாட்டுகள் படத்தில் வரும்போது சேர்ந்து பாடுவார்கள். படம் பார்ப்பவர்களில் அநேகம் பேர்களுக்கு குறிப்பாகப் பெண்களுக்கு படக்கதைகள் சரியாகப் புரிவதில்லை. படத் தயாரிப்பாளர்கள் எதிர்பார்த்ததற்கு மாறான கருத்தலைகள் மோதுவதைக் காண்பதற்கு மிகவும் வேடிக்கையாகயிருக்கின்றது. இந்திப் படங்களில் வரும் சோகமான துயரக் காட்சிகளைக் கண்டு அவர்கள் சிரிப்பார்கள்—நகைக்கத்தக்க அந்தச் சோகச் சித்திரங்களை கண்டு நகைக்கத்தான்

வேண்டியிருக்கின்றது—நகைச்சுவை நடிகர்கள் சில எக்கச்சக்க மான நிலைமைகளில் இருப்பதாகவரும் இடங்களைக் கண்டவுடன், அவன் மிகப் பரிதாபகரமான நிலையில் இருப்பதாக நினைத்து அவனுக்காக அனுதாபப்படுவார்கள். ஒருவர் நிகோபார்வாசி யுடன் உட்கார்ந்து முதல் தடவை படம் பார்த்தால், படத்தில் வரும் உப்புச்சப்பற்ற சம்பவங்களைக் காண்பதைவிட, பக்கத்தில் இருப்பவரிடம் ஏற்படும் கருத்தலை மோதலைக் காண்பதே சுவாரஸ்யமாக இருக்கும். உண்மையில் அப்பொழுது காணும் காட்சியை வெகு நாட்களுக்கு மறக்கமுடியாது.

அத்தியாயம் 16

# மதம்

மதம் என்ற கருத்திற் பார்த்தால், நிகோபார் மக்களிடம் மதம் என்று முன்பு இல்லை. அங்கு சூனியவாதமே இருந்து வந்தது. மற்ற சில ஆதிக் குடிகளைப்போல், என்றென்றும் அச்சத்திலேயே, இயற்கையின் நிகழ்ச்சிகள் அனைத்தையும் பேய் பிசாசுகளின் ஏவல் என்றே எண்ணி வாழ்ந்துவந்தனர். சூனிய வாதிகளும் மக்களின் மனதில் சைத்தானைப்பற்றிய அச்சத்தை வளர்த்து, சைத்தானைக் கட்டுப்படுத்துவதாகக் கூறி, மக்களை சுரண்டி வந்தார்கள். பேய்களை ஓட்டுவதாக கூறிப் பல்வேறு சடங்குகளைச் செய்து, பன்றிகளையும், கோழிகளையும் பலிகொண்டு வேடிக்கையான நடனங்களை ஆடிவந்தார்கள் சூனியவாதிகள். பேய்களில் இன்பத்தைத் தரும் நல்லனவற்றை இணங்கச் செய்வதும், துன்பத்தையும், துயரையும் தரும் தீயனவற்றை விரட்டுவதுமே, சூனியவாதப் பழக்கவழக்கங்களின் உட்கருத்தாகும்.

கார் நிகோபாரில் பழமையான சூனியவாதப் பழக்கவழக்கங்கள் இப்பொழுது அறவே கைவிடப்பட்டன. ஆனால் மற்ற தீவுகளில் சில இடங்களில் இருக்கவே செய்கின்றன.

கார் நிகோபாரில் ஒரு சில முகமதியர்களைத் தவிர மற்றெல்லோரும் கிருஸ்துவர்கள். முகமதியர்கள் முன்பு மினிகாய், லட்சத் தீவுகளிலிருந்து வந்த முகமதிய வர்த்தகர்களுக்கும், நிகோபார் பெண்களுக்கும் பிறந்தவர்கள். அவர்கள் இரண்டு சதவிகிதம் இருக்கின்றனர். மற்ற கார் நிகோபார் மக்கள் அனைவரும் கிருஸ்துவர்கள். அதாவது, 98 சதவிகிதம்.

மற்ற தீவுகளில் ஒரு சில முகமதியர்களே உள்ளனர். அங்கெல்லாம் மக்களில் பாதிப்பேர் இன்னமும் சூனியவாத நம்பிக்கை கொண்டுள்ளனர். மற்ற பாதிப்பேர் கிருஸ்துவ மதத்திற்குச் சென்றுவிட்டார்கள்.

எல்லாத் தீவுகளையும் எடுத்துக்கொண்டு பார்த்தால், கிருஸ்துவ மதமே ஆதிக்க மதமாக நிகோபார் மக்களில் 80 சதவிகிதத்தினர் பின்பற்றும் மதமாக இருந்துவருகின்றது.

கட்சால் தீவின் தலைவியான ராணி சங்காவைத் தவிர இந்துக்கள் எவரும் இல்லை. அவருடைய ஆதரவைக்கொண்டு இப்பொழுது வெஸ்ட் பே கட்சாலில் ஒரு கோவில் கட்டப் பட்டுள்ளது. எனினும் அவர் இந்து மதத்தில் எவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கை கொண்டுள்ளார் என்று கூறுவது கடினம். ஏனெனில் அவருடைய பிள்ளைகள் கிருஸ்துவர்கள். அவரும் எவ்வளவு தூரம் இந்து மதத்தைப் புரிந்துகொண்டுள்ளார் என்றும் தெரிய வில்லை.

தீவுகளில் கிருஸ்துவ மதம் பரவியதின் சுருக்கம் ஒன்று, முதல் அத்தியாயத்திலேயே கூறப்பட்டுள்ளது. பல ஆண்டு காலமாக இத்தீவுகளில் மேற்கத்திய சமயக்குழுவினர் பணிபுரிந்து வந்தாலும், இந்திய மதக் குழுவினரின் முயற்சிகளின் காரண மாகவே, இத்தீவுகளில் கிருஸ்துவ மதம் பரவத் தொடங்கியது என்பது குறிப்பிடத்தக்கது. இத்தொடக்கத்திற்குக் காரணமா யிருந்தவர்கள் தென்னிந்தியாவிலிருந்து வந்த ஏஜெண்ட் வேதப் பன் சாலமனும், அவரது மனைவியுமாவார்கள். ஆனால் கிருஸ்துவ மதம் இங்குப் பரவ பெரும் பொறுப்பு மேற்கொண்டவர் ரிச்சர்டுசன் பாதிரியார். அவரும் இந்தியர், பின்னர் நிகோபார் குடிமகனாகிவிட்டார்.

மேலும் கிருஸ்துவ மதத்திற்குப் பெரும்பான்மையானவர்கள் மாற்றம் பெற்றது விடுதலைக் காலத்திற்குப் பின்பேயாகும். இரண்டாவது உலகப்போர் காலத்தில் ரிச்சர்டுசன் பாதிரியார் (ஜப்பானியரிடமிருந்து அவர் இருமுறை மயிரிழையில் உயிர் தப்பியவர்) தலைமையில் பணியாற்றிய சில கிருஸ்துவர்களின் தீரமிக்க செயல்கள் காரணமாக, கிருஸ்துவ மதம் மக்களின் மனதில் இடம்பெற்று உயர்வடைந்தது. அதன்மீதுள்ள மதிப் புயர்ந்தது. போர் முடிந்த சில ஆண்டுகளுக்குள்ளாகவே மக்கள் பெருமளவில் மதம் மாறிவிட்டனர்.

மேலும் நிகோபார் மக்களின் பழைய மதமும் எந்த திருப்தியும் அளிப்பதாகயில்லை; ஆன்மீக உணர்வைத் தருவதாகயில்லை. அந்த உண்மையினாலும் கிருஸ்துவ மதம் பரவஏதுவாகயிருந்தது. பேய் களின்மீது அதிக நம்பிக்கை வைத்திருந்ததால், எப்பொழுதுமே அச்சமுடன் வாழ்ந்துவருவதை அநேகர் விரும்பவில்லை. அவர் களால் சகிக்க முடியவில்லை. ஒரு சிலர், சூனியவாதிகளின் வழி முறைகளைப் பேய்களை அழைப்பதாகக் கூறுவதையெல்லாம் நம்பவில்லை. மேலும் வெளி உலகத் தொடர்புகளும் அதிகம்

ஏற்பட்டுவந்த நிலையில் பழமை முறையில் நம்பிக்கை குலைந்து, அவர்களை அறியாமலே ஆன்மசித்தி பெற ஆசைப்பட்டனர். அந்தக் கட்டத்தில் புதிய மதம் பரவுவது சுலபமாயிருந்தது. அந்தச் சமயத்தில் உலகத்தின் மற்ற பெரு மதங்களும், கிருஸ்துவ மதம்போல் இங்கு உறுதிமிக பணியாற்றியிருந்தால், ரிச்சர்டுசன் பாதிரியார் போன்றொருவர் தளரா ஆர்வமுடன் மதம் பரவ முயன்றிருந்தால், இத்தீவுகளில் அம்மதமும் நிலைக்களன் பெற்றிருக்கும்.

கிருஸ்துவ மதமும் எல்லா இடங்களிலும் சுலபமாகப் பரவி விடவில்லை. சூனியவாதிகளின் செல்வாக்கு மிகுந்திருந்த சோவ்ராவில், அந்தக் கோட்டைக்குள் கிருஸ்துவ மதம் நுழைவதற்கு வெகுவான எதிர்ப்பு இருக்கவே செய்தது. தீவின் மக்கள் இரு பிரிவுகளாகப் பிளவுபட்டு நின்றார்கள். கிருஸ்துவ மதத்தையும், புதிய மாற்றங்களையும், வளர்ச்சிப் பணிகளையும் ஆதரித்த தீவின் முதற் தலைமகன், ஒரு பிரிவின் தலைவரானார். சூனியவாதிகள், மனக்குறை கொண்ட முன்னாள் கிராமத் தலைமகன்கள், பழைய சூனியவாதத்தில் நம்பிக்கை கொண்டிருந்ததுடன், புதிய மாற்றங்களையும், வளர்ச்சிப் பணிகளையும் எதிர்த்து மறு பிரிவில் சேர்ந்துகொண்டனர். முந்திய பிரிவு மெதுவாக வலிமைபெற்றுவரினும், இன்னமும் எதிர்ப்பு இருக்கவே செய்கின்றது. இரு பிரிவுகளிடையே ஓரளவு மோதல் இருந்துகொண்டேயுள்ளது.

கார் நிகோபாரில் கிருஸ்துவ மதம் இப்பொழுது நிலைபெற்று விட்டதால், சமயக்குழுவினரின் நடவடிக்கைகள் இப்பொழுது மற்ற தீவுகளுக்குப் பரவியுள்ளன. ரிச்சர்டுசன் பாதிரியார் வழிகாட்டத் தங்களையே அர்ப்பணித்துக்கொண்டுள்ள கார் நிகோபார் இளைஞர்கள், சமயத்துறைப் பணிகளில் ஈடுபட்டுள்ளனர். கார் நிகோபாரிலேயே சிறுவயதிலிருந்தே கல்வி கற்று, மதபோதனையும் பெற்ற மற்ற தீவுகளைச் சேர்ந்த அறிவு மிக்க இளைஞர்கள் சிலரும் இப்பணிகளில் ஈடுபட்டிருக்கின்றார்கள். இவர்களுடைய முயற்சிகளின் காரணமாக நிகோபார் பகுதியைச் சேர்ந்த மற்ற தீவுகளிலும் குறிப்பாக நான்கோவ்ரி, கமோர்டா, கட்சால், சோவ்ரா ஆகிய தீவுகளிலும் கிருஸ்துவ மதம் நன்கு பரவியுள்ளது.

விடுதலைக் காலத்திற்கு முன்பு ஆங்கிலிக்கன் மதச் சபையுடனிருந்த மதச் சபையைச் சேர்ந்த பிராடஸ்டண்ட் வகுப்பினராக

நிகோபார் கிருஸ்துவர்கள் இருக்கின்றார்கள். 1966 மார்ச்சு மாதம் 15ஆம் தேதி முதலாக அந்தமான், நிகோபார் தீவுகள் ஒரு பாதிரியாரின் தலைமையின் கீழான தனிப்பட்ட சமய ஆட்சிப் பகுதியாக ஆக்கப்பட்டுள்ளது.

கிருஸ்துவ மதம் பரவப்பரவ, தீவுகளில் மதாலயங்களும் அதிகரித்துள்ளன. கார் நிகோபாரில் பத்தும், கட்சாலில் இரண்டும், சோவ்ராவில் ஒன்றும், நான்கோவ்ரியில் ஒன்றும் ஆக மதாலயங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மதாலயத்திற்கும் ஒரு புனிதரின் பெயர் வைக்கப்பட்டிருப்பதால், அப்புனிதரின் தினத்தை, அந்தக் குறிப்பிட்ட மதாலயத்தைச் சேர்ந்த மக்கள் மிக்க மகிழ்ச்சியுடன் கொண்டாடுகின்றனர்.

நிகோபார் தீவுகளில் உள்ள கிருஸ்துவ மத இயக்கத்திற்கு பாதிரியார்கள், கோவில் பணியாளர்கள் போன்ற முழு நேர ஊழியர்களும், மத விரிவுரையாளர்கள் போன்ற பகுதி நேர ஊழியர்களும் உள்ளனர். இந்த இயக்கம் தனது சொந்த ஆதரவை நம்பியே இருக்கின்றது. நிகோபார் மக்களின் பொதுவான குண இயலுக்கு ஏற்ப, வெளியாரிடமிருந்து உதவி எதுவும் பெறுவதில்லை. 12 வயதுக்கு மேற்பட்ட கிருஸ்துவர்கள் அனைவரும் மாதம் ஒன்றுக்குத் தலைக்கு குறைந்தபட்சமாக 10 பைசா தருகின்றனர். ஆனால் சில விசேடமான சமயங்களில் மக்கள் தாராளமாக நிதி வழங்குகின்றார்கள். புனிதர்களின் தினங்களை வெவ்வேறு மதாலயங்கள் கொண்டாடும்போது சந்தைகளைக் கூட்டியும் கணிசமான நிதி திரட்டுகின்றனர். அந்தச் சந்தைகளில் உள்ளூர் பொருள்களும் நன்கு விற்பனையாகின்றன.

பல்வேறு மதாலயங்களும் திரட்டும் நிதி அனைத்தும் மத்திய மதாலய நிதிக்குச் செல்லுகின்றது. மதாலய ஊழியர்களின் சம்பளம், மதாலயம் இந்தியாவுக்கு அனுப்பிவைத்த கிருஸ்துவ மாணவர்களுக்கு ஆகும் கல்விச் செலவு, மதாலயக் கட்டடங்களைப் பழுதுபார்க்கும் செலவு ஆகியவைகளுக்கு மத்திய நிதியிலிருந்து பணம் தரப்படுகின்றது.

ஒவ்வொரு மதாலயத்திலும் இரண்டு வழிபாடுகளே நடைபெறுகின்றன. ஆனால் சிறப்புமிக்க தினங்களிலும், ஞாயிற்றுக் கிழமைகளிலும் விசேட வழிபாடுகள் உண்டு. கிருஸ்துமஸ் விழா, புத்தாண்டு, புனித வெள்ளிக்கிழமை, ஈஸ்டர், புனித ஆவிகள் தினம் முதலான பண்டிகைகளை, மற்ற இடங்களில்

கொண்டாடுவதுபோலவே நிகோபார் தீவுகளிலும் கொண்டாடுகின்றனர்.

நிகோபார் மக்களைப்பற்றிக் கூறும்பொழுது, ஞாயிற்றுக் கிழமைகளில் அவர்கள் கிருஸ்துவர்களாகவும், மற்ற நாட்களில் நிகோபார்வாசிகளாகவும் இருக்கின்றார்கள் என்று சில சமயம் சொல்வதுண்டு. அது மிகவும் தவறான கூற்று என்றாலும், அதில் ஓரளவு உண்மையும் இருக்கவே செய்கின்றது. அவர்கள் மதம் மாறியிருந்த பொழுதிலும், தங்களின் சிறப்பான தனி இயல்புகளை விட்டுவிடவில்லை. அவர்களின் வாழ்க்கை முறையும், பழக்கவழக்கங்களும், சில நம்பிக்கைகளுங்கூட முன்னிருந்தது போலவே இருக்கின்றன. இருப்பினும் தங்களின் கிருஸ்துவ மதத்தை அம்மக்கள் ஆழ்ந்த பற்றுடன் கருதவில்லை, ஞாயிற்றுக் கிழமை தவிர மற்ற நாட்களில், அதை மறந்துவிடுகின்றார்கள் என்று நினைப்பது தவறானது. உண்மையில், சமீபத்தில்தான் அம்மதம் இங்கு தலைதூக்கியிருக்கின்றது என்றாலும், மக்களின் வாழ்வை முழுவதும் மாற்றிவிடவில்லை என்றாலும், அவர்களைப் பொறுத்தவரையில் ஒரு குறிப்பிட்ட மாறுதலை விளைவித்திருக்கின்றது என்றே உறுதியாகக் கூறலாம்.

மற்றும் அநேக எளிய மக்களைப்போலவே, நிகோபார் மக்களும் தங்கள் மதத்தில் மிகுந்த பற்றுக்கொண்டிருக்கின்றார்கள். பாரபட்சமின்றிப் பார்க்கும் எவருக்கும் அவர்கள் ஆர்வம் மிகக் கொண்டிருக்கும் நம்பிக்கை எளிதில் தென்படும். அவர்கள் மதாலயங்களுக்கு ஒழுங்கு முறை தவறாமல் செல்லுகின்றார்கள். மதவிழாக்களில் மிகுந்த ஆவலுடன், ஆழ்ந்த பற்றுடன் கலந்து கொள்ளுகின்றனர். கிருஸ்துவர்கள் வீடுகள் அனைத்திலும் கிருஸ்துவின் படம் இருக்கின்றது. அவர்களும் சிலுவை அணிந்து கொள்ளுகின்றனர். நிகோபார் இளைஞர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் மதாலயப் பணிகளில் ஈடுபடுவதையும் சிறப்பாகச் சொல்லவேண்டியிருக்கின்றது. கிருஸ்துவ மதத்திற்கு முரணான பழக்கவழக்கங்களையும், சடங்குகளையும் மக்கள் கைவிட்டு விட்டனர். எல்லாவற்றுக்கும் மேலாக, அவர்களின் உலகக் கண்ணோட்டமும் மாறிவிட்டது. எல்லா வகையான பேய்களைக் கண்டு எப்பொழுதும் அஞ்சியே வாழ்ந்துகொண்டிருந்தது போய், எல்லாம் வல்ல இறைவன், மேன்மை மிக்க தந்தை ஒருவர் தங்களைக் காத்தருளுகின்றார் என்ற நம்பிக்கை அம்மக்களுக்குக் கிடைத்திருக்கின்றது. இந்தத் தெளிவு காரணமாக

அவர்களின் அன்றாடப் போக்கும், அவர்களின் வாழ்வும் குறிப்பிடத்தக்க வகையில் மாறுபட்டிருக்கின்றன. ஆன்மாபற்றிய கருத்து அவர்களிடம் தோன்றியுள்ளதால், மனித வாழ்வு பற்றியே புதியதொரு பொருள்கொள்ளத் துவங்கியிருக்கின்றனர். வெளித் தோற்றத்தில், அவர்கள் முன்புபோலவே வாழ்ந்துவந்தாலும், அவர்களின் உள் மனது மாறுபடவே செய்திருக்கின்றது.

நிகோபார் மக்கள் பரம்பரையான விழாக்கள் பலவற்றைக் கொண்டாடுகின்றார்கள். தீவுக்குத் தீவு விழாக் கொண்டாடும் முறைகள் மாறுபட்டாலும், அடிப்படையில் எல்லாம் ஒன்றாகவே யிருக்கின்றன. இந்த விழாக்களில் எல்லாம் முன்பு பேய்களை விரட்டும் சடங்குகள் முக்கியமாக இருந்துவந்தன. ஆனால் இப்பொழுது மதமாற்றத்தின் காரணமாக, அநேக இடங்களில் அந்தப் பழக்கவழக்கங்கள் கைவிடப்பட்டன.

கார் நிகோபாரில் நடைபெறும் விழாக்கள், மிக முக்கிய மானவை. மக்கள் அதிகமாக அத்தீவில் இருப்பதால், பெரிய முறையில் விழாக்கள் ஏற்பாடு செய்யப்படுகின்றன. கார் நிகோபாரில் கொண்டாடப்படும் விழாக்களில் சில பருவகால விழாக்களாக இருக்கின்றன. வெவ்வேறு கிராமங்களிலும் குறிப்பிட்ட தினங்களில் விழாக்கள் நடைபெறுகின்றன. மற்ற கிராமங்களில் உள்ள மக்களும் விழாக்களில் கலந்துகொள்ளுகின்றனர். இந்த விழாக்களில் விருந்தும், கள் உண்டலும் மிகுதியாக இருக்கும். பெரும்பாலான இந்த விழாக்களில் நடனம் இருக்கும். அழைப்பு விடுத்த கிராமத்தைச் சேர்ந்த மக்கள், ஒரு குறிப்பிட்ட கிராமத்தைச் சேர்ந்தவர்களையே அப்பொழுது தங்களுடன் நடனம் ஆடக் கூப்பிடுகின்றனர். அதனால், அந்த விழாக்களில், தீவுகள் அனைத்திலிருந்தும் மக்கள் கலந்துகொண்டிருந்தாலும், விருந்தளிக்கும் கிராமத்தைச் சேர்ந்த மக்களும், நடனம் ஆட அழைக்கப்பட்ட கிராமத்தினரும் பேரார்வமும், மகிழ்ச்சியும் கொள்ளுகின்றனர்.

பருவகால மாற்றத்தைக் குறிப்பதே இந்த விழாக் கொண்டாட்டங்களின் பிரதான கருத்தாக இருக்கின்றது. அப்போது விருந்தும், கேளிக்கையும் நடத்தி மகிழ்ச்சியடைகின்றனர். சில விழாக்கள், நிகோபார் மக்களின் மிக முக்கியமான சில நிகழ்ச்சிகளின் நினைவாகக் கொண்டாடப்படுகின்றன. ஆனால் மக்கள் அவைகளை எதற்கு என்பதை அநேகமாக மறந்து

விட்டனர்; கேளிக்கைகளை நடத்திக் களிப்பதிலேயே கருத்தாக யிருக்கின்றனர்.

அறுவடை விழாக்களையும் விழா எடுத்துக் கொண்டாடு கின்றனர். கடந்த ஆண்டில், அவர்களின் தோப்புக்களிலும், தோட்டங்களிலும் நல்ல விளைச்சல் கிடைத்தமைக்கும், காய்கனி வகைகளை அள்ளித்தந்தமைக்கும், வருகின்ற வருடத்திலும், தங்கள் தோட்டங்களில் விளைச்சல் நன்றாகயிருக்கவேண்டும் என்றும் நிலத்தைக் காக்கும் ஆவிக்கு அவர்கள், அப்போது நன்றி செலுத்திக்கொள்ளுகின்றார்கள்.

'குணசேரு,' 'காணுச்சா' என்ற இரு சடங்குகள் மூலம் நிலத்தைக் காக்கும் ஆவிக்கு நன்றிசெலுத்திக் கொள்ளுகின்றார்கள். பருவகால விழா தினத்தன்று, சேனைக்கிழங்கு, பலாப்பழம், வாழைப்பழம் ஆகியவற்றை தேங்காய் எண்ணெயுடன் கலந்து 'கூசவு' என்று கூறப்படும் அல்வா போன்ற பொருளைச் செய்கின்றனர். அந்தக் கலவையைச் சோவ்ராப் பானைகளில் மெதுவாக வேகவைத்து, அது பக்குவப்பட்டதும், நிறம்கூட்ட மஞ்சள் சிறிது சேர்க்கின்றார்கள். 'கூசவு' செய்வதையே 'குணசேரு' என்று சொல்லுகின்றார்கள்.

அந்த அல்வாவைச் சாப்பிடவும் செய்கின்றார்கள். அடுத்த நாள் காலை, அதைப் பானைகளில், 'காணுச்சா' என்ற அடுத்த சடங்குக்காக எடுத்துச் செல்லுகின்றார்கள். இந்தச் சடங்கின் போது, வீடுகளில் தொங்கவிடப்பட்டிருக்கும் வாழைப்பழம், பண்டானுஸ், சேனைக்கிழங்குகள், தேங்காய்கள், மற்ற காய்கனி வகைகள் ஆகியவற்றின்மீது 'கூசவு' என்ற அல்வாவை விரலால் தொட்டு ஒவ்வொன்றின்மீதும் தடவுகின்றனர். பின்னர் 'குமோ' எனப்படும் சிறிய தேங்காய்களை எடுத்து, அவைகளின் மீது அல்வாவையும், தேங்காய்ப் பூவையும், பன்றி இரத்தத்தையும் கலந்து பூசுகின்றனர். இத்தேங்காய்களை தென்னை ஓலைகளில் கட்டி வீடுகளிலும், வீட்டுக்கடியிலும் சுமார் ஏழு நாட்களுக்குத் தொங்கவிடுகின்றனர்.

காய்கனிகள்மீதும், சிறு தேங்காய்கள்மீதும் 'கூசவு' என்ற அல்வாவைத் தடவும் சடங்கையே 'காணுச்சா' என்று சொல்லுகின்றனர். அதனால் வளம் கொழிக்கும், வருங்காலத்தில் நிலத்தில் நல்ல விளைச்சல் கிடைக்கும் என்று நம்புகின்றனர்.

தேங்காய்களையும், சேனைக்கிழங்குகளையும் தவிர, மற்ற காய்கனிகளை உண்ணுகின்றனர். 'காணுச்சா' சடங்குக்கு உட்பட்ட

தேங்காய்கள், நில ஆவியின் வாழ்த்தைப் பெற்றிருப்பதால், நன்கு வளரும் என்று அவர்கள் நம்புவதால், அவைகளைத் தோட்டங்களில் நட தனியே எடுத்துவைத்துவிடுகின்றனர். அதுபோன்றே, சேனைக்கிழங்குகளையும் சாப்பிடாமல், அடுத்த பருவகாலத்தில், அதாவது மறு பருவ விழாக்காலம் வருமுன்பு தங்கள் தோப்புக்களில் விதைக்க எடுத்துவைத்துக்கொள்ளுகின்றனர்.

தென்னை ஓலைகளில் தொங்கவிடப்பட்டிருக்கும் 'குமோ' என்ற சிறிய தேங்காய்களை சாப்பிடுவதும் இல்லை. நடுவதும் இல்லை. ஆனால் அவைகளைத் தூக்கியெறிந்துவிடுகின்றார்கள். குடும்பத்தின் முதியவர் அவைகளைக் குடும்பத்தைச் சேர்ந்த சிறுவர்களின் முன்பு வீசி எறிகின்றார். சிறுவர்கள் அதை ஈட்டியில் குத்த முயலுகின்றார்கள். மூர்க்கமான காட்டுப்பன்றிகளைக் குத்துவதற்கு இளைஞர்களுக்கு நல்ல பயிற்சி தருவதற்கே இவ்வாறு செய்வதாகக் கூறுகின்றார்கள்.

'குணசேரு,' 'கானுச்சா' சடங்குகள் இரண்டும் பருவகால விழாக்களில் நடத்தப்படுகின்றன. ஆனால் 'கின்போபாங்' என்ற பருவ விழாவை, அறுவடை விழாப்போலன்றி புத்தாண்டாகக் கொண்டாடுகின்றனர். அந்த விழா நிகோபார் நாட் குறிப்புப்படி புத்தாண்டு தினத்தில் வருகின்றது.

எல்லாப் பருவகால விழாக்களும், தென்மேற்கு பருவ காலத்திலும், அதன் துவக்கத்தின்போதும் கொண்டாடப்படுகின்றன. நடவுகாலத்தையும், மீன் பிடிப்பதையும் தக்கமுறையில் அமைத்துக்கொள்ளவும், தென்மேற்குப் பருவகாலம் ஓரளவு முக்கியமாக இருப்பதால் பருவகாலத் துவக்கத்தை வரவேற்கவும், அதன் பல்வேறு கட்டங்களைக் குறிப்பதையும் விழாக்களாகக் கொண்டாடுகின்றனர். மேலும், தென்மேற்கு பருவகாலம் மிகுந்த முனைப்புடன் இருப்பதாலும், அது அதிக மழையையும், காற்றையும் கொண்டுவருவதாலும், ஆதிக்குடிகளின் மனதில் ஓர் அச்சம் ஏற்பட்டு, நல்லாவிகளின் ஆசிகளைப்பெற அடிக்கடி அந்த விழாக்களை எடுத்திருக்கக்கூடும்!

கார் நிகோபாரின் பல்வேறு திருவிழாக்களின் சிறப்பான அம்சங்கள் பின்னிணைப்பில் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன.

பருவகால விழாக்கள் அல்லாமல், 'படாதின்' எனப்படும் 'பெரிய தின' விருந்துகளும் உண்டு. சில குடும்ப விருந்துகளாக இருக்கின்றன. அவைகளில் குடும்பத்தைச் சார்ந்தவர்களும்,

நண்பர்களுமே கலந்துகொள்ளுகின்றனர். மற்றும் சிலவற்றில் கிராமத்தினர் அனைவரும், அடுத்த கிராமங்களைச் சேர்ந்த மக்களும்கூடக் கலந்துகொள்ளுகின்றனர். எல்லா விருந்துகளிலும் உண்பதும், கள் குடிப்பதும், பாடுவதும் நிறைய உண்டு. இறந்தவர்களை எண்ணியே அநேக விருந்துகள் நடைபெறுகின்றன. முன்பெல்லாம் இறந்தவர்களின் எலும்புகளைத் தோண்டியெடுத்து, மீண்டும் புதைத்து வந்தனர். கார் நிகோபாரில் இப்பொழுது இது கைவிடப்பட்டது. அநேக இடங்களிலும் மதமாற்றம் காரணமாக நடப்பதில்லை.

இத்தகைய விருந்துகளில் மிக முக்கியமானது 'கா-நா-அன்-ஹவுன்' என்ற விருந்து என்பதில் சந்தேகமில்லை. பன்றி இறைச்சி சாப்பிடுவது என்று பொருள்படும். இறந்தவர்களை நினைவுகூரும் விருந்தாகும் இது. மக்கள் தங்கள் மூதாதையர்களை எண்ணிக் கொண்டாடுவதே இவ்விருந்தாகும். அவர்களுக்குரிய மரியாதையைத் தெரிவித்து, வருங்கால சந்ததியினருக்காக தென்னையும், பண்டானுஸ் மரமும் நட்டு வளர்த்தியதுபோன்ற நல்லவைகளுக்காக நன்றி செலுத்துவதே இதன் கருத்தாகும். முன்பெல்லாம் மூதாதையர்களின் நினைவாக நினைவுத் தூண்களை எழுப்பி எல்லா வகையான உணவுகளையும் தொங்கவிட்டிருந்தனர். விருந்து முடிந்தபின்னருங்கூட, அந்த உணவுகளை அவர்கள் தொடுவதில்லை. அவைகளை அப்படியே அழுகிப்போக விட்டுவிடுவார்கள். மூதாதையர்களின் ஆவிகள் அவைகளை எடுத்துக் கொள்ளும் என்று நம்பிவந்தனர். இப்பொழுது மதம் மாறியுள்ளதினாலும் உணவை வீண்செய்வது தவறு என்பதை உணர்ந்திருப்பதாலும், நினைவுத் தூண்களை எழுப்பும் பழக்கத்தைக் கைவிட்டுவிட்டார்கள். மூதாதையர்களின் நினைவாக விருந்தளிக்க வேண்டும் என்ற கருத்தைக்கொண்டிருந்தாலும், இதற்காக அவர்கள் அதிகமாக எதுவும் செய்வதில்லை. அப்பொழுது உண்பதும், குடிப்பதும், ஆடுவதும், பாடுவதுமே பிரதானமாகயிருக்கின்றன.

இவ்விருந்தைக் கொண்டாடுவதின்மூலம் தீவின் ஒருமைப்பாட்டை வலியுறுத்தி எல்லோரும் ஒரு குடும்பம், எல்லோரும் பொதுவான ஒரு மூதாதையிடமிருந்தே தோன்றியிருக்கின்றோம் என்பதை மக்களுக்கு நினைவுபடுத்துகின்றனர். அதனால் இவ்விழாவை நடத்தும் ஒவ்வொரு குடும்பமும், தீவின் மற்ற கிராமங்களில் உள்ள மற்ற குடும்ப நண்பர்களையும் அழைக்கின்றது.

இவ்வாறு தீவில் உள்ள மக்களில் அநேகமாக எல்லோரும் ஒன்று கூடி விருந்தாடிக் களிக்கின்றனர். அதே வேளையில், எல்லோரும் ஒன்றே என்ற எண்ணமும் வலுப்படுகின்றது.

இந்த விருந்தை நடத்துவதற்கு என்று ஒரு குறிப்பிட்ட தினம் கிடையாது. விருந்துக்குவேண்டிய பன்றிகள், சேனை, வாழை, தேங்காய்கள், காய்கனி வகைகள் முதலான வளமும், வசதியும் கிராமத்திற்கு இருக்கும்பொழுதே அவ்விருந்து நடத்தப்படு கின்றது. ஏனென்ருல், விருந்து பெரிய அளவில் நடத்தப்படுவ துடன், தீவில் உள்ள மக்களில் அநேகமாக எல்லோரும் விருந்தில் கலந்துகொள்ளுகின்ருர்கள். அதன் காரணமாக இத்தகைய விருந்துகள் சில சமயம் ஒரு வருடத்தில் தீவில் எந்தக் கிராமத் திலும் நடத்தப்படாமல் போவதுமுண்டு. இந்த விருந்தை ஒரு குறிப்பிட்ட கிராமம் நடத்த விரும்பிஞல், முதியவர்கள் தங்களுக் குள்ளாகவே விருந்துபற்றி ஆலோசனைசெய்து, மற்ற கிராமங் களில் உள்ள மக்களுக்கு வெகு முன்னதாகவே தெரிவித்து, எல்லோருடைய பரஸ்பர வசதிக்கு ஏற்ப ஒரு தினத்தைக் குறிப் பிடுகின்றனர். அத்தினம் வழக்கமாக ஒரு முழு நிலவு தினமாக இருக்கின்றது.

விருந்துக்கான ஏற்பாடுகள் செய்ய அதிக நாட்கள் வேண்டி யிருப்பதால், விருந்து தினத்திற்கு வெகுநாட்கள் முன்னதாகவே ஏற்பாடுகள் துவங்கிவிடுகின்றன. கிராம மக்கள் அனைவரும் ஏற்பாடுகளில் பங்குகொள்ளுகின்றனர். மற்ற கிராமங்களி லிருந்துவரும் குடும்ப நண்பர்களைக் கவனிக்கும் பொறுப்பை கிராமங்களில் உள்ள பல்வேறு குடும்பத் தலைவர்கள் ஏற்றுக் கொள்ளுகின்ருர்கள். அதனுல் தீவின் மக்களை விருந்தோம்பும் பொறுப்பு நிறைவேற்றப்பட்டுவிடுகின்றது.

விருந்து தினத்திற்கு ஒரு மாதத்திற்குமுன்பாக, கிராமத்தின் குடும்பங்களில் உள்ள சிலர் மற்ற கிராமங்களுக்குச்சென்று, வரவிருக்கும் விருந்தினைத் தங்கள் குடும்ப நண்பர்களிடம் நினைவு படுத்தி வருகின்றனர்.

இந்த விருந்தின்பொழுது பன்றிச் சண்டை நடைபெறுவது ஒரு விசேடமான அம்சமாகும். இந்தப் பன்றிச் சண்டை பாரம்பரிய மாக மற்ற பொழுதுகளில் நடப்பதில்லை. பன்றிச் சண்டைக்காக, விருந்து தினம் நெருங்குவதற்குமுன்பு கிராமத்தின் மத்தியில் உள்ள திறந்தவெளியில் பன்றிக் கூண்டுகள் கட்டப்படுகின்றன. இந்தக் கூண்டுகளை காட்டுக் குச்சிகளைக்கொண்டு கட்டுகின்

றார்கள். விருந்து தினத்தின்பொழுது, விழாக்கோலத்தைக் குறிக்க, இளந் தென்னங்குருத்துக்களைப் பின்னிக் கூண்டுகளில் தொங்கவிடுகின்றார்கள். விருந்தளிக்கும் கிராமத்தைச் சேர்ந்த ஆண்கள், காடுகளில் இரண்டு, மூன்று தினங்கள் சுற்றியலைந்து சுறுக்குக் கயிறு அல்லது வலையம்கொண்டு முரட்டுப் பன்றிகளைச் சண்டைக்காகப் பிடித்து வருகின்றனர். சாப்பிடுவதற்கும் சில பன்றிகள் பிடிக்கப்படுகின்றன.

மாலை நேரத்தில் விருந்து துவங்குகின்றது. அன்று காலை முதலாகவே, கிராமத்திற்கு விருந்தினர் வரத்தொடங்கி, கிராமம் முழுவதும் ஒரே சுறுசுறுப்பு அடைந்துவிடுகின்றது. இளந் தென்னங்குருத்துக்களைத் தோரணங்களாகக் கட்டி கிராமம் முழுவதையும் அலங்கரிக்கின்றனர். அப்பொழுது ஒரு விசேடமான அலங்காரமும் இடம்பெறுகின்றது. கிராமத்தின் நடுவில் 40 அல்லது 50 அடி உயரமுள்ள நீண்ட கழிகளை நட்டு அவைகளில் பல வண்ணப் பட்டுத்துணிகளைத் தொங்கவிடுகின்றனர். துணிகள் நேராகத் தொங்கவும், அவைகளில் மடிப்பு விழாமல் இருக்கவும் துணிகளின் அடியில் பளபளக்கும் வெள்ளி கரண்டிகளையும், முள் கரண்டிகளையும் தொங்கவிடுகின்றனர். இவ்வாறு புதுமையான, ஆனால் கவர்ச்சிகொண்ட அலங்காரம், கிராமத்தின் மையத்தில் இடம்பெறுகின்றது.

சில சமயங்களில், சில வீடுகளின்முன்பு, உணவுப் பண்டங்கள் நிறைந்த சிறு படகு ஒன்று காணப்படுகின்றது. விருந்தின்போது அல்லது அதற்குப் பின்னர் அந்த உணவுப் பண்டங்கள் சாப்பிடப் படுகின்றன.

போதுமான ஒளிதரும் ஏற்பாடுகளும் செய்யப்படுகின்றன. விழாப் பகுதியைச் சுற்றிலும் தேங்காய் மூடிகளைக் குவித்து எரிக்கின்றனர். கிராமத்தில் உள்ள பெட்ரோமாக்ஸ் விளக்குகளும், மற்ற விளக்குகளும் எரியவிடப்படுகின்றன. இவ்வாறு வீடுகள் அனைத்திலும், கிராமத்தைச் சுற்றிலும் ஒளிவீசுகின்றது; விழாக் கோலம் உன்னதமடைகின்றது.

காலையிலிருந்தே உணவு தயாரிக்கப்படுகின்றது. சேனை முதலான காய்கறிகள் சமைக்கப்பட்டாலும், பன்றி இறைச்சியே முக்கிய உணவாகயிருக்கின்றது. ஒவ்வொரு குடும்பமும், மற்ற கிராமங்களிலிருந்துவந்து தங்களுடன் தங்கியிருக்கும் குடும்ப நண்பர்களுக்காக, சோவ்ராப் பானைகளில் நிறைய உணவு சமைக்கின்றது. சில விருந்தினர்கள் காலையிலேயே வந்திருந்து

பன்றிகளைக் கொல்வதில் உதவிபுரிகின்றார்கள். அவர்கள் பொதுவாக எல்லா உதவிகளையும் செய்கின்றனர். விருந்தினர்கள் வரும்போது பன்றி, தேங்காய், காய்கனி வகைகளைக் கொண்டு வருகின்றனர். அப்படிக் கொண்டுவரவேண்டுமென்பது அவசிய மில்லையென்றாலும், அது ஒரு வழக்கமாக இருக்கின்றது. அவர்கள் கொண்டுவரும் பொருள்களையும் பயன்படுத்தி, நாள்முழுவதும் சமைக்கின்றனர்.

விருந்தில் கலந்துகொள்ளும் ஆண்களும், பெண்களும், குழந்தை களும் நல்ல ஆடை அணிந்து, மலர்களாலும், தென்னை, வாழை இலைகளாலும் கட்டப்பட்ட மாலைகளை மார்பிலும், தலையிலும் அலங்காரமாகச் சூட்டிக்கொள்ளுகின்றனர். சிலர் தங்களின் பரம்பரையான நகைகளை அணிந்துகொள்ளுகின்றனர். ஒவ்வொருவரும், அப்பொழுது தங்களிடமுள்ள சிறந்த ஆடை அலங்காரங்களை மேற்கொள்ளுகின்றனர்.

மாலையில் பொழுதுசாயும் நேரத்தில் அநேக விருந்தினர்கள் வந்துவிடுகின்றனர். எனினும், ஒருசிலர் இரவில், மேலும் இருள் கவிழும் நேரத்திலும் வந்துகொண்டிருப்பார்கள். இளைஞர்கள் பன்றிகளை எப்போதும்போல் கழிகளில் கட்டி, அவைகளுக்கு ஆதரவாக யிருக்க தென்னை ஓலைகளை வைத்துக்கொண்டு வருவார்கள். நல்ல ஆடையும், பரம்பரையான வெள்ளி நகை களும் அணிந்த சிறுவர்களையும் பன்றிகளைத் தூக்கிவரும் கழிகளில் உட்காரவைத்துச் சுமந்துவருகின்றார்கள். அந்தச் சிறுவர்களுக்கே அப்பொழுது மரியாதை தரப்படுகின்றது. அச்சிறுவர்கள் சமீபத்தில் இறந்த முக்கியமான மனிதர்களின் நேரடி வாரிசுகள். இறந்தவர்களின் நினைவாகவே இந்த விழாக்கள் கொண்டாடப் படுகின்றன. சில சமயம் பன்றிகள் அடைக்கப்பட்ட மரக் கூண்டுகளை, சிறுவர்கள் அவைகளின்மீது உட்கார்ந்திருக்க அல்லது ஆட்டம்போட இளைஞர்கள் சுமந்துவருகின்றார்கள். கிராம மக்கள் அனைவரும் கண்டு மகிழும்படியாக, இப்பன்றிகளை கிராமத்தைச் சுற்றிலும் கொண்டுசெல்லுகின்றனர்.

பின்னர் பன்றிகளைக் கூண்டுகளில் அடைத்துவிட்டு, அவர்கள் தங்கள் குடும்ப நண்பர்களின் வீடுகளுக்குச்சென்று விருந்துண்ணு கின்றார்கள். எல்லா வீடுகளிலும் எல்லா வகையான உணவும், உண்டியும் வைக்கப்பட்டிருக்கின்றன. யார் எதை விரும்பி னாலும், மரியாதைக்காகக் காத்திராமல் எந்த உணவையும் எடுத்துக்கொள்ளலாம். அதற்குப் பக்கத்திலேயே கள் குடித்

தலும் நடைபெறுகின்றது. அது இரவெல்லாம் தொடர்ந்து நீடிக்கும்.

மீண்டும் ஆட்டமும், பாட்டும் துவங்குகின்றது. கிராமத்து மக்கள் மற்ற வேலைகளில் ஈடுபட்டிருப்பதால், விருந்தினர்கள் ஆடத் துவங்குகின்றார்கள். நடனத்தில் புகழ்பெற்றவர்களை விருந்திற்கு விசேடமாக அழைத்திருப்பார்கள். இந்த சமயத்தில் ஆடுவதற்கென்றே புதிய ஆட்டமொன்றில் தனிப் பயிற்சிபெற்ற பெண்கள் சேர்ந்து முதலில் ஆடுகின்றனர். பின்னர் ஆண்கள் கலந்துகொள்வர். அடுத்தாற்போன்று வெவ்வேறு நடனக் குழுவினர் ஆடத் தொடங்குகின்றார்கள். கிராமத்தில் ஓர் இடத்தில் என்றில்லாமல், பல இடங்களில் நடன நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. எனினும், கிராமத்தின் மையத்தில் உள்ள திறந்தவெளியிலேயே இரவெல்லாம் நடனம் இருந்து வருகின்றது.

விருந்தும், கேளிக்கையும் இரவெல்லாம் நடைபெறுகின்றன. உண்ணுவதும், கள் குடிப்பதும், ஆடுவதுமாக இருக்கின்றார்கள். பழைய பாட்டுகளையும், புதிய பாட்டுகளையும் பாடுகின்றனர். இரவு செல்லச்செல்ல, கள் போதையும் தலைக்கு ஏற, ஆட்டமும் மெய்மறந்த நிலையில் விறுவிறுப்புடன் காணப்படுகின்றது.

மீண்டும் மறுநாள் காலையில் மேலும் பன்றிகள் கொல்லப்பட்டு, உணவு சமைக்கப்படுகின்றது. மக்கள் கூடிமகிழ, சில பன்றிகளைக் கூண்டிலிருந்து வெளியேற்றி, பன்றிச் சண்டையைத் துவக்கு கின்றார்கள். இந்தப் பன்றிச் சண்டைக்காகக் காட்டிலிருந்து பிடித்துவரப்பட்ட சில மூர்க்கமான பன்றிகளை இரவெல்லாம் பட்டினிபோட்டு வைத்திருக்கின்றனர். சண்டையின்போது பன்றிகளைச் சீற்றத்திற்குள்ளாக்கி, அவைகள் கடிக்க வரும்போது, சண்டையிடும் இளைஞர்கள் அவைகளின் காதுகளைப் பிடித்து நிறுத்திவிடுகின்றார்கள்.

பன்றிச் சண்டைக்குப்பின், உணவுண்டு, விருந்தினர்கள் விடை பெற்றுச் செல்லுகின்றனர். விருந்தினர் விடைபெறும்பொழுது, அவர்களுக்கு சேனை, வாழை, பன்றி முதலானவைகளைக் கிராம நண்பர்கள் பரிசாகத் தருகின்றனர். சில சமயங்களில் விழா இத்துடன் முடிவடைந்துவிடும்.

ஆனால், கிராமத்தில் வசதிகள் மிகுந்திருந்தால், முக்கிய விழா நாளுக்குப் பின்னர் இடைவெளி ஒருநாள் தரப்பட்டு, மூன்றாவது நாளில் மீண்டும் ஒரு விருந்து நடைபெறுகின்றது. இந்த விருந்து தினத்தில், விருந்திற்கு அழைத்த கிராமமல்லாமல், ஒரே ஒரு

கிராமத்தினரை மாத்திரமே நடனத்திற்கு அழைக்கின்றனர். இந்த விருந்திலும், உண்டு, கள் குடித்து, ஆடிப்பாடி மகிழ்கின்றார்கள். முக்கியமான விழா தினத்தன்று அழைப்புவிடுத்த கிராமத்தினர் மற்ற ஏற்பாடுகளைக் கவனித்துக்கொண்டிருந்தமையால், அன்று ஆடாத ஆட்டத்தையெல்லாம், இந்த விருந்து தின இரவில் மனங்குளிர ஆடுகின்றார்கள். இந்த விருந்தின் போதும் பன்றிகள் கொல்லப்படுகின்றன. முன்னதாக பன்றிகள் கொல்லப்பட்டபோது கிடைத்த பன்றிக் கொழுப்பை இப்பொழுது உண்ணுகின்றனர். அடுத்தநாள் காலை மற்போர் நடைபெறுகின்றது. மீண்டும் உணவு உண்டு, விருந்தினர் விடைபெற்றுச் சென்றதுடன், விழா முடிவடைகின்றது. இந்தச் சமயத்தில் விருந்தினர்களுக்குப் பரிசுகள் எதுவும் தருவதில்லை.

விழா முடிந்ததும், அழைப்புவிடுத்த கிராமத்தினர் ஓய்வு ஒழிச்சலின்றி கடந்த சில நாட்களாக, விருந்து ஏற்பாடுகளைக் கவனித்துக் களைத்திருப்பதால், சில நாட்களுக்கு ஓய்வு எடுத்துக் கொள்ளுகின்றனர். விழாவின்போது கொல்லப்பட்ட பன்றிகளின் தாடைகளை நினைவுச் சின்னங்களாக வீடுகளில் தொங்க விடுகின்றனர். மற்றவர்கள் பார்த்துப் பாராட்டுகின்றனர்; விழாவில் களித்த நேரத்தை நினைவுகூருகின்றனர்.

கார் நிகோபார் மக்களின் மற்றொரு முக்கியமான திருவிழா, சோவ்ராத் தீவிற்கு வருடாந்திரப் பயணம் மேற்கொள்ளுவது ஆகும். முன்னதாகவே குறிப்பிட்டபடி, நல்லதொரு பருவ காலத்தில், அதாவது டிசம்பர் மாதம் முதல் ஏப்ரல் வரையில் உள்ள காலத்தில், கார் நிகோபார் மக்கள் அரிசி, துணி, கத்தி, புகையிலை, சேனை, கனி வகைகள் ஆகியவைகளை சோவ்ராத் தீவிற்கு எடுத்துச்சென்று, அவைகளைப் பரிவர்த்தனையாகத் தந்து படகுகளையும், பானைகளையும் பெற்று வருகின்றார்கள். இந்தப் பரிவர்த்தனை வர்த்தக நோக்குடன் நடைபெறுவதில்லை. இரு தீவுகளுக்கு இடையேயுள்ள பரம்பரை உறவைக் குறிக்கும் வகையில் பரிசுகளைப் பரிமாற்றம் செய்துகொள்வதுபோலவே இருக்கின்றன. மதம் மாற்றம் ஏற்பட்டிருப்பினும் கார் நிகோபார் மக்கள் சோவ்ரா மக்களைப் பூசாரிகள் என்றே கருதி வருகின்றனர். அவர்கள் ஆன்மீக விஷயங்களில் உயர்வுபெற்றிருந்தாலும் வறுமையிலேயே உழலுகின்றனர், அதனால் அவர்களுக்கு ஏதாவது தரப்படவேண்டும்—அதாவது இந்தியாவில் ஏழைப் பிராமணர்களை மக்கள் மதித்து ஏதாவது தருவது

போன்று தரவேண்டும்—என்றே கார் நிகோபார் மக்கள் கருது கின்றனர். உண்மையில், இந்தப் பரிவர்த்தனையில் கொடுக்க வேண்டியதற்கு அதிகமாகவே கார் நிகோபார் மக்கள் தருகின்றனர். அவ்வாறு தராவிட்டால், சோவ்ரா மக்கள் பட்டினி கிடந்து மடிந்துவிடுவார்கள் என்று கார் நிகோபார் மக்கள் கேலியாகக்கூடக் கூறுவதுண்டு.

சோவ்ராத் தீவு செல்லும் இத்தகைய வருடாந்திரப் பயணங்கள், கார் நிகோபாரிலிருந்து முதன்முதலாக தீவு செல்லும் இளஞ் சிறுவர்களுக்கு மிக முக்கியமானதாக இருக் கின்றது. சோவ்ராவில் ஆன்மீகவழி குருக்கள், மந்திர தந்திரங் களில் கைகண்டவர்கள் இருக்கின்றார்கள். அவர்களுக்கு மக்கள் எல்லோரும் மரியாதை செலுத்துவது அவசியம் என்று ஒவ்வொரு கார் நிகோபார்வாசியும் கருதுகின்றான். ஒரு சிறுவன் அதைச் செய்யவில்லையென்றால், அவன் வளர்ச்சி முழுமை பெறுவதில்லை, தனது திறத்தை நிரூபித்தவனாகமாட்டான் என்று நினைக் கின்றனர். அதனால் சோவ்ராவுக்கு முதன்முதலாகச் செல்லும் சிறுவன் பல சடங்குகளுக்கு உட்படவேண்டியிருக்கின்றது. அந்தச் சடங்குகளின் கொண்டாட்டத்தில் கிராமம் அனைத்துமே கலந்துகொள்ளுகின்றது.

இவ்வாறு சோவ்ராப் பயணம் மேற்கொள்ளும் சிறுவனை 'ரமால்' என்று அழைக்கின்றனர். சிறுவன் 12 வயதாக இருக்கும் பொழுது, அவனுடைய தந்தை அவனைக் கூட்டிச்செல்லுகின்றார். ஏதாவது ஒரு காரணத்தால் அந்த வயதில் பயணம் மேற் கொள்ளப்படமுடியாவிட்டால், 21 வயது வரை அந்த முதற் பயணத்தில் செல்லலாம்.

பயணத்திற்கான ஏற்பாடுகள் துவங்கியவுடன், தென்னை ஓலைத் தீப்பந்தங்களை படகு அருகில் காட்டி அதை வாட்டுகின்றனர். படகின் மரம் அதனால் உறுதிப்படுகின்றது. கிராமத்திலிருந்து வழக்கமாக நாலைந்து படகுகள் பயணத்தில் செல்லுகின்றன. பெரியதான அந்தப் படகுகள் ஒவ்வொன்றிலும் 20 பேர் இருக் கின்றனர். படகு நெடுகக் குறுக்கே புதிதாக கம்புகளைக் கட்டி, பானைகளை அவைகளின்மீது வைத்துப் பிணைத்து படகுகளின் விளிம்புகளை நீட்டிவிடுகின்றனர். அதனால் அலைநீர் படகுக்குள் சுலபமாக வராமல் தடுத்துவிடுகின்றனர். வழியில் ஆபத்து ஏற்பட்டுவிடாமல் தடுக்கப் புறச்சட்டத்தையும் சோதித்து, சரியான நிலையில் வைத்து இறுக்கிக் கட்டுகின்றனர்.

பிறகு, மக்களின் பயணத்திற்கான ஆயத்தம் ஆரம்ப மாகின்றது. பரிவர்த்தனைக்கான பொருள்கள் சிலவற்றைக் கடைகளில் வாங்கிக்கொண்டு தீவுகளில் விளைந்த மற்றும் சில பொருள்களையும் எடுத்துக்கொள்ளுகின்றனர். இப்பொருள் களையும், தாகத்திற்காக நிறைய இளநீர்க் காய்களையும், உணவுக்காக பண்டானுஸ் பழத்திலுல் பிசைந்த மாவு, சமைத்த சேனை ஆகியவைகளையும் படகுகளில் நிறைத்துக்கொள்ளு கின்றனர். சிறிது சுண்ணும்பும், காட்டுக் கத்தரிக்காய்களையும் எடுத்துச் செல்லுகின்றனர். பெரிய மீன்கள் படகு அருகில் வந்து, படகை உடைக்காமலும், கவிழ்க்காமலும் பாதுகாத்துக் கொள்ள, இவைகளை எடுத்துச்செல்லுகின்றனர். உணவுக்காகத் தவித்துக்கொண்டிருக்கும் மீன்கள் எதைப்போட்டாலும் விழுங்கி விடும். ஆனால், இவைகள் மீன்களுக்குப் பிடிக்காதாகையால், விட்டுவிட்டு ஓடிவிடும். அப்படியும் பெரிய மீன்கள் சுலபமாக ஓடிவிடாமல் அங்கேயே இருந்தால், அவைகளைக் கொல்வ தற்காக நீண்ட ஈட்டிகளையும் மக்கள் தங்களுடன் எடுத்துச் செல்லுகின்றனர்.

பயணமாவதற்கு முன்பு வெயில், மழையிலிருந்து காத்துக் கொள்ள அவர்கள் உடலெல்லாம் தேங்காய் எண்ணெயைத் தடவிக்கொள்ளுகின்றார்கள். சிலசமயம் முதன்முதலாகப் பயணம் மேற்கொள்ளும் சிறுவர்களின் தலைமீது கோழி இரத்தம் தெளிக்கப்படுகின்றது. சமுதாய இல்லத்தில் விருந்து நடை பெறுகின்றது. அப்பொழுது படகுகளின் மேன்மையை உரைக்கும் பாடல்கள் பாடப்படுகின்றன.

கார் நிகோபாருக்கும், சோவ்ராவுக்கும் இடையேயுள்ள 40 மைல் தூரத்தை, கடலும், காற்றும் சாதகமாக யிருந்தால், 15 முதல் 24 மணி நேரத்தில் கடக்கின்றனர். இல்லாவிட்டால் இந்தப் பயணத்திற்கு மூன்று நாட்கள்கூட ஆகின்றன. காற்றடிப்பதைப் பொறுத்தே பயணம் துவங்கப்பட்டாலும் பொதுவாக அது மாலை நேரமாகவேயுள்ளது. கார் நிகோபாரி லிருந்து 18 மைல் தூரத்தில், அவர்களின் நடுவழியில் இருக்கும் பாட்டி மால்வ் தீவில் தங்கி ஓய்வு எடுத்துச் செல்கின்றார்கள். அங்கு வேண்டிய இளநீர்க் காய்களைப் பறித்துக்கொள்கின்றனர். அதற்கெனவே அங்குத் தென்னை மரங்கள் வளர்க்கப்பட்டிருக் கின்றன. பயணத்தை வெகுவிரைவில் முடிக்கவே அவர்கள் ஆசைப்படுவதால், அவர்கள் அநேகமாக அங்கே தங்குவதில்லை.

முன்னேற முடியாதவாறு பருவநிலை சரியில்லையென்றுலே தங்குகின்றனர்.

சோவ்ராவை அவர்கள் அடைந்தவுடன், சோவ்ராத் தீவின் மக்கள், கரைக்கு வந்து எதிர்கொண்டழைக்கின்றுர்கள். முதல் தடவையாக தீவுக்கு வரும் சிறுவர்களை வரவேற்று, அவர்கள் தலைகளில் முட்டைகளை உடைத்து உடம்பெல்லாம் தடவுகின்றனர். அந்தச் சமயத்தில் கோழியொன்றையும் பலியிட்டு, அதன் இரத்தத்தைச் சிறுவர்களின்மீது தெளித்து, உடலில் தடவுகின்றனர். தங்கள் நண்பர்களின் விருந்தினர்களாக இரண்டு, மூன்று தினங்கள் தங்குகின்றனர். பருவநிலை மோசமாகயிருந்து, அச்சுறுத்திக்கொண்டேயிருந்தால், கால வரையறையின்றித் தங்கும் அவசியத்துக்குள்ளாகின்றனர். வாங்கிக்கொண்ட பானைகள், தேங்காய்ப்பூ, வாழைப்பழம், சேனைக்கிழங்கு முதலியவைகளைக்கொண்டு தயாரிக்கப்பட்ட 'குவிலாய்' என்ற சுவையான தின்பண்டத்தையும் பெற்றுக்கொண்டு, புதுப் படகுகள் வாங்கியிருந்தால் அவைகளையும் எடுத்துக்கொண்டு தங்கள் தீவுக்குத் திரும்புகின்றுர்கள்.

அவர்கள் கார் நிகோபார் தீவை அடைந்ததும், அவர்களின் சொந்த கிராமத்தில் ஒரு வரவேற்பு தரப்படுகின்றது. குடும்பத்தைச் சேர்ந்தவர்களும், நண்பர்களும் கடற்கரையிலேயே அவர்களைச் சந்தித்து, நலம் விசாரித்து, சோவ்ராவிலிருந்து வாங்கி வந்த பொருள்களைப் படகுகளிலிருந்து எடுக்கின்றனர். 'ரமால்' என்ற சிறுவர்களின் தலைகளில் மீண்டும் முட்டைகள் உடைக்கப் படுகின்றன. இந்தச் சமயத்திற்கென்றே ஒரு பன்றி கொல்லப் படுகின்றது. அதன் இரத்தத்தைச் சிறுவர்கள், பயணம் சென்றவர்கள், மற்றும் படகுகளைச் சுற்றிலும் தெளிக்கின்றுர்கள்.

சோவ்ராப் பயணம் சென்று மீண்டவர்கள் இரண்டு, மூன்று நாட்களுக்கு தங்கள் வீடுகளுக்குச் செல்லக்கூடாது என்பதால், அவர்கள் 'எல்பானம்' என்ற தூய இல்லத்தில் தங்குகின்றுர்கள். அவர்களுக்கு உணவு அங்கு கொண்டுசெல்லப்படுகின்றது. ஆனுல் 'ரமால்' எனப்படும் சிறுவர்கள், அநேகமாக ஒரு மாத காலத்திற்குத் தூய இல்லத்தில் தங்கவேண்டும். எனினும், ஒரு வாரத்திற்குப் பின்னர் அவர்கள் கிராமப் பகுதியிலும், அதற்கு அப்பாலுள்ள தோட்டங்களிலும் சுற்றித் திரியலாம். சோவ்ராவிலிருந்து திரும்புவோர் நேரடியாக கிராமத்திற்கும் தங்களுடைய தோட்டங்களுக்கும், சிலகாலம் தனிமையாக இராமல் சென்றுல்,

சோவ்ராவிலிருந்து வரும் நோய்கள் காரணமாக, கோழிகளும் மற்ற வீட்டு விலங்குகளும் இறந்துவிடுகின்றன என்று கருதுகின்றார்கள். தலைகள்மீது முட்டைகளை உடைப்பதனாலும், உடல்களின்மீது கோழி, பன்றி இரத்தத்தைப் பூசுவதாலும் உடலின் சூடு தணிகின்றது; பயணம் சென்றவரை நோய் தாக்குவதில்லை என்றும் நம்புகின்றார்கள்.

அவர்கள் கடற்கரையில் உள்ள தூய இல்லத்தில் தங்கியிருக்கும் பொழுது, திறந்தவெளியில் வெந்நீரில் குளிக்கின்றனர். முதல் பயணத்தில் சென்ற சிறுவர்கள் வெள்ளிக்கம்பி ஆபரணங்களைக் கைகளிலும், கால்களிலும், காசு மாலைகளைக் கழுத்திலும் அணிந்து கொள்ளுகின்றார்கள். பண்டானுஸ் விதைகளையும், பன்றிக் கொழுப்புத் துண்டுகளையும் நூலில் கோத்து, மாலையாக அணிந்துகொள்ளுகின்றனர். சிறுவர்கள் இந்த நகைகளைச் சடங்குகள் முடியும்வரை அணிந்திருக்கின்றார்கள்.

தூய இல்லத்தில் சிறுவர்கள் தங்கவேண்டிய காலம் முடிவடையும் தறுவாயில், படகுப் போட்டிகள் நடைபெறுகின்றன. அவைகளில் 'ரமால்' சிறுவர்கள் முக்கியமான பங்கு வகிக்கின்றனர். சோவ்ரா சென்று திரும்பியவர்கள் தங்கள் நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும், கிராமத்தில் உள்ள பிரமுகர்களுக்கும் தூய இல்லத்தில் விருந்தளிக்கின்றனர். விருந்துக்காகக் கொல்லப்பட்ட பன்றிகள், கோழிகளின் இரத்தத்தைப் படகுகள் 'அருந்துவதற்காக'த் தெளிக்கின்றார்கள். இரவெல்லாம் விருந்து நடைபெறுகின்றது. விருந்து முடிந்து எல்லோரும் கலையும் தறுவாயில் மீண்டும் 'ரமால்' சிறுவர்களின் தலைமீது முட்டைகளை உடைக்கின்றனர். அப்பொழுது களிப்பு மிகப் பேரொலி எழுப்பிச் சிறுவர்களைத் தங்கள் வீடுகளுக்குச் செல்ல அனுமதிக்கின்றார்கள்.

சோவ்ரா மக்கள் கார் நிகோபார் வீடுகளுக்கு வருகை தந்தால், சடங்குகளும், விருந்துகளும் ஒரு வரையறையிலேயே நடைபெறுகின்றன. ஆனால் இளைஞர்கள் முதன் முதலாக வந்தால், அவர்களின் தலைமீது முட்டைகளை உடைத்து, பன்றிகளின், கோழிகளின் இரத்தத்தை அவர்கள் உடல்மீது பூசுகின்றனர்.

படகுகள் பெறுவதிலும் சில சடங்குகளும், தீட்டுகளும் இருக்கின்றன. சோவ்ரா அல்லாமல் மற்ற இடத்தில் படகு வாங்கப்பட்டிருந்தால் அல்லது சோவ்ராவில் படகு வாங்கி, மற்ற இடங்களில் முன்புறச் சட்டங்கள் பொருத்தப்பட்டிருந்தால், பண்டானுஸ், சிறிய எட்டுக்கால் நீர்விலங்கு, வௌவால்

ஆகியவைகளை உண்ணக்கூடாது; நஞ்சைக்கலக்கி மீன் பிடிக்கக் கூடாது; விறகையோ அல்லது பிரம்பையோ பிளக்கக்கூடாது. பண்டானுஸ் சாப்பிட்டு, அதன் விதைகளை வெளியே எடுத்தால், படகின் இணைப்புகளும் அதேபோன்று விலகிவிடும்; சிறிய எட்டுக் கால் நீர்விலங்குகளைச் சாப்பிட்டால், பெரிய நீர்விலங்குகள் சீற்றமுற்று, உண்டவர்களின்மீது பாய்ந்து, படகையே மூழ்கடித்து விடும்; வௌவால்களைச் சாப்பிட்டால் இரவிலும், பகலிலும் படகு ஓடாது; கடலில் நஞ்சுக்கலந்து மீன் பிடித்தால், புயல் தோன்றி படகு கவிழ்ந்துவிடும்; விறகையும், பிரம்பையும் பிளந்தால் படகும் பிளந்துவிடும் என்றெல்லாம் நம்புகின்றனர்.

இந்தத் தீட்டுகள் விலக படகுகளை சோவ்ராவுக்கு எடுத்துச் செல்லவேண்டும். சோவ்ரா மக்கள் படகுகளைப் பார்த்து, அவைகளுக்கு வேறுசில பாகங்களைச் சேர்த்த பின்னரே தீட்டுகள் விலக்கப்பட்டதாகின்றன. தீட்டுகள் விலக்கப்பட்ட அறிகுறிகளாக, படகுகளுக்கு உரியவர்களின் வீடுகளிலும், தூய இல்லத்திலும் துணிகளையும் காய்கனிகளையும் தொங்கவிடு கின்றார்கள். ஆனால் இந்தக் கட்டுப்பாடுகளும், தீட்டுகளும், இப்பொழுதுள்ள மதமாற்றங் காரணமாக மறைந்துவிட்டன. அதிகமாகக் கடைப்பிடிப்பதில்லை. இப்பொழுதெல்லாம், ஒரு புதிய படகு வாங்கப்பட்டால், படகின் சொந்தக்காரர் ஒருசில உறவினர்களையும், நண்பர்களையும் அழைத்து விருந்து வைக் கின்றார். விருந்துக்காகக் கொல்லப்பட்ட பன்றிகளின், கோழி களின் இரத்தம் படகைச் சுற்றிலும், படகு 'அருந்துவதற்காக'த் தெளிக்கப்படுகின்றது. பல படகுப் போட்டிகளும் நடைபெறு கின்றன. அவைகளில் குறிப்பாகப் புதிய படகும் கலந்து கொள்ளுகின்றது.

ஆவிகளை வணங்கிவந்த பழமைப் பழக்கவழக்கங்களின் நினை வாக, இன்னும் பேய், பிசாசுகளில் மிகுந்த நம்பிக்கைகொண் டிருக்கின்றார்கள். அவர்கள் பேய்களைக் கண்டு அஞ்சி நடுங்குவ தால், இரவில் யாரும் தனியே செல்லுவதில்லை. இரண்டு, மூன்று பேர்களாகச் சேர்ந்தே எங்கு வேண்டுமானாலும் செல்லுகின்ற னர். காடுகள், தோட்டங்களின் அடர்த்தியான வளர்ச்சியும், சில மரஞ்செடி கொடிகளின் இயல்பற்ற தோற்றங்களும் அவர் களுக்கு அச்சமூட்டுகின்றன. இரவில் அவைகளை அவர்கள் சரியாக உணர்ந்துகொள்ள முடிவதில்லை. அதனாலேயே பல பேய்க் கதைகள் தோன்றியுள்ளன. அவைகளைக் கேட்கும் சிறுவர்கள்,

வளர்ந்த பின்னரும், பேய்கள் இருக்கின்றன என்றே நம்பிக் கொண்டிருக்கின்றனர். பேய்களுக்கு மிகவும் பிடித்தமான இடம் என்று கார் நிகோபாரில் உள்ள இந்திய விமானப்படை நிலையத்தைக் கூறுகின்றனர்கள். அது முன்னதாக பிரிட்டிஷ் ராயல் விமானப்படையின்கீழ் இருந்தது. அங்கு பிரிட்டிஷ் அதிகாரிகள் போன்ற பேயுருவங்கள், அழகிய பெண்களுடன் கைகோத்துச் செல்வதுபோல் தென்படுவதாகக் கூறுவார்கள். அந்தப் பேய்களை நிகோபார் மக்கள் மாத்திரம் காணவில்லை; விமானப்படையைச் சேர்ந்த யாரோ ஒருவர், அங்கு இரவில் காவலிருப்பவர்களில் ஒருவர், இரவில் நிலையத்தில் தங்கியிருக்கும் விமானக் குழுவைச் சேர்ந்தவர் ஆகியோர்கள், சில சமயங்களில் இந்தப் பேயுருவங்கள், தங்களின் அழகிய சீமாட்டிகளுடன் கைகோத்துக் கொண்டு உலவியதைக் கண்டதாகக் கூறுகின்றனர்கள்.

முன்பெல்லாம் மக்கள் பல இயற்கை நிகழ்ச்சிகளைக் கண்டு அஞ்சி, அவைகளை இச்சைப்படுத்த சடங்குகள் சிலவற்றை நடத்திவந்தாலும், கடலை வணங்கும் சடங்கு எதுவும் அவர்களிடம் இருக்கவில்லை. மற்ற மக்களிடம் உள்ளதுபோல் இந்து புராணப்படி வருணன் என்றும், தொன்மை கிரேக்க மதப்படி நெப்டியூன் என்றும் இவர்களிடம் இல்லாமை புதுமையாகவேயிருக்கின்றது. நிகோபார் மக்களின் வாழ்வு கடலுடன் ஒட்டியிருப்பதால், அதைக் கண்டு அதிசயிக்கவுமில்லை; அச்சமுறவுமில்லை. அதைக் கடவுளாக வணங்கிக் கொண்டாடுவது அவசியம் என்றே தோன்றவில்லை. அதனாலேயே மதச் சடங்குகளும் கடலைப் பொறுத்து இல்லை.

அத்தியாயம் 17

# பழக்கவழக்கங்கள்

நிகோபார் மக்கள் பிள்ளைப்பேறு சமயத்தில் கடைப்பிடிக்கும் பழக்கவழக்கங்கள், பிள்ளைப்பேறு என்றால் தூய்மையற்ற நிகழ்ச்சி என்ற அடிப்படையில் ஏற்பட்டுள்ளன. கிராமத்தின் முக்கிய மான பகுதிக்கு அப்பால்தான் பிள்ளைப்பேறு நடக்கவேண்டு மென்று கருதுகின்றார்கள். மதமாற்றம் ஏற்பட்ட பின்னருங்கூட அநேகர், பழைய பழக்கவழக்கங்களையே பின்பற்றிவருகின்றனர். எனினும், பிள்ளைப்பேறு சமயத்தில், அநேக இடங்களில் சூனிய வாதிகளின் உதவிகளைப் பெறுவதில்லை.

ஒரு பெண் கருவுற்றிருப்பதை, அவளுடைய மாதவிடாய் நின்றதையும், அவள் வாந்தியெடுப்பதையும் வைத்தே நிகோ பார் மக்கள் தெரிந்துகொள்ளுகின்றனர். கருவுற்றிருக்கும் பெண் கடினமான வேலை செய்யக்கூடாது. அவ்வாறு செய்தால் கருவைப் பாதிக்கும் என்பதில் மிகவும் கவனமாக இருக்கின் றார். குறிப்பாகக் கடினமான வேலை செய்தால் வியர்க்கும், அதனால் பால் குடிக்கும் குழந்தைக்குக் கெடுதல் என்று அவர்கள் கருதுகின்றார்கள். சிலகாலம் முன்புவரை தந்தையும் கடின வேலை செய்யக்கூடாது என்று தாய்க்குச் சொன்ன காரணத் தையே கூறிவந்தார்கள். இருப்பினும், இப்பொழுது தந்தைக் குள்ள கட்டுப்பாடுகள் அவ்வளவாக வற்புறுத்தப்படுவதில்லை. இருந்தபோதிலும் சிலர் தங்கள் மனைவிமார்கள் கருவுற்றிருக்கும் காலையில் கடின வேலை செய்வதில்லை. கருவுற்ற பெண்கள் செரிமானமாவதற்குக் கடினமான உணவு வகைகளைத் தின்ப தில்லை.

சோவ்ரா போன்ற தீவுகளில், சூனியவாதிகளின் ஆதிக்கம் இன்னமும் ஓரளவு இருக்கவேசெய்கின்றது. அங்கெல்லாம் கரு வுற்ற பெண்ணின் கணவன் இளநீர்க் காய்கள், தென்னை ஓலை, தேங்காய் எண்ணெய் ஆகியவைகளைச் சூனியவாதியிடம் தர வேண்டும். அவர் பெண்ணைப் படுக்கவைத்து, பெண்ணின் வயிற்றின்மீது சில இலைகளின் சாறைப் பன்றி இரத்தத்துடன்

கலந்து தடவுகின்றார். பின்னர் அந்தப் பெண் தன்னைக் கழுவிக் கொண்டு ஒரு வெள்ளைத் துணியைக் கழுத்தில் கட்டித் தொங்க விட்டு கருவுற்றிருக்கும் வயிற்றை மறைத்துக்கொள்ளுகின்றாள். கருவினுள் இருக்கும் குழந்தையை தீய ஆவிகள் விழுங்கிவிடா மல் காக்கவே அத்துணியை அவள் அணியவேண்டும் என்று அவர்கள் கருதுகின்றார்கள்.

பிள்ளைப்பேற்று வலி ஆரம்பித்தவுடன், கிராமத்திற்கே பொதுவாக அமைந்துள்ள பிறப்பு இல்லத்திற்கு அந்தப் பெண் ணைக் கொண்டுசெல்லுகின்றனர். இந்த இல்லம், கிராமத்திற்கு அப்பால் கடற்கரையில் ஒரு மூலையில் இருக்கின்றது. கிராமம் முழுவதும் சேர்ந்து அந்த இல்லத்தை நடத்திவருகின்றது. பிறப் புடன் சம்பந்தப்பட்டதால், அது தூய்மையற்றது என்று கருதப் படுகின்றது. அதனாலேயே அதைச் சரிவரக் கவனிப்பதில்லை. இல்லம் சிதலமடைந்த நிலையில் இருக்கின்றது. தந்தையாகப் போகின்றவரும், குடும்பத்ினைச் சார்ந்த நெருங்கியவர்களும் பெண்ணுடன் பிறப்பு இல்லத்திற்குச் செல்லுகின்றனர். பெண் ணின் கணவரும், குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களும் உட னிருப்பதால், பெண்ணிற்கு எல்லா சமயத்திலும் உதவிபுரிய முடிகின்றது.

கிராமங்களில் முன்பெல்லாம் மருத்துவச்சிகள் என்று இல்லை. வயதான சில பெண்களே பிள்ளைப்பேறு வேலைகளைக் கவனித்து வந்தனர். இப்பொழுது கார் நிகோபாரில் அநேகக் கிராமங் களில், பிள்ளைப்பேற்றைக் கவனிக்கப் பயிற்சிபெற்ற மருத்து வச்சிகள் உள்ளார்கள்; சிக்கல் இருக்குமானால் இத்தீவில் இருக் கும் மருத்துவ மனைக்கு உடனே எடுத்துச் செல்லுகின்றனர். மற்றத்தீவுகளில்மருத்துவ மனைக்குச் செல்வது கடினமாகையால், தங்களுக்குத் தெரிந்த குரூரமான வழிகளைக்கொண்டு பிள்ளைப் பேற்றைக் கவனிப்பதைத் தவிர வேறு வழியில்லை.

பிள்ளைப்பேற்றில் தாமதமில்லாமலிருக்கவும், சிசு கருவிலேயே நின்றுவிடாமலிருக்கவும் அல்லது பிசகிவிடாமலிருக்கவும் பெற் றோர்களின் பொருள்கள் வைக்கப்பட்டிருக்கும் பெட்டிகளின் மூடிகள் எல்லாம் திறந்து வைக்கப்படுகின்றன. கிராமத்தில் உள்ள கனமான பொருள்கள், படகுகள் எல்லாம் திருப்பிப் போடப்படுகின்றன. துணிகளில் போடப்பட்டிருக்கும் முடிச் சுக்கள் அவிழ்க்கப்படுகின்றன. உண்மையில், கருவுற்றிருக்கும் காலம் முழுவதிலும் பெண்ணும், அவளுடைய கணவனும்

பெட்டிகளுக்கு ஆணியடித்து மூடுவதுபோன்ற வேலைகளைச் செய்வதில்லை. இந்த மூடநம்பிக்கைகள் படிப்படியாக மறைந்து வருகின்றன. கார் நிகோபாரில் இப்பொழுது அநேகமாக மறைந்துவிட்டன.

சோவ்ரா, மற்றும் சில பின்னடைந்த இடங்களில் சூனிய வாதிகள் பிரசவ சமயத்தில் உடனிருக்கின்றார்கள். அவர்கள் வழக்கமாக எதுவும் செய்வதில்லை. அவள் கொடிய வலியில் துடிப்பதைப் பார்த்துக்கொண்டேதான் இருக்கின்றார்கள். எனினும், சில சமயங்களில் பெண்ணின் வயிற்றைத் தொட்டுப் பார்த்து, பிள்ளையைப் பெறுவதற்குத் தடையாக வீட்டில் சில பொருள்கள் இருப்பதாகக் கூறுகின்றார்கள். அவைகளை அழித்து ஒழிக்கும்படி உத்தரவிடப்படுகின்றது. அப்புறமும் பிள்ளை பெறுவது சுலபமாகாவிட்டால் கணவனைக் கடலுக்குச் சென்று கடலலைகள்மீது மிதந்து சறுக்கி விளையாடும் ஆட்டத்தை ஆடச் சொல்லுகின்றார்கள். பிள்ளைப்பேறு விரைவில் நடைபெறச் சில இலைகளின் சாற்றையும் சூனியவாதிகள் தருகின்றனர்.

பிள்ளைப்பேறு முடிந்தபின்னரும், தாய் இன்னமும் தீட்டிலேயே இருப்பதாகக் கருதுவதால், அவள் துணிமணிகளையோ, உணவையோ தொட அனுமதிப்பதில்லை. கணவனும், குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களும் அவளைக் கவனித்துக்கொள்ளுகின்றனர். குடும்பத்திலுள்ள வேறு சிலர் கிராமத்திலிருந்து உணவைப் பிறப்பு இல்லத்திற்குக் கொண்டுவருகின்றனர். குழந்தை பிறந்த ஒரு வாரத்திற்குப் பின்னர், தாயும் சேயும் மற்றக் குடும்ப உறுப்பினர்களுடன், பிறப்பு இல்லத்திற்குப் பின்னிருக்கும் சில குடிசைகளுக்குச் செல்லுகின்றார்கள். இன்னமும் கிராமத்திற்குப் புறம்பாகவே வசிக்கின்றார்கள். ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒரு குடிசை உள்ளது. இத்தகைய குடிசைகள் கரையிலிருந்து ஒதுக்குப்புறமாக 50—60 கஜ தூரத்திலிருப்பதைக் காணலாம். குழந்தை பிறந்ததிலிருந்து சுமார் ஆறு மாதத்திலிருந்து ஒரு வருடம் வரை தாயும், சேயும், மற்றும் குடும்பத்தின் நெருங்கியவர்களும், பிள்ளைப்பேற்றினால் ஏற்பட்ட தீட்டை முழுவதும் நீக்குவதற்காக வசிக்கின்றார்கள். இந்தக் குடிசைகளில் சமையலும் நடைபெறுகின்றது. ஒரு மாதத்திற்குப் பின்னர் தந்தை அன்றாட வேலைகளுக்குப் போக அனுமதிக்கப்படுகின்றார். எனினும், அவர் தூங்குவதற்கு அங்கேயே திரும்பிவரவேண்டும்.

தங்கள் சொந்த வீட்டுக்குக் குடும்பம் திரும்பும்பொழுது பிறப்பு சமயத்திலும், பிறப்புக்குப்பின் குடிசைகளிலும் பயன் படுத்திய பாய்கள், துணிகள், பாத்திரங்கள் ஆகிய அனைத்தை யும், அவைகளைத் தீட்டு என்று கருதுவதால், அங்கேயே விட்டு விட்டுச் செல்லுகின்றனர்.

பொதுவாகவே பிள்ளைப்பேறு சமயத்திலும், அதற்கு அடுத் தாற்போன்றும் குழந்தைகளையும், தாய்மார்களையும் நன்கு கவனித்துக்கொண்டபோதிலும், பிறப்பு இல்லங்கள் தூய்மை யுடன் இல்லாமையால், பிறப்பின்போது சேய்கள் மரணமும், தாய்மார்கள் மரணமடைவதும் மிக அதிகமாகவுள்ளன. எனினும், கார் நிகோபாரில் மக்கள் தூய்மையுடன் இருக்கப் பழகிவருவதாலும், சிக்கலான பிள்ளைப்பேறுகளை மருத்துவ மனைக்கு அனுப்பிவிடுவதாலும் சேய், தாய் மரண விகிதம் குறைந்துவருகின்றது.

நிகோபார் மக்கள் குழந்தைகளிடம் வெகு அன்பாக இருந்தா லும், குழந்தைகள் பிறப்பினை விருந்துவைத்துக் கொண்டாடுவ தில்லை. கிருஸ்துவக் குடும்பங்கள் மாத்திரமே குழந்தைகளின் முதற் மதச்சடங்கு தினத்தன்று சிறிய அளவில் விருந்துவைக் கின்றனர். அந்த விருந்தினுக்கு மருத்துவச்சியையும், பிள்ளைப் பேற்றில் உதவிபுரிந்த மற்றவர்களையும் அழைக்கின்றனர். இந்த விருந்து அல்லாமல், மருத்துவச்சியும், மற்றவர்களும் செய்த சேவைக்கு வேறெதுவும் தருவதில்லை. சமுதாயத்தைச் சேர்ந்த மற்ற உறுப்பினர்களுக்குச் செய்யும் உதவிகளுக்குக் கைம்மாறு பெறுவது வெறுக்கத்தக்கது; வாழ்க்கைக்கே புறம் பானது என்று அவர்கள் கருதுகின்றனர். சூனியவாதிகளின் உதவி பெறப்படும்பட்சத்தில், அவர்கள் செய்யும் சேவைக்கு இரண்டு கஜங்களில் துணி வகைகள், சில கோழிகள் ஆகியவை குழந்தை பிறந்த சில நாட்களுக்குப்பின் தரப்படுகின்றன.

நிகோபார் கிருஸ்துவர்களுக்கு, குழந்தைகளுக்கு முதற் மதச் சடங்கு செய்வது மிக முக்கியமானது. குழந்தை நல்ல திடமுடன் இருந்தால், அந்த மதச்சடங்கு, பிறந்த 15 அல்லது 20 நாட்களுக் குள் நடைபெறுகின்றது. திடமில்லாமல் இருந்தால் நீண்ட நாட்களுக்குப்பின் நடைபெறும். குழந்தை நலம் குன்றி, உயிர் பிழைக்காது என்றிருந்தால், பிறப்பு இல்லத்திலேயே குழந்தைக் குப் பாதிரியார் முதற் மதச் சடங்கை நிறைவேற்றிவைக்கின்றார். இந்த மதச்சடங்கு காரணமாக, பிறக்கும் குழந்தைகளின் பிறந்த

நாட்கள் முதலானவை குறிக்கப்படுகின்றன. இந்த வழக்கம் இதற்கு முன்பு இல்லை. பழைய தலைமுறைகளைச்சேர்ந்த முதிய வர்கள் எவருக்கும் அவர்களுடைய பிறந்த தினங்கள் தெரியாது.

அந்த முதற் மதச்சடங்கின்போது குழந்தைகளுக்குப் பெயரிட வும் செய்கின்றனர். இதல்லாமல் குழந்தை பிறந்தவுடனேயே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், குறிப்பாகத் தந்தை குழந்தைக்கு ஒரு பெயரிடுகின்றார். சில சமயம் மதச்சடங்கின்போது குழந் தைக்கு இடும் பெயரும், முதலில் இடும் பெயரும் ஒன்றாக இருக் கின்றது. ஆனால், வழக்கமாக அப்பெயர்கள் மாறுபட்டிருக் கின்றன. இந்த வழக்கத்தில் பழைய நம்பிக்கையொன்று எதி ரொலிக்கின்றது. அதாவது, தீய ஆவிகளை ஏமாற்றவும், அவை களினால் குழந்தைகளுக்கு எந்தக் கெடுதலும் நேராமல் தடுக்க வும், அன்றாட வாழ்வில் குழந்தைகளைக் கூப்பிடும் பெயரும், குழந்தையின் உண்மையான பெயரும் மாறுபட்டிருக்கவேண்டும் என்று அவர்கள் கருதுகின்றார்கள். அவர்கள் மதம் மாறிய பின்னரும், புத்தொளி பெற்றிருந்தும், பழைய நம்பிக்கைகள் அவர்கள் மனதில் ஊறிப்போயிருக்கின்றன என்பதையே இது காட்டுகின்றது.

சூனியவாதப் பழக்கங்கள் இன்னமும் தொடர்ந்து இருந்து வரும் சோவ்ராத் தீவிலும், மற்ற இடங்களிலும் குழந்தை நடக்க ஆரம்பித்து ஓரிரு ஆண்டுகள்வரை பெயரிடப்படுவதில்லை. அதன் பின்னர் பெயர்சூட்டு விழாவிற்கு சூனியவாதிகள் அழைக்கப்படு கின்றனர். கோழிகள் கொல்லப்பட்டு, அவைகளின் இரத்தத் துடன் சில இலைகளைக் கலக்கி குழந்தையின் உடல்மீது தடவு கின்றார்கள். சிறந்த குணங்களைக்கொண்டவர் என்று பெயர் பெற்றவர் தடவுகின்றார். அவ்வாறு தடவுவதற்கு அவர் தேர்ந் தெடுக்கப்பட்டதின் காரணம், அவருடைய குணநலன்களைப் பின்பற்றி அக்குழந்தையும் நடக்கவேண்டும் என்பதேயாகும். இவ்விழாவின்போது குழந்தைக்குப் பெயரிடப்படுகின்றது.

முன்பெல்லாம் குழந்தைகளின் சொந்தப் பெயர் நிகோபார் மொழியிலே இருந்தது. ஆனால், அன்றாடம் அவர்களைக் கூப்பிடும் பொழுது இந்தி அல்லது ஆங்கில மொழிப் பெயர்களிலேயே அழைக்கப்பட்டனர். அவர்கள் அயலார்கள் அன்றாடம் பேசு வதைக் கேட்டுத் தெரிந்துகொண்ட சில வார்த்தைகளை, அர்த்தம் தெரிந்தோ தெரியாமலோ பயன்படுத்தினர். 'கிங் பிஷர்' (Kingfisher), 'ஸ்கேர்குரோ' (Scarecrow), 'பிஸ்கட்'

(Biscuit), 'போர்ட் பிளேர்' (Port Blair), 'எஸ் பிளீஸ்' (Yes Please), 'ஹிஸ் மெஜெஸ்டி' (His Majesty), 'டின் ஓபனர்' (Tin Opener) முதலிய பெயர்களைக் காணலாம். எனினும், அநேகர் கிருஸ்துவர்களாக இருப்பதால், உலகெங்கிலும் வழங்கப்படும் கிருஸ்துவப் பெயர்களே தரப்படுகின்றன. ஆனால் பழைய சூனிய வாதம் இடம்பெற்றிருக்கும் இடங்களில், இரு பெயர்கள் தரும் பழைய பழக்கம் நீடிக்கின்றது.

குழந்தையை நன்கு கவனித்துக்கொள்ளுகின்றனர். ஒவ்வொரு நாளும் வெதுவெதுப்பான நீரில் குளிப்பாட்டுகின்றனர். பெரிய முற்றாத முழுத் தேங்காய்மூடியில் தண்ணீரைக் கொதிக்க வைக்கின்றார்கள். அது தண்ணீர் நிறைந்திருக்கும்போது எரிந்து விடுவதில்லை. குழந்தை இரண்டு மாதமானவுடன், சோவ்ராப் பானைகளில் தண்ணீர் சுடவைக்கின்றனர். இதற்கெனவே சோவ்ராவிலிருந்து பானைகளைக் கொண்டுவருகின்றனர். அவைகளைச் சுத்தமானதாகக் கருதுகின்றனர். குழந்தையைக் குளிப்பாட்டியவுடன், தேங்காய் எண்ணெய் தேய்த்து நெருப்பருகில் வைத்து குழந்தைக்குச் சூடுபடும்படிச் செய்கின்றனர் அல்லது தங்கள் கைகளை நெருப்பருகில் காட்டிச் சூடேற்றிக் குழந்தைக்கு ஒத்தணம் தருகின்றனர். அப்பொழுது மிகுந்த வெயில் தினமாக இருந்தாலும் அவ்வாறு செய்கின்றனர்.

குழந்தைகளும், இளஞ்சிறார்களும் துணிகள் எதுவும் அணிவதில்லை. அயலார்முன் எடுத்துச் செல்லும்போது அல்லது குளிராக இருக்கும்போது ஆடைகளை அணிவிக்கின்றனர். அந்த ஆடைகள் வீடுகளிலேயே தைக்கப்பட்டதாகயிருக்கும் அல்லது ஆயத்த ஆடைக் கடைகளில் வாங்கப்பட்டதாகயிருக்கும்.

குழந்தைகளுக்குத் தாய்ப்பால் கொடுப்பதில் கால வரையறை எதுவுமில்லை. சிலர் குழந்தைகளுக்கு ஒன்றரை வருடம்வரை கூடப் பால் தருகின்றனர். மற்றும் சிலர் சில மாதங்களுக்கே தருகின்றனர். எனினும், ஒரு சில மாதங்களுக்குமேல் அவர்களால் குழந்தைகளுக்குப் பால் தரமுடிவதில்லை. ஏனென்றால், அவர்கள் மீண்டும் கருவுற்றுவிடுகின்றனர். குழந்தைக்குத் தாய்ப்பாலுக்குப்பின் முதலுணவாக இளநீர்த் தேங்காயின் வழுக்கையுடன் பண்டானுஸ் மாவுப்பசையைக் கலக்கி, தேங்காய் மூடியில் சூடாக்கி, கூழ்போலானதும் தருகின்றனர். தாய்ப்பால் அல்லாமல் வேறு பால் எதுவும் குழந்தைகளுக்குப் புகட்டுவதில்லை. வேறு பால் கிடைக்காமை ஒரு காரணம். இரண்டாவது, இள

நீர் வழுக்கையும், பண்டானுஸ் மாவுப்பசையும் கலந்த உணவை யும்விட, வளரும் குழந்தைகளுக்கும் சிறுவர்களுக்கும் ஏற்ற சத்துணவு இல்லையென்றும் அவர்கள் கருதுகின்றனர். ஆனால், சமீபத்தில் சில மேம்பட்ட குடும்பங்களில் புட்டிப்பால் தரப்படு கின்றது. அதை விதிவிலக்கு என்றே கூறவேண்டும்.

குழந்தைகளையும் இளஞ்சிறுர்களையும் நன்கு கவனித்துக் கொள்ளுகின்றனர். அவர்களை நாள் முழுவதும் கவனித்துக் கொள்ளவேண்டியது அவர்களுடைய உடன்பிறப்பாளர்களின் பொறுப்பாகும். முதியவர்கள் குழந்தைகளை உச்சிமுகர்ந்து, ஆரத் தழுவி, மிகச் செல்லமுடன் வளர்க்கின்றனர். குழந்தை களைக் கைகளிலேயே வைத்துக்கொண்டிருக்கின்றார்கள். எப்பொழுதாவதுதான் பாய்களில் கிடத்துகின்றனர்.

குழந்தையின் தலைமயிரை முதலில் மொட்டையடிக்கும் பொழுதோ, அதற்கு முதலில் உணவு ஊட்டும்பொழுதோ எந்தப் பரம்பரையான சடங்கும் இல்லை. உண்மையில் ஒரு குழந்தைக் குப் பெயர் வைத்தவுடன், அது வளர்ந்து திருமணம் ஆகும் வரையிலும், அதன் வாழ்வில் வேறு சடங்குகள் எதுவுமில்லை.

நிகோபார் மக்களின் பரம்பரையான திருமணச் சடங்கு மிகவும் எளிதானது. ஒரு பையனும், பெண்ணும் ஒருவரை யொருவர் விரும்பி, அவர்கள் அடிக்கடி பாலுறவுகொள்ளத் துவங்கினால், முதியவர்கள் அவ்வுறவை முறைப்படுத்தத் திரு மணம் செய்து அவர்களை இணைத்துவைக்கின்றனர். அப்பொழுது சில எளிய சடங்குகள் நடத்தப்படுகின்றன. இச்சடங்குகள் தீவுக்குத் தீவு மாறுபடுகின்றன.

சூனியவாதம் ஆதிக்கம்கொண்டிருக்கும் இடங்களில், பரம் பரையான திருமணச் சடங்குகளையே கடைப்பிடித்து வரு கின்றனர்.

சோவ்ராவில், இரவில் நடனம் ஆடும்பொழுதே காதல் விவகாரம் ஆரம்பமாகின்றது. அப்பொழுதுதான் இளைஞர்களும் பெண்களும் சந்திக்கும் வாய்ப்பு ஏற்படுகின்றது. ஒரு பையனும், பெண்ணும் ஒருவரையொருவர் விரும்பினால், காட்டில் ஓர் இடத்தில், முன்னேற்பாட்டின்படி சந்திக்கத் துவங்குகின்றார்கள். அவர்கள் காதல் பாட்டுகள் பாடியேப் பேசிப் பழகுகின்றனர். நீண்ட நாட்கள் இவ்வாறு சந்தித்துக் காதல் முற்றியதும், பரஸ்பர சம்மதத்தின்பேரில், பெண்ணின் வீட்டிற்குப் பையன் ஒவ்வொரு இரவும் சென்று பாலுறவுகொள்ளுகின்றான்.

இவ்வாறு அவர்கள் இருவரும் தொடர்ந்து ஓரிரு மாதங்கள் சந்தித்துக்கொண்டிருந்தால், பெண்ணின் பெற்ருேர்கள், பையனின் பெற்ருேர்களுக்கு அறிவித்து, பெண்ணைப் பையனின் வீட்டுக்கு அனுப்பிவைக்கின்ருர்கள். பையனின் தந்தை குடும்பத் தலைவருக்கு அறிவிக்க, அவர் தீவின் தலைவரிடம் கலந்து ஆலோசிக்கின்ருர். பையனுக்கும், பெண்ணுக்குமுள்ள உறவை முறைப்படுத்தத் தலைவர் முடிவு செய்தவுடன், குடும்ப உறுப்பினர்களின் கூட்டமொன்றைக் கூட்டி, அவர்கள் சம்மதத்துடன், திருமணத்தை நடத்த ஒரு நாளைக் குறிக்கின்றனர். பெண்ணின் பெற்ருேர்கள் கேட்டிருக்கும் பன்றிகள், துணிமணிகள், தென்னை மரங்கள், கோழிகள், சேனைக்கிழங்குகள், வெள்ளிக்கம்பி முதலான பொருள்களில் ஏதாவது பொருள்களை ஒவ்வொருவரும் தரும்படிக் குடும்ப உறுப்பினர்களைக் குடும்பத் தலைவர் கேட்டுக் கொள்ளுகின்ருர்.

எல்லா ஏற்பாடுகளும் முடிவுற்றவுடன், பெண்ணை அவள் வீட்டிற்கு அனுப்பிவிடுகின்றனர். மாலையில் பையனின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாப் பொருள்களையும் எடுத்துக் கொண்டு பெண் வீட்டிற்குச் செல்லுகின்றனர். பெண்ணின் தந்தை திருப்தி தெரிவித்ததும், தனது மகளை பையன் வீட்டிற்கு சில பெண்கள் நடத்திச்செல்ல அனுமதிக்கின்ருர்.

பையன் வீட்டில், பையனின் தலைமுடியும், பெண்ணின் தலைமுடியும் மொட்டையடிக்கப்படுகின்றன. அவர்கள் வெள்ளைத் துணி உடுத்திக்கொள்ளுகின்றனர். வீட்டின் ஒரு மூலையில் வெள்ளைத் துணியைத் தொங்கவிட்டு, அந்த துணி மறைவுக்கு மணமக்களை சூனியவாதிகள் அழைத்துச் சென்று விட்டுவிடுகின்றனர். அதாவது மற்றவர்களின் பார்வையிலிருந்து மணமக்களை மறைத்துவிடுகின்ருர்கள். வாட்டப்பட்ட பன்றி இறைச்சியை அங்கே மணமக்கள் உண்ணுகின்றனர். பின்னர் ஓர் ஆண் சூனியவாதி, அவர்களைக் கடலில் மூழ்கி எழுந்திருக்கக் கூட்டிச் செல்லுகின்ருர்.

கடலில் மூழ்கி, வீடு திரும்பியதும் விருந்து ஆரம்பமாகின்றது. விருந்தினர்கள் மணமக்களுக்குப் பன்றிகளையும், சேனைக்கிழங்குகளையும், பானைகளையும் பரிசளிக்கின்றனர். விருந்துக்குப் பின்னர் பையனின் தந்தை உணவுப்பொருள்கள் நிறைந்த கூடை ஒன்றை மணமக்களுக்கு எடுத்துக் கொடுக்கின்ருர். ஒரு குறிப்பிட்ட நேரத்தில், மற்றவர்கள் எல்லோரும் உறங்கிக்கொண்டிருக்கும்

வேளையில் ஓர் இரகசியமான இடத்திற்கு அவர்கள் சென்று, அங்கேயே சில நாட்களுக்கு மறைந்து இருக்கின்றார்கள். மறைந்திருக்கும் இடத்தில், பெண்ணுக்குக் கணவன் மூன்று அறிவுறுத்தல்களைக் கூறுகின்றான்: (1) அவள் மணமாகாத பெண்ணைப் போல் நடந்துகொள்ளக்கூடாது. (2) வெற்றிலை மென்று பற்களைக் கறுப்பாக்கிக்கொள்ளவேண்டும். (3) அவள் நடனமாடக்கூடாது. அவர்கள் வாழ்வின் பசுமையான காலம் அழிந்துவிட்டதென்பதையே, மொட்டைத் தலைகள் குறிக்கின்றதையும் அவன் சுட்டிக்காட்டுகின்றான். இனிமேல் அவர்கள் வயது முதிர்ந்தவர்கள்போல் வாழவேண்டும் என்றும் அவன் சொல்லுகின்றான். இவ்வாறு இரகசியமான இடத்தில் நான்கு முதல் ஏழு நாட்கள்வரை இருந்த பின்னர், மணமக்கள் தங்கள் வீடு திரும்புகின்றனர்.

நிகோபார் பகுதியில் உள்ள சோவ்ராத் தீவில் மாத்திரமே, திருமணத்தின்போது, பையனின் குடும்பத்தினர் பெண்ணின் குடும்பத்திற்கு பரிசாகப் பொருள்கள் தரவேண்டும். மற்ற தீவுகளில் திருமணத்தின்போது பெண் வீட்டாரும் சரி, பையன் வீட்டாரும் சரி, யாரும் பரிசுப் பொருள்கள் தருவதில்லை.

கிருஸ்துவர்களாக மாறிவிட்ட மக்கள் வாழும் கார் நிகோபாரிலும், மற்ற இடங்களிலும் பழைய பழக்கவழக்கங்கள் கைவிடப்பட்டுவிட்டன. திருமண வயது மாறுபடுகின்றது. பொதுவாக பையன்கள் வயது 20இலிருந்து 28 வரையும், பெண்கள் வயது 16இலிருந்து 20 வரையும் இருக்கின்றது.

நிகோபார் கிருஸ்துவர்கள் தங்கள் வாழ்க்கைத் துணையைத் தேடிக்கொள்வதில், அவர்களாகப் பார்த்து முடிவு செய்து கொள்ளுவதும், பெற்றோர்கள் ஏற்பாடும் செய்வதும் இருக்கின்றது. நிகோபார் சமுதாயத்தில் இன்னமும் தாராளமாகக் கலந்து பழகும் முறை உள்ளது. முதியவர்கள் முன்பு பையன்களும் பெண்களும் பேசிக்கொள்வதற்குத் தடையெதுவும் இல்லை. எனினும் இளம் வாலிபர்களும், பெண்களும் தனிமையில் சந்திக்கக்கூடாது; திருமணமாகும் முன்பு பாலுறவுகொள்ளக் கூடாது என்ற கட்டுப்பாடு இருக்கவே செய்கின்றது. தாராளமாகக் கலந்து பழகுவதால் திருமண வயதில் உள்ள வாலிபன் ஒரு பெண்ணிடம் காதல் கொள்கின்றான். அவன் தன் காதலைக் கடிதம் எழுதித் திருமணம் செய்துகொள்வதாக அவளுக்குத் தெரிவிக்கின்றான். அவளும் அவனை விரும்பித் திருமணம் செய்து

கொள்ள சம்மதித்தால், தன் பெற்றோரிடம் தெரிவிக்கின்றாள். இதுபற்றி ஆலோசிக்கப் பெண்ணின் பெற்றோர்களும், பையனின் பெற்றோர்களும் கூடுகின்றனர். திருமணத்திற்கு அவர்கள் இசையாவிட்டால் அதை பெண்ணிடமும், பையனிடமும் கூறு கின்றார்கள். அவர்களும் தங்கள் பெற்றோர்களின் விருப்பத்தை ஏற்றுக்கொள்ளுகின்றார்கள்.

திருமணத்திற்கு ஒரு வீட்டார் மாத்திரம் இசைந்தால், திருமணம் முடிந்தவுடன், திருமணத்திற்கு சம்மதித்த வீட்டில் மணமக்கள் வசிக்கின்றனர். சில சமயங்களில் பெற்றோர்களின் விருப்பத்திற்கு எதிராகப் பையனும், பெண்ணும் திருமணம் செய்துகொண்டால், இரு குடும்பங்களிலிருந்து இருவரும் பிரிந்து சென்று வாழவேண்டும். இதுபோன்று நடப்பது அரிது. ஏனென்றால், நிகோபார் மக்களின் கூட்டுக் குடும்பத் திட்டத்தின்கீழ், இரு குடும்ப உறவுகளையும் அறுத்துக்கொண்டு, கணவனும், மனைவியும் வாழ்க்கை நடத்துவது என்பது மிகக் கடினம். மேலும் நிகோபார் மக்கள் சிறு வயது முதற்கொண்டே, முதியவர்களின் வார்த்தையை மதித்து நடக்கக் கற்றுக்கொண்டவர்கள். முதியவர்களின் விருப்பத்திற்கு எதிராகச் செல்லும் வழக்கமும் கிடையாது; அவ்வாறு மனதில் நினைக்கும் பழக்கமும் இல்லை. அதே சமயத்தில் இளைஞர்களின் பெற்றோர்களும், அவரவர்கள் தேடிக் கொண்ட வாழ்க்கைத் துணைகளை வழக்கமாக ஏற்றுக்கொள்ளுகின்றார்கள். பையனும், பெண்ணும் ஆர்வமுடன் விரும்பும் இணைப்பைப் பெற்றோர்கள் ஏற்க மறுப்பது, எப்பொழுதாவதுதான் நடைபெறுகின்றது.

இரு குடும்பங்களின் முதியவர்களும் திருமணத்திற்கு கொள்கையளவில் சம்மதம் தெரிவித்தால், பையனின் பெற்றோர்களும், பெண்ணின் பெற்றோர்களும் இரண்டு அம்சங்களையே தீர்மானிக்க வேண்டியவர்களாக யிருக்கின்றார்கள். முதலாவதாக, மணமக்களில் யார் அவருடைய குடும்பத்தை விட்டு, மற்றவர் குடும்பத்தில் சென்று வாழ்வது என்பதாகும். ஆறாவது அத்தியாயத்தில் கூறியபடி, இதை, ஒவ்வொரு குடும்பத்திலும் உள்ள எண்ணிக்கையைப் பொறுத்துத் தீர்மானிக்கின்றார்கள். பையனின் குடும்பத்தில், பெண்ணின் குடும்பத்தைக்காட்டிலும் அதிகம் பேர் இருந்தால், பையன் திருமணத்திற்குப் பின்னர் தன்னுடைய குடும்பத்தை விட்டு, பெண்ணின் குடும்பத்துடன் சென்று வாழுகின்றான். அதுபோன்றே பெண்ணும். இரண்டாவது அம்சம்,

திருமணத்தின் தேதியை நிர்ணயிப்பது. ஆலயத்தின் பாதிரியாரைக் கலந்தாலோசித்து தேதி உறுதிப்படுத்தப்படுகிறது. பாதிரியார் இரு வாரங்களுக்கு, ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும், வழிபாட்டு நேரத்தின்போது, வரவிருக்கும் திருமணம்பற்றி அறிவிக்கின்றார். உலகெங்கிலுமுள்ள கிருஸ்துவர்களின் வழக்கப்படி திருமணம் ஞாயிற்றுக்கிழமைகளில் நடப்பதில்லை.

திருமண தினத்தன்று, கிருஸ்துவர்களின் வழக்கமான திருமணச் சடங்கை, மதாலயத்தில் பாதிரியார் நடத்துகின்றார். இத்திருமண விழாவில் இரு குடும்பங்களைச் சேர்ந்தவர்களும், உற்றார் உறவினர்களும், நண்பர்களும் கலந்துகொள்ளுகின்றனர்.

திருமணத்தின்போது சீர்வரிசை எதுவும் தரப்படுவதில்லை. ஏனென்றால், மணமக்களில் யார் அவர் குடும்பத்தை விட்டு, மற்றவர் குடும்பத்துக்குச் சென்றாலும், சேரும் புதிய குடும்பத்தில், அவருக்கு முழு உரிமையும் 'கிடைத்துவிடுகின்றது. மணமக்களை மற்ற குடும்ப உறுப்பினர்களைப் போலவே காக்க வேண்டிய பொறுப்பு குடும்பத் தலைவருடையதாகிவிடுகின்றது. எனினும் திருமணத்தின்போது சில சமயம் இரு குடும்பத்தினர்களும், மற்ற நண்பர்களும் மணமக்களுக்கு சிறு பரிசுகள் தரவே செய்கின்றார்கள்.

திருமணத்திற்குப் பின்னர் கிராமத்தில் விருந்து நடைபெறுகின்றது. விருந்தில் குடும்பத்தினர்களும், உறவினர்களும், நண்பர்களும், தெரிந்தவர்களும் கலந்துகொள்ளுகின்றனர். விருந்துக்கான செலவை இரு குடும்பங்களுமே பகிர்ந்துகொள்கின்றன. செல்வம் மிக்க குடும்பங்களால் தரப்படும் விருந்துகள் பலமாக இருப்பதுடன், அப்பொழுது ஆடலும், பாடலும், நாடக நிகழ்ச்சிகளும் இருக்கின்றன.

கிருஸ்துவ மதம் பரவியுள்ளதால், நிகோபார் மக்கள் ஒரு மனைவி மாத்திரமே கொண்டிருக்கலாம். மணவிலக்கையும் கிருஸ்துவ மதம் தாழ்வாகவே கருதுகின்றது. அது எப்படியிருப்பினும், நிகோபார் மக்கள் தங்கள் வாழ்க்கைத் துணைவர்களை ஆசையுடன் நேசிப்பதாலும், பொதுவாக ஒத்துழைத்தும், ஆதரவுகாட்டியும் வாழ்வதால், திருமணம் புரிந்துகொண்டு வாழும் எவருடனும் ஒத்துப்போகவே செய்கின்றனர். மணவிலக்கு என்பதே கிடையாது.

கைம்பெண் மறுமணமும் சாதாரணமானது. கைம்பெண்களையும் நன்கு கவனித்துக்கொள்ளுகின்றனர். அவர்களுடைய

கணவரின் வாழ்நாளில் இருந்து வந்த உரிமைகள், சலுகைகள் அனைத்தும் தரப்படுகின்றன. உண்மையில் இந்தியாவிலிருப் பதைவிட, நிகோபார் மக்கள் கைம்பெண்களிடம் அதிகப் பரிவு காட்டுகின்றனர். கைம்பெண்கள் தங்களுடைய அன்றாட வாழ்வில் எந்தவிதமான கட்டுப்பாட்டையோ, கொடுமை யையோ அனுபவிக்க நிகோபார் சமுதாயத்தில் இடமில்லை.

நிகோபார் மக்களுடையதைப் போன்ற சிறியதொரு சமுதாயத் தில், அவர்கள் பார்ப்பதற்கு எப்படியிருந்தபொழுதிலும், எல்லாப் பையன்களுக்கும், பெண்களுக்கும் இறுதியில் திருமணம் செய்துகொள்வதற்கான வாய்ப்புக் கிடைக்கவே செய்கின்றது. எனினும், மக்கள் தங்கள் வாழ்க்கைத் துணைவர்களின் உட லழகுக்கு முக்கியத்துவம் தரவே செய்கின்றார்கள். மேம்பட்ட சமுதாயங்களில் உள்ள மக்கள் எதை உடலழகு என்று கருதுகின் றார்களோ, அதைப்போன்றே நிகோபார் மக்களும் நினைப்பது சுவையுள்ளதாகயிருக்கின்றது. நல்ல நிறம், செதுக்கி வைத்த சிற்பம்போன்ற உடலமைப்பு, நல்ல உயரம், வலுவான உடற் கட்டு ஆகியவைகளைக் கொண்டவர்களையே அழகானவர்கள் என்று கருதுகின்றார்கள். உடலுருவத்தையும் நடையையும் அதிகமாகக் கவனிக்கின்றனர். ஏனென்றால், அவர்களில் அநேகரின் நடையும் சரியில்லை, ஆண்கள் பெருக்கவும் செய் கின்றார்கள்.

நிகோபார் மக்கள் புதுமையான பாலுறவு ஒழுக்கம்கொண் டிருக்கின்றனர். கிருஸ்துவ மதம் பரவியுள்ளதால், பாலுறவு களில் முன்பிருந்து வந்த கண்டிப்பில்லாத போக்கு அநேக இடங் களில் மறைந்துவிட்டது. திருமணங்கள் உறுதிப்பட்டுவிட்டன. இருப்பினும் திருமணத்திற்கு முன்னர், கள்ளத்தனமான பாலுறவுகள் இருக்கவே செய்கின்றன. முதியவர்கள் அதற்கு ஊக்கம் தருவதில்லை. கட்டுப்படுத்தவும் செய்கின்றனர். இளைஞர் கள், வாய்ப்புகள் பல தேடிக்கொண்டு, எங்காவது தனிமையில் சந்தித்துப் பாலுறவுகொள்ளவே செய்கின்றனர். தனிமையான கடற்கரை காடுகளிலே ஒதுங்கிய இடங்கள் எல்லாம், காதல் புரியவும், காதல் காட்சிகளைக் கண்டும் வாய்பேசாத சாட்சியங் களாக நிற்கின்றன. நிகோபார் பெண்களில் கன்னி ஒருத்தியைக் கண்டு மணம்புரிவது முடியாது என்று கூறுவது மிகைப்பட்டது என்றே கூறவேண்டும். எனினும் மற்ற சமுதாயங்களில் இருப்

பதைவிட நிகோபார் சமுதாயத்தில் திருமணத்திற்குமுன் ஆண்–பெண் உறவுகொள்வது அதிகமாகவே யிருக்கின்றது.

இத்தகைய கள்ளத்தனமான உறவுகள் கண்டுபிடிக்கப்பட்டவுடன், அவைகளை முறைப்படுத்தத் திருமணம் செய்து வைக்கப்படுகின்றது அல்லது குற்றவாளிகளைத் தண்டிக்க அபராதம் விதிக்கின்றனர். முறையற்ற உறவில் பிறக்கும் குழந்தைகளைப் பெற்றோர்களின் திருமணத்திற்குப்பின், சட்டபூர்வமாக ஏற்றுக்கொள்ளுகின்றனர். அந்தத் தாயின் குடும்பத்தினர் அக்குழந்தையைக் கவனித்துக்கொள்ளுகின்றனர். முறையற்ற உறவில் பிறந்த குழந்தைக்கு அவச்சொல் எதுவும் சேருவதில்லை. அதுவும் தாயின் குடும்பத்தில் எல்லா உரிமைகளையும், சலுகைகளையும் பெற்றிருக்கின்றது. மணமாகாத தாயையும் தாழ்வாக நினைப்பதில்லை. மீண்டும் அவள் திருமணம் செய்துகொள்ளும் வாய்ப்புகள் இருக்கின்றன.

மணமாவதற்குள் பாலுறவுகள் அடிக்கடி நிகழ்ந்தாலும், கூடாவொழுக்கம் என்பது அவர்களிடம் இல்லை. தங்கள் வாழ்க்கைத் துணைவர்களுடன் இணைந்து வாழுகின்றனர். கிருஸ்துவ மதக் கருத்துக்களின் செல்வாக்கு இடம்பெற்றுள்ளமையாலும், ஒழுக்கக்கேடான எண்ணங்கள் அவர்கள் மனதில் தோன்றுவதில்லை.

பிறப்பின்போதும், திருமணத்தின்போதும் எளிய சடங்குகளைக் கொண்டிருக்கும் நிகோபார் மக்கள், இறப்பின்போது மிக விரிவான சடங்குகளை நடத்துகின்றனர்.

ஆதிக் குடிமக்களின் மனதில் சாவே மிகுந்த அச்சத்தை விளைவித்திருக்கின்றது என்று தெரிகின்றது. சாவைத் தரும் ஆவிகளை இச்சைப்படுத்தவே பல சடங்குகளை வகுத்திருக்கின்றனர். அப்பொழுதுதான் இறந்தவரின் இறுதிப் பயணம் சுலபமாக இருக்கும், உலகினுக்கு அப்பால் செல்வது எளிதாக இருக்கும் என்று அவர்கள் நம்புகின்றார்கள்.

அவர்களுடைய சாவுச் சடங்குகளில் மிக முக்கியமான அம்சங்கள் சில: அவர்களுடைய வீடுகளுக்குப் பின்புறமே கல்லறைகள் இருக்கின்றன. இறந்தவரின் துணிமணிகள், நகைகள், பாத்திரங்கள், புதுமைப் பொருள்கள் அனைத்தும், அடுத்த உலகில் அவருக்குப் பயன்பட, அந்த உடலுடன் புதைக்கப்படுகின்றன. இறந்த உடலை மீண்டும் தோண்டியெடுத்து, மற்றொரு பெரிய சடங்கும், விருந்தும் நடத்திப் புதைக்கின்றார்கள்.

சாவுச் சடங்குகள் தீவுக்குத் தீவு மாறுபடுகின்றன. கிருஸ்துவர்கள் அல்லாதவர்கள் நிறைந்திருக்கும் சோவ்ராவில் இன்னமும் பழமையான இறுதிச் சடங்குகள் இருக்கின்றன. இறந்த பின்னர் அந்த உடல் கடற்கரையில் உள்ள இறப்பு இல்லத்திற்குக் கொண்டுசெல்லப்படுகின்றது. அப்பொழுது ஓரிரு தென்னை மரங்களையும், பழங்கள் தரும் மரங்களையும் வெட்டி வீழ்த்துகின்றனர். பின்னர் அவைகளைப் பயன்படுத்திக்கொள்ளுகின்றார்கள். குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் இறப்பு இல்லத்திற்கு வரும்பொழுது வாழைப்பழங்களையும், 6 அடி நீளத்தில் துணிகளையும், கோழிகளையும் கொண்டுவருகின்றனர்.

இறந்தவரின் புதல்வர்களும், புதல்விகளும் கறுப்புத் துணிகளை அணிந்து, கையிலும் காலிலும் வெள்ளிக்கம்பி நகைகளைப் பூட்டி, முகத்தில், 'பாவோ' என்ற பழச்சாறைப் பூசி சிவப்பாக்கிக் கொள்ளுகின்றனர். கைகளை பின்னே கட்டிக்கொள்ள, முகம் நிலம் நோக்கிக் குனிய, அவர்களைச் சூனியவாதி கிராமத்தைச் சுற்றி அழைத்துச்செல்லுகின்றார். குடும்பத்தைச் சேர்ந்தவர்களின் வீடுகள் அனைத்திற்கும் சூனியவாதி வழக்கமாக அழைத்துச் செல்லுகின்றார்.

இதற்கிடையே பிணத்தைக் கடல் நீரால் குளிப்பாட்டி சுத்தம் செய்கின்றனர். சவப்பெட்டியும் தயாராகின்றது. சில வயதான ஆண்கள் குடும்பத்துக் கல்லறையில் குழி தோண்டுகின்றார்கள். இளைஞர்கள் தோண்டுவதில்லை. அவ்வாறு தோண்டினால், அவர்கள் முன்னதாகவே இறந்துவிடுவார்கள் என்று கருதுகின்றார்கள். பிணக்குழி தயாரானதும், சவப்பெட்டியில் உடலை வைத்து, தோள்களில் சுமந்து கல்லறைக்குக் கொண்டுசெல்லுகின்றார்கள். மற்றவர்கள் எல்லோரும் இறுதியாகப் பார்க்க சவப்பெட்டி சிறிது நேரம் பிணக்குழிக்குப் பக்கத்தில் வைக்கப்படுகின்றது. பின்னர் பிணத்தைத் துணிகளால் போர்த்து, சவப்பெட்டியை மூடுகின்றனர். இறந்தவர் ஆணாக இருந்தால், தலையைத் தீவினுள் வைத்து, கால்களை கடலைப்பார்த்து நீட்டி வைக்கின்றனர். அவர் கடல் பயணத்தில் செல்பவர் என்பதைக் குறிக்கின்றது. பெண்ணாக இருந்தால், தலையைக் கடல் திசையில் வைத்து, தீவைப் பார்த்திருக்கும்படிக் கால்களை வைக்கின்றனர். அதாவது, பெண் தோப்பு துரவுகளைப் பார்த்துக்கொண்டு, கிராமத்தில் வேலை செய்பவள் என்பதைக் குறிக்கின்றது. வெட்டப்பட்ட பழ மரங்களிலிருந்து இரு கால்களை செய்து சவக்

குழியில் நட்டுத் தேங்காய்கள், சேனைக்கிழங்குகள், வாழைப்பழங்கள், பாக்குகள் ஆகியவைகளைத் தொங்கவிட்டு அலங்கரிக்கின்றனர். இறந்தவரின் ஆவி அந்த உணவுகளை உட்கொள்ளும் என்று கருதுகின்றனர். இறந்தவர் ஆணாக இருந்தால் ஒரு துடுப்பும், பெண்ணாக இருந்தால் துடைப்பமும் அந்தக் கால்களில் கட்டப்படுகின்றன. இறந்தவரின் உடைமைகளும், பானைகளும், சவக்குழிமேல் வைக்கப்படுகின்றன.

ஏழு நாட்களுக்குப் பின்னர் ஒரு குறிப்பிட்ட நேரத்தில், குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் சவக்குழியைத் தோண்டி, பெட்டியின் மூடியை வெளியே எடுக்கின்றார்கள். சவப்பெட்டியின் மூடிகளையெல்லாம் ஓரிடத்தில் வைத்துக் காக்கின்றார்கள். பச்சையான தென்னை ஓலைகளால் சவப்பெட்டியைச் சுற்றி, மீண்டும் புதைக்க மற்றொரு இடத்திற்குக் கொண்டுசெல்லுகின்றார்கள். இந்த இடத்தில் கிளைகளுடன் கூடிய எட்டடி உயரம்கொண்ட இரு மரங்களை வெட்டிக் கவட்டைபோல் நட்டு, அவைகளுக்கு நடுவே சவப்பெட்டியைப் புதைத்துவிடுகின்றார்கள். மீண்டும் புதைத்த இடத்தில், ஆண் சூனியவாதி ஒருவர் சிறிய பன்றியொன்றைக் கொல்லுகின்றார். அதை அங்கேயே வாட்டிச் சாப்பிடுகின்றனர். பன்றியிறைச்சியை சிறிது பேய்க்கும் படைக்கிறார்கள்.

மீண்டும் புதைத்தவுடன், குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் கடலில் குளித்துவிட்டு வீடு திரும்புகின்றார்கள். இறந்தவரின் வீட்டில், அவருடைய ஆவிக்கு என்று ஒரு மாதம்வரை உணவு படைக்கின்றார்கள், பின்னர் அந்த உணவை எறிந்துவிடுகின்றார்கள். இரண்டு, மூன்று தினங்களுக்குப் பின்னர் விருந்தொன்று நடத்தப்படுகின்றது. குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் அதில் பங்குகொள்ளுகின்றனர். அதற்காக அநேகம் பன்றிகளும் கொல்லப்படுகின்றன. விருந்திற்குப் பின்னர் சூனியவாதிகள் கூறியபடி மரத்திலான உருவம் ஒன்று வீட்டில் வைக்கப்பட்டதும், சாவுச் சடங்கு முடிவடைகின்றது.

இழவு நாட்களில் இறந்தவரின் நிலம், தென்னை மரங்கள் முதலான சொத்துக்களுக்குத் தீட்டு இருப்பதால், யாரும், அவர் இறக்க விரும்பினாலொழிய அவைகளை அனுபவிக்க முற்படுவதில்லை.

நான்கோவ்ரி, கட்சால் முதலான சில தீவுகளில் சாவு நேரிட்டால், மற்ற தீவுகளிலும், கிராமங்களிலும் உள்ள இறந்தவரின்

நண்பர்களுக்கும், அவரைத் தெரிந்தவர்களுக்கும் செய்தி அனுப்பப்படுகின்றது. தூரந் தொலைவில் உள்ளவர்கள், இறந்தவரின் கிராமத்திற்கு வர நாளாகும் என்பதால், வருபவர்கள் அனைவரும் இறந்தவரைக் காணவேண்டும் என்று ஏழு, எட்டு நாட்கள் உடலைப் புதைக்காமல் வைத்திருக்கின்றார்கள். சாவுச் சடங்கில் கலந்துகொள்ள வருபவர்கள் அனைவரும் கொழுப்பான பன்றியொன்றையும், பல கஜம் துணிகள், சேனைக்கிழங்கு, வாழைப் பழங்கள் ஆகியவையும்கொண்டுவருகின்றார்கள். துக்கமும்,பெரிய அளவில் விருந்தும், புதைக்கப்படும் வரை இருக்கின்றது. இறந்தவரின் உடைமைகள் அனைத்தும் அழிக்கப்பட்டு, அவருடன் புதைக்கப்படுகின்றன. அநேகம் பன்றிகள் கொல்லப்படுகின்றன.

உடலைப் புதைத்த பின்னர், குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும், துக்க காலம் முடியும்வரை ஏதாவது ஓர் உணவையோ, எதையாவது குடிப்பதையோ நிறுத்திவிடுகின்றார்கள். துக்க காலம் ஒரு வருடங்கூட நீடிக்கின்றது. துக்க காலம் முடிவடைந்த பின்னர், சவக் குழியைத் தோண்டி, மண்டையோட்டையெடுத்துக் கடலில் கழுவுகின்றனர். வீட்டுக்கு மண்டையோட்டை யெடுத்துவந்து, வீட்டின் நடுவே வைக்கின்றனர். அதன் முன்னர் உணவைப் படைத்து, துக்கம் கொண்டாடுபவர் அனைவரும், அதிலிருந்தே எடுத்து உண்கின்றனர். இறந்தவரும், வாழ்பவர்களும் ஒன்றாகச் சேர்ந்து உண்ணவேண்டும் என்பதை இது குறிக்கின்றது. இதற்குப் பின்னர், இறந்தவர் சாதாரணமானவராக இருந்தால், மண்டையோட்டை மீண்டும் புதைத்து விடுகின்றார்கள். ஆனால், இறந்தவர் சூனியவாதியாகவோ அல்லது முக்கியமானவராகவோ இருந்தால், இறந்தவரைப் போல் மரத்தில் உருவம் செய்து, அதனுள் மண்டையோட்டை வைத்துவிடுகின்றார்கள். வீட்டினுள் பேய் வராமல் விரட்ட, வீட்டின் நடுவே அந்த மர உருவத்தை வைக்கின்றார்கள்.

கார் நிகோபாரிலும், மற்ற தீவுகளில் அநேக இடங்களிலும் மதம் மாற்றம் காரணமாக, பழமையான சாவுச் சடங்குகள் முழுமையுமாகக் கைவிடப்பட்டன. கார் நிகோபாரில் ஒருவர் மரணத்தறுவாயிலிருந்தால், குடும்பத் தலைவர், உறவினர்கள், நண்பர்கள் ஆகியோர் அருகிலிருக்கும்படி கூப்பிடுகின்றார்கள். இறப்பவர் கிராமத் தலைமகனாகவோ அல்லது மிக முக்கியமானவராகவோ இருந்தால், எல்லா கிராமங்களின் தலைமகன்களும், தீவிலுள்ள மற்ற முக்கியமானவர்களும் அழைக்கப்படுகின்ற

னர். சாவு நிகழ்ச்சியைத் தூய்மையற்றது என்று கருதுவதால், மரணத்தறுவாயிலிருப்பவரைக் கிராமத்தின் இறப்பு இல்லத்திற்குக் கொண்டுசெல்லுகின்றனர். அது கிராமத்திற்கு அப்பால் கடற்கரையில் பிறப்பு இல்லத்திற்கு அருகில் உள்ளது.

இறப்பவரை இறப்பு இல்லத்திற்குக் கொண்டுபோக நேரமில்லாமல், வீட்டிலேயோ அல்லது வேறு எங்கேயோ மரணமடைந்துவிட்டாலும், பிணத்தை உடனடியாக இறப்பு இல்லத்திற்குக் கொண்டுசெல்லுகின்றனர். உடலைக் கால்கள் முன்பிருக்க சுமார் பத்து பேர், மிக நெருங்கிய குடும்பத்தவர்கள், தூக்கிச் செல்லுகின்றனர்கள். இறப்பு இல்லத்தில் சவத்தைத் தலைப்பக்கம் நுழைவாயிலை நோக்கி இருக்கும்படி கிடத்துகின்றனர். பின்னர் சவத்தைக் குளிப்பாட்டிப் புதிய வெள்ளைத் துணி உடுத்துகின்றனர். தலையையும், முகத்தையும் மூடுவதில்லை. உடலருகே மெழுகுதிரிகளும், ஊதுபத்திகளும் கொளுத்திவைக்கின்றனர்கள். மற்றவர்கள் வந்து இறுதி மரியாதை செலுத்திச் செல்லும்வரை, நறும்புகை மணம் இருக்கின்றது. இறுதி மரியாதை செலுத்த வருபவர்களும், துணிகளும், ஊதுபத்திகளும், மெழுகுதிரிகளும் கொண்டுவருகின்றனர்.

இதற்கிடையே இறந்தவரின் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் சாதாரண மரத்தில் சவப்பெட்டியைத் தயாரித்து, இறப்பு இல்லத்திற்கு எடுத்துவருகின்றனர். இறப்பு இல்லத்திற்கு வந்தவர்கள் கொண்டுவந்த துணிகளையே உடல்மீதும், சவப் பெட்டிமீதும் போர்த்துகின்றனர்கள். துணிகள் அதிகமாக இருந்தால், குடும்பம் தனது சொந்த உபயோகத்திற்கு எடுத்துக் கொள்ளுகின்றது. அதற்குத் தீட்டு எதுவும் இல்லை என்பது புதுமையாகயிருக்கின்றது.

இறப்பு இல்லத்திலேயே சவப்பெட்டியில் உடலைவைத்துப் பெட்டியை மூடுகின்றனர்கள். சிவப்பு, வெள்ளைத் துணியால் சவப்பெட்டியை போர்த்துவிடுகின்றனர். வயது முதிர்ந்தவராக இருந்தால், வழக்கமாகப் பயன்படுத்தும் வெள்ளைத் துணிக்குப் பதிலாகக் கறுப்புத் துணியை உபயோகப்படுத்துகின்றனர்கள். சவப்பெட்டியை குடும்பத்தைச் சேர்ந்த ஆண்கள் இறப்பு இல்லத்திலிருந்து எடுத்துச் செல்லுகின்றனர். அப்பொழுதும் சவத்தின் கால்கள், முன் இருக்கும் வகையிலேயே எடுத்துவருகின்றனர். இறப்பு இல்லத்திலிருந்து சவப்பெட்டியை மதாலயத்திற்கு எடுத்துச் சென்று இரங்கல் வழிபாடு முடிந்தவுடன், கல்லறைக்கு

கொண்டுசெல்கின்றனர் அல்லது நேராகக் கல்லறைக்குச் சவப் பெட்டி சென்றதும் அங்குப் பாதிரியார் இறுதிச் சடங்கை நடத்தி வைக்கின்றார்.

கடற்கரையில் இறப்பு இல்லத்திற்கு அருகே, கிராமத்திற்கே ஒரு பொதுக் கல்லறை நிலம் உள்ளது. அதற்கு வேலியும் போடப்பட்டிருக்கின்றது. முன்பெல்லாம் ஒவ்வொரு குடும்பத் திற்கும், வரிசையாக இருக்கும் வீடுகளுக்குப்பின்னே ஒரு இடுகாடு இருந்து வந்தது. அவை சுகாதாரக் கேடு பயக்கக்கூடியதாக, தீயபழக்கமாக இருந்து வந்த நிலை இப்பொழுது மாறிவிட்டது. ஒவ்வொரு கல்லறையும் நன்கு கட்டப்பட்டு மரத்தாலான சிலுவையும் வைக்கப்பட்டிருக்கின்றது. சில கல்லறைகளும், சிலுவைகளும் சிமென்டாலேயே கட்டப்பட்டிருக்கின்றன. கல்லறைக் குழி வழக்கமாக 3 அல்லது 4 அடி ஆழம் தோண்டப் படுகின்றது. சவப்பெட்டி கிழக்கு மேற்காக, கால் பாகம் கிழக்கு நோக்கி இருக்கச் சவக்குழியில் வைக்கப்படுகின்றது. கல்லறையை மூடும்போது, பாதிரியார் சவப்பெட்டிமீது மூன்று கைம்மண் அள்ளிப்போட குடும்பத்தைச் சேர்ந்தவர்களும், மற்றவர்களும் அவ்வாறே செய்கின்றார்கள். கல்லறையை உறுதியாகக் கட்ட வேண்டுமென்றிருந்தால், பின்னர் காரை பூசுகின்றார்கள்.

புதைத்த பின்னர், மற்றவர்கள் வீடு திரும்பலாம். ஆனால் துக்கம் கொண்டாடுபவர்கள், உடலையும் சவப்பெட்டியையும் தூக்கியவர்கள், துக்க காலம் முடியும் வரை இறப்பு இல்லத்தி லேயே இருக்கவேண்டும். அவர்கள் தீட்டுப்பட்டவர்களாகக் கருதப்படுகின்றார்கள். மேலும், முன்பு கூறியபடி, ஒரு சாவு நேர்ந்துவிட்டால், முதியவர்கள் தண்ணீர் எடுக்கும் சுத்தமான சில கிணறுகளைக்கூட மூடிவிடுகின்றார்கள். சடலத்தினால் காற்று தூய்மையற்றதாகி, அதனால் கிணற்று நீரும் கெட்டுவிடும் என்று அவர்கள் அவ்வாறு செய்கின்றார்கள்.

அவர்கள் வசிக்கும் வீட்டில் சாவு நேர்ந்துவிட்டால், இறந்த இடம் சுத்தம் செய்யப்படுவதுடன், இறந்தவரின் சொந்த உடைமைகளை மற்ற உறவினர்களுக்குப் பிரித்துக் கொடுத்து விடுகின்றார்கள். சிலவற்றை எரித்துவிடுகின்றனர். இறந்த வரின் சொந்த உடைமைகளைத் தொடுவதோ, அந்த வீட்டில் உள்ளவர்கள் வெளியில் சென்று கலந்து உறவாடுவதோ, இறந்தவர் வீட்டிற்கு வருவதோ, இறந்தவுடன் உண்பதோ தீட்டில்லை.

7 முதல் 15 நாட்கள்வரை நீடிக்கும் துக்க காலம் முடிவடைந்தவுடன், துக்கம் கொண்டாடுபவர்கள் குளித்துவிட்டு வீடு திரும்புகின்றார்கள். சுத்தமான கிணறுகள் திறக்கப்படுகின்றன. வழக்கமாக துக்க காலம் முடிவடையும் தினத்தன்று, கல்லறை மீது சிலுவையை நாட்டுகின்றார்கள்.

அந்த தினத்தன்று, இறந்தவரின் குடும்பத்தினர் விருந்தொன்றும் வைக்கின்றார்கள். சாதாரணமானவர்கள் என்றால் விருந்து சிறிய அளவிலேயே நடைபெறுகின்றது. ஒரு சிலரையே விருந்திற்கு அழைக்கின்றனர். ஆனால் கிராமத் தலைமகன் அல்லது குடும்பத் தலைவர் போன்ற முக்கியப் பிரமுகர் என்றால், மற்ற சடங்குகள் ஒரேமாதிரியாக இருந்தாலும், எல்லா கிராமங்களைச் சேர்ந்த தலைமகன்களும், தீவிலுள்ள முக்கியப் பிரமுகர்களும் விருந்துக்கு அழைக்கப்படுகின்றனர்.

சில சமயம், ஆறாவது அத்தியாயத்தில் கூறியுள்ளபடி, இறந்தவருக்குச் சொந்தமான தென்னந்தோப்பின் ஒரு பகுதியில் 'டகோயா'க் குறியிட்டு விடுகின்றார்கள். அந்தக் குறி இருக்கும்வரை, எவரும் தேங்காய்களைப் பறிக்கக்கூடாது. இறந்தவரின் ஆவி அனுபவிப்பதற்காக முன்பெல்லாம் தென்னந்தோப்பின் ஒரு பகுதியை விட்டு வைத்தார்கள். தேங்காய்கள் ஆயிரக்கணக்கில் மரங்களிலிருந்து விழுந்தாலும், யாரும் அவைகளைத் தொடுவதில்லை. அவை அப்படியே அழுகிப்போகின்றன. ஆனால் இப்பொழுது இறந்தவருக்கு மரியாதை செலுத்தும் அறிகுறியாகவே 'டகோயா'க் குறி வைக்கப்படுகின்றது. இறுதிச் சடங்குக்கான செலவை மீட்கவே அவ்வாறு செய்யப்படுகின்றது. ஆறு மாதத்திற்குப் பின்னர் ஒரு வருடத்திற்குள், 'டகோயா'க் குறி அகற்றப்படுகின்றது. அப்பொழுது ஒரு பெரிய விருந்து வைக்கப்படுகின்றது. அதற்கு மற்ற கிராமத்திலுள்ளவர்களும் அழைக்கப்படுகின்றனர். எனினும், இத்தகைய விருந்துகள் நடப்பது இப்போது அரிதாகயிருக்கின்றன. அவைகளினால் செலவு அதிகமாகிறது என்பதை அவர்கள் உணரத்தொடங்கியுள்ளார்கள். அதனால் சிலுவை நாட்டும் சமயத்தில் சிறிய அளவில் விருந்து வைப்பதே போதுமானது என்று கருதுகின்றனர்.

இறந்தவர்கள் சாவுக்குப் பின்னரும் நீங்காமல் நினைவில் நிற்கின்றார்கள். நவம்பர் மாத முதலில் வரும் 'புனித ஆவிகள்' தினத்தின்போது, இறந்தவர்களின் கல்லறைகளில் மதிப்பையும்,

பாசத்தையும் தெரிவிக்கும் முறையில் மெழுகுதிரிகள் கொளுத்தி வைத்து, மலர் தூவி அஞ்சலி செலுத்துகின்றனர். கிராமத்தில் அன்றைய தினம் சமுதாய விருந்தும் நடைபெறுகின்றது. வருங் காலத் தலைமுறைகளின் நலனுக்காகத் தென்னைகளை நட்டதற்கும், நல்லபல பணிகள் செய்தமைக்கும், இறந்தவர்கள் அனைவரையும் கிராம மக்கள் அன்று நேசமுடன் நினைத்து நன்றிசெலுத்து கின்றனர்.

அத்தியாயம் 18

# ஆட்சித்துறையும், வளர்ச்சிப் பணியும்

இந்திய யூனியன் பகுதியான அந்தமான், நிகோபார் தீவுகளில் நிகோபார் தீவுகள் ஒரு மாவட்டமாகும். இப்பகுதி இந்திய அரசின் உள் அமைச்சகத்தின் நேரடி நிர்வாகத்தில் உள்ளது. போர்ட் பிளேரில் தலைமை அலுவலகம் கொண்டுள்ள முதன்மை ஆணையாளர் இத்தீவுகளை நிர்வகித்துவருகின்றார். அரசின் பல்வேறு தலைமை அலுவலகங்கள் போர்ட் பிளேரில் உள்ளன. நிகோபார் தீவுகள் போர்ட் பிளேரிலிருந்து வெகு தூரத்தில் உள்ளன. போக்குவரத்தும் சரியாக இல்லை. அதனால் போர்ட் பிளேரில் உள்ள பெரிய அதிகாரிகள் தீவுகளில் நடக்கும் விவகாரங்களுடன் நெருங்கிய தொடர்புகொண்டிருக்க முடிவதில்லை. எனவே, கார் நிகோபாரில் இரண்டாவது நிர்வாகத் தலைமை அலுவலகம் ஏற்பட்டிருக்கின்றது. அங்கிருந்தே தீவுகள் அனைத்துக்குமான நிர்வாக அலுவல்களும், வளர்ச்சிப் பணிகளும் கவனிக்கப்பட்டு வருகின்றன.

நிகோபார் தீவுகளில் உள்ள ஆதிக்குடிகளின் நலனுக்கும், தீவுகளின் வளர்ச்சிப் பணிகளுக்கும் பொறுப்புள்ள தலைமை அதிகாரி கூட்டு உதவி ஆணையர் ஆவார். அவருடைய தலைமை அலுவலகம் கார் நிகோபாரில் உள்ளது. முதிய அனுபவம்கொண்ட இந்திய நிர்வாகத்துறை (I.A.S.) அதிகாரி அப்பதவியை வகிக்கின்றார். அங்கு மற்றும் சில பெரிய அதிகாரிகள் இருந்தாலும், பொது நிர்வாகம்பற்றிய வழக்கமான வேலைகளை அவர் கவனிப்பதுடன், மற்ற அரசுத்துறைப் பணிகள், குறிப்பாக சமீபத்தில் மேற்கொண்ட வளர்ச்சித் திட்டங்கள் சரிவர நடைபெறுகின்றனவா என்பதையும் பார்த்துக்கொள்ளவேண்டும். 1956ஆம் ஆண்டு ஆதிக் குடிகளின் பாதுகாப்புக்காக நிறைவேற்றப்பட்ட அந்தமான், நிகோபார் தீவுகளின் சட்டத்தின்படி நிகோபார் மக்களின் நலன்கள் காக்கப்படுவதையும், குறிப்பாக சட்டத்தின் முன்னேற்பாடுகளை நிறைவேற்றி வைப்பதையும் கவனிப்பது அவருடைய தனிப் பொறுப்பாகும். இதற்கும் மேலாக நிகோபார்

மக்களுடன் நல்லதொரு உறவுகொண்டிருப்பதும் கூட்டு உதவி ஆணையாளரின் பெரும் பொறுப்பாகும். ஏனென்றால், அவர்பால் நம்பிக்கைகொள்ளும்படி நடந்துகொள்வதையும், ரிச்சர்டுசன் பாதிரியார், கிராமங்களின் தலைமகன்கள் போன்ற முக்கியப் பிரமுகர்களிடம் சமதையாகப் பழகுவதையும் பொறுத்தே, நாட்டின் அரசாங்கத்தின்பேரில் ஆதிக் குடிகள் கொண்டிருக்கும் போக்கு பெரும்பாலும் அமைந்திருக்கின்றது.

கார் நிகோபாரில் உள்ள மற்ற பெரிய அதிகாரிகள் பொதுப் பணித்துறை நிர்வாகப் பொறியாளர், மூன்று உதவிப் பொறி யாளர்கள், வைத்தியத்துறை அதிகாரி, வைத்தியத்துறைப் பெண் அதிகாரி, துணைக் காவல்துறை மேலாளர், அரசாங்க உயர்தர செகண்டரிப் பள்ளித் தலைவர். நிகோபார் வர்த்தகத் துணைச் செயலாளர் துணைக் கருவூல அதிகாரியாகவும் இருந்து கொண்டு, நிகோபார் தீவுகளின் வர்த்தக நடவடிக்கைகளைக் கவனித்துக்கொள்வதில் கூட்டு உதவி ஆணையாளருக்கு உதவி புரியவும் செய்கின்றார்.

கார் நிகோபாரில் உள்ள கூட்டு உதவி மேலாளரும், மற்றும் சில உயர் அதிகாரிகளும், நிகோபார் பகுதியில் உள்ள மற்ற தீவு களின் நிர்வாக, வளர்ச்சிப் பணிகளையும் கவனித்துக்கொள்ளு கின்றனர். அவர்களுக்கு உதவிபுரிய நான்கோவ்ரியில் துணை ஆணையர் ஒருவரும், உதவிப் பொறியாளர் ஒருவரும், வைத்திய அதிகாரி ஒருவரும் இருக்கின்றனர். கார் நிகோபாரும், பாட்டி மால்வ் அல்லாமல் நிகோபார் பகுதியில் உள்ள எல்லாத் தீவு களின் அரசாங்கப் பணிகளையும் பார்த்துக்கொள்ளவேண்டிய பொறுப்பு அவர்களுக்கு உண்டு.

நிகோபார் தீவுகளில் நிலவரி வசூலும், நிலம்பற்றிய குறிப்பு களும் இல்லையென்பதால், தீவுகளில் நிலவரி வசூல் அதிகாரிகள் இல்லை. ஆனால், கார் நிகோபாரில் ஒரு தாசில்தார் உள்ளார்.

தீவுகள் முழுவதற்குமாகக் கார் நிகோபாரில் சமுதாய வளர்ச்சித் தொகுதியொன்றும் நிறுவப்பட்டுள்ளது. 1958இல் நிறுவப்பட்ட இத்தொகுதி, இப்பொழுது தனது முதல் கட்ட வேலைகளை முடித்து இரண்டாவது கட்டப் பணிகளை நிறை வேற்றிக்கொண்டிருக்கின்றது. மற்ற தீவுகளுக்கு என்று கமோர்டாவில் தலைமை அலுவலகத்துடன் ஒரு சமுதாய வளர்ச்சித் தொகுதி செயல்பட்டு வருகின்றது. இத்தொகுதி

இப்பொழுது ஆதாரப் பணிகளை மேற்கொண்டிருக்கின்றது. விரைவில் முதற் கட்டப் பணிகளைத் தொடங்கிவிடும்.

சிலகாலம் முன்பு வரை அந்தமான், நிகோபார் தீவுகளிலிருந்து நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் எவரும் இல்லை. ஆனால், சமீபத்தில் அரசியல் சட்டதிட்டத்தில் மேற்கொள்ளப்பட்ட ஒரு திருத்தத்தின்படி, அந்தமான், நிகோபார் தீவுகளுக்காக ஒரு நாடாளுமன்ற உறுப்பினர் 1967 பொதுத் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்டார். மேலும் இத்தீவுகளுக்காக, உள் அமைச்சக ஆலோசனைக் குழு, முதன்மை ஆணையாளர் குழு என்றும் இரு குழுக்கள் இருக்கின்றன. தீவுகளின் நிர்வாகத் திலும், வளர்ச்சிப் பணிகளிலும் இக்குழுக்கள் முக்கிய பங்காற்று கின்றன. கார் நிகோபாரைச் சேர்ந்த முதன்மைத் தலைமகன் பிரெட் என்பாரும், வெஸ்ட் பே கட்சாலைச் சேர்ந்த ராணி சங்கா வும் உள் அமைச்சக ஆலோசனைக் குழுவில் உறுப்பினராகவுள்ள னர். இந்த இருவருடன் நான்கோவ்ரியைச் சேர்ந்த ராணி லட்சுமியும் முதன்மை ஆணையாளரின் ஆலோசனைக் குழுவில் உறுப்பினர்கள்.

நிகோபார் மக்கள், தங்களை நாட்டின் அரசும், நிர்வாகமும் தந்தைபோலிருந்து பேணவேண்டும் என்று எதிர்பார்க்கின்றார் கள். அவ்வாறு அவர்கள் பழக்கப்பட்டவர்கள். அவர்கள் தங்கள் சொந்த வழியிலேயே வாழ்க்கையை நடத்திக்கொள்ள விரும்பினாலும், தங்கள் சொந்த வாழ்வில் தலையீட்டை விரும்ப வில்லையென்றாலும், எல்லா முக்கிய விவகாரங்களிலும், பெரிய கொள்கைப் பிரச்சினைகளிலும், தங்கள் நாட்டின் அரசு, தங்களின் சிறந்த நலன்களைக் கருதியே நடவடிக்கைகள் எடுக்கும்; அத்தகைய விவகாரங்கள்பற்றிக் கவலைப்படவோ, கிளர்ச்சி செய்யவோ அவசியமில்லை என்ற நம்பிக்கையும், உறுதியும் அவர் களுக்கு இருக்கின்றது. அரசாங்கத்தின்பால் அவர்கள்கொண் டிருக்கும் இந்த அடிப்படையான போக்கு காரணமாக, அவர்கள் அரசுடன் நிர்வாகத்திலும், வளர்ச்சிப் பணிகளிலும் மிகவும் ஒத்துழைக்கின்றனர். அவர்கள் கூறுவதுபோல, 'தங்கள் தந்தை யின் வீட்டிலேயே உட்கார்ந்து உண்ண விரும்புவதில்லை.' அதா வது, அரசின் கையிருப்புக்குச் சுமையாக, மேலும் தொல்லை கொடுக்க விரும்புவதில்லை. அரசாங்கம் தந்தைபோன்றது. அரசாங்கம் தங்கள் தேவைகளையும், விருப்பங்களையும் தந்தை போல் கவனித்துக்கொள்ளுகின்றது. எல்லா முக்கிய விவகாரங்

களையும் அரசாங்கத்திடமே விட்டுவிடும் இந்த எளிய, நம்பகமான மக்களின் போக்கு காரணமாக மக்களின் நலத்தையும், நலன் களையும் காக்கும் அரசாங்கத்தின் பொறுப்பு மிகுந்துவிடுகின்றது.

விடுதலைபெற்ற நாளிலிருந்து, நிகோபார் தீவுகளின் வளர்ச்சிக் கான பணிகள் பலவற்றை அரசாங்கம் மேற்கொண்டிருக் கின்றன. பிரிட்டிஷ் காலத்தில் இத்தீவுகள் மிகவும் புறக் கணிக்கப்பட்டிருந்தன. அதனால் எல்லாப் பக்கங்களிலும் வளர்ச்சி பெற இப்பொழுது கடந்த சில ஆண்டுகளாகவே முயற்சி நடை பெற்றுவருகின்றது.

வளர்ச்சிப் பணிகளில், நிகோபார் மக்கள் நன்கு ஒத்துழைத்து வருகின்றனர். சில விஷயங்களில் மிகுந்த ஆர்வமுடன் ஈடுபட்டு வருகின்றனர். நிகோபார் மக்களின்மீது எந்தத் திட்டத்தையும் திணிப்பதில்லை என்ற போக்கையே, நிகோபார் தீவில் நிர்வாகம் கொண்டிருக்கின்றது. ஒரு குறிப்பிட்ட திட்டத்தினால் விளையும் பலன்களை எடுத்துக்கூறி, அதற்கு அவர்களுடைய முழு ஒத்துழைப்பும் கிடைக்கும் என்பதை முன்னதாகத் தெரிந்து கொண்ட பின்னரே அத்திட்டம் எடுத்துக்கொள்ளப்படுகின்றது. வளர்ச்சிப் பணிகள் அனைத்திலும், கார் நிகோபாரில், குறிப்பாக நிகோபார் மக்களின் தலைவரான ரிச்சர்டுசன் பாதிரியாரும், பல்வேறு கிராமங்களின் தலைவர்களான கிராமத் தலைமகன்களும் முக்கிய பங்காற்றிவருகின்றனர். ரிச்சர்டுசன் பாதிரியாரும், மற்ற கிராமத் தலைமகன்களும் அங்கம்பெற்ற தொகுதி அபிவிருத்திக் குழுவொன்றும் இருக்கின்றது. இக்குழுவே தீவுகளின் அபிவிருத்தி வேலைகள் குறித்து அடிப்படையான முடிவுகளை எடுக்கின்றன. மற்ற இடங்களில் உள்ள அபிவிருத்திக் குழுக்கள்போலில்லாமல், கார் நிகோபாரில் உள்ள இந்தக் குழு வளர்ச்சித் திட்டங்களின் முன்னேற்றத்தைப் பரிசீலிப்பதுடன், திட்டங்களை வகுப்பதற்கும் காரணமாயிருக்கின்றது. கிராமத் தலைமகன்களைக்கொண்ட கூட்டத்தில் பேசி முடிவு செய்யப்படாத எந்தத் திட்டத்தையும் நிறைவேற்றுவது இயலாத காரியமாகும். ஏனென்றால், ஒரு தனிப் பட்ட நிகோபார்வாசியோ அல்லது தனிப்பட்ட கிராமத் தலைமகனோ அத்திட்டத்தில் கலந்துகொள்ள விரும்புவதில்லை. அதனால் அத்திட்டம் தோல்வியடையவே செய்யும்.

கார் நிகோபாரில், நிகோபார் மக்களின் ஒத்துழைப்புடன் அநேக நல்ல வளர்ச்சித் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. தீவைச் சுற்றிலும் ஒரு கெட்டியான சாலை போடப்பட்டுள்ளது.

ஓர் உயர்தர செகண்டரிப் பள்ளியும், அநேக ஆரம்பப் பள்ளிகளும் திறக்கப்பட்டுள்ளன. நல்ல வசதிகள்கொண்ட மருத்துவமனையும், இரு மருந்தகங்களும் இணைக்கப்பட்ட தாய், சேய் நலக் கேந்திரங்களும் நிறுவப்பட்டுள்ளன. நல்ல கட்டடத்துடன் கிணறுகள், சுகாதார முறையிலான குளியல் அறைகள், கழிப்பிடங்கள், கிராமச் சுகாதாரச் சூழ்நிலையை முன்னேற்றும் வகையில் கட்டப்பட்டிருக்கின்றன. உழவுத்துறையில் புதிய முறைகளும், புதிய காய்கனி வகைகளும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. பிக் லபாடியில் கால்நடை மருந்தகம் ஒன்று துவக்கப்பட்டு, மிருகங்களுக்கும், கோழிகளுக்கும் அம்மை குத்துவதும் நடைபெறுகின்றது. தச்சுவேலை, தையல்வேலை, கொல்லுத் தொழில் ஆகியவற்றில் பயிற்சியும் தயாரிப்பும் இணைந்த கேந்திரங்கள் நடத்தப்படுகின்றன. இளைஞர்களின் சங்கங்கள், கிராமத் தொண்டர் படையின் இலக்கியக் குழுக்கள், பெண்கள் சங்கங்கள், பாலர் சங்கங்கள் ஆகியவைகளும் கிராமங்களில் அமைக்கப்பட்டுள்ளன. வீடுகள் கட்டுவதற்கென்று மக்களுக்கு நல்ல மரங்கள் தரப்படுகின்றன. மக்கள் சமுதாய நல நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதற்காக பிக் லபாடியிலும், மலாக்காவிலும் சமுதாய நலக் கேந்திரங்கள் திறக்கப்பட்டுள்ளன. விளையாட்டுப் பந்தயங்கள், கலைநிகழ்ச்சிகள் ஆகியன ஏற்பாடு செய்து, இசையும், நடனமும், விளையாட்டுகளும் சொல்லித்தரப் பயிற்சியாளர்களை நியமித்தும், நிகோபார் மக்களின் விளையாட்டு—மற்றும் கலை, கலாச்சார நடவடிக்கைகளுக்கு அரசாங்கம் ஊக்கம் தந்துவருகின்றது.

நிகோபார் பகுதியில் உள்ள மற்ற தீவுகளில் வளர்ச்சிப் பணிகளின் பலன் அதிகமாகத் தெரியாவிட்டாலும், அங்கெல்லாம் மருத்துவ மனை, மருந்தகங்கள், ஆரம்பப் பள்ளிகள் துவக்கப்பட்டிருப்பதால் சில வசதிகள் ஏற்படவே செய்திருக்கின்றன. வருங்கால வளர்ச்சிக்கு இடமும் ஏற்பட்டுவிட்டது. மக்கள் பின்னடைந்துள்ளதாலும், சோம்பலாகவுள்ளதாலும், போக்குவரத்துச் சிரமங்களினாலும், சோவ்ராவைத் தவிர மற்ற தீவுகளில் மக்கள் இங்கும் அங்குமாக வசிப்பதாலும் வளர்ச்சித் திட்டங்கள் சரிவர நடைபெறுவதில்லை. அதனால், இந்தத் தீவுகளின் வளர்ச்சிக்கென்றே இயல்பான திட்டங்கள் தயாரிக்கப்பட்டு, மக்களின் தேவைகளைக் கருத்தில்கொண்டு, சில திட்டங்களுக்கு முதலிடம் தருவது அவசியமாகின்றது.

சோவ்ராவைப் பொறுத்தவரையில், அங்கு வருங்கால வளர்ச்சிக்கு வாய்ப்பே இல்லை. அத்தீவில் நல்ல குடிநீர் நிலைகளே இல்லை. மற்ற தீவுகளில் உள்ள மக்களின் சோம்பலையும், அவர்கள் கொண்டிருக்கும் மூடநம்பிக்கைகளையும் பயன்படுத்திக்கொண்டுள்ள பொருளாதார அடிப்படை அதிக நாட்கள் நீடிக்காது. சோவ்ராவுக்கு அடுத்துள்ள டெரசாத் தீவுக்கு சோவ்ரா மக்களை குடியேறக் கேட்டுக்கொள்வது அவசியம். டெரசாத் தீவில் மக்கள் தொகை குறைவு. அங்குச் சோவ்ரா மக்கள் கடினமாக உழைக்கவும், தங்கள் திறனைக் காட்டவும் இடம் இருக்கின்றன. தோப்புக்கள் அமைக்கவும், படகுகள், பானைகள் செய்யவும், மற்றும் குடிசைத் தொழில்களில் ஈடுபடவும் வாய்ப்புகள் அங்கு நிறைய இருக்கின்றன.

கார் நிகோபார், சோவ்ரா தவிர மற்ற தீவுகளில் மக்கள் அதிகமில்லை. ஏராளமான நிலம் பயன்படுத்தப்படாமலிருக்கின்றது. இந்தியாவிலிருந்து சிலரை அங்கு குடியமர்த்தும் வாய்ப்பும் இருக்கின்றது. இந்தியாவின் மக்கள் தொகைப் பெருக்கத்தைக் குறைக்கவும், தீவுகளின் வளர்ச்சிக்கும் இது உதவும். இங்கெல்லாம் போதுமான வேலையாட்களும் கிடைப்பதில்லை. இந்தியாவிலிருந்து அனுப்பப்படும் மக்கள் அரசாங்கத்தையே எதற்கும் நம்பிக்கொண்டிருப்பவர்களாகவும் இருக்கக்கூடாது; இருக்கும் குறைந்த வசதிகளைக்கொண்டே சிரமமான பகுதிகளை வளப்படுத்தவேண்டும்; தங்களுடைய சொந்தக் கைகளின் வலுவைக் கொண்டே தங்களுடைய வருங்காலத்தை வளப்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதெல்லாம் மிகவும் அவசியம்.

மேலும் இந்தியாவிலிருந்து வருபவர்களைத் தீவுகளில் குடியமர்த்தும் திட்டங்கள், நிகோபார் மக்களின் நலன்களுக்கு எதிரான வகையில் அமையக்கூடாது. அதனால் மக்கள் குறைந்த தீவுகளில் இந்தியர்களைக் குடியமர்த்தும்பொழுது, சில பகுதிகளைத் தனிப்படுத்தி, நிகோபார் மக்களின் வருங்கால வளர்ச்சிக்கென்று ஒதுக்கிவிடவேண்டும். அப்பகுதிகளை ஏற்கனவே மக்கள் தொகை பெருகிவரும் கார் நிகோபாரிலிருந்தும், சோவ்ராவிலிருந்தும் மக்களை ஏற்றுக்கொள்ளும் வகையில் அமைக்க வேண்டும். இந்தியாவிலிருந்து வருபவர்களையும், நிகோபார் மக்களையும் ஒரே தீவில் சேர்க்காமலிருப்பது நல்லது. ஏனென்றால், இன்றைய வளர்ச்சிப் பருவத்தில் நிகோபார் மக்கள் தங்களையே பார்த்துக்கொள்ளமுடியாத நிலையில் உள்ளார்கள். இந்தியாவி

லிருந்து வருபவர்கள், யாராவது தவருன நோக்குடன் நடந்து கொண்டால், நிகோபார் மக்களைச் சுரண்டும் வாய்ப்பு ஏற்பட்டு விடும். முதலாவதாக, இந்தியாவிலிருந்து குடியேற வருபவர்களை லிட்டில் நிகோபார், கிரேட் நிகோபார் போன்ற தென் தீவுகளி லேயே அமர்த்தவேண்டும். அங்கெல்லாம் மக்களே இல்லையென்று சொல்லலாம்; பயன்படாத நிலம் ஏராளமாக இருக்கின்றது. மக்கள் வெகு குறைவாக இருக்கும் கட்சால், டெரசா, கமோர்டா, நான்கோவ்ரி முதலான தீவுகளை நிகோபார் மக்களுக்காக ஒதுக்கி, அவர்களின் வருங்கால வளர்ச்சிக்கு எல்லா வசதிகளையும் செய்து தரவேண்டும்.

தீவுகளின் வளர்ச்சிக்கான வருங்கால அமைப்பு எப்படியிருக்கும் என்று கூறுவது கடினம். எனினும், வளர்ச்சிக்கான நல்ல வாய்ப்புக்கள் இருக்கின்றன; நிகோபார் தீவுகள் வருங்காலத் தில் வளர்ச்சிபெற வேண்டுமாஞல், தீவுகளுக்குள்ளும், இந்தியாவி லிருந்தும் நல்ல போக்குவரத்து வசதிகள் அமையவேண்டியது முதற்படி. போதுமான போக்குவரத்து வசதிகள்—குறிப்பாகக் கப்பல் போக்குவரத்து வசதிகள் ஏற்பட்டுவிட்டால், நிகோபார் தீவுகள் பொதுவாக விரைவில் வளர்ச்சிபெற்று முன்னேறுவது உறுதி. நிகோபார் தீவுகளில் அநேக பகுதிகளின் தட்பவெப்ப நிலையும், மண்வளமும் ரப்பர், காபி, கோக்கோ, ஏலம், இலவங்கம், மிளகு முதலான பணப் பயிர்கள் விளைவிக்க ஏற்ற தாகவுள்ளன. கார் நிகோபாரிலும், சோவ்ராவிலும் எஞ்சிய நிலம் அதிகமில்லாமையால், பெரிய அளவில் தோட்டங்களை ஏற்படுத்துவது உடனடியாக இயலாது. ஆஞல், வருங்காலத்தில் இத்தீவுகளில் உள்ள மக்கள், தங்களின் பரம்பரையான விவசாய அமைப்பு முறையைக் கைவிட்டுவிட்டு இலாபம் தரும் புதிய பயிர் களை மேற்கொள்ளுவதும் சாத்தியமாகும். மிக நல்ல இலாபம் தரும் தோட்டப் பயிர்களான தென்னையையும், பாக்கையும் மேலும் அதிகமான நிலங்களில் பயிரிட வாய்ப்புகளும் இருக் கின்றன. சிறந்த கொப்பரைகளைத் தயாரிக்க அம்மக்கள் தெரிந்து கொண்டால், தேங்காய் எண்ணெய், சோப்பு தயாரிக்கும் தொழில்கள் சிறந்த முறையில் ஏற்படக்கூடும். அவை வெற்றி யளிக்கும். இத்தீவுகளில் மக்காசோளத்தை முதன் முதலாகப் பயிரிட்டுப் பார்த்தபொழுது, அது செழிப்புடன் வளருகின்ற தைக் காணமுடிகின்றது. மக்கள் இதைப் பெருமளவில் பயிரிடத் துவங்கிஞல், மக்களிடமுள்ள ஏராளமான பன்றிகளுக்கு இது

நல்ல உணவாக அமையும். பன்றி இறைச்சியைப் புட்டிகளில் அடைக்கும் தொழில்களை ஏற்படுத்தமுடியும். நிகோபார் மக்களின் கைவினைப் பொருள்களான பாய்கள், வில், அம்பு, கூடைகள் முதலானவற்றை ஏராளமாகச் செய்தால், அவைகளுக்கு இந்தியாவில் நல்ல கிராக்கி இருக்கக்கூடும். அதற்கு அவைகளை இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யவும் வசதி இருக்கவேண்டும். நிகோபார் தீவுகளைச் சுற்றிய நீரில் மீன்கள் மண்டிக்கிடக்கின்றன. நிகோபார் மக்கள் இயல்பாகவே நல்ல மீனவர்கள். அவர்களுக்குப் போதுமான பயிற்சி தந்து நல்ல சாதனங்களும் கொடுத்தால், ஆழ்கடல் மீன்பிடிப்பும், மீன்களைப் புட்டிகளில் அடைக்கும் தொழில்களும் மிக வெற்றிகரமாக நடைபெறக் கூடும். நிகோபார் மக்கள் நன்கு முன்னேறும் வகையில் திட்டங்கள் தீட்டப்பட்டால், நிர்வாகம் தரும் வசதிகளின் முழுப் பலனையும் அவர்கள் பெற்றால், பொருளாதார ரீதியில் மாபெரும் முன்னேற்றம் அடையலாம்.

இருப்பினும், நிகோபார் தீவுகளின் வருங்கால வளர்ச்சிக்கான வாய்ப்புக்களைப் பொறுத்தும் சில வரம்புகள் இருக்கவே செய்கின்றன. இத்தீவுகளில் தொழில்கள் வளரவேண்டுமானால், இந்தியச் சந்தைகளுக்கு கைத்தொழில் பொருள்களை எடுத்துச் சென்று, இந்தியாவிலேயே தயாரிக்கப்படும் பொருள்களுடன் போட்டிபோடும் அளவுக்குத் தொழில்கள் இங்கு முன்னேறியிருக்கவேண்டும். தொழில்களுக்கான சில மூலப்பொருள்களை பெறவேண்டியது ஒருபுறமிருக்கத் தயாரான பொருள்களையும் கப்பல்கள்மூலம் இந்தியாவுக்கு அனுப்பவேண்டியிருக்கின்றன. அதனால் இத்தீவுகளில் ஏற்படுத்தக்கூடிய அநேக தொழில்களில், கப்பல் போக்குவரத்துச் செலவே மிகுதியாகப் பெருகிவிடும். அதனால் அத்தொழில்களைக் கொள்ளமுடியாது. உதாரணமாக, சில ஆண்டுகளுக்குமுன்பு, இத்தீவுகளில் பல ஆண்டுகளாக வர்த்தகத்தில் ஈடுபட்டிருக்கும் ஆர். அகூஜி ஜாத்வெட் கம்பெனி, கார் நிகோபாரில் கயிறுத் தொழில் நிறுவனம் ஒன்றை அமைத்தது. அங்கு ஏராளமாகக் கிடைக்கும் தேங்காய் நாரிலிருந்து, தரம் மிகுந்த கயிறு விரிப்புகளைத் தயாரித்தனர். இருப்பினும், அவைகளைக் கப்பல்களில் ஏற்றி அனுப்பும் செலவுகள் அதிகமாகி விட்டன. அதனால் அவை சென்னை, கேரள கயிற்றுத் தொழில்களுடன் போட்டிபோட முடியவில்லை. இத்தொழில் அதன் காரணமாக வெற்றிபெறவில்லை. உண்மையில் பொருள்களின்

உற்பத்திச் செலவு மிகவும் குறைந்ததாகவும், கப்பற் செலவைக் கூட்டினாலும், இந்தியச் சந்தைகளில் போட்டிபோடக்கூடியதான பொருள்களைத் தயாரிக்கும் தொழில்களாக இருந்தால் அவை வெற்றிபெறக்கூடும்.

நிகோபார் தீவுகளில் தொழிலாளரின் கூலியும் மிக அதிகம். இங்கு அன்றாடத் தேவைப்பொருள்கள் அனைத்தும் வெளியிலிருந்து இறக்குமதி செய்யவேண்டியிருக்கின்றன. அதனால் வாழ்க்கைச் செலவும் உயர்ந்திருப்பதால் அதிக ஊதியம் தரவேண்டியுள்ளது. அதே சமயத்தில் நிகோபாரில் தேவைக்கு மிகுதியான தொழிலாளர்களும் இல்லை. இந்தியாவிலிருந்தே தொழிலாளர்களைக் கொண்டுவரவேண்டியிருக்கின்றது. அதனாலும் பொருள்களின் உற்பத்திச் செலவு கூடுதலாகி விடுகின்றது.

கார் நிகோபாரிலும், சோவ்ராவிலும் எஞ்சியிருக்கும் நிலங்கள் குறைவாக யிருப்பதால் வருங்கால வளர்ச்சிக்கான நடவடிக்கைகள் ஒரு வரம்புக்கு உட்பட்டேயிருக்கின்றன. கிடைக்கும் நல்ல நிலம் அனைத்தையும் அநேகமாக மக்கள் பயன்படுத்தி வருகின்றார்கள். இரு தீவுகளிலும் மக்கள் தொகை பெருகி வருகின்றது. நிலத்தின்மீது நெருக்கமும் மிகுதியாகிக்கொண்டிருக்கின்றது. அதனால், அதிக நிலம் தேவைப்படாத ஒருசில அபிவிருத்தி நடவடிக்கைகள் தவிர, இத்தீவுகளில், மக்களை அவர்களுடைய நிலத்திலிருந்து அப்புறப்படுத்தாமல், எந்தவிதமான புதிய அபிவிருத்தி நடவடிக்கைகளும் துவங்குவது கடினம்.

நிகோபார் மக்கள் கடன்பெறுவதை வெறுக்கின்றனர். அரசாங்கத்திடங்கூட கடன்பெற மறுக்கின்றனர். இதுவும் புதிய வளர்ச்சித் திட்டங்களைத் துவக்குவதற்குக் குறுக்கே நிற்கின்றது. மக்கள் அவர்களுக்குள்ளாகவே, தேவையான பணத்தைச் சேர்க்க முடிந்தாலே, ஏதாவது அபிவிருத்தி நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

எல்லாவற்றுக்கும் மேலாக நிகோபார் மக்கள் ஆதிக் குடிகள் ஆனதால், எந்த புதிய நடவடிக்கைகளையும், ஒரு வரம்புக்குமேல், விரைவாக எடுத்து நடத்தமுடிவதில்லை. அநேக விஷயங்களை ஒரே சமயத்தில் கூறினால், மற்ற ஆதிக் குடிகளைப்போலவே, அவர்களும் குழப்பமடைந்துவிடுகின்றனர். வளர்ச்சிப் பணிகளையும் ஏராளமாக மேற்கொண்டால், அவர்களின் வாழ்க்கை அமைப்பும் கலைபட்டு, வாழ்வில் சோர்வும், நெருக்கடியும்

தோன்றி, அவர்கள் அதற்கெல்லாம் இசைந்து இணங்கி நடந்து கொள்வது கடினம் என்று அஞ்சப்படுகின்றது. அதனால், உண்மையில், நிகோபார் தீவுகளுக்கான வளர்ச்சித் திட்டங்களைத் தயாரிக்கும்போது, அங்குள்ள நிலைமைகளையும், ஆதிக் குடிமக்களுக்குள்ள இயல்பையும் கருத்தில்கொள்ளாவிட்டால், அத்திட்டங்கள் தோல்வியுறுவதுடன், மக்களுக்கு உறுதியாகத் தீங்கு விளைவிக்கவேசெய்யும்.

இத்தீவுகளைப்பற்றிய சில கருத்துக்களை மனதில்கொண்டு, இந்தியாவிலிருந்துவரும் சில முக்கியப் பிரமுகர்கள், இங்கு சிறிது காலம் தங்கி, வந்த வேகத்தில் சிலவற்றைப் பார்த்து, தங்கள் சொந்தக் கருத்தின் அடிப்படையில், தீவுகளின் வருங்கால வளர்ச்சிக்கான கருத்துக்களை கூறிவிடுகின்றார்கள். அக்கருத்துக்கள் உண்மை நிலைக்குப் புறம்பாகவும் இருக்கின்றன. இம்மக்களைப் பின்னடைந்தவர்கள் என்றும் தாழ்வாகக் கருதுகின்றனர். இது, அவர்கள் தீவுகளின் முழுமையுமான சூழ்நிலைகளை உணரவில்லை என்பதுடன் நிகோபார் மக்களுக்கும் நியாயம் வழங்கும் வகையில் நடக்கவில்லை என்பதையே காட்டுகின்றது. தங்களின் தரத்தைக்கொண்டே நிகோபார் மக்களையும் அநேகர் பார்ப்பது இரங்கத்தக்கது. எல்லா வளர்ச்சியையுமே ஒப்பிட்டுப் பார்க்கவேண்டியவை என்பதை மறந்துவிடுகின்றார்கள். எங்கு துவங்குவது என்பதை விட்டுவிடமுடியாது. கார் நிகோபார் மக்கள் இன்று வளர்ந்துள்ள நிலையை, விடுதலைக் காலத்திற்கு முன்பிருந்த நிலையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், அவர்கள் மிகவும் முன்னேற்றமடைந்த மக்களில் சிலர் என்பதை உறுதியாகக் கூறமுடியும். சமீப ஆண்டுகளில் அவர்கள் அடைந்தது அனைத்தைக் குறித்தும் பெருமைகொள்ளலாம்.

அத்தியாயம் 19

# நிகோபார் மக்களின் பொது குண இயல்புகள்

நிகோபார் மக்கள் அமைதியான இயல்புகொண்டவர்கள். இதுவே அவர்களிடம் முதன்மையானதும், மிகச்சிறப்பானதுமான இயல்பாகும். நிகோபார் மக்களின் முந்தைய வரலாறும், தீவுகளில் உள்ள நிலைமையும் அவர்களை அமைதியான வாழ்வை மேற்கொள்ளும்படி செய்திருக்கின்றன. இத்தீவுகளில் இயற்கை வளம் கொழித்து நிற்கின்றது. எல்லோருக்கும் ஏராளமாக இருக்கின்றது. அதனால் பொருளாதார இலாப நோக்கில் ஒருவருடன் ஒருவர் தங்களுக்குள்ளாகவே சண்டையிட்டுக்கொள்ளவோ, மற்றவர்மீது சண்டை தொடுக்கவோ காரணமில்லாமல் இருக்கின்றது. பூகோள ரீதியில் ஒதுங்கியிருப்பதாலும், அவர்கள் வசிக்கும் இடமும் இயற்கைச் சூழ்நிலையால் தடுப்பு அரண்போல் அமைந்திருப்பதாலும், முன்பு வெளித்தாக்குதல்களுக்கு உள்ளாகாமல் காக்கப்பட்டார்கள். இரண்டாவது உலகப் போர் காலத்தில் ஜப்பானியர் இத்தீவுகளைக் கைப்பற்றும்வரை, அன்னியர்களின் அவதிக்குள்ளாகாமலிருந்தார்கள். அதனால் அவர்கள் வெகுகாலமாகவே அமைதியுடன் வாழ்ந்திருக்கின்றார்கள். இப்பொழுது அது அவர்களின் இயல்பாகவே அமைந்துவிட்டது.

ஒன்றுடன் ஒன்று இணைந்த ஆதிக் குடி அமைப்பும், தீவுகளில் அமைதியான சூழ்நிலை ஏற்பட சாதகமாயிருக்கின்றது. தாங்கள் அனைவரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்று அவர்கள் கருதுகின்றார்கள். அதனால் தங்களுக்கிடையேயுள்ள தகராறுகளைத் தீர்த்துக்கொள்வதில் வன்மையைத் தவிர்க்கின்றார்கள். கிராமக் குழுக்கள், தீவுக் குழுக்கள்மூலம் தீர்வுகாண்பதில் நம்பிக்கைகொண்டிருக்கின்றனர். அவர்கள் அமைதியுடன் வாழவிரும்புவது அவர்கள் இரத்தத்திலேயே ஊறியிருக்கின்றது

என்று கூறலாம். சிறிய குழந்தைகள்கூடச் சண்டையிட்டுக் கொள்வதைக் காணமுடியாது.

அவர்களின் அமைதியான சுபாவத்தைச் சிலர் கோழைத்தனம் என்று கருதிவிடுகின்றனர். இரண்டாவது உலகப் போரின் போது, ஜப்பானியர் படையெடுத்தகாலையில், எதிர்த்து நிற்காமலே சரணடைந்ததே அதற்குச் சான்று என்றும் கூறுகின்றார்கள். எனினும், இந்த வாதம் நியாயமற்றது. துணிவு என்று எடுத்துக்கொண்டால், ஒவ்வொருவரிடமும், ஒவ்வொரு விதமாக அமைந்திருக்கின்றது. அது அந்தந்த சூழ்நிலையைப் பொறுத்தது. நிகோபார் மக்களை எடுத்துக்கொண்டால், பொதுவாக எந்த இடரையும் துணிவுடன் மேற்கொள்ள விரும்புவதில்லை. இடர்க்காப்பான நிலையையே விரும்புகின்றார்கள். இருப்பினும் ஒரு சமயம் என்று வந்துவிட்டால், அங்கு துணிச்சலை அவர்களிடம் காணமுடிகின்றது. மீன் பிடிக்கும்போதும், கடலில் கப்பலில் சாமான்களை ஏற்றி இறக்கும்போதும், சில சமயங்களில் தங்கள் தோட்டங்களில் பணியாற்றிக்கொண்டிருக்கும்போதும் அவர்கள் ஓரளவு துணிச்சலுடன் நடந்துகொள்ளுகின்றனர். இயற்கையின் கொடுமைகளை துணிச்சல் மிக ஆனால் அமைதியாக எதிர்த்து நிற்கின்றார்கள். இரண்டாவது உலகப் போரின்போது ஜப்பானியர் இழைத்த கொடிய இன்னல்களையும், சித்திரவதைகளையும் சமாளித்த விதத்தை சிறந்த துணிச்சலான செய்கை என்றே கூறவேண்டும். எதிர்ப்புக்காட்டாமல் ஜப்பானியரிடம் சரணடைந்தது விவேகமான முடிவாகும். ஆயுதமெதுவுமில்லாத அவர்கள் படையெடுத்தவர்களை எதிர்த்திருந்தால், அது தற்கொலைக்கு ஒப்பாக முடிந்திருக்கும். அதனால் ஜப்பானியர்கள் சினமூண்டு, திருப்பித்தரும் முறையில் மேலும் பல கொடுமைகளைக் கடுமையாகச் செய்திருப்பார்கள்.

அவர்களைக் கோழைகள் என்று கூறுவது நியாயமல்லவென்றாலும், உண்மையில் அவர்கள் போர் குணம்கொண்டவர்கள் அல்ல. அவர்களிடம் போர் பாரம்பரியமே கிடையாது. ஜப்பானியர் படையெடுப்புக்குமுன்பு வரையுள்ள அவர்களுடைய அமைதி மிகுந்த நீண்ட வரலாற்றில், தங்களைக் காத்துக்கொள்ளவென்று போரிட்ட நிகழ்ச்சியே இல்லை. அன்றாட வாழ்வுக்ாகவும் போராடவேண்டிய அவசியமில்லை. இந்த நிலையில், அவர்களிடம் போரிடும் பண்பு எதுவும் படிவதற்கான வாய்ப்பே ஏற்படவில்லை. இப்பொழுதும் அவர்களிடையே மாற்றங்கள்

பல ஏற்பட்டும், இராணுவப் பதவிகளை ஏற்க அவர்கள் தயாராக யில்லை. அவர்களுக்கு நல்ல உடற்கட்டும், உரமும் இருக்கின்றது. விளையாட்டுகளிலும் விருப்பம்கொண்டிருக்கின்றார்கள். இராணுவப் பதவிகளுக்கு மிகவும் தகுதியானவர்கள் என்றே கூறவேண்டும். இருப்பினும், அவர்கள் அதை விரும்புவதில்லை.

நிகோபார் மக்கள் அடிப்படையிலேயே மிகவும் நேர்மையான மக்கள். பொதுவாகவே அவர்கள் மற்றவர்களின் உரிமையை மதித்து நடக்கின்றார்கள். அவர்களுக்கு சொந்தமில்லாத எதையும் அவர்கள் தொட விரும்புவதில்லை. நிகோபார் மக்கள் தங்கள் வீடுகளைப் பூட்டுவதேயில்லை. களவுகள் என்பதும் அங்கு அரிது. சாலையில் பணம் கிடக்கக் கண்டாலும் தொடாத காலம் ஒன்று இருந்தது. இருப்பினும் அந்த நேர்மை மரபு குறைந்து வருகின்றது. இதற்கு இந்தியாவிலிருந்து வந்தவர்கள் சிலரின் தீய பழக்கவழக்கங்களும், அவர்களுடைய தொடர்பும் ஒரு காரணம் என்று சொல்லலாம். மக்களின் சொந்தத் தேவைகள் அதிகரித்திருப்பதும் மற்றொரு காரணமாகும். அவைகளினால் மற்றவர்களுக்குரிய பணத்தையோ, பொருள்களையோ எடுப்பதற்கு முன்போல் அஞ்சுவதில்லை. எனினும், அவர்களுக்குள் இருக்கும் உரிமைகளையும், சொத்துக்களையும் மதித்து நடக்கவே செய்கின்றனர். ஆனாலும், அதே நேர்மையுடன் இந்தியாவிலிருந்து வருபவர்களின் உரிமைகளைப் பாராட்டுவதில்லை. இந்தியர்களின் பொருளைத் திருடுவதில் மன உறுத்தல் இல்லை. இந்தியாவிலிருந்துவந்து இங்கு பணிபுரியும் கீழ்நிலை அரசாங்க ஊழியர்கள், நிகோபார் இளைஞர்களுடன் நட்புகொண்டு, கள் மற்றும் உள்ளூர் விளைபொருள்களைப் பெற்றுக்கொள்கின்றனர். இந்த இளைஞர்கள் இந்திய நண்பர்கள் வைத்திருக்கும் சில பொருள்களுக்கு ஆசைப்பட்டுத் திருடிவிடுகின்றார்கள். சில சமயம் பணம், துணிமணிகள், அன்றாட உபயோகப்பொருள்கள் முதலானவையும் களவுபோய்விடுகின்றன. திருடு புரிவதிலும் சாமர்த்தியம் எதுவும் இல்லை. பிடிபட்டதும் குற்றத்தை ஒப்புக்கொண்டு, தூண்டுதலுக்குள்ளாகித் தன்வசமிழந்து புரிந்த குற்றத்திற்கு மனதார வருத்தம் தெரிவிக்கின்றனர். தக்க தண்டனையடைந்த அநேக இளைஞர்கள் பின்னர் திருந்திவிடுகின்றனர். ஆனால், கிராமத்தில் உள்ள முதியவர்கள், திருட்டு எண்ணங்களை ஒடுக்கும் விருப்பத்தில், குற்றவாளிகளுடன் மிகக் கடுமையாக நடந்து கொள்ளுகின்றனர். அதனால் இரண்டாவது முறையர்கத் திருடும்

ஒருவனைக் காண்பது அரிது. இம்மாதிரியான களவுகளில் ஒரு சில இளைஞர்களே ஈடுபடுவதைக் காணமுடிகின்றது. பெண்களோ அல்லது மற்ற மூத்தவர்களோ களவுகளில் தொடர்புள்ளவர் களாகக் கூறப்படுவதில்லை. உண்மையில், இப்பொழுதுங்கூட, நிகோபார் மக்களை முழுமையுமாக எடுத்துக்கொண்டால், அவர்கள் நேர்மையும், நியாயமும் மிகுந்த மக்கள். எனினும், அந்த மரபு குறைந்துவருகின்றது.

நிகோபார் மக்கள் எல்லோரிடமும் நன்கு கலந்து பழகு கின்றார்கள். தனிமையாக இருப்பதையே அவர்கள் விரும்புவ தில்லை. எல்லா இடங்களிலும் தோழமையை விரும்புகின்றனர். உண்மையில் தனிமையாக வேலை செய்துகொண்டிருக்கும் நிகோ பார்வாசியைக் காண்பதே அரிது. அன்றாட வேலைகளைச்செய்து முடிப்பதற்குக்கூடத் தோழர்கள் தேவைப்படுகின்றார்கள்.

ஒவ்வொரு நிகோபார்வாசிக்கும் நண்பர்கள் ஏராளமாக உள்ளனர். 'குடும்ப நண்பர்கள்' என்று சிலர் இருக்கின்றார்கள். அந்தக் குடும்ப நண்பர்கள் தீவுகளின் எல்லாக் கிராமங்களிலும், மற்றத் தீவுகளிலும் இருக்கின்றார்கள். குடும்ப நண்பர்களுக்கு இடையே ஏற்பட்டுள்ள உறவுகள் சில சமயம் 200 அல்லது 300 ஆண்டுகளாகக்கூட இருந்துவருகின்றன. தொடர்ந்து வரும் தலைமுறைகளே உறவுகளை விடாமல் காத்துவருகின்றன. ஒரு நிகோபார்வாசி மற்றொரு கிராமத்திற்கோ அல்லது நிகோபார் பகுதியைச் சேர்ந்த ஒரு தீவுக்கோ சென்றால், அவர் முன்ன தாகவே உணவுக்காகவும், உறையுளுக்காகவும் ஏற்பாடுகள் எதுவும் செய்வதில்லை. அந்தத் தொல்லையே அவர்களுக்கு இல்லை. அவர் நேரடியாகக் குடும்ப நண்பர்களின் வீட்டுக்குச் சென்றுவிடு கின்றார். அவர்களும், அவர் தங்கியிருக்கும்வரை தங்களின் குடும்பத்தில் ஒருவராகவே அவரைக் கருதி நடத்துகின்றார்கள்.

இந்தக் குடும்ப நண்பர்கள் அல்லாமல், தாங்களாகவே நட்புக் கொண்ட வேறு நண்பர்களும் உள்ளனர். ஒவ்வொரு நாளும் இளைஞர்களும் சரி, முதியவர்களும் சரி, சாலைகளில் கைகோத் துக்கொண்டு ஆடிப்பாடிக் களித்துக்கொண்டு செல்வதைக் காணலாம்.

நிகோபார் மக்கள் அவர்களுக்குள்ளாகவே மாத்திரம் நட்பு கொண்டிருக்கவில்லை. அயலார்களிடமும் நட்புகொண்டிருக்கின் றார்கள். இந்தியாவிலிருந்து வருபவர்கள் நிகோபார் மக்களை 'ஹோல்ச்சு' என்று, அதாவது, 'என் நண்பர்' என்ற அர்த்தத்

தில் அழைக்கின்றனர். நிகோபார் மொழியில் 'பகைவன்' என்ற வார்த்தையே இல்லாமலிருந்தது. ஆனால், 'துஷ்மன்' என்ற இந்திப் பதம் இம்மொழியில் இடம்பெற்றிருக்கின்றது.

நிகோபார் மக்கள் அயலார்களோடு நட்புறவுடன் நடந்து கொண்டாலும், அவர்கள் உடனே ஒட்டிக்கொள்வதில்லை. அவர்களுடன் கனிந்த உறவுகொள்ள நாட்களாகின்றன. ஏனென்றால் அவர்கள், அயலார்களுக்கு ஏதாவது உள்ளெண்ணம் இருக்குமோ என்று சந்தேகப்படவேசெய்கின்றார்கள். வெளியிலிருந்து வந்த வர்த்தகர்கள் அவர்களைச் சுரண்டிவந்தது இன்னமும் அவர்கள் நினைவில் நீங்காமலிருக்கின்றது. அதன் காரணமாகவே வெளியார்கள் என்றால், சிறிது அச்சப்படவே செய்கின்றார்கள். அவர்களுடன் சொந்தமாகத் தொடர்பு கொள்ளுமுன் எச்சரிக்கையாகவே நடந்துகொள்ளுகின்றார்கள். இந்தச் சூழ்நிலையில், இந்தியாவிலிருந்து இங்கு சிறிதுநாள் தங்க வரும் பெரும்பாலோர், 'நிகோபார் மக்கள் கனிவுடன் நடப்பதில்லை, நட்புக்காட்டுவதில்லை, ஒதுங்கிச் செல்கின்றார்கள், அதனால் அவர்களுடன் கலந்து பழக முடியவில்லை' என்று குறை கூறிச் செல்லுகின்றனர். ஆனால், அயலார் ஒருவர், அவர்கள் பால் உண்மையான நட்பும், நலனில் கருத்தும், நல்லெண்ணமும் கொண்டிருப்பதை அவர்களுக்கு உணர்த்திவிட்டால், அவர்கள் அவரிடம் ஆழ்ந்த நட்பும், பற்றும் காட்டுகின்றனர். அவர்களுக்கு எல்லா வழிகளிலும் உதவிசெய்து, அவர்களைப் பின் பற்றி நடக்கத் தயாராகயிருக்கின்றார்கள்.

நிகோபார் மக்களிடம் உள்ள பாச உணர்வும், அவர்களின் நெருங்கிய குடும்ப உறவுக்குக் காரணமாக இருக்கின்றது. சாதாரணமாக ஒரு நிகோபார்வாசியிடம் தனித்தன்மை என்பது கிடையாது. தன்னைக் குடும்பத்தின் ஓர் அங்கமாகவே கருதுகின்றார். தனது நலன்கள் அல்லது தான் முன்னேறவேண்டும் என்ற கருத்துடனே யாரும் நடப்பதில்லை. குடும்பம் அனைத்தும் நலம்பெறவேண்டும் அல்லது அதனுடைய நலனையே கருத்தில் கொள்ளுகின்றார்கள். ஒவ்வொருவரும் குடும்பத்தில் உள்ள மற்றவர்களிடம் மிகுந்த பாசம், அக்கறைகொண்டிருக்கின்றனர்.

குடும்பத்துடன் அவ்வளவு நெருங்கிய உறவுகொண்டிருப்பதாலேயே, வெகு சில நிகோபார்வாசிகளே இந்தியாவுக்கு வேலை பார்க்கச் செல்லுகின்றார்கள். அப்படி ஒரு சிலர் சென்றாலும், சில காலத்திற்குள் வீட்டையும், குடும்பத்தையும் நினைத்துக்

கொண்டு, வேலைகளைத் துறந்து, வீடுகளுக்குத் திரும்பிவந்து விடுகின்றனர்.

அவர்கள் நட்பை விரும்புபவர்கள் மாத்திரமல்ல, காதல்வயப் பட்டவர்களுங்கூட. வாழ்வின் உச்சகட்ட இன்பத்தை எட்டி விட்டதாக நினைத்துக்கொண்டிருக்கும் காளையரும், கன்னியரும் மற்றவரைக் கவரும் வகையில் தங்களை அலங்கரித்துக்கொள்வதில் மிகுந்த அக்கறைகாட்டுகின்றனர். அங்கும் இன்பத்தில் முடிவுற்ற காதல் நிகழ்ச்சிகள் பலவும், துயரத்திலும் துன்பத்திலும் நின்ற சோகச் சித்திரங்களும் இருக்கவேசெய்கின்றன. உண்மையில் நிகோபார் மக்களின் வாழ்வே காதலாக, காவியமாக இருப்பதால் மிகுந்த கவர்ச்சியாக இருக்கின்றது.

நிகோபார் மக்களிடம் எதையும் ஏற்றுக்கொண்டு ஒத்துப் போகும் பெருங்குணம் இருக்கின்றது. இந்தக் குணத்தை அவர்கள் மாற்றங்களுக்கு இசைந்துகொடுப்பதில் காணலாம். அதனாலேயே அவர்கள் ஆக்கம் மிகுந்த வீறுகொண்ட மக்களாக, ஆண்டாண்டு காலமாக இருப்பதற்குக் காரணம் என்று கூறலாம்.

நிகோபார் மக்கள் மிகுந்த செலவாளிகள். அவர்களின் ஆதாரத் தேவைகள் எப்பொழுதும் கிடைக்கும் என்ற எண்ணம் ஆழப் பதிந்திருப்பதால், பணத்தைச் சேர்த்துவைக்கவேண்டும் என்ற கருத்து எழுவதேயில்லை. அதனால் கிடைத்த பணத்தைத் தங்களுக்காகவோ அல்லது மற்றவர்களுக்காகவோ, விருந்து வைத்தே விரைவில் செலவழித்துவிடுகின்றார்கள். அதனால், இந்திய தராதரத்தை வைத்துக்கொண்டு பார்த்தால், இங்கு கணிசமான வருவாயுடன் நல்ல நிலைமையில் உள்ளவர்கள்கூட கையில் பணம் வைத்திருக்கமாட்டார்கள். பணம் உடனடியாகத் தேவைப்படுமானால், பணத்துக்காக அவசர அவசரமாகப் பாக்கையும், கொப்பரையையும் விற்றுத் திரட்டிக்கொள்ளுகின்றனர். இவர்கள் விருந்தோம்பலிலும் மிகச் சிறந்தவர்கள். வீட்டிற்கு வருபவர்களுக்கெல்லாம் இளநீரும் வாழைப்பழமும் வழங்குகின்றார்கள். சில சமயம் தேநீர், பிஸ்கட்டுகளும் தருகின்றார்கள். விருந்துகளும் ஏராளமாகப் பெரிய அளவில் நடத்துகின்றார்கள். அவைகளுக்கு அன்னியர்களையும் அழைக்கின்றனர்.

வெளியிலிருந்து வரும் பிரமுகர்களுக்கும், அவர்கள் விரும்பும் மற்றவர்களுக்கும் கடற்கிளிஞ்சல்கள் அல்லது தங்களின் கைவினைப்பொருள்கள் முதலானவற்றை பரிசுப்பொருள்களாகத்

தருகின்றனர். அதேசமயத்தில் மற்றவர்களிடமிருந்து பரிசுகளை யும் எதிர்பார்க்கின்றனர். ஒன்றும் தரப்படவில்லையென்றாலும் பொருட்படுத்துவதில்லை. சில சமயம் இங்கு வருகைதருபவர்கள் வைத்திருக்கும் பொருள்மீது ஆசைகொண்டுவிட்டார்களென் றால் அதைக் கேட்பதற்கும் அவர்கள் தயங்குவதில்லை. கார் நிகோபார் மக்கள் இப்பொழுது நாகரிகமடைந்துவிட்டதால், இங்கு இவ்வாறு நடப்பதில்லை. ஆனால், மற்றத் தீவு மக்களிடம் இது சாதாரணம். இந்த மக்கள் எளிய சுபாவம் கொண்டவர்க ளாதலால், இவ்வாறு கேட்பது ஒழுங்கு முறைதானா என்பதை யெல்லாம் பார்ப்பதில்லை.

இங்கு உதாரணத்திற்கு ஒரு நிகழ்ச்சியைக் கூறலாம். கிரேட் நிகோபாரில் புலோபாய் என்ற கிராமத்தில், இந்த நூலாசிரியர் கால்நடையாகப் பயணம் சென்றுகொண்டிருந்தபொழுது, ஆசிரியர் அணிந்திருந்த சட்டையின்மேல் கிராமத் தலைமகன் ஆசைப்பட்டு, அதை அவர் அந்தக் கிராமத்தை விட்டுச் செல்லு முன் தந்துவிட்டே அகலவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். இதைப்போன்ற சட்டையொன்றை அனுப்பிவைப்பதாக உறுதி கூறி, மிகவும் வாதாடிய பின்னரே, ஆசிரியருக்கு கிராமத் தலைமகன் விடைகொடுத்தார்; மற்ற கிராமங்களுக்கெல்லாம் வெற்றுடம்புடன் செல்லும் வெட்கக்கேட்டைத் தவிர்த்தார்.

நிகோபார் மக்கள், ஏற்கனவே மற்ற அத்தியாயங்களில் கூறிய படி, கடன்பெறுவதை வெறுக்கின்றனர். இதற்குப் பிரிட்டிஷ் காலத்திய கசப்பான நினைவுகளே காரணம். அப்பொழுதும் வர்த்தகர்கள் இவர்களைச் சுரண்டிவந்தார்கள். எப்பொழுதும் அவர்களிடம் கடன்பட்டிருந்தார்கள். கடன்படுவதினால் தன் மானத்தை இழக்கவேண்டி நேரிடுகின்றது, மற்றவர்களின் தய வுக்குக் காத்துநிற்கவேண்டியிருக்கின்றது என்ற உணர்வு காரண மாகக் கடன்வாங்க இவர்கள் மறுக்கின்றார்கள்.

வாழ்க்கையைப்பொறுத்தும் மக்களிடம் ஒரு தத்துவார்த்த வகையான போக்கு காணப்படுகின்றது. நல்லதும் கெட்டதும், இன்பமும் துன்பமும் மனித வாழ்வுடன் பிறந்தவை என்று எண்ணுகின்றனர். அவர்கள் குடும்பத்துடன் மிக நெருங்கி யிருந்தாலும், உற்றார் உறவினர்கள்பால் மிகுந்த பாசம் வைத் திருந்தாலும், குடும்பத்தில் மிக நெருங்கியவர்கள் இறந்து விட்டால்கூட அவர்களின் கண்களில் ஒரு சொட்டு நீர் வருவ தில்லை. சில ஆண்டுகள் முன்புவரை இவ்வாறுதான் இருந்தார்

கள். ஆனால், இப்பொழுது வெளியுலகத் தொடர்பு அதிகரித்துள்ளதால், வாழ்க்கைமுறையை வேதாந்தரீதியில் எடுத்துக் கொள்ளும் போக்கு மங்கிவருகின்றது. இவர்களும் தங்கள் உறவினர்கள் இறந்தகாலையில் அழ ஆரம்பித்துவிட்டார்கள். இதுகூட, உலகிலுள்ள மக்களுடன் ஒப்பிட்டுப்பார்த்தால் மிகக் குறைவு என்றே சொல்லலாம்.

இந்தத் தத்துவரீதியான போக்கை 'இருப்பது போதும்' என்று நினைக்கும் உணர்விலும் காணலாம். ஒவ்வொருவருடைய ஆதாரத் தேவைகளையும் நிறைவேற்றிக்கொள்ளும்வகையில் தீவின் நிலைமை இருப்பதாலும் இந்த உணர்வு ஏற்பட்டுவிடவில்லை. பார்க்கப்போனல், சமீபத்தில் மக்கள் தொகை பெருகியுள்ளதாலும், பல மாற்றங்களின் காரணமாகச் சோர்வு தரும் நெருக்கடி ஏற்பட்டிருந்த நிலையிலும் மக்களுக்குச் சில பிரச்சினைகள் ஏற்படவே செய்தன. அப்பொழுதும் அவர்கள் மனநிறைவு கொண்ட போக்கை இழந்துவிடவில்லை. அவர்கள் முன்னின்ற சிக்கல்களை வெல்லவே முயன்றனர். தேவையென்று தோன்றிய இடத்தில் அரசாங்கத்திடம் உதவி கோரினர். அதற்காக அவர்கள் கூக்குரலிடவில்லை. அவர்களாலோ அல்லது அதிகாரிகளாலோ ஒரு சிக்கலைத் தீர்க்கமுடியாவிட்டால், அந்த நிலையை அவர்கள் புரிந்துகொண்டு, முணுமுணுக்காமல், அதற்குத் தக்கபடி எப்படியாவது இசைந்து நடந்துகொள்ளுகின்றனர்கள்.

நிகோபார் மக்களைக் காட்டுமிராண்டிகள், எதையும் சரியாகப் புரிந்துகொள்ளமாட்டார்கள், எதையும் எண்ணிப் பார்க்கத் தகுதியற்றவர்கள் என்று எந்த வகையிலும் கூறமுடியாது. அவர்கள் பகுத்தறிவு மிகவும் கொண்டவர்கள், நல்ல அறிவாளிகள். அவர்கள் வாழ்வு வெகு எளிமையாக அமைந்திருக்கின்றது என்பதால், புதுமைக் கருத்துக்கள் இடம்பெறுவது கடினமாகயிருக்கின்றது. இருப்பினும் அவர்களுடைய வாழ்வுடன் தொர்புகொண்ட அநேக விஷயங்களைப் புரிந்துகொண்டு, அவர்களுக்கு எது நல்லது, எது கெட்டது என்பதைக் கூர்மையுடன் ஆராய்ந்து பார்க்கும் தகுதி படைத்திருக்கின்றனர்கள். நிகோபார் மக்களிடம் ஏதாவது ஒன்றை விரிவாக, எல்லா அம்சங்களையும் சரியாக எடுத்துக்கூறி விளக்கினல், அவர்கள் அநேகமாகச் சரியான முடிவுக்கே வருகின்றனர்கள். இந்த காரணத்தினலேயே, அரசாங்கமும் தனது நிர்வாகப் பணிகளி

லும் வளர்ச்சிப் பணிகளிலும் அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது.

மக்களின் அறிவுத்திறன் அவர்கள் ஒன்றைக் கற்றுக்கொள்ளும் திறனிலிருந்தும் தெரிகின்றது. மொழிகள், இசை, விளையாட்டு கள் ஆகியவைகளைக் கற்றுத் தேர்வதிலும் அவர்களுக்கு இயற்கை யாகவே ஒரு திறனிருப்பதும் குறிப்பிடத்தக்கது. அவர்கள் செயல் வழியில் நம்பிக்கைகொண்ட மக்கள். பேசிப் பேசிக் குழப்பிக்கொள்ள விரும்புவதில்லை. ஒரு குறிப்பிட்ட திட்டத்தின் நன்மைகள் குறித்து நீண்ட உரைகள் நிகழ்த்துவதைவிட, ஆக்க ரீதியாக வெற்றிபெறச் செய்துகாட்டினால், அவர்கள் மனதில் பதிந்துவிடுகின்றது. அவர்கள் செயல்ரீதியாக இயங்குவதா லேயே, பொறியியலில் ஆர்வமும் கைகளில் திறனும்கொண்டிருக் கின்றார்கள். அவர்களுக்கு சிறிது பயிற்சி தந்தால், சிறந்த பொறியியல் வல்லுனர்களாக ஆகிவிடுகின்றார்கள். ஒரு சிலர் தொழிற்பட்டறைகளிலும், தனியார்களின் கப்பல்களிலும் பணியாற்றிவருகின்றனர். ஆனால் அவர்கள் வேலைசெய்யும் இயந்திரங்கள் எப்படி இயங்குகின்றன என்பதைக் கொள்கை ரீதியாக அறியமாட்டார்கள். எனினும், செயல் திறமையுள்ள தால் எந்தச் சாதாரண இயந்திரத்தையும் கையாளமுடிகின்றது.

முறைமை என்பதும் தெரியாத, வெட்கமும் கலந்த ஒருவகை யான மக்கள் அவர்கள். அவர்கள் இந்தியாவுக்குச் செல்லும் பொழுது, சூழ்நிலைகளைக் கண்டு அச்சமடைவதால், அவர்கள் வெட்கப்பட்டுப் பேசுவதற்குக்கூட நா எழாமல் போய்விடு கின்றது. அவர்களுக்குத் தெரியாத வெளியார்களும் சேர்ந் திருக்கும் கூட்டங்களில், அவர்கள் ஆர அமர இருப்பதில்லை. அவர்கள்முன் பேசுவதும் இல்லை. வெளியிலிருந்து வந்துள்ள பிரமுகர்கள் முன்பு தங்கள் குறைகளையும், கோரிக்கைகளையும் சொல்லிக்கொள்வது ஒழுங்கல்ல என்ற புதுமையான கருத்துக் கொண்டிருக்கின்றார்கள். நாட்டின் மற்ற பாகங்களுக்கெல்லாம் செல்லும் அமைச்சர்களும் மற்ற பிரமுகர்களும் தேவைகளையும், குறைகளையும் கேட்டுப் பழக்கப்பட்டவர்கள். அவர்களிடம் நிகோபார் மக்கள், தங்களுக்கு எதுவும் வேண்டாம், பெருமைக் குரிய விருந்தினர்கள் தீவுகளில் கழிக்கும் நாட்களை இன்பமுடன் கழித்து, இனிய நினைவுகளை எடுத்துச் சென்றாலே போதும் என்று சொல்லும்போது, உண்மையிலேயே பிரமுகர்கள் உணர்ச்சிவசப் பட்டுவிடுகின்றனர். 1959ஆம் ஆண்டில் முன்னாள் ராஷ்டிரபதி

யான டாக்டர் ராஜேந்திர பிரசாத், இத்தீவுகளுக்கு வருகை தந்தபொழுது மக்கள் அவரிடம், தங்களுக்கு எதுவும் வேண்டாம், ராஷ்டிரபதி நலமுடன் இருந்தாலே போதும் என்று சொன்ன வுடன், அவர் உணர்ச்சிவசப்பட்டுக் கண்ணீர் பெருக்கினார் என்று கூறப்படுகின்றது. எனினும் இத்தகைய மென்மை உணர்வும், பிரமுகர்களுக்குக் காட்டும் அளவுக்கு மீறிய மதிப்புணர்ச்சியும், மக்களுக்குத் தீமையாகவே அமைந்திருக்கின்றன. மக்களுக்குச் சிக்கல்களோ, குறைகளோ மிகுதியாக இல்லை. எனினும் இருப்பவைகூட, தீவுகளில் சில நாட்களே தங்கவரும் பிரமுகர் களை எட்டுவதில்லை. அதனால் அவர்களின் வருகைதரும் நோக்க மும் முழுமையுமாகப் பலனடைவதில்லை. உள்ளூர் அதிகாரிகள் மக்களின் குறைகளையும், தேவைகளையும் வருகின்ற பிரமுகர் களிடம் எடுத்துச் சொல்லவே செய்கின்றார்கள்; வழக்கமான வழிகளில் மேலதிகாரிகளின் பார்வைக்கும் கொண்டுவருகின் றார்கள். ஆனாலும் 'மக்கள் குரலி'னால் ஏற்படும் விளைவுகள் இல்லாமையால், விரைவுடன் கவனிக்கும் எண்ணம் எழாமல் போய்விடுகின்றது.

நிகோபார் மக்கள் அவர்களுக்குள்ளாகப் பழகிக்கொள்ளும் போது, எது முறை என்றெல்லாம் பார்க்காமல் வெகு சகஜமுடன் நடந்துகொள்ளுகின்றார்கள். எவரும் அவருடைய நண்பர் வீட்டுக்குச் சென்று, இருப்பதை உண்டு, குடித்து மகிழுகின்றார் கள். எதையும் கேட்டுச் செய்வதில்லை. ஒருவரை மற்றவர் சந்தித்தவுடன் முகமன் கூறுவதோ அல்லது சமயங்களில் நன்றி தெரிவிப்பது என்பதோ கிடையாது. இருவர் வழியில் சந்தித்துக் கொண்டால், எங்கே மற்றவர் போகிறார் என்றே ஒருவரை யொருவர் விசாரித்துக்கொள்கின்றனர். வேறு முகமன் வார்த் தைகள் எதுவும் கூறிக்கொள்வதில்லை. இப்பொழுது வெளியுலகத் தொடர்பு ஏற்பட்டிருப்பதின் காரணமாக, ஆங்கில முறைப்படி, 'தாலுக் புகூ' (Good Morning), 'தாலுக் சகாமா' (Good Noon or Day), 'தாலுக் ஹராப்' (Good Afternoon or Evening), 'தாலுக் ஹோதாம்' (Good Night) என்று முகமன்கள் கூறத் துவங்கியுள்ளனர். ஆனால் அவைகள் வெளியார்களுக்கே. நிகோபார் மொழியில் 'உங்களுக்கு நன்றி' (Thank you), பாராட்டுக்கள் (Congratulations) என்பதற்குச் சரியான பதங் களே இல்லை. இப்பொழுது நன்றி, பாராட்டு என்பதற்கு 'ரமலோன் சின்' என்று கூறுகின்றார்கள். அதற்குப் பொருள்,

'நான் மகிழ்ச்சிகொள்கின்றேன்' என்பதாகும். அதனால் அந்த வார்த்தைகள் நன்றி தெரிவிப்பதற்கும் பாராட்டுவதற்கும் அமைந்த முறைப்படியான பதங்கள் ஆகா.

நிகோபார் மக்கள் உள்ளூர் அதிகாரிகளையும் சொந்தமானவர்களாகக் கருதுவதால், அவர்களுடனும் சகஜமாகப் பழகுகின்றனர். முறைமையுடன் நடக்கவேண்டுமென்று தெரிவதில்லை. நிகோபார்வாசி யொருவர், ஓர் அதிகாரியைக் காணவேண்டுமென்றால், நேராக அவருடைய அறைக்கே, எந்தவித அறிவிப்புமில்லாமல் நுழைந்துவிடுகின்றார். அதிகாரி வேலையில் மூழ்கியிருக்கிறாரா, அதிகாரிக்குத் தன்னைக் காண நேரமிருக்கின்றதா என்பதைப்பற்றியெல்லாம் அவர் கவலைப்படுவதில்லை. அறையில் நுழைந்ததும், எந்தவிதத் தயக்கமுமின்றித் தனது குறைகளை அதிகாரியிடம் எடுத்துச்சொல்லுகின்றார். அலுவலக நேரமில்லாத வேளைகளில், அதிகாரியின் வீட்டுக்கே சென்று, அவர் உணவருந்திக்கொண்டிருந்தாலும் அதுபற்றிக் கவலைப்படாமல், அவர் மரியாதைக்காக உண்ணச்சொன்னால், அதிலும் பங்குகொள்ள அவர்கள் தயங்குவதில்லை.

மேலும் கிராமங்களுக்கு வருகைதரும் முக்கியப் பிரமுகர்கள் முன்னால் எழுந்து நின்று மரியாதை தரவேண்டும் என்பதுகூட அவர்களுக்குத் தோன்றுவதில்லை. இதுவும் அவர்களுடைய சகஜ மனப்பான்மையைக் காட்டுகின்றது. சில சமயம் மிக முக்கியமான பிரமுகர் வந்தாலுங்கூட, அவரை இருக்கச் சொல்லவோ அல்லது வீட்டிற்குள் அழைக்கவோமாட்டார்கள். தீவுகளில் சிறிது காலமே தங்கியிருக்கவரும் அநேகர், நிகோபார் மக்களின் இந்த சகஜ மனப்பாங்கைப் புரிந்துகொள்ளாமல் மரியாதையற்றவர்கள் என்று கூறிவிடுகின்றார்கள். இது துரதிர்ஷ்டவசமானது. இதில் அவமரியாதை என்பதே கிடையாது. வந்தவர்கள் விரும்பினால், கேட்காமலே வீட்டுக்குள் வரலாம், உட்காரலாம் என்று அவர்கள் நினைக்கின்றார்கள். ஆனால் இப்பொழுது அதிகாரிகளுடன் தொடர்புகள் அதிகரித்துள்ளதால், கார் நிகோபாரிலும் மற்றத் தீவுகளிலும் உள்ள சில கிராமத் தலைமகன்கள் நாகரிகமான மக்களின் மட்டுமரியாதைகளைத் தெரிந்துகொண்டு, கிராமங்களுக்கு வரும் அதிகாரிகளுக்கு இருக்கைகள் தந்து உட்காரும்படிக் கேட்டுக்கொள்கின்றனர். ஆனால் அவர்களும் சில சமயம் இந்த மரியாதைகளை மறந்துவிடுகின்றனர்.

வாழ்வின் எல்லா அம்சங்களிலும் நிகோபார் மக்கள் கேளிக்கையுடன் மகிழ்ந்திருக்க விரும்புகின்றனர். இளையவரும், முதியவரும் எல்லாப் பொழுதுபோக்குகளிலும் ஆர்வமுடன் பங்கு கொண்டு, களித்துத் திளைக்கின்றனர். அவர்கள் எப்போதும் மகிழ்ச்சியுடன் இருக்கப் பழகியுள்ளதாலேயே, அவர்களின் உண்மையான வயது கூடியிருந்தாலும் இளமையான தோற்றம் கொண்டிருக்கின்றார்கள். எந்தச் சிறிய சந்தர்ப்பத்திலும் மனம் மகிழச் சிரிப்பார்கள். அந்த சிரிப்பே எவரையும் அவரிடம் அன்புகொள்ளச் செய்யும். நகைச்சுவையும் மிகுதியாகக்கொண்ட மக்கள் அவர்கள். வேடிக்கைப் பேச்சுக்கள் மிக அதிகம். சில சமயம் தங்களையே நகைச்சுவைக்குள்ளாக்கிக்கொள்வார்கள். அதிகாரிகளும், தலைமகன்களும் கூடி வெகு முனைப்புடன் எதையாவது ஆலோசித்துக்கொண்டிருக்கும் இறுக்கமான சூழ்நிலையில் யாராவது ஒருவர் திடீரென்று வேடிக்கையாகப் பேசி எல்லோரையும் சிரிக்கவைத்துவிடுவார். அதனால் சுமுகமான சூழ்நிலை ஏற்பட்டுவிடுகின்றது. அந்தச் சூழ்நிலை காரணமாக, பரஸ்பர நம்பிக்கையுடன் நல்லதொரு முடிவு எடுக்க முடிகின்றது.

நிகோபார் மக்களிடம், சில சமயம் பொறுப்புள்ளவர்களாகவும், மற்றும் சில நேரங்களில் பொறுப்பற்றவர்களாகவும் நடந்து கொள்ளும் இரட்டைப்போக்கு காணப்படுகின்றது. கிராமங்களில் அன்றாட வேலைகளை மிகப் பொறுப்புடன் செய்கின்றார்கள். குறிப்பாகத் தலைமகன்கள் தங்கள் கடமைகளை மிகுந்த பொறுப்புணர்ச்சியுடன் நிறைவேற்றவே செய்கின்றனர். பொதுவாகத் தங்கள் கிராம விவகாரங்களை மிக நன்றாக நிர்வகிக்கின்றனர். ஆனால், அவர்கள் கிராமங்களில் உள்ள பரம்பரையான தொழில்களல்லாத மற்ற வேலைகளைக் குறிப்பாகப் பண விஷயத்தில் மிகவும் பொறுப்பற்று நடந்துகொள்கின்றார்கள். மற்ற வேலைகளையும் பொறுப்புணர்ச்சியுடன் செய்யவேண்டும் என்ற அளவுக்கு அவர்கள் முன்னேறவில்லை. தலைமகன்கள்கூட சில முக்கியமான காரியங்களை வெகு எளிதில் மறந்துவிடுகின்றார்கள். இதனால் சில வளர்ச்சிப் பணிகள்கூடக் குந்தகமடைந்துவிடுகின்றன. திட்டமொன்றைக் கொள்கையளவில் நிறைவேற்ற சம்மதித்த பின்னர், அதில் சம்பந்தப்பட்டவர்களும், தலைமகன்களும், அதில் தங்களுக்குள்ள முழுப் பொறுப்பையும் உணராமல், தொடர்ந்து நடவடிக்கை எடுக்காமல் விட்டுவிடுகின்றார்கள். அரசாங்க அலுவலகங்களிலும், வர்த்தக நிறுவனங்களிலும் வேலை

பார்க்கும் நிகோபார்வாசிகள்பற்றியும் மகிழ்ச்சிகொள்ள முடியாது. இயற்கையுடன் ஒட்டி வாழும் மற்ற மக்களைப்போலவே, நிகோபார் மக்களும் அடக்கமுடியாத உணர்ச்சிவசப்பட்டு, மனம் போனபடி சில சமயம் நடந்துகொள்கின்றார்கள். மீன் பிடிக்கச் செல்லவேண்டும் என்று எண்ணினால் அல்லது ஏதாவது ஒரு சொந்தக்காரணத்திற்காக, வேலைக்குச் செல்ல மனமில்லையென்றால், மறு முறை எண்ணிப் பார்க்காமலே, சரியான முறைப்படி விடுமுறை வேண்டாமலே நின்றுவிடுகின்றார்கள். குறிப்பாக நடவு சமயத்திலும், விழாக் காலங்களிலும் நிகோபார் ஊழியர்கள் நீண்ட நாட்கள் அலுவலகங்களுக்குச் செல்லாமலே நின்றுவிடுகின்றார்கள். அதனால் அரசாங்க அலுவலக வேலைகளும் வெகுவாகப் பாதிக்கப்படுகின்றன. அவர்கள் சரிவர அலுவலகத்திற்கு வரவில்லையென்று ஒழுங்கு நடவடிக்கை எடுப்பதும் வீண்! வேலையிலிருந்து நீக்குவது, தள்ளிவைப்பதுபோன்ற கடுமையான தண்டனைகளை அவர்களுக்கு விதித்தாலும், அவைகளினால் எதிர்பார்க்கும் பலன் கிட்டுவதில்லை. ஏனென்றால் அவர்களுக்கு கிராமத்தின் பரம்பரையான தொழில்கள் இருக்கவே இருக்கின்றன; கூட்டுக் குடும்பம் தனது ஆதாரத் தேவைகளைக் கவனித்துக்கொள்ளும் என்று ஒவ்வொரு நிகோபார்வாசியும் கருதுகின்றான். இதிலும் விதிவிலக்கு இருக்கின்றது. வர்த்தக நிறுவனங்களில் வேலை செய்யும் சில நிகோபார் ஊழியர்கள் வேலையில் பற்றும், ஆர்வமும்கொண்டு ஒழுங்காக நேரந்தவறாமல் சென்று பணியாற்றி வருகின்றனர். ஆனாலும் இங்கும் ஒரு வரம்பு இருக்கின்றது. அவர்கள் தனிப்படச் சரியான முடிவு எதையும் எடுக்கமுடிவதில்லை. அவசரத்தில் எப்படி நடந்துகொள்ளவேண்டும், நிலைமையை எப்படிச் சமாளிப்பது என்பது தெரியாது. அதனால் அவர்கள் மதிப்பு மிக்க ஊழியம் செய்கின்றார்கள், என்றாலும் அவர்களுக்கு உயர் பதவிகளை, தானே முடிவு எடுக்கவேண்டிய சில பதவிகளைத் தரமுடிவதில்லை. இந்தியாவிலிருந்து வருபவர்களைக்கொண்டே அவர்களை மேற்பார்வை செய்யவேண்டியிருக்கின்றது.

நிகோபார் மக்கள், அவர்களுடைய பரம்பரைத் தொழிலல்லாத மற்ற வேலைகளில் பொறுப்பில்லாமல் நடந்துகொள்கின்றார்கள் என்றால், அந்த வேலைகளின் மதிப்பை முழுமையுமாக உணரவில்லை என்பதே உண்மையாகும். அவர்களும் நன்கு கல்வி கற்று, மனம் வளமும் பெருகி, எல்லாவற்றையும் புரிந்துகொண்

டால், அவர்களுக்கும் பொறுப்புணர்ச்சி வந்துவிடும், சிறந்த ஊழியர்களாகிவிடுவார்கள்.

நிகோபார்வாசிகள் அலுவலகத்திற்கு சரிவர ஒழுங்காக வருவதில்லை யென்றாலும், வேலைக்குச் செல்வது என்று முடிவுசெய்துவிட்டால், சரியான நேரத்திற்கு வெகு முன்னதாகவே வந்துவிடுவார்கள். அவர்கள் நடத்தும் சமூக நிகழ்ச்சிகள் எதுவும் முறையான மட்டுமரியாதைகளுடன் நடைபெறுவதில்லை. அவைகளுக்கு விருந்தினர்கள் வெகு முன்னதாகவே செல்வதெல்லாம் சகஜம். ஆனால் எல்லாவித மரியாதைகளுடனும், முறைப்படி, இந்தியாவிலிருந்து சென்றவர் நடத்தும் நிகழ்ச்சிகளுக்கு, நிகழ்ச்சிக்காகக் குறிப்பிட்ட நேரத்திற்கு வெகு முன்னதாகவே விழாவுக்கான ஏற்பாடுகள் நடந்துகொண்டிருக்கும் வேளையில், நிகோபார் விருந்தினர்கள் வந்துவிட்டால், அழைத்தவர் எதுவும் செய்யத் தெரியாமல் திண்டாடுகிறார்!

இறுதியாக, நிகோபார் மக்கள் மிகவும் உணர்ச்சிவசப் பட்டவர்கள் என்பதையும் குறிப்பிடவேண்டும், அவர்கள் விரைவில் புண்பட்டு விடுகின்றார்கள். அது ஆழமாகவும் பதிந்துவிடுகின்றது. அமரிக்கையான வாழ்க்கைக் கொண்டிருக்கும் அவர்கள், தங்களுக்குள் மிகுந்த இணக்கமாகவே வாழ்ந்துகொண்டிருக்கின்றார்கள். எப்பொழுதாவது ஒரு முறையே புண்பட நேரிடுகின்றது. அவ்வாறு அவர்கள் உணர்ச்சி புண்பட்டுவிட்டால், மிகவும் வேதனைப்படுகின்றனர். குறிப்பாகத் தங்கள் வாழ்க்கைத் துணைவர்களுடன் சண்டையிட்டுக்கொள்ளும் காலங்களில், சிலர் நிலைகுலையும் அளவுச் சென்று, மரத்தில் தொங்கியோ, கடலில் விழுந்தோ உயிரை மாய்த்துக்கொள்ளுகின்றார்கள். அதனால் மற்ற குற்றங்கள் நிகோபார் தீவுகளில் குறைவாக இருந்தாலும், தற்கொலை விகிதம் மிக அதிகமாகவேயுள்ளது. ஆனால் இப்பொழுது அதிர்ஷ்டவசமாகத் தற்கொலை விகிதம் குறைந்து வருகின்றது. மக்கள் அந்த அர்த்தமற்ற வழியை மேற்கொள்ளும் தவறை உணர்ந்துகொண்டு வருகின்றார்கள். தங்கள் உயிருக்குள்ள மதிப்பை உணரத் தொடங்கிவிட்டார்கள்.

இந்தியாவிலிருந்து வந்தவர்களுடன் கொண்டுள்ள தொடர்பு காரணமாக, அவர்கள் புண்படும் வாய்ப்புகள் அதிகமாகிவிட்டன. இந்தியாவிலிருந்து வந்த அநேகர் நிகோபார் மக்களின் உணர்ச்சிகளைச் சரியாகப் புரிந்துகொள்வதில்லை. அவர்களில் சிலர்

ஆத்திரம்கொண்டு மரியாதையில்லாமல் நிகோபார் மக்களைக் கடுமையாகப் பேசிவிடுவதுண்டு. மேலும் தாங்களே உயர்வான வாழ்க்கை முறையைக்கொண்டிருப்பதாகத் தவறான எண்ணங் கொண்டு, இந்தியாவிலிருந்து வந்துள்ள சில மக்கள் நிகோபார் மக்களை உரிய வகையில் மதித்து நடத்துவதில்லை. அதனால் நிகோபார் மக்கள், அவர்களைப் பார்த்துக்கூறிய கொடுமையான வார்த்தைகளை மனதில்கொண்டு, தன்மானம் பறிக்கப்பட்ட தாக நினைத்து, அந்தச் சொற்களைக் கூறியவர்களை மன்னிப்பதே யில்லை. மன்னிப்பதும் கடினமாகிவிடுகின்றது. ஆனால் அவர்கள் திருப்பி பதில் தருவதில்லை, வன்முறையில் திருப்பித் தாக்குவது மில்லை. மிகுந்த வேதனைப்படுகின்றார்கள். அந்நிகழ்ச்சிகளை எளிதில் மறப்பதில்லை. தங்களுக்கு இழைக்கப்பட்ட தீங்கைப் பிறிதொரு காலத்திலும், எந்தவித சந்தர்ப்பமுமில்லாத நிலையிலும் சொல் லிக்காட்டக்கூடியவர்கள். ஏதாவது அதிகாரி ஒருவர், சில முக்கியமான பொருள்கள் குறித்து கிராமத் தலைமகன்களுடன் ஆலோசனை நடத்திக்கொண்டிருக்கும் வேளையில், ஒரு தலைமகன் திடீரென்று எழுந்து பேச ஆரம்பித்துவிடுவார். எந்தவித சம்பந்தமுமில்லா ஒரு சிறு விவகாரம் குறித்து உணர்ச்சிகளையெல் லாம் கொட்டி அவர் பேசுவார். இந்தியாவிலிருந்து வந்த யாரோ ஒருவர் என்றோ தனக்கிழைத்த தீங்கினை எடுத்துக்கூறு வார். அதை, அதில் சம்பந்தப்பட்ட நிகோபார் மக்களைத் தவிர மற்றெல்லோரும் மறந்திருப்பார்கள். அப்பொழுது அந்த அதிகாரி புண்பட்ட மனிதர்களை அமைதிப்படுத்துவதற்கும், அவ ருடைய சாமர்த்தியம் அனைத்தையும் பயன்படுத்தவேண்டியிருக் கும். உண்மையில் நிகோபார் மக்களுடன் பழக, ஒருவர் மிகுந்த செயல்நயமும், அன்பும், ஆதரவும் காட்டவேண்டும். அதே சமயத்தில் அவர்களைப் புரிந்துகொண்டு அனுதாபமுடனும் பொறுமையுடனும், அவர் நடந்துகொள்ளவேண்டும். இத் தகுதிகள் இல்லாத எவரும், இம்மக்களிடையே பணிசெய்ய விரும்பினால் வெற்றி பெறுவது கடினம்.

அத்தியாயம் 20

# முடிவுரை

நிகோபார் தீவுகளில் உள்ள சமூகப் பொருளாதார நிலைமைகளை ஆராய்ந்து பார்த்தால், இம்மக்களின் வாழ்வு மிக்க மகிழ்ச்சியானதொரு நிலையில் இருக்கிறது என்ற மிகத் தெளிவான முடிவுக்கே வரவேண்டியுள்ளது. எப்படி வாழ்வது என்ற கலையையே தெரிந்துகொண்டார்களோ என்றும் படுகின்றது. அவர்கள் வாழ்வு அர்த்தமற்ற பூசல்களால், பணத்தைத் தேடி ஓடும் முயற்சிகளால் நிறைந்திருக்கவில்லை. அவர்களிடம் அமைதி, வசதி, ஓய்வு, பொழுதுபோக்கு எல்லாம் வெகுவாக இருக்கின்றன. கார் நிகோபாரில் அவர்கள் புதுமையிலும், பழமையிலும் சிறந்தவைகளையெல்லாம் கொண்டிருக்கின்றார்கள். வர்த்தகத்துறை ஒழுங்குபடுத்தப்பட்டுக் கூட்டுறவு முறைகளும் வளர்ச்சிபெற்றிருப்பதால் மக்களிடம் பொருள் வளம் மிகுந்திருக்கின்றது. முன்னைவிடத் தற்பொழுது நன்கு உண்ணுகின்றனர், உடுக்கின்றனர், வாழுகின்றனர். சிறந்த நவீன வைத்திய வசதிகள் கிடைப்பதால் உடல் நலம் கூடியிருக்கின்றது. பேய் பிசாசுகளை வணங்குவதைவிட்டு, மதமும் மாறியிருப்பதால், இப்பொழுதெல்லாம் நிரந்தரமான அச்சத்துடன் அவர்கள் வாழுவதில்லை. எதையும் எதிர்த்து நின்று சமாளிக்கும் நம்பிக்கை அவர்களுக்குக் கிடைத்திருக்கின்றது. இந்த மாற்றங்கள் எல்லாம் ஏற்பட்டும் அவர்கள் தங்கள் தொன்மைக்குடியின் ஒருமைப்பாடு, சமுதாயப் பொறுப்புணர்வு, ஒருவருடன் மற்றவர் கொண்டுள்ள அமைதியும், இணக்கமும் நிறைந்த உறவு, போதுமென்ற மனமுடன் எதையும் கணிக்கும் திறன் ஆகிய எதையும் இழந்துவிடவில்லை.

மேலும், நிகோபார் மக்கள் காட்டுமிராண்டிகள் அல்ல. ஒழுங்கமைந்த வாழ்க்கை முறையுடன், அவர்களுக்கே உரிய தனித்ததொரு சிறப்புமிக்க பண்பாட்டையும் அவர்கள் கொண்டிருக்கின்றார்கள். உண்மையில் நன்கு மேம்பட்ட மக்கள் என்று கூறப்படும் அநேகர், அவர்களிடமிருந்து தெரிந்துகொள்ளவேண்

டியவைகள் ஏராளமாகயிருக்கின்றன. அவர்களின் சமுதாயப் பொறுப்புணர்ச்சி, சமுதாய நலனுக்காகத் தனிப்பட்ட விருப்புக் களை விட்டுக்கொடுப்பது, சமத்துவ உரிமைகள், அமைதியான வாழ்வு, போதுமென்ற மனம் ஆகியவைகளை அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ளவேண்டும்.

எனினும் நிகோபாரர் சமுதாய வளர்ச்சி இப்பொழுது ஒரு கட்டத்தை அடைந்துவிட்டது. அடுத்த ஐந்து அல்லது பத்து ஆண்டுகளில் நடக்கவிருப்பவைகளே, அவர்களுடைய வருங் காலத்தை உருவாக்கவிருக்கின்றன. அவர்கள் இதுவரை அடைந்துள்ள மாற்றம், அவர்களாகவே உணர்ந்து ஏற்பட வில்லை. சில தவிர்க்க முடியாத சக்திகளால் ஏற்பட்ட மாற்றம் என்றே கூறவேண்டும். எனினும், இப்பொழுது அது ஒரு கால கட்டத்தை அடைந்துவிட்டது. மற்ற சக்திகளே தொடர்ந்து அவர்களை நடாத்திச்செல்ல அனுமதிப்பது அவர் களுக்கு இயலாது. அவர்களே மாற்றங்காண மனதார முயல வேண்டும். சில துறைகளில் அடிப்படையையே மாற்றவேண்டும். அதே சமயத்தில் தொன்மையான நல்லவைகளையும் காத்துக் கொள்ளவேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக, சிறந்ததொரு வருங்காலம் காணக் கடினமாக உழைக்கவேண்டும்.

மக்களின் உழவுத்துறைப் பழக்கவழக்கங்களும், அவர்களின் அன்றுடப் பணிகளைக் குறித்த போக்கும் மிக முக்கியமாக மாறி யாகவேண்டும். அவர்களின் தோட்டந் துரவுகளின் விளைச்சலுக் கெல்லாம் வளம் கொழிக்கும் இயற்கையை நம்பிப் பழக்கப் பட்டிருக்கின்றனர்கள். அவர்கள் முயற்சியே வெகு குறைவு. இதனுல் நிலத்தைப் பூரணமாகப் பயன்படுத்திக்கொள்ள முடிய வில்லை. அதனுல் பயிர் விளைச்சல், நல்ல கவனமும், கடின வேலையும் செய்தால் கிடைப்பதைவிட மிகக் குறைவாக இருக் கின்றது. இன்றைய விவசாய விளைச்சல், மக்கள் அனைவரின் தேவைகளையும் பூர்த்திசெய்யக் கூடியதாகயிருந்தாலும், பாரம் பரியமான விவசாய முறைகளைக்கொண்ட உற்பத்திக்கும், தேவைக்கும் இடையே இருக்கும் சமநிலை, நீண்ட காலத்திற்கு நீடித்து நிற்காது. தீவுகளின் மக்கள் தொகை பயங்கரமான விகிதத்தில் பெருகிவருகின்றது. கார் நிகோபாரிலும், சோவ்ரா விலும் மக்கள் தொகையின் நெருக்கம் ஏற்கனவே உணரப் பட்டு வருகின்றது. அது குறிப்பிடும் அளவுக்குத் தெரியாமைக் குக் காரணம், வர்த்தகத்துறை ஒழுங்குபடுத்தப்பட்டு கூட்டுறவு

முறைகளும் தோன்றியிருப்பதால், பொருள் வளம் பெருகியுள்ளது. அது மக்கள் தொகைப் பெருக்கத்தின் விளைவுகளை சரிசெய்து கொண்டிருக்கின்றது. ஆனால் மக்கள் கடினமாக உழைத்துக்கிடைக்கும் நிலத்தில் விளைச்சலைப் பெருக்கவில்லையென்றால், விரைவில் அவர்கள் எல்லோருக்குமே உணவு போதுமானதாக இருக்காது. தற்போதைய வளமும் மறைந்துவிடும்.

நிலத்தில் விளைச்சலைப் பெருக்குவது, நிகோபார் மக்களைப் பொறுத்தவரையில் மிக முக்கியமானது. ஏனென்றால், பெரிய அளவில் தொழில் வளப்படுத்தி பொருளாதார வளர்ச்சி காணும் புதிய வழிதுறைகளும் இத்தீவுகளில், மற்ற இடங்களில் போலில்லை. இத்தீவுகளில் கனி வளம் இல்லை. மூலப்பொருள் களை இறக்குமதி செய்தும், உருவான பொருள்களை ஏற்றுமதி செய்வதற்கும் ஆகும் கப்பல் செலவும் எண்ணிப்பார்க்க முடியாத அளவுக்கு மிகுந்திருக்கும். அதனாலும் பெரிய தொழில்களை இங்கு அமைக்கமுடியாது. பன்றி வளர்ப்பு, கோழி வளர்ப்பு, நவீன முறைகளில் மீன் பிடித்தல் ஆகியவைகள் மூலம் இவர்கள் பொருளாதார ரீதியில் முன்னேற்றங்காண முடியும் என்பதில் சந்தேகமில்லை. என்றாலும் அவர்கள் தங்கள் வாழ்வினுக்கு நிலத்தையே பெரிதும் நம்பியிருக்கவேண்டியிருக்கின்றது. அதனால் விரைவில் அவர்கள் உழவுத்துறையில் விளைச்சலைப் பெருக்குவது அவசியம்.

பொருள்கள், பண்டங்கள் ஆகியவைகளை மக்கள் விரும்புவதும் அவைகளின் தேவையும் அதிகரித்து வருகின்றன. அதனாலும், இப்பொழுதுள்ள விவசாய விளைச்சலைப் பெருக்கவேண்டியது அவசியமாகின்றது. இப்பொழுதிருந்து வரும் எளிய வாழ்வையே மக்கள் கடைப்பிடித்துவந்தாலும், வாழ்வைப்பற்றிய அடிப் படைப் போக்கும் ஒரே மாதிரியாகவே இருந்துவந்தாலும், பொருள்கள், பண்டங்கள்பற்றிய மக்களின் தேவைகள், மற்ற நாகரீகமுள்ள மக்களுடையதைப்போல் இப்பொழுது உயராது. ஆனால் வெளியுலகத் தொடர்புகள் அதிகமாக ஆக, சினிமாப் படங்களின் செல்வாக்கினாலும், கல்வி பரவுவதினாலும் ஓரளவு அவர்களின் தேவைகள் பெருகவே செய்யும். விவசாய உற்பத்திப் பெருக்கம், பண்டங்களின் தேவைக்கேற்பப் பெருகாவிட்டால், அதனால் ஏமாற்றம் ஏற்படும். மக்களின் இன்றைய மகிழ்ச்சியான வாழ்வும் குலையவே செய்யும்.

அதனுல், மிக முக்கியமாக, மக்கள் மேம்பட்ட உழவுமுறைகளைக் கைக்கொள்ளவேண்டும். இடைவிடாது கடினமாக உழைத்து உற்பத்தியைப் பெருக்கவேண்டும். இல்லாவிட்டால் ஒளி மிகுந்ததொரு வருங்காலத்தைக் காண்பது அரிது.

அதேபோன்று விரிவாகக் குடும்பக் கட்டுப்பாட்டில் ஈடுபடுவதும், மிக முக்கியமானதாகும். மக்கள் தொகைப் பெருக்கத்தை, உணவு விளைச்சலைப் பெருக்கியும், கார் நிகோபார், சோவ்ரா போன்ற தீவுகளில் நிறைந்திருக்கும் மக்களை, மற்ற மக்கள் குறைந்திருக்கும் தீவுகளில் குடியமர்த்தியும் சரிசெய்து விடலாம். எனினும், உணவு விளைச்சலைப் பெருக்குவதற்கும், மற்ற தீவுகளில் மக்களை குடியமர்த்துவதற்கும் ஒரு வரம்பு உள்ளது. அதனுல் நிகோபார் மக்கள் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை மேற்கொள்ளுவது மிகவும் அவசியம். ஆனுல், அரசாங்கம் தொடங்கியுள்ள குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களுக்கு மக்களிடம் போதிய வரவேற்பு இல்லாமை துரதிர்ஷ்டவசமானது. குழந்தைகளை அவர்கள் மிகவும் விரும்புவதும் ஒரு காரணம்; இரண்டாவதாக, மற்றவர்களைக் காட்டிலும் எண்ணிக்கையில் தாங்கள் குறைவு என்பதும் ஒரு காரணமாக இருக்கலாம். அவைகளினுலேயே அவர்கள் குடும்பக் கட்டுப்பாடுகளை ஏற்றுக்கொள்ள விரும்புவதில்லை. நன்கு கல்விகற்ற நிகோபார்வாசிகள்கூட அத்திட்டங்களுக்கு அதிக முக்கியத்துவம் தருவதில்லை. எதிர்காலத்தில் வறுமையின் வாட்டம் தென்பட்டால், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களைக் கைக்கொள்ளலாம் என்று அவர்கள் ஆர்வங்குன்றியிருக்கின்றனர். ஆனுல் வெகு விரையில் அது காலங்கடந்ததாகிவிடும் என்பதை அவர்கள் நினைத்துப் பார்க்க மறுக்கின்றனர். இப்பொழுது முதலே பிறப்பு விகிதத்தைக் கட்டுப்படுத்த நடவடிக்கைகள் எடுக்காவிட்டால், இன்னமும் சில ஆண்டுகளுக்குள், மக்கள் தொகைப் பெருக்கத்தினுல் வறுமையும், துயரமும் தோன்றவே செய்யும்.

தொன்மைச் சிறப்புகள் சிலவற்றையும் மக்கள் காத்து நிற்க வேண்டியது மிகவும் அவசியமாகும். சமுதாய ஒருமைப்பாடு, ஒருவருடன் மற்றவர் கொண்டிருக்கும் அமைதியான, இணக்கமான உறவு, சமுதாய நலனுக்காகத் தனிப்பட்டவர்கள் தங்கள் விருப்பங்களையும், எண்ணங்களையும் விட்டுக்கொடுத்தல் ஆகிய தொன்மைச் சிறப்புகளை இழந்துவிட்டால் அது மிகவும்

துரதிர்ஷ்டமானது என்றே கூறவேண்டும். அவர்களுடைய வாழ்வில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டிருந்தபோதிலும், இச் சிறப்புக்கள் அனைத்தும் அப்படியே இருந்துவருகின்றன. அவை களினால் அவர்களும் பெரிதும் பயனடைந்திருக்கின்றனர். எனினும் எதிர்கால நிலைமைபற்றிக் கூறுவது கடினம். வெளி யுலகத் தொடர்பும் அதிகரித்து, கல்வியும் பரவினால் தனித் தன்மை வளரவே செய்யும்; கூட்டுக் குடும்பங்களிலும் கிராம மட்டத்திலும், தீவிலும் மிக நெருங்கி இணைந்திருக்கும் ஆதிக் குடியமைப்பிலும் சோர்வும், நெருக்கடியும் தோன்றவே செய்யும். நிகோபார் மக்களிடையே இருக்கும் உறவுகள் தளருமானால், ஒவ்வொருவரும், சமுதாய நலக் குறிக்கோளுக்குப் புறம்பாக தங்கள் சொந்த நலனைப் பெருக்கிக்கொள்ள முயலுவார்களா னால், இப்பொழுது அவர்கள் வாழ்வில் காணும் எல்லா அமைதி யும், நிறைவும் மறையவே செய்யும். ஆதிக் குடிகளின் ஒருமைப் பாடு குலைந்தால், அது அவர்களுக்குப் பெருந் தீமையாக முடியும். நாட்டின் எங்கோ ஒரு மூலையில், மிகக் குறைந்த எண்ணிக்கையில் வாழும் அவர்கள் ஒரு குரலில் பேசாவிட்டால், அவர்களுடைய சிக்கல்களோ, இக்கட்டுகளோ எட்டவேண்டிய அதிகாரிகளை எட்டாது. முக்கியமான நலன்கள் அனைத்தும் வெகுவாகப் பாதிக்கப்பட்டுத் தீமையில் முடியும்.

எனினும், தொன்மைச் சிறப்புகளையும், பழமையான சமுதாய அமைப்பு முறைகளையும் காத்துநிற்க மனதார முயற்சி செய்வார்களானால், கல்வியும், பொருளாதார வளமும் பெருகி னாலுங்கூட, தற்போது அவர்களுக்கு வலிமை தந்துவரும் ஆதாரச் சிறப்புகளை இழந்துவிடமாட்டார்கள். குறிப்பாக, கூட்டுறவு இயக்கம் வளருவது நல்லதொரு அறிகுறியாகும். கூட்டுறவுக் கருத்துக்கள் வலுப்பெறுமானால், நிகோபார் மக்களின் அடிப்படையான ஒருமைப்பாடும், மற்றவர்களின் உரிமைகளையும், நலன்களையும் மதித்து நடத்தலும் வருங்காலத் திலும் பேணப்படக்கூடும். தொன்மைச் சிறப்புகளையும், சமுதாய ஏற்பாடுகளையும் கண்மூடித்தனமாக ஆதரித்து, அவை களுடன் உணர்ச்சிபூர்வமாக இணைத்து நிற்பதைவிட, சமுதாயத் தின் பெரும்பான்மை நலனைக் கருதும் குறிக்கோளை அடைய மக்கள் ஒற்றுமை உணர்வுடன், கூட்டுறவு நல்கி மனதார ஒன்று பட்டுப் பாடுபடவேண்டும்.

ஆனால், அநேகமாக எல்லாமே வருங்காலத் தலைமையின் சிறப்பைப் பொறுத்திருக்கின்றது. இதுவரை கார் நிகோபார் மக்கள் தலைசிறந்த தலைவரான ரிச்சர்டுசன் பாதிரியாரின் தலைமையைப்பெற்றுள்ள நல்வாய்ப்பினை அடைந்திருக்கின்றார்கள். அவர் தொன்மையில் சிறந்தவைகளையும், புதுமை வழிகளையும் வடித்தெடுத்த உருவாக யிருக்கின்றார். முன்னறிவும், தெளிவும் கொண்டிருக்கும் அதே நேரத்தில், மக்களின் ஆதாரச் சிறப்பு களையும், பரம்பரையான சிறப்புகளையும் மதித்து நடப்பவராக அவர் இருக்கின்றார். மக்களுக்குத் தொண்டுபுரியவே தன்னை ஈடுபடுத்திக்கொண்டுள்ள அவர், நாட்டின் பெருநலனிலும் அளவிலாப் பற்றுக்கொண்டுள்ளார். மதார்வம் மிகுந்த அவர், பரந்த மனப்பான்மையுடன் எல்லோரையும் புரிந்துகொள்ளவும் செய்கின்றார். துணிவு மிகுந்த அவர், பணிவும் மிக்கவர். நிறைந்த ஆர்வமும், கடின உழைப்புத் திறனும்கொண்ட அவர், அதேமாதிரி சிரித்து மகிழும் தன்மையும், நகைச்சுவை உள்ளமும் உடையவர். உண்மையிலேயே வரலாற்று மனிதர் அவர். அவரால் தீவிலே ஒரு புதிய சகாப்தமே தோன்றியுள்ளது. அவர் மக்களுக்கு வழிகாட்டிக்கொண்டிருக்கும்வரை, மக்கள் காலத்தின் சவால்களை எதிர்த்து நிற்கமுடியும், அவர்கள் வளமும், மகிழ்ச்சி யும் நிரம்பி வாழமுடியும் என்று நியாயமுடன் நம்பலாம். அவருடைய தலைமை இன்னமும் பல்லாண்டுகள் இம்மக்களுக்கு இருக்கவேண்டும் என்று நிகோபார் மக்களின் நலனில் அக்கறை கொண்ட அனைவரும் விரும்பினாலுங்கூட, இது குறித்து உறுதியாக எதுவும் கூறமுடியாது. அவருக்கு இப்பொழுது 80-க்குமேல் வயதாகின்றது. என்றுமே இருப்பது என்பது முடியாது. அவருக்குப்பின் ஏற்படும் சூனியத்தை இட்டு நிரப்புவது என்பது கடினம். நிகோபார் நலனும், நிர்வாகப் பணிகளும் தடைப்படவேசெய்யும்.

அவரைப்போன்ற ஒருவர் இல்லை என்பது உண்மை. ஆனால், அவருக்குப்பின் தலைமை ஏற்க யாருமே இல்லை என்ற நிலையை எண்ணும்போது, அதை துரதிர்ஷ்டம் என்றே கூறவேண்டும். கல்விகற்றுள்ள நிகோபார்வாசிகள் சிலர் இன்னமும் இளைஞர்கள். அவர்களுக்குப் புலனறிவும் இல்லை. அனுபவமும் கிடையாது. மக்களின் மதிப்பைப்பெற்றவர்களும் அல்லர். அவர்களை நடத்திச்செல்லவும் தெரியாது. அதே சமயத்தில் மக்களிடம் ஓரளவு மதிப்பும் செல்வாக்கும்பெற்ற தீவின் தலைமகன்கள்

எல்லோரும் கல்வியறிவு அற்றவர்கள்; காலத்தின் தேவைகளை உணர்ந்து கூறத்தெரியாதவர்கள். அரசாங்கத்துடன் தொடர்பும், உறவும்கொண்டிருக்கத் தகுதியில்லாதவர்கள், வருங்காலத்தில் மக்களைப் புதிய வழிகளில் நடத்திச்செல்லும் திறமையில்லாதவர்கள்.

ஆகையினால், இப்போதிருந்தே ரிச்சர்டுசன் பாதிரியாருக்குப் பின் தலைமைக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியை மக்கள் உணர்ந்து, அடுத்துவரும் தலைவரை உருவாக்குவது இன்றியமையாத பணியாகும். ரிச்சர்டுசன் பாதிரியார் மற்ற தலைமகன்களுடன் கலந்தாலோசித்து, தகுதிபடைத்த, கல்விகற்ற இளைஞர் ஒருவரைத் தேர்ந்தெடுத்து, தனது வாரிசாகப் பயிற்சி தந்து உருவாக்கினால், அவருக்குப்பின் நல்லதொரு தலைமை கிடைக்கும் என்ற நம்பிக்கை சிறிது இருக்கின்றது. இல்லாவிட்டால், சுக்கான் அற்ற கப்பல்போல் நிகோபார் மக்களின் விதி பல்வேறு துரோகப் பாறைகளின்மீது மோதி சுக்கல் சுக்கலாகிவிடும்.

மற்றத் தீவுகளில் தலைமைச் சிக்கல் இன்னமும் மோசமாகவுள்ளது. பல்வேறு தீவுகளுக்கும் தலைவர்கள் என்று அநேகர் இருக்கின்றனர். அவர்கள் தலைமையிலும் தகராறில்லை என்று கூறிவிடமுடியாது அல்லது கார் நிகோபாரில் ரிச்சர்டுசன் பாதிரியார் போன்று மக்கள் அனைவரிடமும் மிகுந்த செல்வாக்குக் கொண்டிருக்கிறார்கள் என்றும் கூறமுடியாது (உண்மையில் ரிச்சர்டுசன் பாதிரியாருக்கு மற்றத் தீவுகளிலும் செல்வாக்கு இருக்கவே செய்கின்றது. அந்தத் தீவுகளின் வளர்ச்சிப் பணிகளிலும் தலைமைதாங்கி, அவர்களுக்கு ஏற்படும் இன்னல்களையும், சிக்கல்களையும் அரசாங்கத்தின் பார்வைக்கும் கொண்டு வருகின்றார்.) சோவ்ராவில் இரு கட்சிகள் இருக்கின்றன. முதன்மைத் தலைமகனின் அதிகாரத்தை பல தடவைகள் தட்டிக் கேட்டுவிட்டனர், கேட்டும் வருகின்றனர். கட்சால் மக்களிடம் ராணி சங்காவுக்கு நல்ல பிடிப்பு இருக்கின்றது. அவர்களின் தலைவர் என்று அவரைக் கருதலாம். ஆனால், கடந்த சில ஆண்டுகளில் இத்தீவிலும் இரண்டு கட்சிகள் தோன்றிவிட்டன. ராணியின் நிலைமை இப்பொழுது அவ்வளவு வலுவாகயில்லை. நான்கோவ்ரி, கமோர்டா, டிரின்கெட், டெரசா, பாம்புகா ஆகிய தீவுகளில் உள்ள மக்களின் நம்பிக்கையைப்பெற்றவர் ராணிலட்சுமி. ஆனால், அவர்களைக் கட்டுப்படுத்திவைத்திருக்கும் திறமை அவரிடம் இல்லை. எல்லா விஷயங்களிலும் அவர்களைத்

தன்னுடன் நடாத்திச்செல்லவும் முடியாது. மற்றத் தீவுகளில் செல்வாக்குள்ளவர் என்று எவருமோ அல்லது மக்களின் தலைவர்கள் என்று கருதக்கூடியவரோ யாரும் இல்லை.

மேலும், ராணி சங்கா, ராணி லட்சுமி, சோவ்ராவின் முதன்மைத் தலைமகன் போன்றவர்கள் நல்லெண்ணத்துடன், உண்மையானவர்களாக இருந்தாலும், கல்வி கற்காதவர்கள் என்ற பெருங்குறையுள்ளது. அவர்களின் புலனறிவும், தெளிவும் ஒரு வரம்புக்கு உட்பட்டன. அரசாங்கத்தின் நிர்வாகப் பணிகளில், வளர்ச்சிப் பணிகளில் அரசுடன் உறவுகொண்டிருக்க முடியாதவர்களாக யிருக்கின்றார்கள். இதுவரை வளர்ச்சிப் பணிகளும் சிறிதளவே மேற்கொள்ளப்பட்டு வந்திருக்கின்றன. இப்பொழுது தலைவர்களாகக் கருதப்பட்டு வருகின்றவர்கள் தலைமை ஏற்று, இப்பணிகளை நடத்தித்தரவேண்டுமென்ற நிலையும் ஏற்படவில்லை. எனினும், வருங்காலத்தில், முக்கியமான வளர்ச்சிப் பணிகள் மற்றத் தீவுகளிலும் தொடங்கப்படவே செய்யும். பணிகளும் பெருகும் என்பதால், மற்றத் தீவுகளின் மக்களுக்கும் வலுவான, அறிவுமிக்க உண்மைத் தலைவர் வேண்டும். வளர்ச்சிப் பணிகளில் அவர்களின் பங்கைச் செய்யத் தூண்டும் தலைவராகவும், அவர்களின் நலனைப்பேணுபவராகவும் அவர் இருக்கவேண்டுவது அவசியம். ஆனால், துரதிர்ஷ்டவசமாக அத்தகையவர் யாரும் தென்படவில்லை. அதற்கு முக்கியமான காரணம், கார் நிகோபார் அல்லாத மற்றத் தீவுகளில் கல்வியும் அதிகம் பரவவில்லை; மன வளமும் பெருகவில்லை.

இந்தச் சூழ்நிலையில் மற்றத் தீவுகளைச் சேர்ந்த மக்களும் கார் நிகோபார் மக்களைத் தலைமைதாங்கி நடத்திச்செல்லக்கூடிய ஒருவரைத் தலைவராக அடைய முயற்சிப்பது சிறந்ததாகும். தீவுகளின் தலைமகனும், கிராமத் தலைமகன்களும் முன்போலவே அவர்களுடைய பொறுப்புக்களைக் கவனித்துக்கொண்டாலும், தீவுகள் அனைத்திலும் உள்ள நிகோபார் மக்களின் நம்பிக்கையைப் பெற்ற ஒரு தலைவர் தேவை. அவர் தீவுகளுக்குரிய பொதுவானப் பிரச்சினைகளைக் கவனித்து, தனது சீரிய தலைமையில் மக்களை முன்னேற்றப் பாதையில் அழைத்துச்செல்பவராக யிருக்க வேண்டும்.

மேலும், வருங்காலத்தை உருவாக்கிக்கொள்ளும் பெரும் சுமை, மக்களுடையதுதான் என்றாலும், தற்போது அவர்களுக்குத் தரப்பட்டிருக்கும் பாதுகாப்பு நீடிக்கவேண்டியதும் மிகவும்

அவசியமாகும். இந்த ஆதிக் குடிகளின் பகுதிகளுக்குச் சென்று வருவதற்குள்ள கட்டுப்பாடுகளும் சிலகாலம் தொடர்ந்திருக்க வேண்டும். நிகோபார் மக்கள் சமீபத்தில் சில முன்னேற்றங்களை அடைந்திருந்தாலும், பொல்லாத அயலார்களிடமிருந்து தங்களைக் காத்துக்கொள்ளத்தெரியாது. குறிப்பாக, அவர்களுக்கு வர்த்தக நுணுக்கமே தெரியாது. இத்தீவுகளுக்குள் வருவதற்கு இருக்கும் தடைகளை நீக்கிவிட்டால், அவர்கள், தீமைகளுக்கு அஞ்சாத வர்த்தகர்களின் வியாபாரத் தந்திரங்களுக்கு வெகு எளிதில் இரையாகிவிடுவார்கள். பிரிட்டிஷ் காலத்திலிருந்தது போலவே துன்பமும், துயரும், வறுமையும் அவர்களை வாட்டி விடும். நிகோபார் பகுதியில் மக்கள் குறைவாகவுள்ள தீவுகளில், இந்தியாவிலுள்ள சிலரைக் குடியமர்த்தி சில தீவுகளை சீரமைத்து வளம்பெறச்செய்ய முடிவுசெய்தாலும், இத்தீவுகளுக்குள் வருவதற்குள்ள கட்டுப்பாடுகள் அப்படியே நீடிக்கவேண்டும். ஆதிக் குடிமக்களைச் சுரண்டுதல், போர்நிலை தந்திரப் பகுதிகளான இவற்றில் தீங்கிழைத்தல் போன்ற காரியங்களில் ஈடுபடும் வேண்டத்தகாதவர்களை வெளியேற்றும் உரிமை நிர்வாகத்திற்கு எப்போதும் இருக்கவேண்டும்.

நிகோபார் மக்கள், இன்று, அவர்கள் வரலாற்றிலேயே மிகவும் நெருக்கடியான ஒரு காலக் கட்டத்தைத் தங்களையே உருவாக்கிக் கொள்ளவேண்டிய ஒரு கட்டத்தை அடைந்திருக்கின்றார்கள். இதுவே அவர்களின் வருங்கால இன்பத்தையும், நலனையும் குறிப்பிட்ட வகையில் பாதிக்கவிருக்கின்றது. காலத்தின் சவால்களை எதிர்த்து நிற்கத்தவறி, அவர்களுக்குள்ள சிக்கல்களையும் கருத்துக் கொவ்வாத வழிகளில் அணுகினுல் தற்போதுள்ள வளமும், வாழ்வும், மகிழ்ச்சியும் ஒரு சில ஆண்டுகளில் மறைந்து, வருங்காலமே இருளடைந்துவிடும். அதற்கு மாருக அவர்களின் நலன்களையும் காத்து, வருங்கால வளர்ச்சிக்கும் அவசியமான வசதிகளை தொடர்ந்து அளித்து, மக்களும் கிளர்ந்தெழுந்து கடினமான உழைப்பில் ஈடுபட்டு, கவனமுடன் குடும்பங்களையும் கட்டுப் படுத்தி, தங்களுடைய கவர்ச்சி மிக்கத் தனித்ததொரு பண் பாட்டுக் கட்டுக்கோப்புடன், தொன்மை ஆன்மீகச் சிறப்புகளின் பக்குவத்துடன் முன்னேற்றப் பாதையில் நடைபோட்டால், இத்தீவுகள் உண்மையிலேயே சுவர்க்கமாகிவிடும்—இந்த மண் ணுலகில் மகிழ்ச்சியுடன் எவரும் வாழ விரும்பும் இன்ப உலகமாகிவிடும்.

## பின்னிணைப்பு

# கார் நிகோபாரில் கொண்டாடப்படும் திருவிழாக்கள்

| எண் | திருவிழாப் பெயர் | கொண்டாடப்படும் கிராமங்கள் | விழா நாள் | சிறப்புக்கள் | கருத்து |
|---|---|---|---|---|---|
| 1. | கின்டோபாங் | மூஸ், கின்மாய், பிக்லபாடி, ஸ்மால் லபாடி, டபோமிங், சுக்சுக்கியா, கின்யூகா. | தென்மேற்குப் பருவம் ஆரம்பமாகுமுன்னுள்ள அமாவாசை தினம் (ஏப்ரல் இறுதி). | கரைநெடுகத் தேங்காய் மூடிகளைக் குவித்துத் தீக்கொளுத்துகின்றார்கள். கிராமங்களில் விருந்துகள். பிக்லபாடி கிராமத்தில் மாத்திரம் நடனம். | நிகோபாரின் நாட்குறிப்புப்படி முதல் தினம், நெருப்பினைக் கண்டுபிடித்த நினைவாகவும் விழா. |
| 2. | டனகா | அராங். | வளர்பிறையில் நான்காவது நாள் (ஏப்ரல் இறுதியளவில்). | நடனம், விருந்து. காலையில் மற்போர். ஒருவருக்கொருவர் தேங்காய் எண்ணெய் பரிமாறிக்கொள்ளல். | தென்மேற்குப் பருவத்திற்கு வரவேற்பு. மேற்குக் கடற்கரையில் மீன் பிடி காலம் முடிவடைகிறது. |
| 3. | கின்ரோபா (சவாய்) | சவாய். | வளர்பிறையில் மூன்றாவது நாள் (மே மாதத்தில் முதல் அரை மாதம்). | நடனம், விருந்து. காலையில் மற்போர். நண்டு பிடித்தல். | பருவ மாற்றத்தைக் குறிக்கின்றது. வடக்குக் கடற்கரையில் நண்டு பிடித்தல். |
| 4. | காளுச்சா | மூஸ், கின்மாய், ஸ்மால் லபாடி, பிக் லபாடி, சுக்சுக்கியா, டபோமிங், கின்யூகா. | தேய்பிறையில் பத்தாவது நாள் (மே மாதத்தில் 3-வது வாரம்). | கிராமங்களில் விருந்து, நடனம். கின்மாய் கிராமத்தில் மாத்திரம் காலையில் மற்போர். கடற்கரையில் இளநீர் காய்கள், பிரம்பு இலைகள், தேங்காய்கள் ஆகியவைகளைக் குச்சிகளில் செருகி நட்டு வைக்கின்றார்கள். 3 தினங்களுக்குப் பின் அகற்றிவிடுகின்றனர். | தென்மேற்குப் பருவ ஆரம்பத்தைக் குறிப்பதுடன், நல்ல பேறும், வளமும் கிடைக்கவும், நோயை விரட்டவும், மாயமந்திரங்கள் போடுவதையும் குறிக்கின்றது. |
| 5. | இன்-வா-நியா-க்யோ-ஆப் | மலாக்கா. | வளர்பிறையில் 9-வது நாள் (ஜூன் மாதம்). | விருந்து, நடனம், மற்போர். கடற்கரையில் கடலைநோக்கிப் படகுகள், வைக்கப்படுகின்றன. | சோவ்ரா செல்லும் முதல் பயணத்தின் நினைவாக விழா. |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 6. | கின்ரோபா (சகாளு) | சகாளு. | தேய்பிறையில் 3-வது தினம். | விருந்து, நடனம், மற்போர், நண்டுகள் பிடித்தல். | தென் கரையில் நண்டு பிடித்தலைக் குறிக்கும். |
| 7. | கா-நி-எனி-ட்யேனி | டமாலா. | தேய்பிறையில் 10-வது தினம் (ஜூன் இறுதி அல்லது ஜூலை ஆரம்பம்). | விருந்து. சிறு படகு அல்லது கப்பல்மாதிரி செய்து அதைச்சுற்றி நடனம். அப்படகில் உண்ணும் பொருள்களை வைத்துத்தென்னை ஓலைகளால் மூடிவிடுகின்றனர். மாதிரிப் படகைக் காலையிலேயே கடற்கரைக்கு எடுத்துச் சென்று ஒரு கம்பில் கட்டி, பிரம்பு இலைகளால் மூடிவிடுகின்றனர். மாதிரிப் படகு, அடுத்த விழா துவங்கும்வரையும் வருடம் முழுவதும் வைக்கப்பட்டிருக்கின்றது. இலைகள் காய்ந்து கருகிவிட்டால், அவைகளை மாத்திரம் மாற்றிக் கொண்டேயிருக்கின்றனர். | நண்பர்களல்லாத அயலார்கள், தீவுக்கு வருவதைத் தடுப்பதைக் குறிக்கும் நாள். |
| 8. | ஹனேஹிங் | கிமூஸ். | வளர்பிறையில் 3-வது நாள் (ஜூலை மாதம்). | விருந்து, நடனம், மற்போர், கடலருகே மீன் பிடித்தல், குறிப்பாக 'கின்யாயா' நச்சு விதையைப் பயன்படுத்திச் சிறிய அக்டோபஸ்களைப் பிடித்தல். | சிறிய அக்டோபஸ்களைப் பிடிப்பதால், அவை வளர்ந்து பெரிதாகி, அவர்கள் நடுக்கடலில் செல்லும்போது படகுகளைத் தாக்காமலிருப்பதைக் குறிக்கும் விழா. |
| 9. | சா-நோ-ஹொாய்னி | பெர்கா. | வளர்பிறையில் 9-வது நாள் (ஆகஸ்டு இறுதி). | விருந்து, நடனம், காலையில் மற்போர், விருந்துக்கு அழைத்த கிராமத்தைச் சேர்ந்த இரு அலங்காரப் படகுகளில் சென்று மீன் பிடித்தல். | பருவமாற்றத்தைக்குறிப்பது. தென்மேற்குப் பருவம் இறுதியடைய, கடலும் அமைதிக்கு வர, ஆழ்கடலில் மீன்பிடிக்கச் செல்லும் காலத்தைக் குறிக்கின்றது. |

# தமிழில் வெளிவந்துள்ள மற்ற நூல்கள்

## I. தேசிய வாழ்க்கை வரலாற்று வரிசை

| | | ரூ.பை. |
|---|---|---|
| 1. | தியாகராஜர்—*பி. சாம்பமூர்த்தி* . . . | 1·75 |
| 2. | இராமாநுஜர்—*ஆர். பார்த்தசாரதி* . . . | 2·00 |
| 3. | குரு நானக்—*கோபால் சிங்* . . . . | 2·25 |
| 4. | முத்துஸ்வாமி தீக்ஷிதர் —*டி. எல். வெங்கட்ராம அய்யர்* . . . | 2·50 |
| 5. | கபீர்—*பாரஸ்நாத் திவாரி* . . . . | 2·25 |
| 6. | ரண்ஜீத் சிங்—*டி. ஆர். ஸூத்* . . . . | 2·75 |
| 7. | ஹரிநாராயன் ஆப்தே—*எம். ஏ. க்ரந்தீகர்* . . | 2·75 |

## II. இந்தியா—நாடும் மக்களும் வரிசை

| | | |
|---|---|---|
| 1. | வீட்டுப் பிராணிகள்—*ஹர்பன்ஸ் சிங்* . . . | 4·50 |
| 2. | சாதாரண மரங்கள்—*எஸ். சாந்தபௌ* . . | 4·75 |
| 3. | மக்கட் தொகை—*எஸ். என். அகர்வாலா* . . | 3·75 |
| 4. | இந்தியப் பாம்புகள்—*பி. ஜே. தேவரஸ்* . . | 6·50 |
| 5. | தோட்ட மலர்கள்—*விஷ்ணு ஸ்வரூப்* . . . | 6·00 |
| 6. | பூ மரங்கள்—*எம். எஸ். ரந்தாவா* . . . | 6·50 |
| 7. | நிலமும் மண் வளமும்—*எஸ். பி. ராய் சௌதுரி* . | 5·25 |

## III. அனைத்திந்திய நூல் வரிசை

| | | |
|---|---|---|
| 1. | அக்னி நதி—*குர் அதுல்ஐன் ஹைதர்* . . | 8·50 |
| 2. | மறைந்த காட்சிகள்—*பகவதி சரன் வர்மா* . . | 8·50 |
| 3. | காகித மாளிகை—*முப்பாள ரங்கநாயகம்ம* . . | 4·25 |

ரூ.பை.

4. கதாபாரதி: இந்திச் சிறு கதைகள்
—டா. நாம்வர் சிங் . . . . . 8·25

5. அழிந்த பிறகு . . .—சிவராம காரந்த . . 5·25

6. வெண் குருதி—நானக் சிங் . . . . 6·00

7. கவி—தாராசங்கர் பந்த்யோபாத்யாய் . . 5·50

8. கதாபாரதி: தெலுங்குச் சிறு கதைகள் (தொகு.) புராணம் சுப்பிரமணிய சர்மா & வக்காட்டி பாண்டுரங்கராவ் . . . . . 7·75

9. கதாபஞ்சாப்—(தொகு.) ஹர்பசன் சிங் . . 5·50

## IV. பல்வகை நூல்கள்

1. காந்தியின் இந்தியா—வேற்றுமையுள் ஒற்றுமை . 3·25

2. அக்பர்—லாரென்ஸ் பின்யன் . . . . 2·25

3. அறிவு வளர்க்கும் அறிவியல்—ரிச்சி கால்டர் . 4·25

4. அசோக சாசனங்கள்
—என். ஏ. நிகம், ரிச்சர்ட் மக்கியோன் . . 3·00

5. கோதம புத்தர்
—ஆனந்த கே. குமாரசாமி, ஐ. பி. ஹார்னர் . 6·00

6. மார்கோ போலோ—மௌரின் காலிஸ் . . 5·75

7. குட்திசை—குணதிசை ஞானப் பெண்மணிகள்
—ஸ்வாமி காஞநந்தா . . . . . 6·00

8. இன்பத்தின் வெற்றி—பெட்ராண்ட் ரஸ்ஸல் . 3·50

9. பாமர மக்களின் பரம்பரைப் பாடல்கள்
—அழ. வள்ளியப்பா . . . . . 1·25

10. விழவும் பூசையும்—எல். ஜி. கணபதி அய்யர் . 1·25